# கர்மயோக விளக்கம்

(விவேகானந்த சுவாமிகளின் கருத்தைத் தழுவியது)

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

தபோவனப் பிரசுராலயம்

திருப்பராய்த்துறை போஸ்ட், எலமனூர் ஸ்டேஷன்

திருச்சி ஜில்லா

1958

# பொருளடக்கம்

# கர்மயோக விளக்கம்

## 1. வினை வாழ்வை வகைப்படுத்துகிறது

உயிர்களை இறைவனோடு இணைத்துவைப்பதற்கு ஏதுவாயிருப்பது யோகம். கையாளும் உபாயத்துக்கு ஏற்ப யோகத்துக்குப் பெயர்கள் பல உள. கர்மத்தின் மூலம் கடவுளை அடையுங்கால் அதற்குக் கர்ம யோகம் என்று பெயர். கர்ம சாதனம் செய்கின்றவன் கர்ம யோகி. இம்முறையைக் கடைப்பிடித்தவர்கள் தொண்டர் என்றும் அழைக்கப்பட்டனர். அன்னவர்களின் சிறப்பைக் கூறும் நூல் தொண்டர் புராணம் என்று வழங்கி வருகிறது. இறைவனைத் தொழுகின்ற வகைகள் பல உள. அவைகளுள் தொண்டு தலையாயது. ஏனென்றால் அது ஸ்தூலமாக எல்லார்க்கும் தென்படுகிறது.

கர்ம யோகத்தை அறிந்துகொள்ள முயலுபவர்கள் கர்மம் என்னும் சொல்லின் உட்கருத்தை முதலில் அறிந்துகொள்ள வேண்டும். சம்ஸ்கிருத பாஷையில் வினைப்பகுதிக்கு தாது என்று பெயர். க்ரு—க்ரு என்பது அத்தகைய தாதுக்களில் ஒன்று. செய் அல்லது வினையாற்று என அப்பதம் பொருள்படுகிறது. தமிழ் மொழியில் அமைந்துள்ள—போகிறது, வருகிறது, செய்கிறது என்னும்—வினைச்சொற்களில் 'கிற' என்னும் வினை விகுதியானது க்ரு என்னும் சம்ஸ்கிருத வினைப் பகுதியை ஒத்திருக்கிறது. மேலும் சம்ஸ்கிருதம் என்

னும் பதத்தின் பொருளை ஆராய்ந்து பார்ப்போம். க்ருதம் என்பது செய்யப்பட்டது என்று பொருள்படுகிறது. ஸம்ஸ் என்பது நன்முக அல்லது தெளிவுபட எனப் பொருள்படுகிறது ஆகவே ஸம்ஸ்க்ருதம் என்பது தெளிவுபட அமைக்கப்பெற்றது என்ற அர்த்தத்தைக் கொடுக்கிறது.

இனி, வினை என்பதற்கும் கர்மம் என்பதற்கும் பொருள் ஒன்றே. நாம் செய்யும் செயல்கள் அனைத்தும் கர்மம். ஒவ்வொரு கர்மத்துக்கும் கர்மபலன் உண்டு. பயன் விளைவியாத வினை வையகத்திலோ அல்லது விசுவத்திலோ எங்கும் கிடையாது. புரிகின்ற கர்மத்தைக் காரணம் என்றும் அந்தக் கர்மத்தினின்று விளையும் பலனைக் காரியம் என்றும் பகர்வது வழக்கம். ஆனால் கர்ம பலனைக் கர்மம் என்று முறைமாற்றி மொழிவதும் நூல் வழக்கில் இருந்து வருகிறது. புதல்வனை 'அப்பா' என்றும் புதல்வியை 'அம்மா' என்றும் அழைப்பதற்கு ஒப்பானது இது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். "கண் மூடி யொருகணமிருக்க வென்முல் பாழ்த்த கர்மங்கள் போராடுதே" என்று நூல் ஒன்றில் நவிலப் பெற்றிருக்கிறது. இங்குக் 'கர்மங்கள்' என்பன முன்செய்த கர்மங்களின் விளைவுகள் எனப்பொருள்படுகின்றன. வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களில் கர்மம் என்னும் சொல் பிரயோகிக்கப்படுகிறது. முன்பு செய்த கர்மம் பின்பு பலன் கொடுக்கிறது. அங்ஙனம் வாழ்வில் பலன் கொடுக்கும் பழைய வினையையே கர்மம் என்று இந்த சாஸ்திரங்கள் சாட்டி

வருகின்றன. ஈண்டு நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டது கர்மயோகம். இவ்வுலகில் இப்பொழுது நாம் செய்துவரும் கர்மத்தை மட்டும் கர்மயோகம் கணக்கில் எடுத்துக்கொள்கிறது. பழவினையை அது ஆராய்ச்சி செய்வதில்லை. பழவினையைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பதால் ஆவது ஒன்றுமில்லை. எதிர்காலத்தில் நமக்கு என்னவாகப்போகிறது என்று எண்ணிக் கொண்டிருப்பதாலும் பயன் இல்லை. இப்பொழுது எதைச் செய்யவேண்டும், என்ன பாங்குடன் செய்ய வேண்டும் என்பதில் கர்மயோகம் கருத்தைச்செலுத்துகிறது.

வாழ்க்கையின் குறிக்கோள் எது என்பதை அறிந்துகொள்ள வேண்டும். சுகஜீவனம் பண்ணிக் கொண்டிருப்பது பலருக்கு வாழ்க்கையின் குறிக்கோள் ஆகிறது. எப்படியாவது இன்புற்றிருந்தால் போதும் என்பது அவர்களுடைய கருத்து. ஆனால் உண்மையில் வாழ்க்கைக்கு அது குறிக்கோள் ஆகாது. ஏனென்றால் மனிதன் மட்டுமல்ல, எண்ணிறந்த சிற்றுயிர்களும் தம் போக்கில் பெரிதும் இன்புற்றிருக்கின்றன. மேலாம் பிறவியாகிய மானுடப்பிறவியை எடுத்துள்ளவர்களுக்கு ஞானத்தைப் பெறுவது ஒன்றே வாழ்வின் நோக்கமாகும். சான்றோர் காட்டியுள்ள செந்நெறி இக்கோட்பாட்டை ஐயந்திரிபு அறத் தெளிவுபடுத்துகிறது.

अन्यच्छ्रेयोऽन्यदुतैव प्रेयस्ते उभे नानार्थे पुरुषं सिनीतः ।
तयोः श्रेय आददानस्य साधुर्भवति हीयतेऽर्थाद्य उ प्रेयो वृणीते ॥

—சிறப்பு என்பது வேறு; இன்பகரமானது என்பது வேறு. இரண்டும் ஒன்றேடொன்று முரண்பட்டவைகள். இரண்டுவித நிலைகளுக்கு அவை மனிதனைக் கொண்டுசேர்க்கின்றன. சிறப்பைப் பின்பற்றுபவன் நல்லான் ஆகின்முன். ஆனல் இன்பத்தை நாடுபவன் குறியினின்று வீழ்பவன் ஆகின்முன்.

மனிதன் பெறுகிற இன்பத்துக்கு முடிவு உண்டு. ஆதலால் அது பெறுதற்கு அரிய பேறு ஆகாது. இன்பந்தான் வாழ்வின் குறிக்கோள் என்று முடிவு கட்டுகிறவன் தவறுதல் செய்துவிடுகிமுன். எண்ணிறந்த துன்பங்களை உலகில் நாம் காண்கின்றேம். இத்தனை விதமான துன்பங்களுக்கும் காரணம் உண்டு. இன்பத்தின் எதிர்ச்செயல் துன்பம். இன்பத்தை நாடுதல் வாழ்வின் லட்சியம் என்று மடமை படைத்த மனிதன் எண்ணுகிமுன். அதற்கு ஏற்ப இன்பத்தை நாடி அவன் அலைகிமுன். அது துன்பமாக வடிவெடுத்து மனிதனைப் படாதபாடு படுத்துகிறது. நெடுநாள் துன்பப்பட்ட பிறகு மனிதனுக்கு உண்மை விளங்குகிறது. பிறப்பு எடுத்துள்ளவன் பெற முயல வேண்டியது ஞான பரிபாகமேயொழிய இன்பமல்ல என்பது அம்மனிதனுக்கு வெளியாகிறது. ஞான பரிபாகம் என்னும் குறியை நோக்கி மனிதன் பயணம் போய்க்கொண்டிருக்கிமுன். இன்பமும் துன்பமும் தனக்கு வாய்த்த இரண்டு பேராசிரியர்கள் என்பதையும் அவன் நாளடைவில் தெரிந்துகொள்கிமுன். இன்பம் என்னும் ஆசிரியனிடத்திருந்து மனிதன் எவ்வளவு பாடம் கற்

றுக்கொள்கிருனே அவ்வளவு பாடத்தைத் துன்பம் என்னும் ஆசிரியனிடத்திருந்தும் அவன் கற்றுக்கொள் கிருன். மனிதனுடைய உள்ளத்தினுள் இன்பமும் துன்பமும் உருவெடுத்துக்கொண்டிருக்கின்றன. அவ் இன்ப துன்பங்களுள் ஒவ்வொன்றும் உள்ளத்தினுள் ஒரு பதிவை உண்டுபண்ணிவிட்டுப் போகின்றது. புதிதாக வனைந்த மட்பாண்டத்தைக் குயவன் மரச்சுத்தியால் ஓயாது தட்டுகிருன். ஒவ்வொரு தடவை தட்டும் போதும் மட்பாண்டம் இறுகி உறுதிபெறுகிறது. பாண்டம் பட்ட அடிகள் அனைத்தும் ஒன்றுசேர்ந்து அதை உருவாக்கின. அதே பாங்கில் இன்ப துன்பங்கள் மனிதனுடைய மனதை உருவாக்குகின்றன. இன்ப துன்பங்கள் மனத்தகத்து உண்டுபண்ணுகின்ற பதிவுகளுக்கு ஸம்ஸ்காரங்கள் என்று பெயர். இந்த ஸம்ஸ்காரங்கள் ஒன்றுகூடி வாழ்வை வகைப்படுத்துகின்றன. ஒரு மனிதன் எத்தகைய ஸம்ஸ்காரங்களைப் பெறுகின்ருனே அதற்கு ஏற்ப அவனுடைய பண்பு அல்லது குணம் உருவெடுக்கிறது. ஒரு மனிதன் இங்ஙனம் அடைந்துவரும் மன பரிபாகத்தையே அவனுடைய பொலிவு என்றும், இயல்பு என்றும், குணம் என்றும், சீர் என்றும் சொல்லுகிருேம். மனம் என்ன போக்கில் போய்க்கொண்டிருக்கிறதோ அதற்கு ஏற்ப மனிதனுடைய இயல்பு மாறியமைகிறது. உள்ளத்தில் உருவெடுக்கும் எண்ணங்களை உள்ளக்கிடக்கை என்கிருேம். உள்ளக்கிடக்கையின் தொகையே மனிதனுடைய பாங்கு (Character) என்று பகரப்பெறு

கிறது. அதை அவனுடைய குணம் என்றோ இயல்பு என்றோ சொன்னாலும் பொருந்தும். மனிதனுடைய இயல்பை உருவாக்குதற்கு இன்பம் துன்பம் ஆகிய இரண்டும் வேண்டியவாறு துணைபுரிந்திருக்கின்றன. இக்கோட்பாட்டை இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து ஆராய்வோமானால் மனிதன் அடையும் மனபரிபாகத்தைப்பற்றிய மற்றோர் உண்மை புலனாகும். அதாவது சில மனிதருடைய மனதைச் செப்பனிடுதற்கு இன்பம் துணை புரிந்ததைவிடத் துன்பமே அதிகம் துணைபுரிந்திருக்கிறது. பேருள்ளம் படைத்த பெருமக்கள் பலரை உலகம் ஈன்றிருக்கிறது. அவர்களுடைய குணாதிசயங்களை ஆராய்ந்து பார்ப்பது அவசியமாகிறது. அப்பொழுது வியப்புக்குரிய விஷயம் ஒன்று வெளியாகும். மக்களை மேன்மக்களாக்கியது இன்பமா அல்லது துன்பமா என்னும் விசாரணைக்குச் சரியான விடை கிடைக்கும். இன்பம் துன்பம் ஆகிய இரண்டும் அவர்களுக்குப் பாடம் புகட்டின. ஆனால் இன்பம் புகட்டிய பாடத்தைவிட அதிகமானதும், ஆழ்ந்ததுமான பாடத்தைத் துன்பமே அன்னவர்களுக்குப் புகட்டுவதாயிற்று. உடைமை, வறுமை ஆகிய இரண்டினுள் உடைமை புகட்டிய பாடத்தைவிட அதிகமானதும், ஆழ்ந்தது மான பாடத்தை வறுமையே புகட்டுவதாயிற்று. புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய இரண்டினுள் புகழ்ச்சி புகட்டிய பாடத்தைவிட அதிகமானதும் ஆழ்ந்ததுமான பாடத்தை இகழ்ச்சியே புகட்டுவதாயிற்று. சக்கிமுக்கிக்கல் ஒன்றை ஓங்கித் தட்டினால் அதினின்று தீப்

பொறி பறக்கிறது. அங்ஙனம் இடுக்கண்களும் இன்னல்களும் ஒன்றுகூடி இப்பெருமக்களது உள்ளத்தினின்று பேரியல்புகளைத் தோற்றுவித்தன.

ஞானத்துக்கு இருப்பிடம் யாது என்பது ஈண்டு எழும் மற்றொரு கேள்வியாகும். பெரியோர் படைத்திருந்த பேரறிவு அவர்களுக்கு எங்கிருந்து வந்தது? சக்கிமுக்கிக் கல்லினுள்ளேயே தீ மறைந்திருப்பது போன்று மனிதனுடைய மனத்தகத்து ஞானம் மறைந்திருக்கிறது. உணவைப் புற உலகினின்று பெறுவது போன்று மனிதன் அறிவைப் புறவுலகினின்று பெறுவதில்லை, தன் மனத்தகத்தினின்றே அவன் அதை மிளிரச் செய்கிறான். மனிதர் அனைவர்க்கும் மனது ஞானக் களஞ்சியம். வேண்டிய ஞானங்கள் அனைத்தையும் அவர்கள் உள்ளிருந்தே வெளிப்படுத்த வல்லவர்கள். அக்ஞானத்திரைகள் பல உள்ளிருக்கும் ஞானத்தை மூடிக்கொண்டிருக்கின்றன. ஒவ்வொன்றாகத் திரையை நீக்குமளவு ஞானம் தானே ஒளிர்கிறது.

இப்பொழுது சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். பூமியில் ஆகர்ஷண சக்தி என்பது ஒன்று இருக்கிறது ஈர்ப்புச்சக்தி என்றும் அது இயம்பப்படுகிறது. நியூட்டன் என்று அழைக்கப்பட்ட பௌதிக விக்ஞானி அந்த ஆகர்ஷண சக்தியைக் கண்டுபிடித்தார் என்பது ஐதிகம். ஈண்டு கண்டுபிடித்தல் என்பதன் பொருள் யாது? உலகில் அமெரிக்கா என்னும் நிலப்பகுதி ஒன்று இருக்கிறது என்று பண்டைய உலக மக்கள் அறியாதிருந்தனர். பின்பு நெடுங் கடல் பய

ணம் சென்ற கொலம்பஸ் என்னும் மாலுமி தற்செய லாய் அமெரிக்காக் கண்டத்தைக் கண்டுபிடித்தான். அந்தப் பாங்கில் ஆகர்ஷண சக்தி கண்டுபிடிக்கப்பட் டதா? அல்ல. நியூட்டன் என்ற விக்ஞானி கையில் பிடிப்பதற்கு முன்பு அந்த சக்தி எங்கேயோ ஒரு மூலே யில் ஒளிந்துகொண்டிருந்ததா? இல்லே. அப்படி யாளுல் அதைக் கண்டுபிடித்தல் என்பதன் பொருள் யாது? ஆகர்ஷண சக்தி யாண்டும் இயற்கையில் இயங்கிக்கொண்டிருக்கிறது. அதைப்பற்றிய ஞானம் நியூட்டனுடைய மனதில் மறைந்து கிடந்தது. வசதி யான சூழ்நிலே வந்து வாய்த்தது. மனதில் மறைந்து கிடந்த ஞானத்தை நியூட்டன் ஓர்மைப்படுத்திக் கொண்டார்; மறைந்திருந்த அறிவை வெளிப்படுத்திக் கொண்டார். உலகம் பெற்றுள்ள கலேஞானங்கள் அனைத்தும் உள்ளத்தினின்று வெளியானவைகளே யாம். அகிலாண்டங்களேப்பற்றிய சர்வ ஞானககளஞ சியம் மனத்தகத்தில் இருக்கிறது. ஞானக்களஞ்சியத் தின் வேண்டிய பகுதியை வெளியாக்குதற்குப் புறவுல கம் தூண்டுதல் போடுகிறது; வசதியான சந்தர்ப் பத்தை அது அமைத்துக்கொடுக்கிறது. உள்ளத்தி னுள்ளே மறதி நிலேயில் உள்ள ஞானத்தைத் தெளிவு நிலேக்குக் கொண்டு வருதற்குச் சூழ்நிலே முகாமையாக வந்து அமைகிறது. சூழ்நிலேயைப் பயன்படுத்திக் கொண்டு தன் மனதில் இருப்பதைத்தான் மனிதன் கற்கிருன்.

நியூட்டன் ஆகர்ஷணசக்தியைப்பற்றி எப்படிக் கற்றுக்கொண்டார் என்று பார்ப்போம். பழத்தோட்டத்தில் அவர் உட்கார்ந்துகொண்டிருந்தார். பழுத்துப்போன ஆப்பிள் பழத்துக்கு மரத்தின் தொடர்வு தளர்ந்துபோய்விட்டது. பூமியின் ஈர்ப்புச்சக்தியானது மரத்தின் பற்றுச் சக்தியைவிட அதிகமாயிற்று. மரத்தினின்று விடுபட்டுப் பழம் பூமியில் விழுந்தது. புறவுலகம் என்னும் சூழ்நிலை அளித்த சந்தர்ப்பம் இது. நியூட்டன் விக்ஞானியோ சூழ்நிலை அளித்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தித் தமது மனதில் மறைந்து கிடந்த ஞானத்தைத் தெளிவுபடுத்திக்கொண்டார். ஆகர்ஷணசக்தி பூமியில் இருக்கிறது. அதைப்பற்றிய ஞானம் மனதில் இருக்கிறது. புதிதாக உரு எடுத்த இந்த ஞானத்தை ஏற்கனவே உரு எடுத்துள்ள ஞானத்தோடு வகைப்படுத்திக்கொள்ளுங்கால் அது அறிவு வளர்ச்சி என்னும் பெயர் பெறுகிறது. ஞானத்தின் உறைவிடம் மனது. ஞானம் வளர்ச்சியடைவதும் ஓர்மைப்படுவதும் மனதிலேயே. இயற்கையின் நடைமுறையில் ஈர்ப்புச் சக்தி இடம்பெற்றுள்ளது. அதைப் பற்றிய ஞானம் அதை அறிந்துகொள்ளுகிற மனிதனுடைய மனதில் இடம் பெறுகிறது. ஆக, ஆகர்ஷண சக்தியைப்பற்றிய ஞானத்துக்கு இருப்பிடம் மனது. அது ஆப்பிள் பழத்திலும் இல்லை, பூமியின் மையத்திலும் இல்லை. இயற்கையைப்பற்றிய ஞானம் என்றும், ஆத்ம தத்துவத்தைப்பற்றிய ஞானம் என்றும், இரண்டுவகை ஞானங்கள் உண்டு. இவ்விரண்டுவித

ஞானங்களுக்கும் இருப்பிடம் மனது. வெளி உலகி லிருந்து அது மனதுக்குள் வருவிக்கப்படுவதன்று.

நமக்குத் தெரியாதிருந்த வஸ்து ஒன்றைக் கண்டு பிடித்து அதை நமக்குச் சொந்தமாக்குவது போன்ற தன்று ஞானம். ஞான சூரியன் நமது உள்ளத்தி னுள்ளே யாண்டும் ஒளிர்ந்துகொண்டிருக்கிறது. புற உலகில் உள்ள சூரியனைப் படலம் படலமாக மேகம் சூழ்ந்து மூடுவதுபோன்று மனத்தகத்து ஆவர்ணம் அல்லது ஆவர்ண சக்தி ஒன்று ஞானத்தை மறைத்து வைத்திருக்கிறது. யாரிடத்து ஆவர்ணம் அதிகமாக மூடியிருக்கிறதோ அவன் ஒன்றும் அறியாத மூடன் என்று பகரப்படுகிறான். யாரிடத்து ஆவர்ணம் சிறிது சிறிதாக நீங்குகிறதோ அவன் அறிவு வளர்ச்சி அடைந்து வருகிறான் என்று பகரப்பெறுகிறான். யாரிடத்து ஆவர்ணம் அறவே நீங்கிவிடுகிறதோ அவன் முற்றும் உணர்ந்த முழு ஞானியாகிறான். முன்னாளில் முற்றும் உணர்ந்த முழு ஞானிகள் இருந்திருக்கின் றனர். இனியும் அத்தகைய நிறை ஞானிகள் சமுதா யத்தில் வந்து வாய்ப்பார்கள். கல்பாந்தரங்களில் கோடிக்கணக்கான நிறை ஞானிகள் வந்து வாய்ப்பார் கள். ஏற்கனவே இயம்பியுள்ளபடி சக்கிமுக்கிக்கல் லில் தீ இருப்பது போன்று மனத்தகத்து ஞானம் நிறைந்துள்ளது. சூழ்நிலையினின்று தக்க தூண்டுதல் வரும்பொழுது மறைந்துள்ள ஞானம் சுடர்விட ஆரம் பிக்கிறது. இந்தச் சூழ் ஒளி விளக்குக்குத் தூண்டு கோல் எது என்ற கேள்வி எழலாம். நாம் ஆற்று

கின்ற வினைகளும் நமது உள்ளத்தில் உதிக்கின்ற உணர்வுகளும் ஞான வளர்ச்சிக்குத் தூண்டுகோல்கள் ஆகின்றன. நாம் கண்ணீர் சிந்துகின்றோம், புன்னகை பூக்கின்றோம்; நாம் இன்பங்களில் திளைத்திருக்கின்றோம், துன்பங்களில் துதைந்துகிடக்கின்றோம்; நாம் தேம்பித்தேம்பி அழுகின்றோம், விலாநோக நகைக்கின்றோம்; நமக்குப் பிடிக்காதவர்களை நாம் சபிக்கிறோம், விருப்பமுள்ளவர்களை ஆசீர்வதிக்கிறோம்; ஒரு சிலரை நாம் போற்றுகிறோம், வேறு சிலரைத் தூற்றுகிறோம். இந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் நாம் அமைதியுடன் ஆராய்ந்து பார்க்கவேண்டும். அப்பொழுது உண்மை யொன்று வெளியாகும். இத்தனைவிதமான உணர்வுகளெல்லாம் நமது உள்ளத்தின்கண் உண்டுபண்ணப்பட்டவைகளாம். அதற்கேற்ற சந்தர்ப்பங்கள் அகத்திலும் புறத்திலும் அமைவனவாயின. இத்தனைவிதமான உணர்வுகளில் மோதுண்டு நமது வாழ்வு வகைப்படுத்தப்பட்டுள்ளது. உள்ளத்தின்கண் இந்த உணர்வுகளை உண்டு பண்ணுதற்கு ஏதுவாயிருந்த நிகழ்ச்சிகளே கர்மங்கள் என்று அழைக்கப்படுகின்றன. மனதில் உண்டாகும் உணர்ச்சி ஒவ்வொன்றும் ஜீவாத்மனிடத்து ஒரு மாறுதலை உண்டுபண்ணுகிறது. உடலிலே நிகழ்கின்ற நிகழ்ச்சியும் ஜீவாத்மனைப் போய்த்தாக்குகிறது. இங்ஙனம் உள்ளத்திலும் உடலிலும் நடைபெறுகிற வினைகளால் ஜீவாத்மன் வகைப்படுத்தப்படுகிறான். அவன் பெறுகிற அனுபவங்களுக்கும், அடைகிற மாறுதல்களுக்கும் இந்த வினைகளே காரணமாகின்றன. இங்ஙனம் ஜீவ

னிடத்து எழுச்சியையும் ஞான உணர்ச்சியையும் உண்டுபண்ணும் செயல்களுக்கே கர்மம் என்று பெயர். இக்கோட்பாட்டை எண்ணிப் பார்க்குங்கால் நாம் அனைவரும் ஓயாது கர்மம் செய்துகொண்டிருக்கிறோம் என்பது வெளியாகும். ஒருவன் பேசுகிறான்; அது கர்மம். மற்றவர்கள் அதைக்கேட்கின்றனர்; அது கர்மம். பிராணிகள் சுவாசிக்கின்றன; அது கர்மம். நாம் நடமாடுகிறோம்; அது கர்மம். மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களால் நாம் செய்யும் செயல்கள் அனைத்தும் கர்மம். இப்படிச்செய்யப்படும் ஒவ்வொரு கர்மமும் ஜீவாத்மனுடைய அமைப்பில் ஒரு பதிவை அல்லது ஸம்ஸ்காரத்தை நாட்டுகிறது.

சிறு செயல்கள் பல ஒன்றுகூடி ஒரு பெருஞ் செயல் ஆவதுண்டு. இதை அறிந்துகொள்ளுதற்கு இரண்டொரு உதாரணங்கள் எடுத்துக்கொள்வோம். கடலிலிருந்து மலைபோன்ற அலையொன்று உருண்டோடி வந்து கரையிலுள்ள கற்பாறையின்மீது மோதுகிறது. இதனால் இடிபோன்ற பேரிரைச்சல் உண்டாகிறது. இப்படி உண்டான இடியோசைக்குக் காரணம் யாது என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். கணக்கற்ற சிற்றலைகள் ஒன்றுகூடி ஒரு பேரலையாயிற்று. சிற்றலை ஒவ்வொன்றும் தன்னளவில் ஒலமிட்டது. அந்த ஓலங்களின் தொகையே ஒரு பெருங் கர்ஜனையாக முழங்கிற்று. சிற்றலையின் மெல்லிய ஓசை நம் காதில் படவில்லை. ஆனால் அதன் தொகை காதைத் துளைத்தது. சந்தைக்கடை ஒன்றிலும் இதுபோன்ற நிகழ்ச்சியைக்

காணலாம். நூற்றுக் கணக்கானவர்கள் சந்தையில் பேசுகிறுர்கள். அவர்கள் பேச்சைத் தனித்தனியாக எடுத்துக்கொண்டால் அது அற்பமானது. ஆனுல் அப்பேச்சுக்களின் தொகை நெடுந்தூரத்துக்கு அப் பால் தொடர்ந்து ஒலிக்கின்றது. மானுட வாழ்க்கை என்னும் நிகழ்ச்சி அத்தகையது. கணந்தோறும் ஹிரு தயம் துடிக்கிறது. அதன் ஓசை நமது காதில் படுவ தில்லை. ஆனுல் அதன் தொகையே வாழ்வு என்பதா கிறது. ஓயாது சிறு செயல் பலவற்றை மனிதன் செய்கிறுன். பொருள் அற்றவைகளாக அவைகள் மறைந்து போய்விடுகின்றன. அவைகளின் தொகையோ மனதைக் கவரவல்லதாக எப்பொழு தாவது வடிவெடுக்கிறது. அப்போதைக்கப்போது செய்யும் சிறு செயல்களே பின்பு ஒரு வேளையில் பேராற்றல் எனக் காட்சிக்கு வருகின்றன. எனவே ஒரு மனிதனுடைய குணுதிசயத்தைக் கண்டுகொள்ளு தற்கு அவனுடைய வெளிப்பகட்டான அலுவல்களைக் கணக்கில் எடுத்துக்கொள்ளலாகாது. ஒரு காலத்தில் அல்லாவிட்டால் வேறு ஒரு காலத்தில் ஒவ்வொரு சாமானியமான மனிதனும் ஏதேனும் ஒரு செயற்கரிய செயலைச் செய்துவிடுகிறுன். சில நாட்களுக்கு அது கவர்ச்சிகரமாய் இருந்துவிட்டுப் பிறகு வாணவேடிக்கை போன்று மறைந்து போய்விடுகிறது. ஆனுல் கர்ம யோகி ஒருவனை நாம் எளிதில் கண்டுபிடித்துவிடலாம். பகட்டான செயல்களில் அவன் தனது பாங்கை இழந்துவிடுவதில்லை. பகட்டான செயல்களை அவன்

நாடிச் செல்லுவதுமில்லை. தனக்கென்று வாய்த்துள்ள சாமான்யமான செயல்களையே அவன் செய்து வருகிறான். சிறு செயல், பெருஞ்செயல் என்னும் வேற்றுமை அவனிடத்தில் இல்லை. எதைச் செய்தாலும் அதன் மூலம் அவனுடைய மனபரிபாகமே விளங்கப் பெறும். அற்பச் செயலையும் ஆண்டவனுடைய ஆராதனையைப்போன்று அவன் நிகழ்த்துவான். தக்கதொரு தருணம் வாய்த்தகாலை கயவனும் பெருஞ் செயல் ஆற்ற முன்வந்துவிடுவான். இதற்குத் தகுந்த சான்று ஒன்று வழக்கத்தில் இருந்து வருகிறது. சூரிய கிரகணம் அல்லது சந்திர கிரகணம் நேர்கின்ற நேரத்தில் அற்பப் புழு ஒன்று தலை தூக்கித் தற்பெருமை கொள்ளுகிறதாம். "பார், என் இனத்தைச் சேர்ந்த ஊர்வது ஒன்று அருக்கனை விழுங்கிவிட்டது, சோமனை விழுங்கிவிட்டது" என்று இறுமாப்பு எய்துமாம். அதுபோல அனுகூலமான காலம் வாய்க்கின்றபொழுது புல்லிய மனிதனும் பெருஞ் செயலில் ஈடுபட்டுவிடுவான். ஆனால் கர்மயோகி ஒருவனுடைய பாங்கு அத்தகையதன்று. அவன் எந்த இடத்தில் இருந்தாலும் சரி, கால நிலை எத்தகையதாக வாய்த்திருந்தாலும் சரி, அவன் புரிகின்ற செயலைப் பண்புடனேயே செய்து கொண்டிருப்பான். காலத்தை முன்னிட்டோ, அல்லது இடத்தை முன்னிட்டோ அவனுடைய சீரிய மனநிலையில் எந்தவிதமான மாறுதலும் வந்துவிடாது. சீரியன் ஒருவன் சிறுமையெய்துவதைக் கனவிலும் அறியான்.

ஆக, வினையானது வாழ்வை ஓயாது வகைப்படுத்திக்கொண்டே வருகிறது. வினையின் ஆதிக்கம் மிக மிகப் பெரியது. அவ் வல்வினையை வாழ்வுக்கு ஏற்றதாகும்படி பயன்படுத்திக்கொள்ளுதல் மனிதனுடைய கடமையாகும். அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் இருக்கிறது என்பது கோட்பாடு. இனி, அண்டம் எவ்வளவு மகத்துவம் வாய்ந்ததோ அவ்வளவு மகத்துவம் வாய்ந்தது பிண்டமும். இங்குப் பிண்டம் என்பது மனிதனைக் குறிக்கிறது. ஆதலால் அண்டங்கள் அனைத்துக்கும் மையம் வகிப்பவனாக மனிதனை இப்பொழுது எடுத்துக்கொள்வோம். அண்டமெங்குமுள்ள ஆற்றல்களையெல்லாம் அவன் தன்பால் ஈர்த்து இழுத்துக்கொண்டிருக்கிறான். அந்த சக்திகளையெல்லாம் இங்கே தன்னிடத்து ஓர்மைப்படுத்தியான பிறகு அவன் அவைகளைப் புறவுலகத்தினிடத்துப் பாய்ச்சுகிறான். அங்ஙனம் மனிதனிடத்திருந்து புறத்தே ஏவப்படுகிற விசைக்கு வேகம் மிக உண்டாகிறது. ஆக, அற்புதச் செயல் ஒன்றை மனிதன் ஓயாது செய்து கொண்டிருக்கிறான். எந்த மனிதனிடத்து இந்த அற்புதச்செயல் பெருமிதமாக நிகழ்கிறதோ அவன் பெருமகன். செயற்கரிய செயலைக்கொண்டே பெருமகனை நாம் அறிந்துகொள்ள முடியும். கர்மத்தைத் தனக்குப் பயன்படுவதாக மாற்றியமைப்பவன் கர்மயோகி. அவன் கர்மத்தை முகாமையாக வைத்துக்கொண்டு மனதைப் பண்படுத்துகிறான். மன பரிபாகத்துக்கு ஏற்ப அவனுக்கு ஆற்றல் மிக உண்டாகிறது.

அவன் பேரறிஞன் ஆவதும் அதனாலேயாம். அண்டங்கள் அனைத்தையும் தன்பால் கவர்ந்திழுக்கும் ஆற்றல் அவனுக்கு வருகிறது. அந்த ஆற்றலைக் கொண்டு அவன் என் செய்கிறான் என்று ஆராய்வோம். நலம் கேடு, இன்பம் துன்பம் ஆகிய யாவும் இந்த யோகியிடம் வந்துசேருகின்றன. அவன் அவைகளை எங்ஙனம் பயன்படுத்துகிறான் என்று பார்ப்போம்.

மனிதனால் நிறுவப் பெற்றுள்ள யந்திரசாலைகள் சிலவற்றைச் சான்றாக எடுத்துக்கொள்வோம். பெரிய நகரம் ஒன்றில் உள்ள சாக்கடைகளெல்லாம் ஓர் இடத்துக்கு ஓடுகின்றன. யந்திரம் ஒன்று அக்கழிநீர்களையும் கசுமலங்களையும் கழிசல்களையும் உறிஞ்சியெடுத்து வகைப்படுத்துகிறது. துர்நீரை அது நன்னீராக மாற்றுகிறது. கழிசலைக் கழனிக்குரிய நல்ல உரமாகத் திருத்தியமைக்கிறது. அதன்பால் உள்ள துர்நாற்றத்தையும் அது சீர்படுத்துகிறது. பூமியில் நல்ல விளைவுக்கு அவை பயன்படுகின்றன. இனி, வேறு ஒரு யந்திரசாலைக்குள் வி த வி த மா ன விளைபொருள்கள் கொண்டுவரப்படுகின்றன. அவை யாவையும் சித்தப்படுத்திய உணவுப்பொருள்களாக மாற்றியமைக்கும் திறன் அந்த யந்திரத்துக்கு இருக்கிறது. இவையாவும் கீழான நிலையில் இருப்பவைகளை மேலான நிலைக்குக் கொண்டுவரும் செயல்கள் ஆகின்றன. இது உயிரற்ற யந்திரங்களுக்கிடையில் நிகழும் அதிசயச்செயல். மனிதனோ உயிர் வாழ்பவைகளுள் உயர்ந்தவன். அவனிடத்து நிகழக்கூடிய அதிசயச் செயல்களுக்குமுடிவில்லை.

தன்னை மகோன்னத நிலையில் இருக்கும் மேலோனாக மாற்றியமைக்க மனிதனுக்கு இயலும். துன்பத்துக்கு ஏதுவான நிகழ்ச்சிகள் இயற்கையில் உண்டு. அவைகளைத் தவிர்க்கவோ அறவே துடைத்துவிடவோ யார்க்கும் இயலாது. துன்பம் வந்து வாய்த்தகாலை பாமரன் தளர்வுறுகின்றான்; முறையிடுகின்றான்; தவிக்கின்றான். சான்றோனோ துன்பத்தைப் பொல்லாங்கு என்று பொருள்படுத்துவதில்லை. தீயில் இட்டு உருக்குமளவு பொன் சுடர்விடுகிறது; அதன் மாசு நீங்குகிறது. துன்பத்தைச் சான்றோன் அமைதியுடன் ஏற்றுத் தன்னைத் தூய்மைப்படுத்துகின்றான். பிறர்படும் துன்பத்தைத் தன்னுடைய துன்பம் போன்று கருதும் பரந்த பாங்கு அவனுக்கு வருகிறது. பாமரன் துன்பத்துக்கும் அடிமைப்படுகிறான், இன்பத்துக்கும் அடிமைப்படுகிறான். இனியவை வந்து வாய்த்தகாலை பாமரன் அவைகளை ஆத்திரத்துடன் தாவிப்பிடிக்கிறான். தீயைக் கண்டு மகிழ்வுறும் விட்டில் பூச்சி தீயிலே தன்னைத் தொலைத்துவிடுவது போன்று பாமரன் இன்பத்தில் மூழ்கித் தன்னைத் தொலைத்துவிடுகிறான். இன்ப துன்பங்களை ஏற்கும் முறை அவனுக்குத் தெரியாது. நலம் கேடு, இன்பம் துன்பம் ஆகியவைகளை முறை தவறி ஏற்பது இகழ்ச்சி. தற்செயலாய் வந்தமையும் இயற்கையின் நடைமுறைகளைக் கர்மயோகி மனம் கோணாது ஏற்கின்றான். அப்படி அவைகளைப் பாங்குடன் ஏற்பது இகழ்ச்சியாகாது. தன்னுடைய இயல்பைப் பண்படுத்தி மேலான இயல்பாக மாற்

றிக்கொள்ளுதற்குக் கர்மயோகி அவை யாவையும் பயன்படுத்துகிறான். துன்பம் கர்மயோகியை சாந்தப்படுத்துகிறது; இன்பம் அவனைப் பற்றற்றவன் ஆக்குகிறது. ஏனென்றால் உலக இன்பம் ஒவ்வொன்றிலும் துன்பம் தவிர்க்க முடியாத பாங்கில் மறைந்திருப்பதை அவன் காண்கின்றான். இப்பொழுது இன்பமாகத் தென்படுவது பின்பு ஏதேனும் ஒரு நாளில் துன்பமாக வடிவெடுப்பது திண்ணம். ஆதலால் இன்பத்துக்குக் கர்மயோகி அடிமைப்படுவதில்லை. உலகம் அளிக்கின்ற இன்பம் துன்பம், நலம் கேடு ஆகிய யாவையும் கர்மயோகி அமைதியுடன் ஏற்றுக்கொள்கிறான். கடலானது நதிகளை ஏற்றுக்கொள்வது போன்று உலக வைபவங்களை அவன் வாங்கிக்கொள்கிறான். அவைகளின் வாயிலாகத் தனது இயல்பையே மேலானதாக அவன் மாற்றியமைக்கிறான். குணசீலம் வாய்க்கப் பெற்றவனாக அவன் மாறியமைகிறான். குணம் என்னும் குன்று ஏறி நிற்கிறவன் என்று அவனைப் பகரவேண்டும். மனம் தெளிவடைவதால் அவனுக்குப் பேராற்றல் உண்டாகிறது. பின்பு அவனிடத்திருந்து கிளம்பும் எண்ணங்கள் சக்தி மிகவாய்க்கப் பெற்றவைகளாகப் புறவுலகில் பாய்கின்றன. இங்ஙனம் ஐம்பொறிகள் வாயிலாக வாங்குதல், வாங்கியவைகளை மேலான இயல்புகளாக மாற்றியமைத்தல், மாற்றியமைத்தவைகளை மீண்டும் மக்களுக்கு மகிழ்வுடன் எடுத்து வழங்குதல்—இத்தகைய செயல்களின் மூலம் மேலோன் ஆகின்றவனே கர்மயோகி.

உலகில் அரும்பெரும் செயல்கள் பலவற்றைப் பார்க்கிறோம். மானுட சமுதாயம் பெரிய இயக்கங்களை நடாத்திவருகிறது. நம்மைச் சுற்றிலும் பெரிய பெரிய திட்டங்கள் நடைமுறையில் இருந்து வருகின்றன. இவையனைத்துக்கும் காரணம் யாது என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். இவை யாவும் எண்ணத்தின் புறத்தோற்றங்களாம். மனிதனுடைய எண்ணம் கிரியாசக்தியாக வடிவெடுத்து இவை யாவையும் நிகழ்த்திவருகிறது. பெரிய யந்திரங்கள் வினையாற்றிக்கொண்டிருக்கின்றன. வியப்புக்குரிய கருவிகள் பல காரியங்களுக்குப் பயன்பட்டு வருகின்றன. பெரிய பட்டணங்கள் பல அமைக்கப்பெற்றிருக்கின்றன. மஹா சமுத்திரங்களைத் தாண்டி வசதிகள் வாய்க்கப் பெற்ற கப்பல்கள் போய்க்கொண்டிருக்கின்றன. மிதக்கிக்கொண்டிருக்கும் கோட்டைகள் போன்ற யுத்தக் கப்பல்கள், நாசகாரிகளாகிய பயங்கரமான யுத்ததளவாடங்களுடன் கட்டப்பெற்றிருக்கின்றன. இவை யாவும் எப்படி உரு எடுத்தன என்பது கேள்வி. மனிதனுடைய எண்ணத்தின் விளைவாக இவைகள் உரு எடுத்திருக்கின்றன. வியப்புக்குரிய இவ் எண்ணங்களும், எண்ணரியவைகளை எண்ணியாங்கு செய்து முடிக்கும் வினைத்திறனும் மனிதனுக்கு எப்படி வந்து அமைந்துள்ளன? மனிதன் படைத்துள்ள மனபரிபாகமும், வாழ்க்கைத்திறனும் இச்செயல்களுக்குக் காரணமாயின. மனிதனுடைய வாழ்வை வலிவு படைத்ததாக வகைப்படுத்தியது யாது என்பது

அடுத்துவரும் கேள்வி. இவ்வினவுக்கும் விடை வருகிறது. மனிதன் ஆற்றுகின்ற வினையே அவனுடைய வாழ்வை இங்ஙனம் வகைப்படுத்தியது. மனிதன் எத்தகைய வினையாற்றுகின்றானோ அதற்கு ஏற்றவாறு அவனுடைய உணர்வும் எண்ணமும் உரு எடுக்கின்றன. இத்தொல்லுலகில் பேராற்றல் படைத்த பெருமக்கள் பலர் தோன்றியுள்ளார்கள். செயற்கரிய செயல்கள் பலவற்றை அவர்கள் செய்து சாதித்திருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் அதிசயிக்கத்தக்க முறையில் கர்மவீரர்களாக வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் படைத்திருந்த பேராற்றலை யாராலும் அளக்கமுடியாது. உலகில் உள்ள பலவற்றை வேண்டியவாறு மாற்றியமைக்கும் உறுதிப்பாடும் கிரியா சக்தியும் அவர்களிடத்திருந்தன. இத்தகைய மன வலிவு அவர்களுக்குக் குருட்டு வாய்ப்பாக வந்து அமையவில்லை. பல பிறவிகளில் அவர்கள் அரும்பெரும் செயல்கள் புரிந்து கர்மவீரர்கள் ஆனார்கள்.

சரித்திர பூர்வமாக உலகில் வாழ்ந்திருந்தவர்களும், உலகில் பெரிய மாறுதல்களை உண்டுபண்ணியவர்களுமாகிய இரண்டு பெருமக்களை ஈண்டு நாம் சான்றுகளாக எடுத்துக்கொள்வது அவசியமாகிறது. இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முன்பு இந்தியாவில் புத்தர் பெம்மான் அவதரித்தார். கிட்டத்தட்ட இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு ஆசியாக் கண்டத்தின் மேற்குப் பகுதியில் இயேசு கிறிஸ்து அவதரித்தார். எண்ணியதை எண்ணியாங்கு சாதிக்கும்

வினைத்திறன் அவர்களுக்கு அமைந்திருந்தது. அவர்கள் எடுத்திருந்த அந்த ஒரே பிறவியில் அத்தகைய பேராற்றலை அவர்கள் பெற்றுவிட்டார்கள் என்று பகரலாகாது. மக்களுக்கு ஆற்றல் குடும்ப பரம்பரையாக வருகிறது என்றும், பெற்றோருடைய பாங்கு பிள்ளைகளுக்கு வந்து அமைகிறது என்றும் பலர் கருதுகின்றனர். பிள்ளைகளின் உடலுக்குரிய பிண்டத்தைக் கொடுத்துவிடுவது ஒன்றுதான் பெற்றோருடைய செயல். பிள்ளைகளின் மனபரிபாகம் பெற்றோருடைய கொடை என்று கருதுவது பொருந்தாது. புத்தர் பெம்மானுக்கும் ஏசுகிறிஸ்துவுக்கும் வாய்க்கப்பெற்றிருந்த பெற்றோர்கள் எத்தகையவர்கள் என்பதை நாம் அறிகிறோம். மானுடவர்க்கத்தின் நலத்தை முன்னிட்டு நல்லுபதேசம் ஏதாவது ஒன்றையாவது அவர்களுடைய பெற்றோர்கள் பகர்ந்தார்கள் என்று உலகில் யாரும் அறிந்திலர். ஏசுகிறிஸ்துவுக்கு சூசையப்பர் என்று பெயர் படைத்திருந்த தச்சன் ஒருவர் தந்தையாக வாய்த்தார். சூசையப்பரைப் போன்ற லக்ஷக்கணக்கான தச்சர்களை உலகம் பார்த்திருக்கிறது. சூசையப்பரைப் போன்றவர்கள் இன்றைக்கும் லக்ஷக்கணக்கான பேர் வாழ்ந்திருக்கின்றனர். இனி, புத்தரின் தந்தையைப்பற்றி ஆராய்வோம். அவர் ஒரு சிற்றரசனாய் இருந்தார். அவர் போன்ற சிற்றரசர்களை லக்ஷக்கணக்கில் உலகம் யாண்டும் பார்த்து வருகிறது. சுத்தோதனன் என்பது அவருடைய பெயர். ஒருவேளை அவருடைய ஆணைக்கு அவருடைய வேலைக்காரனே

கீழ்ப்படியாதிருந்திருக்கலாம். ஆயினும் அத்தகைய சிற்றரசனுக்கு புத்தர்பெம்மான் மகவாக வாய்த்தார். இவருடைய ஆணையை உலகில் செம்பகுதிசிரமேற்கொண்டு அதன்படி ஒழுகமுயன்றுவருகிறது. தந்தையின் இயல்பே மைந்தனுக்கு வந்தமைகிறது என்னும் கோட்பாடு உண்மையன்று என்பதை இப்பெருமக்கள் வரலாறுகள் நிரூபிக்கின்றன. மன அமைப்பில் ஏசுகிறிஸ்துவுக்கும் அவருடைய தந்தைக்கும் ஒரு தொடர்புமில்லை. மன அமைப்பில் புத்தர் பெம்மானுக்கும் அவருடைய தந்தைக்கும் ஒருவிதமான தொடர்வும் இல்லை. கடவுளை வணங்குவது போன்று ஏசுகிறிஸ்துவையும், புத்தர் பெம்மானையும் உலகம் போற்றுகிறது. ஆனால் அவர்களுடைய பெற்றோர்களையோ வெறும் உபசாரத்துக்காகவென்று யாரோ சிலர் பாராட்டுகின்றனர். உலகம் போற்றுதற்குரிய சிறப்பு ஒன்றும் அவர்களிடத்து வாய்க்கவில்லை. ஆக, தந்தையின் இயல்பே மைந்தனுக்கு வந்தமைகிறது என்னும் கோட்பாடு உலக நடைமுறையில் நிரூபிக்கப் பெறுவதன்று. உலகத்தவரிடத்து அரிய எண்ணங்களையும், அரிய உணர்வுகளையும் புத்தர்பெம்மானும் ஏசுகிறிஸ்துவும் செலுத்தியுள்ளார்கள். இத்தகைய எண்ண வலிவு அவர்களுக்கு எங்கிருந்து வந்தது? இத்தகைய திறமையை அவர்கள் எங்கிருந்து பெற்று சேகரித்து வைத்தார்கள்? ஒரு பிறவியில் அது அவர்களுக்கு வந்து வாய்த்ததன்று. பிறவிகள் பல அவர்கள் எடுத்திருக்கவேண்டும். பிறவி தோறும் அவர்களுடைய ஆற்றல் அதிகரித்துக்

கொண்டே வந்தது. ஆற்றல் முற்றிலும் உரு எடுத்தான பிறகு ஒரு பெருமகன் புத்தர் எனவும், மற்றொரு பெருமகன் கிறிஸ்து எனவும் சமுதாயத்துக்கிடையே சிறப்புற்று விளங்கலாயினர். அவர்கள் தோன்றி ஆண்டுகள் பல புரண்டோடிவிட்டன. எனினும் அவர்கள் புகட்டியுள்ள சீரிய எண்ணங்கள் இன்றைக்கும் சமுதாயத்துக்கிடையே ஆதிக்கம் செலுத்தி வருகின்றன.

மனிதன் அடைகின்ற பேறு அனைத்தும் அவன் ஆற்றுகின்ற வினையின் வாயிலாகவே அவனுக்கு வந்து அமைகிறது. இனி மனிதன் பெறுகிற பேறு செல்வமாக அவனுக்கு வந்து அமையலாம்; பேராற்றலாக வந்து அமையலாம்; மற்றவர்களை நல்வழியில் நடாத்துகின்ற ஆதிக்கமாக அவனுக்கு வந்து அமையலாம். யாருக்கு எத்தகைய பேறு அமைகிறதோ அது தற்செயலாக அமைந்ததன்று; அதிர்ஷ்டமாகக் கிடைத்ததுமன்று. யார் எதற்காகப் பாடுபடுகின்றானோ அதுவே அவனுக்குக் கிட்டுகிறது. பாடுபட்டு சம்பாதியாதது ஒன்று யாருக்கும் வாய்ப்பதில்லை. இது வாழ்க்கையைப்பற்றிய ஒரு பெரிய விதி ஆகிறது. எக்காலத்திலாவது இவ்விதி பொய்போய்விடுவதில்லை. சர்வகாலமும் எல்லார்க்கும் ஒப்ப அமைந்துள்ள விதி இதுவேயாம். யார் எதற்காகத் தன்னைத் தகுதியுடையவனாகச் செய்து கொண்டிருக்கின்றானோ அதுவே அவனுக்கு வந்தெய்தும் என்னும் விதி சிலவேளைகளில் மெய்ப்பிக்கப்படுவதில்லை, அது பொய் போய் விடுவதும் உண்டு என்று

நம்மில் சிலர் எண்ணலாம். ஆனால் வாழ்க்கையைமுறை யாக ஆராய்ச்சிசெய்துபார்த்தால் நாளடைவில் இதைப் பற்றிய உண்மை நமக்குத் தெளிவாக விளங்கும். நாம் சம்பாதியாதது ஒன்று நமக்குச் சொந்தமாவதில்லை என்பதுதான் உண்மை. தான் பணக்காரன் ஆக வேண்டுமென்று ஒரு மனிதன் தனது ஆயுட்கால முழு திலும் பெரும்பாடுபடுகிறான். ஆயிரக்கணக்கான பேரை அவன் ஏமாற்றவும் கூடும். அப்படி ஏமாற்றுவதால் செல்வம் தன்னிடத்து வந்து குவிவதும் உண்டு. அப் படிக் குவிந்துவிட்டதனால் அந்தச் செல்வம் அவனுக் குச் சொந்தமானதாய்விடாது. அதற்கு வெறும் காவல்காரனாகவே சிறிது காலம் அவன் இருந்து வரு கிறான். எதற்காகவென்று அவன் உண்மையாகப் பாடுபட்டு உழைத்தானோ அதுவே அவனுக்குச் சொந்தமாகிறது. முறைதவறி அவனிடத்து வந்து அமைந்த செல்வம் அத்துடன் அவனுக்கு உபத்திரவத் தையும் கொண்டுவந்து சேர்த்துவிடும். சேர்ந்த செல் வத்தோடு பலவிதமான துன்பங்களுக்கும் அவன் ஆள் ஆகிறான். முறைதவறிய சம்பாத்தியம் முடிவில்லாத சஞ்சலத்தையும் கொண்டுவந்து சேர்த்துவிடும். தனது உடலின் மூலமாக விதவிதமான சுகபோகங்களை அனு பவிப்பதற்கு வேண்டிய பொருள்களை மனிதன் ஏராள மாகச் சேகரித்துக் கொண்டே போகலாம். அப்படிச் சேகரித்த பொருள்களை அவன் காவல் காத்தும் வர லாம். ஆனால் உண்மையில் அவன் அனுபவிப்பது யாது என்பது கேள்வி. எதற்காக முறையாக அவன்

பாடுபட்டிருக்கிருனே அதை மட்டுமே அவன் அனுப விக்க முடியும். முறைதவறித் தேடியவைகளெல்லாம் அவனுக்குத் தொந்திரவையே உண்டுபண்ணும். அதற்குமேல் அவன் பெறுகின்ற பலன் ஒன்றுமில்லை.

அறிவிலி ஒருவன் உலகத்திலுள்ள புஸ்தகங்களை யெல்லாம் விலைக்கு வாங்கி தன்னுடையவைகள் என்று அவைகளை அடுக்கி வைத்திருக்கலாம். காட்சிக்கு இனிய ஒரு பெரிய புஸ்தகசாலையாக அவை யாவும் அமைந்துவிடலாம். ஆனல் அப்புஸ்தகங்களை யெல் லாம் முறையாகக் கற்றறிந்த அறிவாளியாக அவன் ஆய்விடமாட்டான். அத்தனை புஸ்தகங்களுள் எதைக் கற்றுணரத் தகுதியுடையவனுக அம் மனிதன் இருக் கிருனே அதைமட்டுமே அவன் ஆராய்ச்சிபண்ணுகின் ருன். ஏனைய நூல்கள் எல்லாம் அவன் கைவசத்தில் இருந்ததோடு முடிவுபெற்று விடுகின்றன. எந்தப் புஸ்தகத்திலிருந்து எத்தகைய அறிவை அம்மனிதன் பெற்றுள்ளாஞே அந்த ஞானச் செல்வம் அவன் ஆற் றிய வினைக்கு ஏற்றவாறே அவனுக்கு வந்து அமைந் தது. ஆகவே நல்லறிவு என்கிற ஞானச் செல்வமும் வினையின் மூலமாக ஒரு மனிதன் அடைந்துள்ள தகு திக்கு ஏற்றவாறே வந்தமைகிறது. நாம் எதைப் பெறத் தகுதியுடையவர்களாக இருக்கிருேம் என்பதை நமது கர்மமே நிர்ணயிக்கின்றது. உடலின் பொருட்டு உணவை உண்கின்ருேம். உள்ளத்தின் பரிபாகத்தின் பொருட்டு நூல்களை ஆராய்கின்ருேம். உண்ட உண வில் எப்பகுதியை நாம் செமித்து நம் உடல் மயம்

ஆக்கியுள்ளோம் என்பது நாம் ஆற்றும் வினையைப் பொறுத்தது. கற்ற கல்வியில் எப்பகுதி நமக்குச் சொந்தமாய் இருந்து நம்மை அறிவாளியாக்குகிறது என்பதும் நாம் ஆற்றும் வினைப்பயனாக வருவதேயாம். நாம் படைத்துள்ள பொருள் எத்தகையது என்பதும், நாம் பெற்றுள்ள அறிவு எத்தகையது என்பதும் நாம் எடுத்துக்கொண்ட முயற்சியின் விளைவேயாம். நாம் மேலான பாங்குடையவர்கள் ஆகலாம். நாம் கீழான பாங்குடையவர்களாகவும் போய்விடக்கூடும். நாம் எத்தகைய பாங்குடையவர்களாகின்றோமோ அதற்கு நாமே பொறுப்பாளிகள்; வேறு யாரும் நமது நிலைமையை மாற்றியமைத்துவிடவில்லை. நமது விருப்பத்திற்கு ஏற்ப எந்த நிலையில் வேண்டுமென்றாலும் நம்மை நாம் வைத்துக்கொள்ளலாம். விரும்பினால் உயர்ந்த நிலையில் நம்மை நாம் வைத்துக்கொள்ளலாம். நம்மை நாமே கீழ்மைப்படுத்திக்கொள்வதும் நம்மிடத்திலேயே இருக்கிறது. நம்மை நாம் உயர்த்திக்கொள்ளுதற்கேற்ற ஆற்றலும் நம்மிடத்திலேயே இருக்கிறது என்பதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கடவுளுடைய அருள் நமக்குச் சொந்தமாய் இருக்கிறது என்பதனுடைய கருத்து இதுவே. மிக மகோன்னதமான நிலைக்கு வேண்டுமென்றால் நம்மை நாம் உயர்த்திக்கொள்ளலாம். அதற்கு ஏற்ற ஆற்றல் வாய்க்கப்பெற்றவர்களாக நாம் இருக்கிறோம்.

இப்பொழுது நாம் என்ன நிலையில் இருக்கின்றோமோ அது இது பரியந்தம் நாம் ஆற்றியுள்ள வினை

யின் விளைவேயாம். அப்படியானால் இனிமேல் எத்தகைய நிலைக்கு நம்மை நாம் உயர்த்திக்கொள்ள விரும்புகின்றோமோ அதற்கேற்றவாறு இனி நாம் பாடுபட முடியும் என்பதும் வெளியாகிறது. இதுகாறும் நாம் அடைந்துள்ள நிலை பழைய முயற்சியின் பயனாய் விட்டது. இனி, நாம் அடைய விரும்பும் நிலை இப்பொழுது நாம் எடுத்துக்கொள்ளும் முயற்சியின் விளைவாகும். ஆதலால் இனி நாம் எத்தகைய முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதை நாம் நன்கு அறிந்தாகவேண்டும். நமது எதிர்கால நிலையை எப்படி வேண்டுமானாலும் மாற்றி யமைத்துக்கொள்ளும் வாய்ப்பு யாண்டும் நமக்குச் சொந்தமாய் இருக்கிறது. அதற்கேற்ற உபாயத்தை அறிந்துகொள்ளுதல் நமது கடமையாகும். இக்கோட்பாட்டுக்குச் சிலர் தடைகள் சொல்லுவதுண்டு. "எப்படி வினையாற்ற வேண்டுமென்று கற்றுக்கொள்வதால் ஆவதென்ன? இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் ஏதேனும் ஒரு விதத்தில் வினையாற்றிக்கொண்டே இருக்கின்றான். வினையாற்றாத மனிதன் இவ்வையகத்தில் இல்லை. ஏதேனும் ஒரு போக்கில் நாம் ஆற்றும் வினை வந்து அமையட்டுமே!" இங்ஙனம் எண்ணுவாரும் பேசுவாரும் உளர். இப்படி எண்ணுவது பொருந்தாது. ஏனென்றால் வகையுடன் வினையாற்றாவிட்டால் நம்மிடத்துள்ள ஆற்றல் வீண் விரயமாய்விடும். அதற்கு இரண்டொரு சான்றுகள் எடுத்துக்கொள்வோம். சமைப்பதற்கு அடுப்பு எரிக்கின்றவர்கள் அதை முறையாகச் செய்யத் தெரிந்து

கொள்ளாவிட்டால் தீயின் வெப்பத்தில் பெரும்பகுதி வீணாய்ப் போய்விடுகிறது. நீராவி யந்திரத்தை ஓட்டு தற்கு ஆவியை நீராவி உலையில் (boiler) கட்டிப்பிடிக் கிறோம். அந்த உலையில் ஏதேனும் ஓர் இடத்தில் பொத்தல் அல்லது தளர்வு இருந்தால் உண்டுபண்ணப் படும் ஆவியில் ஒரு பகுதி வீணாக வெளியே போய்விடும். அதனால் வீண் நஷ்டம் உண்டாகிறது. மனிதனுடைய வாழ்க்கையும் அதுபோன்றது. கர்மயோகம் என்னும் சாஸ்திரம் மனிதன் கர்மத்தை எங்ஙனம் புரியவேண் டும் என்று புகட்டுகிறது. योगः कर्मसु कौशलम् யோகः கர்மஸு கௌசலம் என்பது இதைப்பற்றிய கோட் பாடு. செய்வதைத் திருந்தவும், திறம்படவும் செய் யுங்கால் அது கர்மயோகமாகிறது. எப்படி வினையாற்ற வேண்டும் என்பதை அறிந்துகொள்பவனே யோகி. முறையாக வினையாற்றுபவன் எடுத்துக்கொள்கிற ஒவ்வொரு முயற்சியினின்றும் பெரும் பயன் விளை கிறது. வீண்போகின்ற பாங்கில் கர்மயோகி ஒரு அற்ப வினையையும் ஆற்றுவது கிடையாது. எதற்காக வினையாற்றவேண்டும் என்பதையும் கர்மயோகி நன்கு அறிந்திருக்கிறான். மனது பேராற்றல் படைத்தது. ஆற்றல் அனைத்தும் அதனிடத்துப் புதைந்து மறைந்து கிடக்கிறது. இந்த ஆற்றலை வெளிப்படுத்துதற்கே யோகி கர்மம் செய்கிறான். ஆற்றல் தோற்றத்துக்கு வருமளவு ஆத்ம போதமும் உண்டாகிறது. ஆற்றல்க ளனைத்தும் மனிதனுடைய மனத்தகத்து அமையப் பெற்றிருப்பது போன்று ஞானமும் அவனுடைய

மனத்தகத்து அமைந்துள்ளது. வினையாற்றுதலின் மூலம் மனத்தகத்துள்ள ஆற்றலையும் அறிவையும் தோற்றத்துக்குக் கொண்டுவரவேண்டும். தூங்குகின்ற மனிதனைத் தட்டி எழுப்புதற்குச் சமானமாகின்றது கர்மயோகம். மற்றொரு பாங்கில் மொழியுமிடத்து காய்ச்சிய இரும்பை சம்மட்டியால் அடித்து உரு ஆக்கு தற்குச் சமானமாகின்றது கர்மயோகம். தூங்கிக் கொண்டிருக்கின்ற ஆத்ம சொரூபத்தை விழிப்படை யச் செய்வது யோகத்தின் நோக்கமாகும்.

வெவ்வேறு நோக்கங்களை முகாமையாக வைத்துக் கொண்டு மனிதன் செயல்புரிகின்றான். ஏதேனும் ஒரு நோக்கத்தால் தூண்டப்பெற்றாலொழிய யாரும் வேலை செய்ய முடியாது. ஒரு சிலர் புகழ் வேண்டுகின்றனர். மற்றவர்கள் தங்களைப் போற்றிப் பாராட்டுமிடத்து அவர்கள் பரமதிருப்தி யடைகின்றனர். ஆதலால் கீர்த்திக்காகவென்று அவர்கள் பெரும் பிரயத்தனம் எடுத்துக்கொள்கின்றனர். இன்னொரு சிலருக்குச் செல்வம் வேண்டியிருக்கிறது. செல்வத்தைச் சேகரித் தல் பொருட்டு அவர்கள் அல்லும் பகலும் அமைதி யின்றி உழைக்கின்றனர். உணவையும் ஓய்வையும் உறக்கத்தையும் துறந்துவிட்டுப் பொருளை நாடி அவர் கள் அலைந்து திரிகின்றனர். வேண்டியவளவு பொருளைப்பெறுதல் பொருட்டுத் தன் சொந்த ஊரை யும் உற்றார் உறவினரையும் விட்டுப்பிரிந்து வேற்றூர் போவதற்கும் அன்னவர் ஆயத்தமாய் இருக்கின்றனர். வேறு ஒரு சாரார் ஆதிக்கத்தை விரும்புகின்றனர்.

ஆதிக்கத்துக்காகவென்று அவர்கள் பகீரதப் பிரயத்தனம் எடுத்துக்கொள்கின்றனர். சித்திகள் சிலவற்றைப்பெற இன்னும் சிலர் இச்சை கொள்கின்றனர். சித்திகளைப் பெறுதற்கு எத்தகைய அப்பியாசங்களை அனுஷ்டிக்க வேண்டுமென்று நூல்கள் இயம்புகின்றன. அவைகள் இயம்பியுள்ளபடி மாந்தர் பெரிதும் முயன்று வருகின்றனர். சுவர்க்கப் பிராப்தி யடைய வேண்டுமென்று ஆசைப்படுபவர்களும் உண்டு. மண்ணுலகில் எத்தகைய செயல்களைச் செய்தால் சுவர்க்கம் கிட்டும் என்று சில சாஸ்திரங்கள் சொல்லியிருக்கின்றன. அந்த நியமனத்தின்படி அன்னவர் வினையாற்றி வருகின்றனர். தாங்கள் தேகவியோகமான பிறகு தங்களுடைய பெயர் பாரினுள் நிலைத்திருக்க வேண்டுமென்று ஆசைப்படுபவர்கள் உண்டு. அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தங்கள் ஆயுட்கால முழுதிலும் செய்து வருகின்ற மனிதரைக் காணலாம். இது ஒரு விதத்தில் சீன தேசத்திலுள்ள ஒரு பழக்கத்துடன் ஒத்திருக்கிறது. ஒரு மனிதன் எத்தகைய அரும்பெரும் செயல் ஆற்றினாலும் அவன் உயிரோடு இருக்கும் பொழுது அந்நாட்டில் அவனை யாரும் சிலாகித்துப் பேசுவது கிடையாது. அவன் தேகவியோகமான பிறகு அவனுக்குப் பட்டம் வழங்கி அவனைப் பாராட்டுவார்கள். அந்த ஏற்பாடு ஒரு விதத்தில் மிக மேலானது. உயிருடன் இருக்கின்ற ஒருவனுக்குப் பெரிய பட்டம் ஒன்றை வழங்கினால் பின்பு அவன் அப்பட்டத்துக்குத் தகுதியற்றவனாகப் போய்விடுவது சாத்தியம். அப்படி

அவன் கீழ்மையடைந்துவிட்டால் பட்டத்தை வழங்கியவர்களுக்கும் அக்கீழ்மையில் பாத்தியதை கொஞ்சம் உண்டு. ஆனால் காலம் சென்றவனுக்கு வழங்குகின்ற பட்டத்தைக் கெடுத்துவிடுவதற்கு அவன் திரும்பி வருவதில்லை. அந்த அளவில் அது ஒரு சிறந்த ஏற்பாடு ஆகிறது. சீனா தேசத்தில் மற்றொரு நல்ல பழக்கம் இருக்கிறது. அரும்பெரும் செயல் ஒன்றை ஒரு மனிதன் சமுதாயத்தில் செய்து சாதிப்பானானால் அவன் உயிருடன் இருக்கின்றபொழுதே அவனைப் பாராட்டுதற்கு உபாயம் ஒன்றைக் கையாளுகின்றனர். உயிருடன் இருக்கின்ற அந்த கர்ம வீரனுக்குப் பட்டம் வழங்குதற்குப் பதிலாகக் காலம் சென்றுபோன அவனுடைய தந்தைக்கோ அல்லது பாட்டனாருக்கோ அவர்கள் பட்டம் வழங்குகிறார்கள். அந்தப் பழக்கமும் பாராட்டத்தக்கதேயாம். எவ்விதத்திலும் தங்கள் பெயரை அழிந்துபட்டுப் போகாது காப்பாற்றி வைக்க முயலுகின்ற கூட்டத்தார் உலகில் இருந்து வருகின்றனர்.

மகம்மதியர்களுக்கிடையில் உட்பிரிவுகள் சில இருக்கின்றன. ஒவ்வொரு பிரிவிற்கும் அலாதியாகச் சொந்தமான சம்பிரதாயங்கள் சில உண்டு. அவர்களில் சிலர் தாங்கள் செத்துப்போன பிறகு தங்களுக்குப் பெரிய கல்லறை கட்டிவைக்க வேண்டுமென்று விரும்புகின்றனர். அதற்காகவென்று தங்கள் ஆயுட்காலம் முழுதிலும் அவர்கள் முயற்சி எடுத்துக்கொள்கின்றனர். அவர்களுள் மற்றொரு சம்பிரதாயம் படைத்தவர்கள்

இருக்கின்றனர். அன்னவர்களுள் ஒரு குழந்தை பிறந்ததும் அதன் பொருட்டு ஒரு கல்லறை ஆயத்தப்படுத்தப்படுகிறது. மானுடனுக்குக் கல்லறை ஆயத்தப் படுத்துவது அவர்களுக்கிடையில் மிகமிக முக்கியமான வேலை ஆகிறது. ஒரு மனிதனுக்காகவென்று ஆயத்தப் படுத்தியுள்ள கல்லறையானது எவ்வளவுக்கெவ்வளவு பெரியதாக அமைக்கப் பெறுகிறதோ அல்லது அழகு வாய்ந்ததாக அமைக்கப்பெறுகிறதோ அதற்கேற்ற வாறு அம்மனிதன் மறுமையில் மேன்மையுற்றிருப் பான் என்பது அவர்களின் நம்பிக்கை.

பிராயச்சித்தம் பண்ணுகின்ற பான்மையில் வினை யாற்றுகின்றவர்களும் உலகில் உளர். அறிந்தோ அறி யாமலோ மனிதன் செய்துள்ள கேடுகளுக்குக் கழுவாய் தேடுவது பிராயச்சித்தம் என இயம்பப்படுகிறது. வாழ்நாளில் ஒரு சிலர் அடாத செயல்கள் பலவற்றைத் துணிந்து செய்கின்றனர். தாங்கள் செய்தது சரியல்ல வென்று பிறகு அவர்கள் மனதில் படுகிறது. அதற் குப் பிராயச்சித்தமாக அவர்கள் கோயில் ஒன்று கட்டு விக்கின்றனர். புரோகிதர்களுக்கு அன்னவர்கள் வேண் டியவாறு கோதானம், பூதானம், சொர்ணதானம், வஸ்திரதானம் முதலியவைகளைத் தாராளமாக எடுத்து வழங்குகின்றனர். தாங்கள் புரிந்த பாபத்தினின்று தங்களுக்கு விமோசனம் கிட்டுமென்று அவர்கள் நம்பு கின்றனர். அத்தகைய பாபிகளுக்குப் பரலோகப் பிராப்தி கிடைப்பதற்கு இந்தப் புரோகிதர்கள் துணை புரிவார்கள் என்றும், வழி திறந்து வைப்பார்களென்

றும் அவர்கள் நம்புகின்றனர். இத்தகைய தானக்கிரியைகள் மூலம் தங்களுடைய பாபங்களை யெல்லாம் நிவர்த்தி செய்துகொள்ள முடியும் என்றும், தங்கு தடையின்றித் தாங்கள் சொர்க்கத்துக்குள் சென்று விடலாம் என்றும் அவர்கள் மனக்கோட்டை கட்டி வருகின்றனர். இங்ஙனம் மக்களைக் கர்மத்திலே தூண்டுதற்கு விதவிதமான நோக்கங்கள் வாய்த்துள்ளன. ஆனால் இவை யாவும் காமிய கர்மங்கள் என்று கருதப்படுகின்றன. இவை யாவும் செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும் பிரதிபலனை எதிர்பார்த்துச் செய்யப்படும் வினைகள் ஆகின்றன. கர்மயோகத்தில் இத்தகைய காமிய கர்மங்கள் இடம் பெறமாட்டா.

என்ன பாங்கில் மனிதன் வினையாற்ற வேண்டும் என்பது கேள்வி. அதற்குத் தக்க விடையைக் கர்மயோகம் தருகிறது. பிரதிபலன் எதையும் குறித்து வினையாற்றாதே. நல்வினையாற்றுதல் உன்னுடைய கடமை என்று கருதி மகிழ்வுடன் அதைச்செய். இம் மண்ணுலகிலே மேலோர் சிலர் இருக்கின்றனர். உலக வாழ்க்கைக்கே இனிமையையும் மேன்மையையும் அன்னவர் தருகின்றனர். அத்தகைய மேலோர் ஏதோ சில நாடுகளில்தான் வசித்து வருகிறார்கள் என்று கருதலாகாது. ஒவ்வொரு நாட்டிலும், சமுதாயத்திலும் அத்தகைய மேன்மக்களைக் காணலாம். உலக நன்மைக்காகவென்று நல்வினையாற்றுதல் ஒன்றே வாழ்க்கையில் அவர்கள் கொண்டுள்ள குறிக்கோள் ஆகும். தங்களுடைய பேர் பாரினுள்ளே நிலைபெற்றிருக்க வேண்டு

மென்று அவர்கள் கனவிலும் கருதுவது கிடையாது. தங்களையும் தங்கள் வாழ்க்கையையும் உலகம் அறியாது இருந்துவிடுமாகில் ஒருவிதத்தில் அது அவர்களுக்குத் திருப்தியளிக்கும். ஏனென்றால் தங்களுடைய பெயர் முன்னணியில் வருவதை அவர்கள் விரும்புவதில்லை. கீர்த்தியிலும் அவர்கள் கருத்து வைப்பதில்லை. புகழ்ச்சிக்குப் பதிலாக இகழ்ச்சியே அவர்களை வந்து சார்ந்துகொண்டிருந்தால் அதைப்பற்றியும் அவர்களுக்கு அக்கறை யில்லை. சுவர்க்கத்துக்குப் போக வேண்டும் என்ற அவாவும் அவர்களுக்கு இல்லை. அதற்குப் பதிலாக நரகப் பிராப்தியே அவர்களுக்கு வாய்த்துவிட்டாலும் அதைக் குறித்து அவர்கள் அஞ்சுவதில்லை. இம்மையிலோ மறுமையிலோ எத்தகைய மேன்மையையும் பெற அவர்கள் விரும்புவதில்லை. அப்படியாயின் அவர்கள் ஏன் வினையாற்றுகிறார்கள் என்னும் கேள்வி எழலாம். உலகத்துக்குத் தங்களுடைய முயற்சியினின்று ஏதேனும் நன்மை விளைந்தால் அது ஒன்றே அவர்களுக்குப் போதுமானது. உலகத்தார் அடையும் நன்மையில் அவர்கள் பரம திருப்திகொள்கின்றனர். ஏழை எளியவர்களுக்குப் பணிவிடை செய்யும் மற்றொரு கூட்டத்தார் உளர். மானுடவர்க்கத்துக்குத் தொண்டுபுரிதல் ஒன்றேவாழ்க்கையில் அவர்கள் கொண்டுள்ள நோக்கமாகும். தனக்கு வந்து வாய்த்த வெளிச்சத்தைக் கரவாது சந்திரன் உலகுக்கு எடுத்து வழங்குகிறது. தன்னிடத்து அமைந்துள்ள மணத்தைக் கரவாது மலர் உலகுக்கு எடுத்து

வழங்குகிறது. தன்னிடத்துப் படிந்துள்ள இருளையும் பொருள்படுத்தாது சந்திரன் உலகுக்கு வெளிச்சத்தைக் கொடுக்கிறது. பூவைக் கசக்குகின்ற இடத்தும் மணத்தையே அது வாரிக்கொடுக்கிறது. மக்களுள் மேலோர் அத்தகைய மனம் படைத்தவர்கள். எது நலன் என்று அவர்களுக்குத் தோன்றுகிறதோ அந்த நலனை அவர்கள் முழு மனதோடு நேசிக்கின்றனர். அந்த நலனை அவர்கள் உலகுக்கு ஓயாது எடுத்து வழங்கிக்கொண்டே இருக்கின்றனர். பிரதி பலன் எதையும் எதிர்பாராது பாரினுள் இருப்பவர்களுக்கு நலத்தை எடுத்து வழங்கிக்கொண்டே இருப்பது தொண்டர்களின் இயல்பு. உண்மையில் அவர்கள்தான் கர்ம யோகிகள் ஆகின்றார்கள்.

காமிய கர்மம் செய்கின்றவர்களும் ஒரு உண்மையை அறிந்துகொள்வது அவசியமாகிறது. பேருக்கும் புகழுக்குமாகப் பாடுபடுபவர்கள் இருக்கிறார்கள். அது காமிய கர்மம். அப்படிக் காமிய கர்மம் செய்கின்றவர்களுக்கு கர்மபலன் உடனே அமைந்து விடுவதில்லை. நெடுநாளைக்குப் பிறகே விரும்பிய வினைப் பயன் வந்து அமைகிறது. இதுவே பொதுவாக வாழ்க்கையைப்பற்றிய விதி. பேருக்கும் புகழுக்குமாகப் பாடுபடுகின்றவர்களுக்கு விருத்தாப்பியம் வந்துவிடுகிறது, வாழ்க்கை முற்றுப்பெறுகிற காலம் எட்டிவிடுகிறது. அப்பொழுதுதான் பேரும் புகழும் வந்து அமைகின்றன. இனி, நிஷ்காமிய கர்மம் புரிபவனைப் பற்றி ஆராய்ந்து பார்ப்போம். வினைப்பயன் எதையும்

அவன் விரும்புவதில்லை. பிரதிபலனை எதிர்பாராது அவன் நல்வினை ஆற்றிக்கொண்டே போகிறான். அத் தகையவன் அடையப்பெறுவது ஒன்றுமில்லையா என் னும் கேள்வி எழலாம். இக்கேள்விக்குத் தக்கவிடை உண்டு. கைம்மாறுகருதாது தன்கடமையை ஆற்றுகின் றவனுக்கு யாவும் வந்து அமைகின்றன. அடையவேண் டிய மிகப்பெரிய நிலையை அவன் அடைந்து விடுகின் றான். யாரிடத்து சுயநலப்பற்று இல்லையோ, பற்றற்ற பாங்கில் வினையாற்றிவருகின்றானோ அவனுக்கு எல்லாம் வந்து அமைகிறது. ஆசையோடு செயல் புரிகின்றவ னுக்கு வாழ்க்கையின் பிற்பகுதியில் அவனுடைய ஆசை நிறைவேறுகிறது. ஆசையற்றுச் செயல்புரி கின்றவனுக்கு அளப்பரிய நன்மை வந்து அமைகிறது. அதற்குப் பொறுமையோடு காத்திருக்கும் மனிதனைக் காண்பதுதான் அரிதிலும் அரிது. ஆசையின் வசப் பட்டிருக்கிறவன் அவசரப்படுகிறான். விரைவில் வினைப்பயனைப் பார்த்துவிட வேண்டுமென்று விரும்பு கிறான். ஆனால் அது சாத்தியமாவதில்லை. நிராசையில் நிலைபெற்று வினையாற்றுகின்றவனுக்கு ஆசையின் வசப்பட்டிருப்பவன் அடைவதைவிட அதிகம் வந்து வாய்க்கிறது. நல்ல ஆரோக்கியத்தைப் பெறுவதற்கும் நிராசையே உற்ற உபாயமாகிறது. உடல் நலனைக் காப்பாற்ற வேண்டுமென்று ஒருவன் தனக்காக நல் லுணவைத் தேடிவைத்துக்கொள்கிறான். பிறர்க்கு அதைப் பங்கிட்டுக்கொடுக்க அவன் ஆயத்தமாய் இல்லை. ஆனால் அந்த நல்லுணவை அவன் பிறர்க்குப்

பங்கிட்டுக்கொடுக்குமளவு தனக்கு உடல் திட்பம் வந்தமைகிறது. சுயநலத்தைவிட பொது நலன் அதிகமான நன்மையை விளைவிக்கிறது. பிறரை நேசிக்க வேண்டுமென்று பகரப்படுகிறது. உண்மையே பேச வேண்டும் என்பது கோட்பாடு. சுயநலம் அற்றிருக்க வேண்டும் என்று சான்றோர்களால் ஆக்ஞாபிக்கப்பட்டிருக்கிறது. ஏதோ சன்மார்க்க அனுஷ்டானத்திற்கென்று அமைந்துள்ள வெறும் முதுமொழிகள் ஆய்விடமாட்டா இக்கோட்பாடுகள். இத்தகைய மேலாம் நியமனங்கள் வாழ்க்கைக்குரிய உயர்ந்த லக்ஷியங்கள் ஆகின்றன. ஏன் இந்த லக்ஷியங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்னும் கேள்வி எழக்கூடும். இத்தகைய லக்ஷியங்களை உறுதியாக அனுஷ்டிக்கின்ற அளவு ஒரு மனிதனுடைய ஆத்ம சக்தி தோற்றத்துக்கு வருகிறது. அருளோடு கூடிய ஆற்றலை அடையப்பெறுதற்கு இத்தகைய மேலாம் பாங்குகள் பெருந்துணைபுரிகின்றன.

ஒரு மனிதன் சுயநலமற்று ஐந்து நாட்களுக்கு வாழ்ந்திருக்கக்கூடும் என்று வைத்துக்கொள்வோம். இல்லை, ஐந்து நாட்கள் வேண்டாம். ஐந்து நிமிஷங்களுக்கு ஒரு மனிதன் தன்னலத்தை அறவே மறந்திருக்ககூடும் என்று வைத்துக்கொள்வோம். தனக்கு எதிர்காலத்தில் என்ன வந்து அமையப்போகிறதோ என்கின்ற கவலை அவனுக்குச் சிறிதேனும் இல்லை. சுவர்க்க வாழ்க்கையில் தான் சுகம்பெற்றிருக்கவேண்டும் என்கின்ற எண்ணத்தையும் துறந்துவிட்டான். தெய்வத்திடமிருந்து, அல்லது சமுதாயத்திடத்திருந்து

தனக்கு என்ன தண்டனை வரப்போகிறதோ என்கின்ற ஏக்கத்தையும் அவன் அறவே ஒதுக்கிவைத்துவிட்டான். விருப்பு வெறுப்பற்ற உறுதியான மனநிலையை அவன் வெறுமனே ஐந்து நிமிஷங்களுக்குப் பெற்றிருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். இத்தகையவன் பெறுகின்ற பேறு யாது என்னும் கேள்வி எழக்கூடும். ஆத்மீகத்துறையிலே பேராற்றல் வாய்க்கப்பெற்ற பெருமகன் ஆகும் பாங்கு அவனிடத்து உரு எடுத்து விட்டது என்று உறுதி கூறலாம்.

**स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ।**

'கர்மயோகத்துக்குரிய இந்த அறநெறியின் ஒரு சிறு பகுதியையாவது கையாளுகின்றவன் பெரும் பயத்தினின்று காப்பாற்றப் பெறுகிறான்' என்பது பகவத் வாக்கியம். பெருமகன் ஆகின்றவன் பயங்கள் அனைத்தையும் கடந்து அபய நிலைக்குப் போய்விடுகிறான் என்பது கோட்பாடு. இதை அனுஷ்டானத்தில் கொண்டு வருவது மிகக் கடினம் என்பது உண்மை. ஆயினும் உள்ளுற நமது உள்ளத்தையே நாம் ஆராய்ந்து பார்த்தால் இத்தகைய மனநிலை மிகமிக மேலானது என்பது நமக்கு விளங்கும். இத்தகைய உயர்ந்த மனநிலையினின்று நமக்கு எல்லா நலன்களும் உண்டாகும் என்பதும் விளங்கும். ஆக, இந்த மேலான மனநிலையை இப்பொழுது நாம் அடையப் பெறுதிருந்தாலும் நமக்கு இதுவே லக்ஷியம் என்பதை நமது மனச்சாட்சியே சொல்லிவிடும். இத்தகைய சீரிய மனநிலையிலிருந்து உயர்ந்த ஆத்ம சக்தி உரு எடுக்கிறது. தன்

*னைத்தானே அடக்கி ஆளுகின்ற அளவு ஒருவன் வல்லமை வாய்ந்தவனாகின்றான். பொறிவழியே மனது புற உலகில் ஓடிக்கொண்டிருக்கிறது. அதனால் ஆற்றல்கள் அனைத்தும் வீண் விரயம் ஆகின்றன. பொறிவாயில் ஐந்தையும் அவித்துவிட்டது போன்று அடக்கியாள வேண்டும். அவைகளை அடக்கி ஆளுகின்ற அளவு ஆத்ம பலம் அதிகரிக்கிறது. இக்கோட்பாட்டை ஒரு சான்றின் மூலம் விளக்குவோம். வண்டி ஒன்றுக்கு நான்கு குதிரைகள் பூட்டப்பெற்றிருக்கின்றன. மலைச் சரிவு ஒன்றில் அடக்குவாரின்றி அக்குதிரைகள் நான்கும் அதிவேகமாகப் பறந்தோடுகின்றன. இப்படி அவைகள் கட்டிலடங்காது ஓடும் காட்சி ஒன்று. இதற்கு மாறான மற்றொரு காட்சியை எடுத்துக்கொள்வோம். அவ்வண்டியில் வண்டிக்காரன் ஒருவன் இருக்கின்றான். குதிரைகள் பறந்தோடாது அவன் லகான்களைக்கெட்டியாக இழுத்துப் பிடித்துக்கொண்டிருக்கின்றான். இந்த இரண்டு காட்சிகளுக்குள் எக்காட்சியிலே ஆற்றல்கள் அனைத்தும் தடுத்துப் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.*

*பீரங்கி ஒன்று வெடிக்கிறது. அதினின்று அதிவேகத்துடன் குண்டு ஒன்று கிளம்புகிறது. அப்படிக் கிளம்பும்பொழுது அதனிடத்து ஆற்றல் மிக உண்டு. வெட்டவெளியில் அது நெடுந்தூரம் போகிறது. வேகம் ஓய்ந்த பிறகு அது கீழே விழுகிறது. அதே போன்று மற்றொரு பீரங்கிக் குண்டு இருக்கிறது. பீரங்கியி*

னின்று வெளியே வந்தவுடனே ஒரு சுவரின்மீது அது மோதுகிறது. சுவர் உடைந்து கீழே விழுகிறது. ஒரு பீரங்கிக்குண்டு வெறுமனே போய் நிலத்திலே விழுந்தது. மற்றொன்று பெரிய சுவர் ஒன்றை உடைத்துத் தள்ளியது. இதற்குக் காரணம் உண்டு. தன் போக்கில் வெளியில் போகவிட்டபொழுது ஒரு குண்டின் ஆற்றல் குறைந்துபோய்விட்டது. மற்றொன்று புறப்பட்ட இடத்திலேயே தடுக்கப்பட்டபொழுது அதனுடைய ஆற்றலெல்லாம் சுவரை உடைத்தல் என்னும் செயலாக வெளியாயிற்று. மனிதனுடைய எண்ணம் பீரங்கிக்குண்டுக்கு ஒப்பானது. சுய நலத்தால் ஏவப்பட்டு புற உலகிலே போகும் எண்ணம் வலிவற்றது ஆய்விடுகிறது. உலகில் பெரும்பாலோர் சுயநலத்தால் ஏவப்பட்டு எண்ணங்களை எண்ணுகின்றனர், செயல்களையும் புரிகின்றனர். ஆனால் அவ் எண்ணங்களும் செயல்களும் வலிவு அற்றவைகளாய்ப் போய்விடுகின்றன. சுயநலத்தால் தூண்டப்பெற்று ஓர் எண்ணத்தையும் எண்ணுவதில்லை, ஒரு செயலையும் செய்வதில்லை என்று ஒரு மனிதன் தீர்மானிப்பானாகில் அவனிடத்துப் பேராற்றல் உரு எடுக்கிறது. சுயநல எண்ணம் உரு எடுக்கிற இடத்திலேயே அதை உரு எடுக்காது தடுத்துவிட்டால் அது ஆத்ம சக்தியாக அம்மனிதனிடத்திலேயே நிலைபெற்றிருக்கிறது. மனிதன் பேராற்றல் படைத்தவன் ஆவதற்கு உபாயம் ஒன்று உளது. எவ்வளவுக்கெவ்வளவு அவன் தன்னடக்கம் பழகுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய

மனது உறுதி பெற்றது ஆகிறது. மனதின் உறுதிப்பாட்டுக்கு ஏற்ப மனிதன் ஒருவன் திண்ணியன் ஆகின்றான். ஏசுகிறிஸ்து, புத்தர், சங்கரர், திருநாவுக்கரசர் ஆகியோர் மன உறுதியும் திட்பமும் வாய்க்கப்பெற்ற மேன்மக்களாக இலங்கினர். தன்னடக்கம் பழகியதே அவர்களுடைய மேன்மைக்கு உற்ற காரணமாயிற்று. இது வாழ்க்கையைப்பற்றிய ஒரு பேருண்மை. ஆனால் அறிவிலிகள் இதை எளிதில் அறிந்துகொள்ளுவதில்லை. ஏதேனும் ஒரு விதத்தில் மானுடவர்க்கத்தின்மீது ஆதிக்கம் செலுத்தவேண்டுமென்று அத்தகைய அறிவிலிகள் ஆசைப்படுகின்றனர். இன்றைக்கு மடமையில் ஊறிக்கிடக்கும் கீழோன் ஒருவன் நாளைக்கு உலகம் முழுதையும் கட்டி ஆளுகின்ற ஆற்றல் படைத்தவன் ஆகக்கூடும். அதற்காகவென்று ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் அவன் தன்னை ஆயத்தப்படுத்திக்கொள்ளவேண்டும். அதற்கு ஏற்ற பாங்கில் அவன் உழைத்துவரவும் வேண்டும். தனது பரிபக்குவம் பூர்த்தியாகும் வரையில் அவன் பொறுமையோடு காத்திருக்கவும் வேண்டும். உலகின்மீது ஆட்சிசெலுத்தவேண்டுமென்கின்ற அந்தத் துச்ச எண்ணத்தையும் அவன் மறந்திருக்கவேண்டியது அவசியம். பிறரை ஆளவேண்டுமென்ற எண்ணம் சுயநல ஆசையினின்று உதிக்கிறது. அந்த ஆசையை ஒழிக்குமளவு அவனிடத்து ஆற்றல் அதிகரிக்கிறது. எவன் ஒருவன் உள்ளத்தினின்று ஆசைகளெல்லாம் அகன்று விடுகின்றனவோ அவன் ஆற்றல் மிகப்படைத்தவன் ஆகின்

ருன். சமுதாயத்துக்கு அத்தகையவன் தலைமை தாங்கி வரத் தகுதியுடையவனாகின்றான். நம்மில் பெரும் பான்மையோர் அவசரப்படும் பாங்குடையவர்களாய் இருக்கின்றோம். சில ஆண்டுகளுக்குள்ளாக நமக்கு எல்லாம் வந்து அமைந்தாகவேண்டுமென்று ஆத்திரப் படுகிறோம். அப்படி ஆத்திரப்படுவதால் விலங்கு களின் நிலையில் நம்மை நாம் வைத்துவிடுகிறோம். நில வுலகில் வாழ்ந்திருக்கும் விலங்குகள் தங்கள் கண் ணெதிரே தென்படும் சிறிது தூரத்துக்கு அப்பால் எதையும் காண்பதில்லை. அவைகள் குறுகிய கண் பார்வை உடையவைகள். காலத்தை ஆராய்வதில் மனிதன் குறுகிய கண்பார்வை உடையவனாய்விடுகின் ருன். சில ஆண்டுகளுக்கப்பால் அவனுடைய பார்வை செல்லுவதில்லை. நம்மில் பெரும்பான்மையோரிடத் துள்ள குறைபாடு அது. வாழ்க்கைக்குரிய ஒரு சிறிய வட்டத்தை நமக்கு நாம் அமைத்துக்கொள்கிறோம். சாமான்யமான சிறிய முயற்சி ஒன்று செய்வது, அம் முயற்சியின் விளைவை அப்போதைக்கப்போதே அனு பவித்து, இன்புற்றிருப்பது, குறுகிய அவ் இன்பம் மறைந்தவுடன் மேலும் சிறு முயற்சி ஒன்று எடுத்துக் கொள்ளுதல், இத்தகைய சிறிய வட்டத்தில் நாம் சுழன்று வந்துகொண்டிருக்கிறோம். நமக்கு நாம் உண்டு பண்ணிக்கொண்ட உலகம் அதுவே. நம்மில் பலர் ஒழுக்கம் தவறியவர்களாகவும், கொடிய செயல் புரிப வர்களாகவும் இருக்கிறார்கள். அதற்குக்காரணம் யாது என்று நாம் அறிந்து கொள்ளுதல் அவசியமாகி

றது. எத்தகைய முயற்சி எடுத்துக்கொண்டால் அதன் விளைவு உடனே நமக்குக் கிட்டிவிடுமென்று நாம் அவசரப்படுகிறோம். பொருந்தாத செயல்கள் உடனே பலன் தருபவைகளாகக் காட்சி கொடுக்கின்றன. அப்படி விரைவில் அகப்படும் பலன் போதுமென்று நாம் அதில் விரைந்து செல்கின்றோம். விரைவில் வரும் அந்த வினைப்பயன் விரைவில் மறைந்துபோம். அதைத் தொடர்ந்து துன்பம் வருவது திண்ணம் என்பது நமக்குப் புலப்படுவதில்லை. அமைதியான பெருவாழ்வோ நெடுநாளைக்குப் பிறகே நலன் நிறைந்த பலனை வழங்க வல்லது. அதன் பொருட்டுப் பொறுமையோடு காத்திருக்க நாம் ஆயத்தமாய் இல்லை. எட்டிய பிற்காலத்தில் வரும் நலனைக்குறித்து ஆராய்ந்து பார்க்கும் தீர்க்க தரிசனம் நம்மிடத்து இல்லை. நலன் தருவதை ஆழ்ந்து எண்ணுதற்கும், அந்த எண்ணத்துக்கு ஏற்ப நல்வழியில் வாழ்க்கையைச் செலுத்துதற்கும் ஆகிய ஆற்றலை நாம் பெறவில்லை. நம்மில் பெரும்பாலர் பலஹீனர்களாகப்போய்விட்டோம். ஆதலால்தான் மேலானது எதையும் செய்து சாதிக்கும் வல்லமை நம்மிடத்து இல்லாது போய்விட்டது.

மனிதன் ஆற்றுகின்ற வினைகளில் மேலானவைகள் சில இருக்கின்றன என்றும் ஏனையவைகள் சாமான்யமானவைகள் என்றும் நாம் பொருள்படுத்துகிறோம். நாம் சாமான்யமான வினைகள் என்று கருதும் சிலவற்றைச் சான்றாக எடுத்துக்கொள்வோம். வீடு கூட்டிப்பெருக்குதல், வேஷ்டி துவைத்தல், பண்

டங்களை அவைகளுக்கென்று அமைந்த இடங்களில் ஒழுங்காக வைத்தல் ஆகிய இவைபோன்ற செயல்கள் மிக சாமான்யமானவைகள் என்று நினைக்கிறோம். நூல்கள் கற்பது, கடவுள் வழிபாடு செய்வது ஆகிய செயல்களை மேலானவைகள் என்று நினைக்கிறோம். மக்களுள் பாமரர்களோடு பேசுதல், இணக்கம் கொள்ளுதல் முதலியன சாமான்யமான செயல்கள் என்று நினைக்கிறோம். பிரசித்திபெற்ற மனிதர்களோடு இணக்கம் வைப்பது உயர்ந்தசெயல் என்று எண்ணுகின்றோம். இக்காலத்தில் கற்றறிந்தவர்கள் என்று தங்களைச் சொல்லிக்கொள்பவர்களில் பலர் பெரிய ஸ்தானங்களில் உத்தியோகம் பண்ணுவதை மேலான செயல்கள் என்று நினைக்கின்றனர். பூமியைச்சாகுபடி செய்வது, சரீரத்தைக்கொண்டு உழைத்து வேலைசெய்வது ஆகியவைகளை சாமான்யமான செயல்கள் என்று நினைக்கின்றனர். இன்னும் சிலர் தேவாலயத்தின் உட்புறத்தைச் சுத்திசெய்வதை மேலான கர்மமென்று நினைக்கின்றனர். அழுக்கு நிறைந்திருக்கும் சாக்கடை முதலியவைகளைச் சுத்தப்படுத்துவதை இழிசெயல் என்று எண்ணுகின்றனர். அத்தகைய வேற்றுமை புத்தி கர்மயோகி ஒருவனுடைய மனத்தைவிட்டு அகன்றுவிடவேண்டும். நாம் ஆற்றும் வினைகளுள் உயர்ந்தவைகள், தாழ்ந்தவைகள் என்கின்ற வேற்றுமை இல்லவே இல்லை. தேவாலயத்தைத் துப்புரவு படுத்துவதும், சாக்கடை ஒன்றைத் துப்புரவுபடுத்துவதும் ஒன்றே. இவைகளுள் ஒன்று சீரிய செயல்,

மற்றொன்று புல்லிய செயல் என்னும் மனப்பான்மை மனதைவிட்டு அகன்றுபோய்விடவேண்டும்.

அறத்தாறு இதுவென வேண்டா; சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தா னிடை

என்பது மறைமொழி. வேலையாள் ஒருவன் கைவண்டியை இழுத்துக்கொண்டு போகின்றான். மற்றொரு மனிதன் அவ் வண்டியில் ஊர்ந்து செல்லுகின்றான். இக்காட்சியைப் பார்த்துப் பெரும்பாலோர் வண்டியை இழுத்துச் செல்லுவது கீழான செயல் என்று பொருள்படுத்துகின்றனர். வண்டியில் ஊர்ந்துசெல்கின்றவன் நல்வினைப்பயனாக அந்த உயர்ந்த நிலையில் இருக்கிறான் என்றும் நினைக்கின்றனர். அத்தகைய எண்ணம் உதவாது. ஒருவன் வண்டியை இழுத்துச் செல்வதால் அவன் இழிதொழில் செய்பவன் அல்லன். மற்றொருவன் வண்டியில் ஊர்ந்து செல்வதால் அவன் சீரிய வினைப்பயனை அனுபவிக்கிறான் என்பதல்ல. ஒவ்வொரு மனிதனும் தனது தகுதிக்கு ஏற்ப ஏதேனும் ஒரு தொழில் செய்தாகவேண்டும். அப்படிச்செய்கின்ற தொழில்களுக்கிடையில் இது மேலானது இது கீழானது என்றோ, இது அறத்தாறு இது மறத்தாறு என்றோ பாகுபடுத்தவேண்டாம். பயன்படுகின்ற எல்லாத் தொழில்களும் மேலானவைகளே. எந்தத் தொழிலையும் கர்மயோகி அலக்ஷியப்படுத்தலாகாது. சுயநலத்துக்காகவென்றே உழைக்கிறவன் நல்ல விவேகி அல்லன். பேரும் புகழுக்குமாகவென்று பாடுபடுகின்றவன் கர்மயோகத்தின் தத்துவத்தை அறிந்தவன்

அல்லன். கர்மயோகத்துக்கு அடிப்படையான தத்துவங்களை உள்ளபடி அறிந்துகொள்கின்றவனுக்கு சுய நலம் தானாக அகன்றுவிடும். பேரையும் புகழையும் அத்தகைய யோகி ஒருபொழுதும் பொருள்படுத்த மாட்டான். ஏதேனும் ஒரு நோக்கத்தால் தூண்டப் பெற்று நாம் அனைவரும் வினையாற்றி வருகிறோம். வாழ்க்கையில் நாம் கொண்டுள்ள நோக்கம் படிப்படியாக மேலான நோக்கமாக மாறியமையவேண்டும். மேலான நோக்கத்தால் தூண்டப்பெற்றே நாம் வினையாற்றி வருவதும் அவசியமாகிறது. எது மேலான நோக்கம் என்பதை அறிந்துகொள்ளுதற்கான விவேகத்தை நாம் பெறுவதும் அவசியமாகிறது.

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**

கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன

நாம் அனைவரும் வினையாற்றியே ஆகவேண்டும். வினையாற்ற நாம் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் வினைப்பயனில் நாம் நாட்டம் கொள்ளலாகாது. வினைப்பயன் எது ஆயினும் ஆகுக. வினைப்பயன் தன்போக்கில் அமைந்துகொள்ளட்டும். அதைக்குறித்து சிந்தனை செய்யவேண்டியதில்லை. வினைப்பயன் என்ன ஆகுமோ என்று கர்மயோகி ஒருவன் ஏன் ஏக்கம் கொள்ளவேண்டும்? ஒரு மனிதனுக்கு ஏதேனும் துணை புரியவேண்டும் என்கின்ற எண்ணம் உனக்கு வருகிறது. அத்தகைய எண்ணம் வந்தவுடனே தெய்வத்துக்கு ஆராதனை செய்வதுபோன்று அம்மனிதனுக்குப் பணிவிடை செய்தல் முறை. எம்மனிதனுக்காகவென்று

நீ பணிவிடை செய்கின்றாயோ அம்மனிதன் உன்னிடத்து எத்தகைய மனப்பான்மை உடைத்திருக்கிறான் என்பதைப்பற்றிக் கவலைப்படாதே. அவன் நன்றியுடையவனாக இருக்கலாம், அல்லது நன்றிகெட்டவனாக இருக்கலாம். எப்படி வேண்டுமானாலும் அவன் இருந்துகொள்ளட்டும். அவனிடமிருந்து கைம்மாறு எதையும் கருதாது அவனுக்குப் பணிவிடைசெய்வதே உன் கடமையாகும். சீரிய செயல் ஒன்றை அல்லது நலன் நிறைந்தசெயல் ஒன்றை நீ செய்ய முன்வருகிறாய் என்று வைத்துக்கொள்வோம். அத்தகைய செயலினின்று உனக்குக் கிடைக்கும் ஊதியம் யாது என்பதைப்பற்றி ஒருபொழுதும் சிந்திக்காதே. செய்யத்துணிந்திருப்பது நல்ல செயல் எனினும் அதை முன்னிட்டு உனக்கு ஓயாத தொல்லைகளும் துன்பங்களும் வந்துகொண்டிருக்கலாம். தொல்லைகளையும் துன்பங்களையும் எண்ணி சஞ்சலப்படாதே. கைம்மாறு கருதுகின்றவனே அங்ஙனம் சஞ்சலப்படுகின்றான். நீ செய்யும் நல்வினையை முன்னிட்டு உலகம் உன்னைப்போற்ற வேண்டும் என்று எதிர்பார்க்கவேண்டாம். கைம்மாறு கருதுகின்றவனே கீர்த்தியையும் விரும்புகின்றான். நீ எதிர்பாராத கீர்த்தி வந்து வாய்த்துவிட்டால் அக்கீர்த்தியினுள் நீ கட்டுண்டுபோய் விடாதே. நல்வினையை ஓயாது செய். அதை ஊக்கத்துடன் செய். ஆனால் அதன் விளைவு எது ஆயினும் அது உன்னைப் பந்தப்படுத்தாது இருக்கட்டும்.

யோகத்தில் நிலைநின்று வினையாற்று என்பது கோட்பாடு. ஆனால் அதில் கஷ்டம் ஒன்று உண்டாகிறது. முரண்பாடு ஒன்று வந்து அமைவதையும் நாம் காண்கிறோம். ஆழ்ந்து தீவிரமாக வினையாற்ற வேண்டியது அவசியமாகிறது. இடையறாது செயல்கள் அனைத்தையும் யோகி ஒருவன் புரிந்துகொண்டிருக்க வேண்டும். இயற்கையின் நியதியும் அத்தகையதே. வினையாற்றாது ஒரு நொடிப்பொழுதும் நாம் இருக்க முடியாது. அப்படியானால் நாம் ஓய்வை எப்பொழுது அனுபவிப்பது? வினையில் நாட்டம் ஒருபுறம் இருக்கிறது. ஓய்வில் நாட்டம் மற்றொருபுறம் இருக்கிறது. இவையிரண்டுக்குமிடையில்தான் முரண்பாடு ஒன்று வந்து அமைந்துள்ளது. ஓயாது வினையாற்றிக்கொண்டிருக்கும் பகுதியை இன்னும் கொஞ்சம் விஸ்தாரமாக ஆராய்ந்து பார்ப்போம். வாழ்வு என்பது முடிவில்லாத ஒரு போராட்டம். பெருக்கெடுத்தோடும் நீர்ப்பிரவாகத்தில் ஆங்காங்கு சுழல்கள் ஏற்படுவதைப் போன்று வாழ்வு போய்க்கொண்டிருக்கிறது. அச்சுழல்களிலே நாம் அகப்பட்டுக்கொண்டு ஆழித்துரும்புபோன்று அலைந்துகொண்டிருக்கிறோம். அலையிலே துரும்பு ஒன்று மேலே உந்தித்தள்ளப்படுகிறது; திரும்பவும் அது ஆழ் கடலுக்குள் அமிழ்த்தப்படுகிறது. அங்ஙனம் இன்ப துன்பங்கள் நிறைந்த இவ்வையக வாழ்க்கையில் நாம் தத்தளித்துக் கொண்டிருக்கின்றோம். அத்தகைய சூழ்நிலையில் நாம் ஆற்ற வேண்டிய வினைகளைத் திறம்படச் செய்யவேண்டும்.

ஒழுங்காகவும் அவ்வினைகளை நிறைவேற்றிவைப்பது அவசியமாகிறது. எண்ணிக்கையில் அடங்காத செயல்களைத் திறம்படச்செய்கிற ஒரு மனிதனைப் பார்த்து நாம் பாராட்டுகின்றோம். ஒரு பெரிய கர்மவீரன் என்று அவனைப்போற்றுகிறோம். அல்லல் மயமான உலக வாழ்க்கையை அல்லல் என்று கருதாது ஆர்வத்துடன் வினையாற்றுகிற மனிதனை வல்லமை வாய்க்கப்பெற்றவன் என்று போற்றுகிறோம். இங்ஙனம் தூக்கி வினையாற்றிக்கொண்டிருப்பது வாழ்க்கையைப் பற்றிய ஒரு பகுதியாகிறது. இதே வாழ்க்கையைப் பற்றிய மற்றொரு பகுதி இருக்கிறது. அதன் காட்சி இதற்கு நேர்மாறானது. இந்த இரண்டாவது பகுதியில் அமைதியே நிலவுகிறது. நடமாட்டத்துக்கோ, சலனத்துக்கோ ஆங்கு இடமில்லை. கொந்தளிப்புக்கு ஒப்பான செயல்களெல்லாம் ஒதுக்கிவைக்கப்படுகின்றன. வாழ்வு என்னும் போராட்டத்தினின்று விலகிக் கொண்டவனாக அங்கு மனிதன் காட்சிகொடுக்கின்றான். செயல்கள் அனைத்தையும் விட்டொழித்தவனாகவும் அவன் தென்படுகின்றான். அமைதியுற்ற மனிதனைச்சுற்றிலும் சாந்தமேகாட்சிகொடுக்கிறது. சந்தடி எதற்கும் ஆங்கு இடமில்லை. வெளிப்பகட்டுகள் நிறைந்த காட்சிகளும் அத்தகைய சூழ்நிலையில் இல்லை. இயற்கைமுழுதுமே ஆங்கு ஓய்வு எடுத்துக்கொண்டிருப்பது போன்று தென்படுகிறது. அப்பேர்ப்பட்ட அமைதியான சூழ்நிலையில் வசித்துவரும் விலங்குகளும் போராட்டம் ஒன்றிலும் கலந்துகொள்வதில்லை. அவை

கள் அமைதியாகவும் இனிமையாகவும் வாழ்க்கையை நடாத்திக்கொண்டு போகின்றன. அந்த சூழ்நிலையில் வளர்ந்துவரும் செடிகள் அழகிய புஷ்பங்களைத்தோற்று விக்கின்றன. அந்தப் புஷ்பங்களிடத்தும் ஆனந்தமும் அமைதியும் பொலிந்துகொண்டிருக்கின்றன. சாந்தம் ஒன்றே அங்கு நிலைபெற்றிருக்கிறது. இத்தகைய சூழ் நிலையைப்பார்த்து நாம் பிரமித்துப் போய்விடுகின்றோம். இந்த அமைதி பாராட்டத்தக்கது என்று எண்ணு கிறோம். இஃதோரன்ன அமைதியைப் பெற்றுவிட் டால் வாழ்க்கையில் நாம் மேலும் பெறுதற்கு என்ன இருக்கிறது என்று உணருகிறோம். இத்தகைய சாந் தத்தைப் போற்றிப் பாராட்டுவது வாழ்க்கையின் இரண்டாம் பகுதியாகின்றது. இங்கே கேள்வி ஒன்று எழுகின்றது. அரும்பெரும் செயல்கள் புரிவதைப் பார்த்து அதிசயித்திருப்பது ஒருவிதக் காட்சி. அதில் பலப்பல செயல்கள் புரிகின்ற மனிதன் பெருமகன் என்று பாராட்டப்படுகின்றான். அமைதியே வடிவெடுத் திருக்கும் மற்றொரு காட்சியைப்பார்த்துப் பாராட்டு வது இன்னொரு பகுதியாகிறது. இனி, மனிதன் பெரு வினையாற்றுபவனாக இருப்பது அவசியமா, அல்லது செயலையொழித்து சாந்தமே வடிவெடுத்தவனாக இருப் பது அவசியமா என்பதைத்தான் நாம் நிர்ணயிக்க வேண்டும். இந்த முரண்பாடுகளுள் எதை ஏற்பது, எதை விலக்குவது என்பது கேள்வி.

செயல், சாந்தம் என்னும் இந்த இரண்டு விதக் காட்சிகளுள் ஏதேனும் ஒரு காட்சி தன்னளவில்

நிறைநிலை ஆய்விடாது. யோகி ஒருவனுடைய வாழ்க்கையில் இந்த இரண்டு நிலைகளும் சமமான அந்தஸ்தைப்பெற்று ஆகவேண்டும். மனிதனுடைய பண்பாட்டுக்கு இந்த இரண்டனுள் ஏதேனும் ஒரு பகுதி போதாது என்பதற்குத் தக்க காரணங்களைக் கண்டுபிடிப்போம். ஒரு மனிதன் ஏகாந்தத்தில் வாசம் செய்கின்றான். இனிதில் இனிது ஏகாந்தம். இனிது என்னும் கோட்பாட்டுக்கு அவன் இலக்கு ஆகின்றான். தனக்கு அன்னியமாக வேறு எந்த உயிரையும் சார்ந்திராது தன்னில் தானாக அவன் ஆனந்தத்தை அனுபவித்து வருகின்றான். அத்தகைய மனிதன் ஒருவனைப் பெருநிகழ்ச்சிகள் நிறைந்த உலக வைபவங்களுக்கிடையில் கொண்டுவந்தால் அவன் நிலைமை என்ன ஆகுமென்று ஆராய்ந்து பார்ப்போம். ஒரே அமளியும் செயலும் நிறைந்திருக்கும் உலக நடைமுறையைப் பார்த்து அவனால் சகிக்கமுடியாது. அதில் அகப்பட்டுக்கொண்டால் அம்மனிதன் தட்டழிந்து போய்விடுவான். அவனுக்கு அழிவு எப்படி நிகழ்கிறது என்பதை ஒரு உபமானத்தைக்கொண்டு விளக்குவோம். கடலின் ஆழமான கீழ்ப்பகுதியில் ஒருவகை மீன் வாழ்ந்துவருகிறது. அத்தகைய மீனைக் கடலின் மேல்பரப்புக்குக் கொண்டுவந்தால் அது சின்னா பின்னமாக வெடித்து மாய்ந்துபோம். கடலின் கீழ்ப்பகுதியில் இருந்தபொழுது நீரின் பளுவு அதை அமிழ்த்திப் பிடித்துக் கொண்டிருந்தது. நாலா பக்கமும் படலம் படலமாய் இருந்த நீர் அதை நசுக்குவது போன்று அதை அமிழ்த்

திப்பிடித்துக்கொண்டிருந்தது. நீரின் அத்தகைய செயலுக்கு எதிர்ச்செயலாக அந்த மீனின் உடலமைப்பு தன்னை வெளியே தள்ளிக்கொண்டிருந்தது. கதவின் ரெண்டு பக்கத்தில் ரெண்டுபேர் கதவை எதிர்த்து ஒருவன் கதவைத் தள்ளினால் அந்த இரண்டு பாரத்துக்கும் இடையில் நடுநிலையில் கதவு இருக்கிறது. அதே விதத்தில் மீனின் உடலமைப்பு அதை வெளியே தள்ளிப் பிடித்துக்கொண்டிருந்தது; நீரின் அமிழ்த்தும் சக்தி அதை நசுக்க முயன்றுகொண்டிருந்தது. இந்த இரண்டுவிதமான விசைகளும் ஒன்றை ஒன்று எதிர்த்து மீனின் உடலமைப்பை நடுநிலையில் வைத்திருந்தன. திடீரென்று இந்த மீனைக் கடலின் மேற்பகுதிக்குக் கொண்டுவந்தால் நீரின் அமிழ்ப்புச் சக்தி குறைந்துபோய் விடுகிறது. கதவை இரண்டு புறமும் தள்ளுபவர்களுக்கிடையில் ஒருவன் தன்னுடைய செயலைத் திடீரென்று நிறுத்திவிட்டால் மற்றவன் கதவைத் தள்ளிக்கொண்டு கீழே விழுந்துவிடுவான். அதே பாங்கில் மீனின் உடல் சக்தி அதை உந்தி வெளியே தள்ளுகையில் அது வெடித்து சுக்கல் சுக்கலாகப் போய்விடுகிறது. ஆகவே கடலின் அடிப்பகுதியில் வாசம்செய்யும் மீனுக்குக் கடலின் மேற்பகுதி அனுகூலமான சூழ்நிலையாகாது. மேல் பகுதிக்கு வந்தால் அது மாய்ந்துபோம். அதேவிதத்தில் ஏகாந்தத்தில் பழகியிருக்கிற யோகி ஜனசஞ்சாரத்துக்கு இடையில் வந்தால் அவனுடைய மன அமைதிக்குக் குலைவு ஏற்படுகிறது; அவன் தட்டழிந்து போய்விடுகின்றான்.

ஏகாந்தவாசம் என்னும் சூழ்நிலைக்கு மட்டும் தகுதி வாய்ந்தவனாக அவன் இருக்கிறான். அத்தகையவன் ஜனக்கூட்டம் என்னும் சூழ்நிலைக்கு வரத்தகுதி யற்றவன்.

இதற்கு நேர்மாறாக மற்றொரு பாங்குடைய மனிதன் இருக்கிறான். அவன் ஜனக்கூட்டத்துக்கு இடையிலேயே வாழ்ந்து பழகியவன். எங்குத் திரும்பிப்பார்த்தாலும் மானுடர்கள் தென்படுகிறார்கள். குடியிருக்கும் வீட்டில் பலபேர்க்கிடையில் அவன் வாழ்ந்திருக்கிறான். குழந்தைகளின் அழுகையும் சிரிப்பும் மாறி மாறி அவன் காதில் விழுந்துகொண்டிருக்கின்றன. வீட்டில் வசிக்கும் முதியோர்களும் பல காரணங்களை முன்னிட்டு ஓயாது கூச்சல் போட்டுக்கொண்டிருக்கின்றனர். தாங்கள் எடுத்துக்கொண்ட காரியத்தில் வெற்றியைக் குறித்த இரைச்சல்; தோல்வியைப் பற்றிய ஆரவாரம்; பயன்படுவனவும் பயன்படாதவைகளுமாகிய ஊர் வியவகாரங்களைப்பற்றிய விவாதம். வீட்டைவிட்டு வெளியே வந்தால் வீதியில் எங்குப் பார்த்தாலும் இரைச்சல். பண்டம் விற்பவர் வாங்குபவர்களுடைய கூக்குரல், யாசகர்களுடைய ஓலம், தொழிற்சாலைகளுடைய முறைச்சல், வண்டி வாகனங்களுடைய ஒலி — இத்தனையும் ஒன்றுகூடி ஒரே சத்தத்தை உண்டுபண்ணிக்கொண்டு இருக்கின்றன. பதைபதைப்போடு கூடிய மக்கள் இங்குமங்கும் அலைந்து திரிகின்றனர். ஓய்வையோ ஒழிச்சலையோ ஆங்குக் காண்பது அரிது. யந்திரங்கள் உணர்ச்சியற்று இயங்கு

கின்றன. மக்கள் கவலை நிறைந்தவர்களாய் அலைந்து திரிகின்றனர். தூய காற்றை அங்கே பெறமுடியாது. தொழிற்சாலைகள் ஓயாது புகையைக் கக்கிக்கொண்டே இருக்கின்றன. வீட்டுக்குள்ளே அடைபட்டுக்கிடக்கும் காற்றே நச்சுக் காற்றுப்போன்று மாறிக்கிடக்கிறது. ஜன நெருக்கடிக்கிடையில் வீட்டையும் வெளிப்புறங்களையும் செயற்கை முறைகளைக் கொண்டு சுத்தம் செய்துகொண்டு போகப் போக புதிய அழுக்குகள் வந்து நிறைந்து கொண்டிருக்கின்றன. இதை மனிதன் நாகரிகமான வாழ்க்கை என்று நினைக்கிறான். வாழ்க்கையில் செயற்கரிய பல செயல்கள் நிகழ்ந்து வருகின்றன என்று எண்ணி இறுமாப்பு எய்துகிறான். இத்தகைய அமளியில் உழலும் மனிதன் ஒருவனை ஏகாந்த வாசத்தின் பொருட்டு எடுத்துச் சென்றால் அவன் கதி என்ன ஆகும்? இயற்கையின் அமைதியில் அவனுடைய மூளை கலங்கிப் போய்விடும். பெரும் வேதனைக்கு ஆங்கு அவன் ஆளாவான். ஒருவேளை அவனுக்குப் பயித்தியமே வந்துவிடும். ஆக, சமுதாயத்தின் புழுக்கத்துக்கிடையில் வாழ்ந்துவரும் மனிதன் ஏகாந்தத்துக்குத் தகுதியற்றவன்.

முற்றிலும் மனபரிபாகமடைந்த மனிதன் யார் என்னும் கேள்வி அடுத்தபடியாக வருகிறது. இத்தகைய மனிதனைக் குறித்து உயர்ந்த விளக்கம் ஒன்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥

கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண் போன் மக்களுள் மேதாவி; அவனே யோகி; அவனே எல்லாம் செய்து முடித்தவன்.

*இங்கு அகர்மம் என்பது இயற்கையிலே சில இடங் களில் நிலவும் சாந்தமும் அமைதியுமாம். ஆங்குத் தனித்து வசித்திருக்கும் யோகியைத் தவிர இரண் டாம் உயிர் எதும் காட்சியில் இல்லை. தான் ஒருவனே தனித்து வாழ்ந்திருக்கின்ருன் என்கின்ற எண் ணத்தை ஊட்டக்கூடிய ஏகாந்தமான சூழ்நிலை அது. அத்தகைய யோகி குகை ஒன்றனுள் அமர்ந்திருக்கின்ற பொழுது வேறு இரைச்சல் ஒன்றும் அவனுடைய காதுக்கு எட்டுவதில்லையாதலால் அத்தகைய இடத் தில் தனது ஹிருதயம் துடிப்பதே தன் காதுக்குக் கேட்கின்றது. அந்த சூழ்நிலையில் அந்த யோகியின் மனதில் மேலாம் அலுவல் ஒன்று ஆழ்ந்து நிகழ்ந்து வருகிறது. பரம்பொருளின் சொரூபத்தில் தான் சம் பந்தப்பட்டவன் என்னும் உயர்ந்த எண்ணத்தை ஆங்கு அவன் இடையருது எண்ணுகின்ருன். சீரிய எண்ணம் எண்ணுவது செய்கின்ற செயல்களில் எல் லாம் மிகக் கடினமானது. இடையீடின்றி அந்தச் சீரிய எண்ணத்திலேயே நிலைத்திருப்பது அதிலும் கடினமானது. அத்தகைய செயற்கரிய செயலை ஏகாந்த மான இடத்தில் யோகி ஒருவன் இடையருது செய்து கொண்டிருப்பானுகில் அரிய செயலை அவன் ஆழ்ந்து செய்பவன் ஆகின்ருன். அதே மனிதனை இரைச்சல் நிறைந்த சமுதாயத்துக்கிடையிலே கொண்டு வந்து*

வைத்துவிட்டால் அதைக் குறித்து அவன் சிறிதேனும் மனக்கிலேசம் அடைவதில்லை. தகுந்தவைகளும், தகாதவைகளுமாகிய பலப்பல அலுவல்கள் ஆங்கு நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. அத்தகைய நிகழ்ச்சிகளுக்கிடையிலே அவன் ஏகாந்தத்தில் வசித்திருந்தது போன்று மனதை முற்றிலும் நிம்மதியாக வைத்திருக்கின்றான். பாலைவனம் ஒன்றில் இருக்கும் மனிதன் எவ்வித உயிரையும் காணப் பெறாதவனாய் முற்றிலும் தன்மயமாக இருக்கிறான். அதுபோன்ற நிலையை ஒரு பெரிய பட்டணத்தின் பேரிரைச்சலுக்கிடையில் ஒருவன் அனுபவிப்பானாகில் அவன் மனபரிபாகம் அடைந்தவனேயாம். மனமடங்கியிருப்பது என்னும் கோட்பாட்டை அந்தயோகி முற்றிலும் அறிந்தவனாகின்றான். தன்னைத்தான் கட்டியாளும் பேராற்றலையும் அவனே படைத்தவனாகின்றான். உலக வியவகாரம் என்னும் விதவிதமான கர்மங்களுக்கிடையில் சாந்தி என்னும் அகர்ம நிலையில் அவன் வீற்றிருக்கிறான். அகர்மம் என்னும் ஏகாந்தத்துக்கிடையில் கடவுள் நாட்டம் என்னும் தனக்குரிய பெருங்கர்மத்தைச் செய்பவன் வாழ்க்கைக்குத் தகுதியுடையவனாகின்றான். எத்தகைய சூழ்நிலையில் வைக்கப்பட்டாலும் தனக்குரிய நடுநிலையினின்று அவன் வழுவாது இருக்கின்றான். தான் ஆற்ற வேண்டிய சீரிய செயலை அவன் ஓயாது செய்துகொண்டும் இருக்கின்றான். இருநிலைக்கும் ஒத்த பரிபாகமடைந்த மனிதனையே கர்மயோகி என்று இயம்ப வேண்டும். இந்த நடுநிலையை அடைதற் பொருட்டே

கர்மயோகி ஒருவன் விதவிதமான கர்மங்களே ஆற்றி வருகின்ருன். இங்ஙனம் மனபரிபாகம் அடைதற்குப் பாங்குடன் வினேயாற்றுவது நல்ல பயிற்சியாகிறது.

இத்தகைய பண்பாட்டைப் பெறுதற்கு நாம் செய்யவேண்டிய புதிய அலுவல் ஒன்றுமில்லே. இயல் பாகவே நம் அனேவர்க்கும் விதவிதமான அலுவல்கள் அமைந்திருக்கின்றன. எத்தகைய அலுவல் நமக்கு அமைந்திருக்கிறதோ அதை நாம் பண்புடன் செய்ய வேண்டும். அதற்கிடையில் நம்மைப் பிடித்துள்ள சுயநலத்தைச் சிறிது சிறிதாக அகற்றவேண்டும். சுயநலத்தை விட்டொழிப்பதே கர்மயோகத்தின் சீரிய நோக்கமாகும். சுயநலப்பற்று எவ்வளவு விரைவில் நம்மை விட்டு அகன்று போகிறதோ அவ்வளவு விரை வில் நாம் அமைதியில் நிலேபெறுபவர் ஆகின்ருேம். அதன் பொருட்டு ஒவ்வொரு படித்தரத்திலும் நம்மை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். கர்மத்திலே நம் மைத் தூண்டுகின்ற நோக்கம் யாது? யோக சாதனத் தின் ஆரம்பதசையில் இருக்கின்றவர்களுக்கு மனத் தகத்து சுயநலம் ஏராளமாக இருக்கிறது என்பது புலனுகும். இந்த சுயநலப்பற்றை விட்டொழிப்பது நாம் கருதுவதுபோன்று அவ்வளவு எளிதன்று. பல ஜன்மாந்தரங்களில் நமது மனத்தகத்து வந்துள்ள இயல்பு அது. படிப்படியாக நாம் அதை அகற்றியாக வேண்டும். சூரிய வெப்பத்தில் பனிக்கட்டி சிறிது சிறிதாக உருகித் தன் வடிவை இழப்பதுபோன்று இடையருக் கர்மயோகத்தின் மூலம் சுயநலப்பற்று

கரைந்து தேய்ந்துபோகவேண்டும். என்றைக்குச் சுய நலம்நம்மைவிட்டு அகன்றுவிடுகின்றதோ அன்றைக்கே நாம் உண்மையான கர்மயோகிகள் ஆகின்றோம். சுய நலம் கலவாத வினைகளே சீரிய வினைகள் ஆகின்றன. அந்தப் பெருநிலையை நோக்கி வாழ்வு என்னும் நீண்ட பாதையில் நாம் போய்க்கொண்டிருக்கின்றோம். முறை யாக நாம் முயற்சி எடுத்துக்கொண்டால் சுயநலம் நம்மைவிட்டு அறவே நீங்கிவிடும். என்றைக்குச் சுய நலம் நம்மைவிட்டு நீங்கிவிடுகிறதோ அன்றைக்கு நாம் பேராற்றலும் அமைதியும் படைத்தவர் ஆவோம். கடவுளின் பேராற்றல் நம்மூலம் அப்பொழுது செயல் புரிகிறது. கடவுளுக்கு உகந்த கருவிகளாக நாம் அப் பொழுது ஆய்விடுகிறோம். நம் செயல் என்பவைகள் எல்லாம் அப்பொழுது இறைவனுடைய செயல்கள் ஆய்விடுகின்றன. அதை நாம் அறிந்து கொள்ளு மிடத்து அந்த அறிவு நம் உள்ளத்தில் திகழும் நிறை ஞானம் ஆகின்றது. இங்ஙனம் மனதை முறையாகப் பண்படுத்துவதால் நம்மைக் கருவியாக வைத்துக் கொண்டு இறைவனுடைய பெருந்திட்டத்தை அவர் நிறைவேற்றிவைக்கிறார்; இறைவனைப் பற்றிய பரஞானத்தையும் நாம் பெற்றுவிடுகிறோம். வினையை முறையாக நாம் ஆற்றுவதால் செயலும் சாந்தமும் நம்மிடத்து சமரசமடைந்து விடுகின்றன.

---

## 2. அவனவன் நிலையில் அவனவன் பெரியவனே

சாங்கிய தர்சனம் என்பது ஆறு தர்சனங்களில் ஒன்று. சாங்கிய தர்சனத்தை சாங்கிய சாஸ்திரம் என்று சொல்லுவதும் உண்டு. இந்த சாஸ்திரத்தின் படி மூன்று குணங்களைக்கொண்டு இயற்கை அமையப் பெற்றுள்ளது. இந்த மூன்று குணங்களை முறையே சத்வம், ரஜஸ், தமஸ் என்று சொல்லுகிறோம். இயற்கை முழுதும் இந்த முக்குணங்களின் தோற்ற மாம். ஒவ்வொரு குணத்தின் பாங்கும் இத்தகைய தென்று இயம்பப் பெற்றிருக்கிறது. நடுநிலை சத்வ குணத்தின் பாங்கு. பம்பரம் ஒன்று சுழல்கிறது. ஆனால் அது சுழல்வது கண்ணுக்குத் தெரியாது ஓய்ந்து நிற்பது போன்று காட்சி கொடுக்கிறது. சுழன்று கொண்டிருப்பதற்கிடையில் அது நடுநிலை வகிக்கிறது. சத்வகுணம் சுழல்கின்ற பம்பரத்தின் நடுநிலையோடு ஒப்பிடப்படுகிறது. மற்றொரு பம்பரம் இப்புறமும் அப்புறமும் நகர்ந்து கொண்டும், தடதடவென்று குதித்துக்கொண்டும், இடம் மாறியும் சுழல்கிறது. ரஜோகுணத்தின் செயல் அத்தகையது. மற்றொரு பம்பரம் சுழலாது தரையில் சும்மா கிடக்கிறது. அத் தகைய பம்பரத்தின் நிலைக்கு ஒப்பானது தமோகுணம். இன்னும் நிறங்களைக்கொண்டும் இந்த முக்குணங்களை விளக்குவதுண்டு. தமோகுணம் காரிருள் போன்றது. அதன் நிறம் கறுப்பு. ரஜோகுணத்தின் நிறம் சிவப்பு. சத்வகுணமோ வெண்மையானது. பின்பு செயல்களைக்

கொண்டு இந்த மூன்று குணங்களை விளக்குவதும் உண்டு. செயலொன்றும் செய்ய இயலாது கிடப்பது தமோகுணத்தின் பாங்கு. பதைபதைப்போடு கூடிய செயல் ரஜோகுணத்துக்குரியது. ஜடப் பொருள்களுக் கிடையிலே ஒருபொருள் மற்றொரு பொருளை வசமாக் குதல், அல்லது விலக்குதல் என்னும் இரண்டு விதங் களில் ரஜோகுணம் தோற்றத்துக்கு வருகிறது. மக்க ளுடைய மனப்பான்மையில் இது விருப்பு வெறுப்பு என வடிவெடுக்கிறது. வசமாக்குதல் விலக்குதல் ஆகிய செயல்களைச் சமப்படுத்துவது சத்வகுணத்தின் பாங்கு. விருப்பு அல்லது வெறுப்பு என்னும் வடி வெடுத்து ஓரம் சார்ந்திருக்கும் மனநிலையை அது நடு நிலைக்குக்கொண்டுவருகிறது. ஆக விருப்பு வெறுப்பற்ற அமைதிநிலை சத்வகுணத்துக்குரியது. இங்ஙனம் மூன்று குணங்களும் தத்தம்போக்கில் இயற்கையில் காரியப்பட்டு வருகின்றன.

மக்கள் அனைவரும் முக்குணங்களின் ஆதிக்கத் துக்கு அடிமைப்பட்டவர்களாகவே இருந்து வருகிறார் கள். ஒவ்வொரு குணமும் ஒவ்வொரு வேளையில் தலை நிமிர்ந்திருந்து ஆட்சி புரிந்து வருகிறது. தமோகுணம் திரும்பத்திரும்ப முன்னணியில் வந்திருப்பதுண்டு. நாம் அதன்வசப்பட்டிருக்கும்பொழுது சோம்பேறிகள் ஆய்விடுகிறோம். நடமாட்டத்தில் அப்பொழுது நமக்கு விருப்பம் வருவதில்லை. செயலற்றுக்கிடப்பது அவ் வேளைகளில் நமது இயல்பு ஆய்விடுகிறது. ஏதோ இரண்டொரு எண்ணங்களைத் தவிர வேறு எதையும்

நினைக்க நம்மால் முடியாது போய்விடுகிறது. அப் பொழுது நமது மனதில் குடிகொண்டிருக்கும் அவ் எண்ணங்களுக்கு நாம் அடிமைப்பட்டவர்கள் ஆய்விடு கின்றோம். பிறர் தூண்டுதல் செய்தாலும் புதிய எண்ணங்களை எண்ண நமக்கு இயலுவதில்லை. மந்த புத்தியுடையவர்களாக நாம் இருந்து விடுகிறோம். இவையாவும் தமோகுணம் செய்கின்ற ஆதிக்கத்தின் விளைவு. வேறு சில வேளைகளில் ரஜோகுணம் முன்ன ணிக்கு வருகிறது. அப்பொழுது நாம் நடமாட்டமே வடிவெடுத்தவர் ஆய்விடுகிறோம். சிறிது நேரம் சும்மா விருக்க நமக்கு இயலாது. ஏதாவது ஒன்றை ஆர்வத் துடன் செய்துகொண்டே இருக்கவேண்டும். ரஜோ குணம் முன்னணிக்கு வருகின்ற பொழுது இத்தகைய பாங்கு நமக்கு வந்துவிடுகின்றது. இனி, ஏதோ சில வேளைகளில் நாம் தெளிவும் அமைதியும் உருவெடுத்த வர் ஆகின்றோம். தெளிந்த நடுநிலையில் மனது அப் பொழுது இருக்கின்றது. சத்வகுணம் ஓங்குவதின் விளைவு அது. நாள்தோறும் இங்ஙனம் இம்மூன்று குணங்களும் நம்மிடத்து மாறி மாறி ஆட்சி புரிந்து வருகின்றன. மக்கள் வெவ்வேறு பாங்குடையவர் களாக இருக்கிறார்கள். எல்லோருடைய இயல்புகளும் ஒரே விதத்தில் அமைந்தவைகள் ஆகா. அவர்களின் இயல்பு வேற்றுமை அவர்களிடத்துள்ள குண வேற்று மையினின்று உண்டாகிறது. இம்மூன்று குணங்களின் கலப்பு வெவ்வேறு படித்தரங்களில் மக்களிடத்து அமைகிறது. யாரிடத்து எந்த குணம் பெரும்பாலும்

மேல் நிலையில் வந்து நிற்கிறதோ அதற்கேற்றவாறு அம்மனிதனுடைய இயல்பும் தோற்றத்துக்கு வரு கிறது. ஒரு மனிதன் காலமெல்லாம் செயலற்றுக் கிடப்பானாகில், மயக்கமும் சோம்பலும் கொண்டிருப் பானாகில் அவனிடத்துத் தமோகுணம் பெரும்பாலும் முன்னணியில் நிற்கிறது என்பதாகிறது. மற்றொரு மனிதன் அலுவல்கள் பல ஆற்றுகின்றான். ஆதிக்கத் தில் ஆர்வம் கொண்டிருக்கின்றான். ஆற்றல் மிகப் படைத்திருப்பதாக அவன் தென்படுகின்றான். அத்த கையவனிடத்து ரஜோகுணம் பெரிதும் முன்னணியில் இருந்துகொண்டிருக்கிறது எனப் புலப்படுகிறது. இன் னொரு மனிதனிடத்து இனிமையையும், அமைதியை யும், சாந்தத்தையும் காண்கிறோம். சோம்பலையும் பதை பதைப்பையும் அவன் வென்றிருக்கிறான். சஞ்சலத்தை யும், மந்த புத்தியையும் அவன் மீண்டவனாகின்றான். அவனுடைய நிலையை வேறொரு பாங்கில் பகருமிடத்து தமோகுணத்தையும் ரஜோகுணத்தையும் அவன் வென் றவன். சத்வகுணம் அவனிடத்து மிளிர்கிறது. அதற் கேற்ற அமைதியையும் தெளிவையும் அவனிடத்துக் காண்கிறோம். சிருஷ்டி முழுதிலும் அமைந்துள்ள அமைப்பு இதுவேயாம். விலங்குகளுக்கிடையில் குண பேதம் உண்டு. மூன்று குணங்களுள் எந்த குணம் தலையெடுத்திருக்கிறதோ அதற்கு ஒத்தபடி விலங்கு களின் இயல்புகள் மாறி அமைகின்றன. பறவைகளைப் பற்றிய உண்மையும் இதுவே. ஸ்தாவர உலகுக்கும் இக்கோட்பாடு பொருந்துகிறது மரம் செடி கொடி

களுக்கிடையில் இயல்பு வேற்றுமை உண்டு. எந்த குணம் முன்னணிக்கு வருகிறதோ அதற்கேற்றபடி மரம் செடி கொடிகளின் அமைப்பும் மாறிவிடுகிறது. மலையில் வாழும் கல்லினிடத்தும் குணபேதம் உண்டு என்று சான்றோர் சொல்லுகின்றனர். ஸ்தாவர ஜங்க மங்களாகிய உயிர்வகைகள் அனைத்தும் குணபேதத்தை முன்னிட்டு சுபாவ வேற்றுமையைப் பெற்று வருகின் றன. வாழ்க்கையைக் கொண்டுசெலுத்தும் வேற்று மையும் பின்பு அதிலிருந்து வந்துவிடுகிறது. காரண பூதமாக அமைவது குணம்; காரியமாகப் பரிணமிப்பது வாழ்க்கைமுறை. உயிர்வகைகள் நடாத்துகின்ற வித விதமான வாழ்க்கைகள் அவைகள் பெற்றுள்ள குணத்தை அனுசரித்திருக்கின்றன.

இந்த மூன்று குணங்களையும் கையாளுதல் கர்ம யோகத்தின் நோக்கமாகும். குணங்களின் இயல்பு இத்தகையது என்பதையும், அவைகளை எப்படிப் பயன்படுத்தலாம் என்பதையும் கர்மயோகம் விளக்கிக் காட்டுகிறது. இதை நாம் அறிந்துகொண்டால் நாம் ஆற்றும் வினையை செம்மையாக ஆற்ற நமக்கு இய லும். மானுட சமுதாயத்தில் இருப்பவர்கள் எல் லோரும் ஒரே பாங்கு படைத்தவர்கள் அல்லர். பரி பாகத்தில் அவர்களுக்கிடையில் ஏற்றத் தாழ்வு உண்டு. இயற்கையின்கண் உள்ள குணபேதம் மக்களிடத் திலும் இருப்பதால் இந்த வேற்றுமையை அவர்களுக் கிடையில் காண்கிறோம். குணத்தின் வசப்பட்டிருப்ப வர்கள் எல்லாரும் ஒரே பாங்குடையவர்களாய் இருக்க

வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கலாகாது. மிகக் கீழ் நிலையிலிருந்து மேல்நிலை பரியந்தம் அவர்கள் பலதரப் பட்ட பரிபாகம் அடைந்தவர்களாக இருக்கின்றனர். நல்லொழுக்கம் எது என்பதை நாம் அறிந்துள்ளோம். மனிதனுக்கு அமைந்துள்ள கடமையைப்பற்றியும் நாம் அறிந்திருக்கிறோம். ஆயினும் தேசங்கள்தோறும் நல்லொழுக்கத்தைப் பற்றிய கோட்பாடு மாறுபட்டு அமைந்திருப்பதையும் நாம் காண்கிறோம். குணபேதமே அதற்கும் காரணமாகிறது. ஒரு தேசத்தில் நல்லொழுக் கம் எனக் கருதப்படும் ஒரு செயல் மற்றொரு தேசத் தில் மிகக் கெட்ட ஒழுக்கமாகக் கருதப்படுகிறது. சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். சகோதரனும் சகோதரியும் தங்கள் மக்களுக்கிடையிலே மணம் முடித்து வைக்கும் பழக்கம் ஒரு நாட்டில் இருந்து வருகிறது. இன்னொரு நாட்டில் அப்பழக்கம் மிகத் தீயதென விலக்கப்பட்டிருக்கிறது. மனைவியின் சகோ தரியை மணப்பதை ஒரு நாட்டுப் பழக்க வழக்கம் ஆமோதிக்கிறது. மற்றொரு நாட்டில் அது அறவே நிராகரிக்கப்படுகிறது. மனைவிக்குச் சொந்தக்காரர் களாக இருப்பவர்களைக் கணவனுக்குச் சொந்தக்காரர் களாக இருப்பவர்கள் விவாகம் செய்து கொள்ளலாம் என்று ஒரு நாடு அனுமதி தருகிறது. அத்தகைய செய லுக்கு மற்றொரு நாடு அனுமதி தருவதில்லை. எவ்விதத் திலாவது ரத்தத் தொடர்வு இருப்பவர்களுக்கிடையில் விவாகம் நிகழலாகாது என்பது ஒரு சாரார் கோட் பாடு. பெண்பாலர் வாயிலாக ரத்தத் தொடர்வு இருந்

தாலும், ஆண்பாலர் வாயிலாக தாயாதிகள் என்ற முறையில் ரத்தத் தொடர்வு இருந்தால் மணம் செய்து கொள்ளலாகாது என்பது சிலநாடுகளில் அமைந்துள்ள கட்டுப்பாடு ஆகும். இதற்கு நேர்மாறுக வேறு சில நாடுகளில் ஆண்பாலர் மூலம் ரத்தத் தொடர்வு இருந் தால் மணம் புரிந்துகொள்வதற்கு அது தடையாகாது; ஆனல் பெண்பாலர் மூலம் ரத்தத் தொடர்வு இருந் தால் மணம் செய்து கொள்ளலாகாது என்ற கட்டுப் பாடு அமைந்திருக்கிறது. ஒருநாட்டில் ஒருவன் அல்லது ஒருத்தி ஒரே முறைதான் மணம் செய்துகொள்ள வேண்டும் என்னும் நியமனம் ஏற்பட்டிருக்கிறது. மற்ெருரு நாட்டில் அவர்கள் எத்தனை தடவைவேண்டு மானாலும் விவாகம் செய்து கொள்ளலாம் என்னும் கொள்கை பிறந்திருக்கிறது. இதே விதத்தில் வேறு பல பழக்க வழக்கங்களில் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு விதமான ஐதிகமாக உருவெடுத்திருக்கின்றன. இத் தனைவிதமான வேறுபாடுகளுக்கிடையில் எல்லார்க்கும் பொதுவாயுள்ள மேலாம் நல்லொழுக்கம் இருக்க வேண்டும் என்கின்ற எண்ணம் எல்லாருடைய உள்ளத் திலும் நிலைபெற்றிருக்கிறது. நல்லொழுக்கம் வேண்டா மென்று அதைப் புறக்கணிப்பவர்களை நாம் எந்நாட்டி லும் காணமுடியாது. ஒழுக்கம் ஓங்கி உருவெடுக்கு மளவு அதைப் பாராட்டுபவர்களையே யாண்டும் காணலாம்.

இனி, கடமை யாது என்பதைப் பற்றிய கொள் கையும் நாட்டுக்கொரு வடிவு எடுக்கிறது. எது கடமை

என்பதை வெவ்வேறு சமுதாயங்கள் வெவ்வேறு விதங்களில் பொருள்படுத்துகின்றன. சமுதாயம் அனுமதி தருகின்ற சில செயல்களை ஏதேனும் ஒரு மனிதன் செய்யத்தவறிவிட்டால் அவன் முறைதவறி நடந்துகொண்டான் என்று அந்த சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் அவன்மீது குற்றம் சாட்டுவார்கள். ஒரு சமுதாயம் நல்ல செயல்களெனப் பாராட்டுபவைகளை மற்றொரு சமுதாயத்தின்கண் சென்று ஒருவன் செய்வானாகில் அவன் ஒழுங்காக நடந்துகொண்டான் என்று ஆங்கு அவன் பாராட்டப்படமாட்டான். முறைதவறி நடந்து கொண்டான் என்று அப்புதிய சமுதாயத்தில் இருப்பவர்கள் அவன்மீது குற்றம் சாட்டுவார்கள். எது கடமை என்பதைப்பற்றி ஒவ்வொரு நாடும் ஒரு போக்கில் பொருள்படுத்துகிறது. இந்த வேறுபாடுகளுக்கிடையில் மக்கள் அனைவருக்கும் பொதுவாயுள்ள கடமை ஒன்று இருந்தாகவேண்டும். அது யாது என்பது நமக்கு எளிதில் புலனாவதில்லை. ஒரு நாட்டில் ஒரு மனிதன் உணவு அருந்திக் கொண்டிருக்கின்றான். அப்பொழுது அவனுடைய நண்பன் ஒருவன் வந்தால் தான் அருந்தும் உணவில் கொஞ்சம் எடுத்து வந்தவனுக்கு வழங்குகின்றான். அப்படிச் செய்வதை அவன் தன் கடமையென்று உணருகிறான். அது ஒரு நாட்டில் அமைந்துள்ள வழக்கம். மற்றொரு நாட்டில் ஒருவன் அருந்தி எச்சில் பட்ட உணவை வேறொருவனுக்கு எடுத்து வழங்கினால் அது தகாத செயல் என்று விலக்கப்பட்டிருக்கிறது. எச்சில் பட்ட உணவைத் தன்

நண்பனுக்கு எடுத்துக் கொடுப்பது ஒரு நாட்டில் கடமையாகிறது. அத்தகைய உணவை வழங்காதிருப்பது இன்னொரு நாட்டில் மனிதனுடைய கடமையெனக் கருதப்படுகிறது. இத்தகைய முரண்பாடுகளை வெவ்வேறு நாடுகளில் காண்கின்றோம். தேசாசாரமும், கடமையைப்பற்றிய கொள்கையும் இப்படி மாறுபட்டிருப்பதற்கிடையில் நாம் என் செய்வது என்கின்ற கேள்வி எழலாம். இரண்டு விடைகள் நமக்கு வந்து அமைகின்றன. ஒன்று அறிவிலியினுடைய போக்கு. தன் சமுதாயத்தார் எதைக் கையாளுகிறார்களோ அந்த ஒன்றுதான் முற்றிலும் நலம் நிறைந்த செயல் என்று அறிவிலி ஒருவன் எண்ணுகிறான். தன் சமுதாயத்தவர் போக்குக்கு மாறாக நடந்து கொள்ளுகிறவர்கள் எல்லோரும் முறைதவறிப் போய்விட்டவர்கள் என்பது அந்த அறிவிலியின் துணிபு. இனி, சான்றோர்கள் காட்டியுள்ள நெறி வேறு ஒன்று உளது. அதாவது மனிதன் அடைந்துள்ள மனபரிபாகத்துக்கு ஏற்ப அவன் செய்யக்கிடக்கும் கடமை வேறுபடுகிறது. எந்தச் சூழ்நிலையில் ஒரு மனிதன் வாழ்ந்து வருகிறானே அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப மனிதனுடையகடமை மாறுபடுகிறது. மனபரிபாகத்துக்கும் கால தேச வர்த்தமானத்துக்கும் ஏற்ப கடமைகளும் ஒழுக்கமும் வெவ்வேறு பாங்கில் வந்து அமையலாம் என்பது சான்றோரது துணிபு. இங்ஙனம் கடமையைப் பற்றிய கோட்பாடுகள் பல இருக்கின்றன; ஒழுக்கத்தைப் பற்றிய கோட்பாடுகள் பல இருக்கின்றன. ஒரு சூழ்நிலைக்குப்

பொருந்துகின்ற கோட்பாடு மற்றொரு சூழ்நிலைக்குப் பொருந்தாது. ஒரு காலத்தில் பயன்படுகின்ற நெறிமுறை மற்றொரு காலத்துக்கு உதவாது. மனபரிபாகத்தில் மேல் நிலைக்கு வந்திருப்பவனுக்கு எது கடமையாக அமைகிறதோ அது இன்னும் மனபரிபாகம் அடையாதவனுக்குக் கடமையாகாது. பண்பட்ட மனமுடையவனுக்கு எது ஒழுக்கம் ஆக வந்தமைகிறதோ பண்படாதவனுக்கு அது ஒழுக்கமாகாது. உடல் நிலையை அனுசரித்து உணவு அருந்துதலில் மக்களுக்கிடையில் வேற்றுமை இருப்பதுபோன்று மனபரிபாகத்தை முன்னிட்டு ஒழுக்கத்திலும் மக்களுக்கிடையில் வேற்றுமை இருந்தாகவேண்டும். இங்ஙனம் கால தேச வர்த்தமானங்களுக்கு ஏற்ப, மனபரிபாகத்துக்கு ஏற்ப சான்றோர்கள் வகுத்து வைத்துள்ள செந்நெறிகள் பலதரப்பட்டவைகளாய் இருக்கின்றன. அறிவிலிகள் கருதுகின்ற பாங்கில் ஏதேனும் ஒரே ஒரு நெறியைத்தான் உலகம் முழுதும் கையாண்டாகவேண்டும் என்னும் கோட்பாட்டை நாம் ஏற்றுக் கொள்ளலாகாது. மேலோர் வகுத்துள்ளபடி சூழ்நிலைக்கு ஏற்றவாறு பல தரப்பட்ட நெறிமுறைகளையே நாம் கடைப்பிடித்தாக வேண்டும்.

சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். உலகில் தோன்றியுள்ள பெருமக்கள் எல்லோரும் அஹிம்ஸையைப் பெரிதும் பாராட்டியிருக்கின்றனர். **अहिंसा परमो धर्मः** அஹிம்ஸா பரமோ தர்ம: என்பது அவர்களின் போதனை. கொல்லா விரதமே குவலய மெல்லாம்

ஓங்கியிருக்கவேண்டும் என்பது அவர்கள் துணிபு. எவ்வுயிர்க்கும் ஒரு தீங்கும் செய்யலாகாது என்பது அதன் கருத்து. அக்கோட்பாடு கேட்பவர் அனைவருக்கும் உடன்பாடானதே. இது மனதுக்குகந்த கோட்பாடெனினும் இதை முற்றிலும் பழக்கத்தில் கொண்டு வருவது சாத்தியப்படாது. ஒரு சிறு கூட்டத்தார் அஹிம்ஸா தர்மத்தைத் தீவிரமாகக் கடைப்பிடிக்கத் தீர்மானித்து விட்டார்கள் என்று வைத்துக்கொள்வோம். அதன் விளைவாக சமுதாய அமைப்பே சின்னாபின்னமாய்விடும். அஹிம்ஸா தர்மத்தை அனுஷ்டிக்கின்ற மக்கள் உலகில் யாருக்கும் ஒருவிதத் தீங்கும் செய்யமாட்டார்கள் என்று கயவர்கள் கேள்விப்பட்டால் அவர்கள் அந்த அஹிம்ஸாமூர்த்திகளின் வீடுகளில் புகுந்து ஆங்கு இருக்கும் பொருள்களையெல்லாம் பகிரங்கமாகத் தூக்கிக்கொண்டு போக ஆரம்பித்து விடுவார்கள். தீங்கு செய்யாது செயலற்றிருக்கும் மக்களை அவர்கள் வேண்டுமென்றே துன்புறுத்துவார்கள். அமைதியுற்றிருக்கும் மக்களின் உயிரையே வாங்கிவிட அவர்கள் முயற்சி செய்வார்களானால் அதில் வியப்பொன்றுமில்லை. அல்லது இந்த அஹிம்ஸாமூர்த்திகளை உயிரோடு வைத்துக்கொண்டு அவர்களைச் சித்திரவதை செய்யவும் அந்தப் பொல்லாதவர்கள் முன்வந்துவிடுவார்கள். குறிப்பிட்ட ஏதேனும் ஒரு நாளன்று எக்காரணத்தை முன்னிட்டும் மக்களுக்கு எந்த விதமான தண்டனையும் விதிக்கப்படாது; தண்டனை என்னும் ஹிம்ஸையைக் குறிப்பிட்ட ஒரு நாளைக்குச் செய

வில் கொண்டு வருவதில்லை என்று ஓர் அரசாங்கம் பிரகடனம் செய்துவிட்டால் போதுமானது. தங்களுக்குத் தண்டனை ஏற்படாதென்று அறிந்து கொள்ளும் கயவர்கள் அந்த ஒரே நாளில் சமுதாயத்தின்கண் பெரிய நிலைகுலைவை உண்டுபண்ணி விடுவார்கள். எவ்வுயிர்க்கும் எக்காரணத்தை முன்னிட்டாவது எவ்விதத் தீங்கும் செய்வதில்லை என்பதை சமுதாயத்தில் இருக்கும் அனைவரும் கடைப்பிடிக்க முயன்றால் சீரழிவே அதன் விளைவு ஆகும். அத்தகைய சீரழிவு உண்டாவதற்கு நெடுநாள் தேவையில்லை. ஒரே நாளில் அது சம்பவித்து விடும். அஹிம்ஸா தர்மத்தை மட்டுக்கு மிஞ்சிக் கையாண்டால் இதுதான் வந்து விளையும் என்பதை நாம் அறிகிறோம். அப்படியிருந்தும் நம் மனத்தின் உள்ளே குடிகொண்டுள்ள மேலாம் இயல்பு ஒன்று 'எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதே' என்னும் கோட்பாட்டை நமக்குப் புகட்டிக் கொண்டிருக்கிறது. எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதிருப்பது மக்களால் அனுஷ்டிப்பதற்குரிய உயர்ந்ததொரு லக்ஷியமாகும். இனி, இந்த உயர்ந்த லக்ஷியத்தை மக்கள் அனைவருக்கும் நாம் புகட்ட முடியாது. மக்கள் எல்லோரும் இதைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்ப்பதும் முறையன்று. அஹிம்ஸா தர்மத்தை அளவுக்கு மீறிக் கையாள ஒரு சமுதாயம் முற்பட்டால் அதினின்று இரண்டு விதமான கேடுகள் தோன்றும். தீங்கு செய்யாத கூட்டத்தாரிடத்திருந்து அனைத்தையும் அபகரித்துக்கொள்ளுதற்குப் புல்லிய பாங்குடையவர் கூட்டம்

முன்வரும். அவர்களை எதிர்த்துப் போராடாது விட்டு விடுவதன் மூலம் அவர்களுடைய புன்மை மேலும் வளர்வதற்கு இடம் கொடுத்தது முதல் குற்றமாகும். அஹிம்ஸையில் நிலை பெற்றிருக்கும் நல்லாருடைய பொருள்களை யெல்லாம் சூறையாடுகின்ற புல்லியர்கள் ஒரு சமுதாயத்தில் இல்லையென்றே வைத்துக்கொள்வோம். அந்த நிலைமையிலும் அஹிம்ஸா தர்மத்தை வரம்புக்கு மிஞ்சிக் கையாள முயலுகின்றவர்களுடைய உள்ளத்தில் மற்றொரு தீங்கு தலையெடுக்க ஆரம்பிக்கும். 'நான் அறிந்தோ அறியாமலோ எவ்வுயிர்க்கேனும் தீங்கு செய்து விட்டேனோ?' என்னும் தன்னைப் பற்றிய ஆராய்ச்சி திரும்பத் திரும்ப மனதில் எழுந்து கொண்டிருக்கும். 'அஜாக்கிரதையாகப் பூமியின்மீது நடந்து விட்டேன். ஏதேனும் சிற்றுயிர் ஒன்றை மிதித்துக் கொன்றுவிட்டேனோ?' என்ற ஐயப்பாடு தீவிரமான அஹிம்ஸா தர்மவாதியின் மனதில் உண்டாகும். தான் செய்த ஒவ்வொரு சிறு செயலையும் தொடர்ந்து இக் கேள்வியை அந்த அஹிம்ஸாவாதி தன் மனசாட்சியிடம் கேட்டாகவேண்டும். இதன் விளைவாக தான் செய்யும் குற்றத்தைப் பற்றியே அவன் திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டிருக்கும்படி அமைகிறது. உயிர்களுக்குத் தான் செய்துவரும் தீங்குகளைப்பற்றிய உணர்வு திரும்பத் திரும்ப உள்ளத்தில் உரு எடுத்துக் கொண்டே இருக்கும். 'நான் உயிர்களுக்குத் தீங்கு செய்கிறேன்' என்ற எண்ணம் உள்ளத்தில் மிகைபட உதிக்க ஆரம்பித்தால் மனசாட்சியில் உண்டாகிற

அந்தப் போராட்டம் அம்மனிதனைப் பலவீனன் ஆக்கி விடும். 'பொருந்தாத வாழ்வு வாழ்ந்து உயிர்களுக்குப் பொல்லாங்கு செய்யும் பாவியேன் நான்' என்னும் கீழ்மையை அவன் தனக்குத்தானே புகட்டிக் கொண்டே போவான். அத்தகைய எண்ணம் அவனை அறவே கீழ்நிலைக்கு இழுத்துக்கொண்டு வந்துவிடும். அப்படிக் கீழ்நிலைக்கு வரும் மனிதன் வேறு பல தீங்கு களையும் அறிந்தோ அறியாமலோ செய்து விடுவான். உறுதியற்ற பலவீனர்கள்தான் பெருங்குற்றங்களை வாழ்க்கையில் செய்து விடுகின்றார்கள். மிகைபட்ட அஹிம்ஸா தர்மம் ஒரு மனிதனைப் பலவீனன் ஆக்கி விடும். பலவீனமோ தீங்குகளில் மிகக்கொடியது. பல வீனத்தால் தன்னையே வெறுத்துக்கொள்ளும் மகன் ஒருவன் முற்றிலும் அழிந்துபட்டுப் போகும் தறு வாய்க்கு வந்துவிடுகிறான். ஒரு மனிதனை முற்றிலும் கெடுத்துவிடுகிற ஒரு நல்ல கோட்பாடு ஒரு சமுதாயத் தையும் முற்றிலுமே கெடுத்துவிடக் கூடியதாகும். ஆகவே அஹிம்ஸா தர்மம் மிக மேலானது எனினும் சமுதாய வாழ்க்கையில் அதை மிகைபடக் கையாளுதல் நம்முடைய முன்னேற்றத்துக்கு உதவாது.

உயிர் வாழ்ந்து வரும் நாம் ஏதேனும் ஒரு விதத் தில் பிற உயிர்களுக்கு இன்னாதது செய்கிறோம். நம்மை முன்னிட்டு ஸ்தாவரங்களாக அல்லது ஜங்கமங்களாக இருக்கின்ற மற்ற உயிர்கள் மடிந்துகொண்டே இருக் கின்றன. ஆதலால் கொல்லா விரதத்தில் நாம் முற்றி லும் நிலை நிற்பவர்கள் அல்லர். அதை முன்னிட்டு

நம்மை நாம் வெறுத்துக்கொள்ளலாகாது. நம்மையே நாம் நொந்து கொள்ளாதிருப்பது நமது முதல் கடமையாகும். வாழ்க்கையில் முன்னேற்றமடைவது நமது குறிக்கோள். நம்மீது நாம் விசுவாசம் வைக்காவிட்டால் நாம் ஒருபொழுதும் முன்னேற்றமடைய முடியாது. நம்மையே நாம் நம்பியிருப்பது நமது முதல் கடமை. கடவுளை நம்பியிருப்பது அதற்கு அடுத்தபடியாக வருகிறது. தன்மீது நம்பிக்கை வைக்காதவன் கடவுள்மீது ஒருபொழுதும் நம்பிக்கை வைக்க முடியாது. ஆற்றைக் கடக்க விரும்புகின்றவன் அதற்கு உபாயமாயிருக்கும் படகில் நம்பிக்கை வைக்க வேண்டும். அதே பாங்கில் கடவுளை அடைய விரும்புகின்றவன் அதற்குத் தான் தகுந்தவனென்று தன்மீது நம்பிக்கை கொள்வது அவசியம். தான் அதற்குத் தகுதியற்றவனென்று தன்மீது ஒருவன் விசுவாசத்தை இழந்துவிடுவானாகில் பிறகு அவன் கடவுளை அடைவது எங்ஙனம்? தன்மீது நம்பிக்கை வைத்தான பிறகு அடுத்தபடியாக ஆத்ம சாதகன் ஒருவன் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டிய இரண்டாவது கோட்பாடு ஒன்று இருக்கிறது. அதாவது ஒரு மனிதனுக்குக் கடமையாக அமைவது மற்றொரு மனிதனுக்குக் கடமையாக அமையவேண்டும் என்பது அவசியமல்ல. ஒரு மனிதனுக்கு எது நல்லொழுக்கமாகின்றதோ அது மற்றவனுக்கும் நல்லொழுக்கம் ஆகவேண்டும் என்னும் நியமனம் ஒருபோதும் இல்லை. சூழ்நிலைகளுக்கு ஏற்ப கடமையும் நல்லொழுக்கமும் மாறி அமைவது உண்டு.

இந்தக் கோட்பாட்டைத்தான் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். தீமையை எதிர்த்துப் போராடுகின்றவன் தீங்கு செய்கின்றான் என்னும் முடிவுக்கு நாம் வந்துவிடலாகாது. கொலை புரிகின்றவர்கள் எல்லோரும் கேடு செய்கின்றனர் என்கின்ற முடிவுக்கும் நாம் வந்துவிடலாகாது. தீமையை எதிர்த்துப் போராடவேண்டிய சூழ்நிலையில் அச்செயலைச் செய்ய மறுக்கின்ற ஒருவன் நலம் செய்பவன் போன்று தென்படலாம். ஆனால் உண்மையில் அவன் கேடே விளைவிக்கின்றான். கொல்லவேண்டிய நிர்ப்பந்தம் அமைகின்ற இடத்து அச்செயலைச் செய்யாது பின்வாங்குகின்றவன் நலத்தில் நாட்டம் கொண்டிருக்கின்றான் என்கிற முடிவுக்கு நாம் வந்துவிடலாகாது. கொல்லவேண்டிய இடத்தில் கொல்லாது பின்வாங்குகின்றவன் கேடு விளைவிப்பவன் ஆகின்றான். கொல்லா விரதம் வாழ்க்கையில் மிக உயர்ந்த லக்ஷியம் எனினும் கொலைபுரிதலும் வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

எந்த சந்தர்ப்பத்தில் நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதற்குத் தக்க எடுத்துக்காட்டு பகவத்கீதையில் வந்து அமைகிறது. போர்புரிதற்கென்று அர்ஜுனன் போர்க்களத்துக்குக் கண்ணபிரானால் அழைத்துச் செல்லப்பட்டான். தன் உற்றார் உறவினரையே கொன்றாக வேண்டும் என்னும் தர்ம சங்கடத்தை ஆங்கு அவன் காணலுற்றான். உடனே தன் எண்ணத்தை அர்ஜுனன் மாற்றிக் கொண்டான்.

அஹிம்ஸைதான் வாழ்க்கையில் சிறந்த லக்ஷ்யம் என்னும் கோட்பாட்டை அவன் எடுத்து இயம்பினான். அப்பொழுது அவன் பெற்றிருந்த மனநிலைக்கு அஹிம்ஸா தர்மம் ஒரு கவசமாக வந்து அவனுக்கு அமைந்தது. கொல்லலாகாது என்னும் கோட்பாட்டில் நிலைநிற்க அவன் முயன்றான். ஆனால் அவன் கோட்பாட்டைக் கண்ணன் கேட்டுக்கொள்ளவில்லை. அர்ஜுனனைப் பொய் வேஷக்காரன் என்றும், பயங்கொள்ளி என்றும் கிருஷ்ணன் எள்ளி நகையாடினார். தீமையை எதிர்த்துப் போராடத் தகுதியற்றவன் வாழ்க்கைக்கு உதவான் என்றும் அவர் எடுத்துக் காட்டினார். அதர்மம் என்னும் பெருங்கேடு உற்றார் உறவினரிடத்து இருப்பதால் அக்கேட்டினுக்கு இடங்கொடுத்தே ஆக வேண்டும் என்னும் மயக்கம் அறிவுடையோன் ஒருவனை வந்து சாரலாகாது. பயிர்பண்ண விரும்புவர்கள் தங்கள் பூமியிலுள்ள களைகளை நீக்குவது போன்று சமுதாயத்தில் அறவாழ்வை நிலைநாட்ட விரும்புகின்றவர்கள் அறவாழ்வுக்கு எதிரிகளாய் இருப்பவர்களையெல்லாம் தகர்த்தே ஆகவேண்டும் என்பது கண்ணனுடைய கோட்பாடு.

பகவத்கீதை புகட்டுகின்ற கோட்பாட்டினின்று வாழ்க்கைக்குரிய மேலாம் தத்துவம் ஒன்றை நாம் தெரிந்துகொள்கிறோம். எடுத்துக்காட்டுகள் சிலவற்றின் மூலம் இவ்வுண்மையை அறிந்துகொள்ள நாம் முயலுவோம். வெளிச்சமும் இருளும் ஒன்றோடொன்று முரண்படுபவைகள். ஓசையும், ஓசை இன்மையும்

ஒன்றோடொன்று முரண்படுபவைகள். ஆனால் இந்த முரண்பாடுகள் உச்சநிலைக்குப் போய் விடுகின்ற பொழுது முரண்படும் அவைகளிடத்திருந்து உண்டாகும் பலன் ஒன்றேயாம். எப்படி என்று பார்ப்போம். வெளிச்சம் என்பது ஒரு சக்தி. அதனிடத்து உண்டாகிற சலனத்தால் நாம் வெளிச்சத்தையும் வெளிச்சத்தின் துணைகொண்டு வஸ்துக்களையும் காண்கின்றோம். ஆனால் வெளிச்ச சலனத்தின் வேகம் ஓர் அளவுக்குக் கீழே போய்விடுமானால் நம் கண்ணுக்கு ஒன்றும் புலப்படுவதில்லை. எல்லாம் இருள் ஆய்விடுகிறது. கண் இருந்தும் குறைந்த வெளிச்ச சலனத்தில் நாம் வெளிச்சத்தையோ வடிவத்தையோ காண்பதில்லை. இனி, வெளிச்ச சலனம் ஓரளவுக்கு மிகைபட்டு மேல் நிலைக்குப் போய்விடுமானால் அப்பொழுதும் வெளிச்சத்தையோ, வடிவத்தையோ காண நம் கண் தகுதியற்றதாய் விடுகிறது. குறைபட்ட வெளிச்சத்தில் நாம் புஸ்தகத்தைப் படிக்கமுடியாது. நம் அளவைக்கு மேல் மிகைபட்ட வெளிச்சத்திலும் நாம் புஸ்தகத்தைப் படிக்க முடியாது. கண் தெரியவில்லை என்னும் பலன் இருளிலும் வருகிறது; மிகைபட்ட வெளிச்சத்திலும் வருகிறது. ஆக, இருள் வெளிச்சம் என்னும் முரண்பாடுகள் உச்சநிலைக்குப் போய்விடுகின்றபொழுது அவை நம்மீது உண்டுபண்ணும் விளைவு ஒன்றேயாம். கண் தெரியவில்லை என்பதுதான் விளைவு. பொருள்களில் உண்டாகிற சலனத்தால் ஓசை உதயமாகிறது. ஓசையை உண்டுபண்ணுகிற சலனம் ஓரளவுக்குக் கீழே

போய்விட்டால் நம் காதில் ஓசை ஒன்றும் விழுவதில்லை. அதற்கு மாறாக சலனம் மிகைபட்டதாய் விடும் பொழுதும் நம் காதில் ஓசை விழுவதில்லை. ஆக, ஓசை யுலகிலும் முரண்படுகின்ற இரண்டு நிலைகள் நமக்குக் காதுகேளாமை என்னும் ஒரே பலனை உண்டுபண்ணு கின்றன என்பதை அறிகிறோம். கொல்லுதல் கொல் லாமை ஆகிய இரண்டு கோட்பாடுகள் நம் வாழ்க்கை யில் இணைக்கப் பெற்றிருக்கின்றன. தீங்கு செய்தல், தீங்கு செய்யாதிருத்தல் அதாவது ஹிம்ஸை— அஹிம்ஸை ஆகிய இரண்டு பாங்குகள் நம்முடைய வாழ்க்கையில் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இவ்விரண் டும் ஒன்றோடொன்று முரண்படுபவைகள் என்பது வெளிப்படை. முரண்படுகின்ற இவ்விரண்டு கோட் பாடுகளின் விளைவு யாது என்பதை ஆராய்ந்து பார்ப் போம். பலவீனன் ஒருவன் பிறர்க்குக் கேடு செய்வ தில்லை. மற்றவர் அவனை வந்து தாக்குகின்றார்கள், ஒறுக்கின்றார்கள். அதையெல்லாம் அவன் பொறுத் துக் கொண்டிருக்கின்றான். அவன் பொறுமையோடு இருப்பதற்குக் காரணம் அஹிம்ஸா தர்மத்தில் அவன் நிலை பெற்றவன் என்பதல்ல. பிறர் செய்கின்ற குற் றத்தை எதிர்த்துப் போராட அவனிடத்து வலிவு இல்லை. மனதுக்குள் வேதனை இருக்கின்றது. ஆயினும் வலிவற்றவன் அஹிம்ஸையிலும், கொல்லா விரதத் திலும் நிலைபெற்றவன் போன்று காட்சி கொடுக்கின் றான். இவனுக்கு மாறாக மற்றொரு மனிதன் இருக்கின் றான். அவன் ஆற்றல் மிகப்படைத்தவன். ஒரே அடி

யில் ஐந்துபேரைக் கீழே சாய்க்க அவன் வல்லவனும் இருக்கின்றான். ஐந்து முரடர்களை ஏக காலத்தில் மாய்த்து விடுவதற்கான வல்லமையும் அவனிடமிருக் கிறது. ஆனால் அவன் தன்னை வந்து தாக்குகின்றவர் களுக்குத் தீங்கு ஒன்றும் செய்வதில்லை. அவர்களுக்குத் தீங்கு செய்ய வேண்டுமென்கிற எண்ணமும் அவனு டைய உள்ளத்தில் உதிப்பதில்லை. தான் அடியுண் பதை அவன் மனதுக்குள் ரசித்துக்கொண்டிருக்கிறான். அறியாமையினால் மற்றவர்கள் தன்னை வந்து தாக்கு கின்றார்கள் என்று அவன் உணர்கின்றான். தாக்குகின்ற வர்களுடைய உள்ளத்தில் குடிகொண்டுள்ள அறியா மையை அகற்றுதற்கும் அவன் யத்தனிக்கின்றான். அவன் அந்த அறிவிலிகளை ஆசீர்வதிக்கவும் செய்கின் றான். இங்கு இந்த இரண்டு மனிதர்களுடைய நிலைகளை நாம் ஆராய்ச்சி பண்ணிப் பார்க்கவேண்டும். பலவீனத் தால் பிறர் படுத்திய துன்பங்களை யெல்லாம் பொறுத் துக் கொண்டிருந்தவன் அஹிம்ஸா தர்மத்தைக் கையாண்டவன் அல்லன். தான் பட்ட அடிகளையெல் லாம் பொறுத்துக்கொண்டிருந்ததன் வாயிலாக அவன் பாபம் செய்தவனாகின்றான். வருத்தத்தோடு பொறுத் துக் கொண்டிருப்பதன் மூலம் அவனுடைய பலவீனம் மேலும் மேலும் அதிகரிக்கிறது. அதற்கு மாறாகத் தாக்கியவனை அவன் எதிர்த்துத் தாக்கியிருப்பானாகில் அதன் மூலம் அவனுடைய உறுதியும் துணிவும் சிறி தளவாவது உரு எடுக்க ஆரம்பிக்கும். எதிர்த்துப் போராடுதல் மூலம் அவன் பலத்தைப் பெறுகின்றான்.

அப்படிப் பலத்தைப் பெறுவது புண்ணியச் செயல். அடிகளை வருத்தத்துடன் ஏற்றுக்கொண்டு அமைதி யுற்றுக் கிடப்பதால் தன்னிடத்து ஏற்கனவே உள்ள வலிவையும் அவன் இழக்கின்றான். அஹிம்ஸைபோன்று தென்படுகிற அச்செயல் பாபச்செயல் ஆகின்றது. ஆகவே அவன் விஷயத்தில் புண்ணியச் செயல் போன்று தென்படும் அஹிம்ஸா விரதம் உண்மையில் புண்ணியச் செயல் அல்ல. தீமையை எதிர்த்துப் போராட வேண்டியது அவனுக்கு ஏற்பட்டுள்ள கட மையாகும். இதற்கு நேர் மாறாக பலம் படைத்துள்ள இரண்டாவது மனிதன் தன்மீது வந்து விழுகின்ற தாக்குதல்களையெல்லாம் பொறுத்துக் கொண்டிருப்ப தன்மூலம் புண்ணியம் செய்பவனாகின்றான். அஹிம் ஸையை முறையாகக் கடைப்பிடித்தவனும் அவனே யாவான். தன்னிடம் மிகைபட்ட பலம் இருப்பதை முன்னிட்டு தன்னை வந்து தாக்கியவர்களை இவன் திருப்பி அடித்திருப்பானாகில் அவன் செயல் குற்ற மாகும். அப்பொழுது அவன் பாபம் செய்தவனாகின் றான். இங்கே நமக்குக் கடமை எது என்பது தெளிவு பட விளங்குகிறது. இரண்டு மனிதர்களுக்கும் கடமை ஒரே பாங்கில் அமையவில்லை. தீமையை எதிர்த்துப் போராடுவது பலவீனனுடைய கடமையாகிறது. பிறர் தாக்குதலை அமைதியோடு ஏற்றுக் கொண்டு அன்பின் மூலம் அவர்களைத் திருத்தியமைக்க முயலுவது பலவா னுடைய கடமையாகின்றது. நோயாளி ஒருவன் நோயால் வருந்திக்கொண்டிருக்கிறான். இடையிடையே

கொசுக்கள் வந்து அவன் உடல்மீது உட்கார்ந்து ரத்தத்தை உறிஞ்சுகின்றன. அதனால் அவனது வேதனை அதிகரிக்கிறது. அவைகளை ஓட்ட அவனுக்கு உடல் வலிவு இல்லை. அந்த நிலையில் அவன் அஹிம்ஸையில் நிலைபெற்றவன் அல்லன். நோய் நீங்கி உடல் உறுதி பெற்ற பிறகு தன்னைக்கொட்டும் கொசுக்களை விரட்டியோட்டுகின்றான் அல்லது நசுக்கிக் கொன்றுவிடுகிறான். இந்த நிலையில் கொலை செய்த குற்றம் அவனைச் சாராது. ஒருவேளை விவேகானந்த சுவாமிகள் கொசு நிறைந்திருந்த ஓர் இடத்தில் ஆழ்ந்து தியானத்தில் அமர்ந்து விட்டார். அவர் உடலெங்கும் ஏராளமான கொசுக்கள் அமர்ந்திருந்து அவர் உடலைக் கொட்டி ரத்தத்தை உறிஞ்சின. ஆனால் தீவிரமான தியான அவஸ்தையில் அதொன்றும் அவருக்குத் தெரியவில்லை. உடல் ஞாபகத்தைக் கடந்த நிலையில் அவர் இருந்தார். உண்மையான அஹிம்ஸைக்கு உடல் உணர்வைக் கடந்த நிலையே பொருந்திய நிலை. அந்நிலைக்குப் போகும் பரியந்தம் ஏதேனும் ஒருவிதத்தில் கொலை புரியாது உயிர் வாழ்ந்திருக்க முடியாது. மாறுபடுகின்ற இரண்டு செயல்கள் இரண்டு பாங்குடைய மனிதர்களின் கடமைகளாக வந்தமைகின்றன. இதை நாம் ஓர்ந்து ஆராய்ந்து அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது.

அஹிம்ஸையின் உட்கருத்தை அறிந்து கொள்ளுதற்கு மற்றொரு சான்றையும் நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். எது துறவு என்று ஆராய்ந்து பார்ப்போம். புத்தர் பெம்மான் வீதியிலே பிக்ஷாபாத்திரம் கையில்

ஏந்திக்கொண்டு பிக்ஷை ஏற்று உண்டு வாழ்ந்திருந்தார். வறியான் ஒருவன் கையில் ஓடு ஒன்று ஏந்திக்கொண்டு ஐயம் ஏற்று உண்கின்றான். இவ்விருவருடைய செயல்களும் வெளித் தோற்றத்துக்கு ஒரே பாங்குடைய செயல்களாகத் தென்படுகின்றன. உண்மையில் இவ் இருவருடைய செயல்கள் ஒரே பாங்குடையவைகளா என்பதை ஆராய்ந்து பார்ப்போம். புத்தர் பெம்மான் துறவியாவதற்கு முன்பு ஒரு ராஜகுமாரனாய் இருந்தார். ராஜ்யபரிபாலனத்தின் பொருட்டு சிம்மாசனத்தின் மீது வீற்றிருக்கும் வாய்ப்பு அவருக்குச் சொந்தமாய் இருந்தது. அவருக்கு அமைந்திருந்த செல்வத்தையும், ராஜ்யத்தையும், பதவியையும், போகத்தையும் அவர் துறந்துவிட்டார். அநித்தியமானவைகள்மீது பற்று வைக்கலாகாது என்னும் மனத்தெளிவு அவருக்கு உண்டாயிற்று. பெரிய பதவியைப் புறக்கணித்து விட்டதற்கு அறிகுறியாக அவர் ஐயம் வாங்கி அருந்தினார். ஏழையாய் இருப்பதில் தமக்கு அவமானம் ஒன்றுமில்லை என்பதை நிரூபிப்பதற்கு அவர் பிக்ஷை ஏற்று உண்டார். அவர் துறப்பதற்கு ஏற்ற உலக சம்பத்துக்கள் இருந்தன. அவருக்கு அருகில் நடமாடித்திரிந்த வறியானுடைய போக்கு அத்தகையதன்று. பொருள் தேடவகையறியாதவனாய் அவன் ஐயமேற்று உண்டான். உழைத்துப் பாடுபடுதலில் ஊக்கமில்லாதவனாய் அவன் யாசகம் எடுத்து உயிர்வாழ்ந்தான். பிழைக்க வகையறியாதவனாய் அவன் ஐயம் ஏற்று உண்டான். அத்தகையவனுக்குப் பொருளும், போக

மும், பதவியும் கிடைத்தால் எவ்வளவு ஆர்வத்துடன் அவன் அவைகளைப் பற்றிப்பிடிப்பான் என்பது சொல்லாமலேயே விளங்குகிறது. துறவி போன்று அவன் தென்படுகின்றான். உண்மையில் அவன் துறவியல்லன். ஒன்றும் இல்லாதவராக புத்தர் பெம்மான் தென்பட்டார். ஆனால் அவர் ஒன்றும் இல்லாதவர் அல்லர். இகலோக சம்பத்துக்களுக்கெல்லாம் மேலாக அவர் பேர் அருள் ஆளனாக இலங்கினார். அஹிம்ஸா தர்மத்துக்கு இவ் இருவர்களுடைய நிலையையும் நாம் பயன்படுத்த வேண்டும். பலவீனன் ஒருவன் தன்மீது படுகின்ற அடிகளையெல்லாம் தாங்கிக் கொண்டிருக்கின்றான். திடீரென்று அவனுக்குச் சிறிது வலிவு வந்து விட்டால் பிறகு அவன் சும்மா இருப்பானா என்று எண்ணிப் பார்க்கவேண்டும். தாக்குகின்றவனிடம் இருக்கின்ற வலிவைவிடக் கொஞ்சம் அதிக வலிவு அவனுக்கு வந்து விட்டால் தாக்குகின்றவனை அவன் சித்திரவதை பண்ணிவிடுவான். ஆகவே அவன் படைத்திருந்த அஹிம்ஸா தர்மம் வெறும் போலி தர்மமாம். வறியான் ஒருவன் முறையாகப் பணம் தேட முயல வேண்டும். பணம் தேடியான பிறகு அதை அவன் துறப்பானாகில் அப்பொழுது அவன் துறவியாகின்றான். பலவீனன் ஒருவன் முதலில் அக்கிரமத்தையும், கொடுமையையும் எதிர்த்துப் போராடவேண்டும். அப்படிப் போராடி அவன் பலதடவைகளில் உயிர் துறக்கவும் நேரிடலாம். அவன் உயிர் துறந்தான்; ஆனால் உறுதியையும் வீரத்தையும் அவன் துறந்துவிடவில்லை.

தீமையை எதிர்த்துப் போராடிப் போராடி சிறந்த பல வான் ஆயான பிறகு தன்னை வந்து சாரும் தீமைகளை யெல்லாம் அமைதியுடன் சகித்துக் கொண்டிருப்பானு கில் அப்பொழுது அவன் உண்மையான அஹிம்ஸா மூர்த்தி ஆகின்றான்.

அஹிம்ஸா தர்மம் மக்கள் அனைவராலும் கையாளுதற்குரியது ஆகாது. இவ்வுலகில் எப்பொழு துமே சற்று ஏறத்தாழ தீமை இருந்துகொண்டே வரும். மனிதனுக்குத் தென்படுகின்ற தீமைகளை எதிர்த்துப் போராட முதலில் அவன் பயிலவேண்டும். தீமைகளை முறையாக எதிர்த்துப் போராடுவதாலேயே ஒரு மனிதன் வலிவு படைத்தவன் ஆகின்றான். பிறர் செய்கின்ற தீங்குகளை எதிர்த்துத் தகர்த்து எறிந்துவிட ஒருவன் வல்லவனாகவேண்டும். அதன் பிறகு தன்மீது செலுத்தப்படும் துன்பங்களையும் தீங்குகளையும் ஒரு வன் மனமுவந்து சகித்துக்கொள்வானாகில் அந்த சகிப் புத்தன்மை துறவுக்கு ஒப்பாகின்றது. பிறரைத் திருப்பி அடிக்க வல்லவனாய் இருந்தால் அப்படி அடிக்காது அச்செயலை அவன் துறந்துவிடுகின்றான். உண்மை யான அன்பு வயப்படும் பெருநிலை அத்தகையவனுக்கு உண்டாகிறது. அன்பை ஆதாரமாக வைத்துக் கொண்டு தீங்கு செய்தவர்க்குப் பிரதி தீங்கு அவன் செய்யாது இருக்கிறான் என்னும் உயர் நிலைக்கு அப் பொழுதே அவன் தகுதியுடையவனாகின்றான். இதற்கு நேர்மாறான செயல் நம்மிடத்து வந்து அமையாதிருத் தல் பொருட்டு நம்மை நாம் காப்பாற்றிக்கொள்ள

வேண்டும். நமக்குத் தீங்கு செய்தவர்மீது கண்டிப்பான நடவடிக்கை எடுத்துக்கொள்ள நம்மிடத்து சக்தி இல்லையென்று வைத்துக்கொள்வோம். சக்தியற்ற நிலையில் இருந்துகொண்டு பிறர் கொடுக்கும் துன்பத்தை நாம் பொறுத்துக் கொண்டிருக்கின்றோம். அன்பினால் தூண்டப்பெற்று நாம் அங்ஙனம் பொறுத்துக் கொண்டிருக்கிறோம் என்று பாசாங்கு செய்வோமானால் நம்மை நாம் ஏமாற்றிக் கொள்கிறோம். உண்மையில் நாம் அன்பு நெறியில் சென்றவர்களும் அல்லர்; அஹிம்ஸா தர்மத்தைக் கையாண்டவர்களும் அல்லர். வெளிப்பார்வைக்கு அஹிம்ஸா தர்மத்தை அனுஷ்டிப்பவர்போன்று காட்டிக்கொண்டு மனத்தகத்து நாம் மேலும் மேலும் கோழைத்தனத்தை வளர்த்து வருகிறோம். ஆக, அஹிம்ஸா தர்மத்தை செயலில் கொண்டுவரத் தகுதியற்றவர்கள் அதைச் செயலில் கொண்டு வருவதுபோன்று வெளிவேஷம் பூண்டு நடந்துகொள்வதால் நலம் ஒன்றும் பெறுவதில்லை. பெருங்கேட்டையே அவர்கள் அடைந்து வருகின்றனர்.

அர்ஜுனனிடத்து தாற்காலிகமாக கோழைத்தனம் தலையெடுத்து விட்டது. அந்தக் கோழைத்தனத்தை மறைத்துக் கொள்ளுதற்காக பாட்டனாரையும், ஆசாரியரையும் எதிர்த்துப் போர்புரிய மாட்டேன் என்று மறுத்துவிட்டான். அரசன் ஒருவன் அறநெறியில் வைக்கின்ற பற்று ஏனைய பற்றுகளை யெல்லாம் விட மிகப் பெரியதாக இருக்கவேண்டும். அறநெறியை நிலைநாட்டுதற்பொருட்டு உற்றார் உறவினரை எதிர்த்

துப் போராடவேண்டிய அவசியம் வந்துவிடுங்கால் அவன் அறப்போர் நிகழ்த்த ஆயத்தமாய் இருக்க வேண்டும். பாட்டனாரிடத்தும் ஆசாரியரிடத்தும் அன்பு காட்ட வேண்டியது அவசியம். ஆனால் அவர் கள் அறநெறியை ஆதரிக்காதவர்களாய் இருப்பார் களாகில் அரசன் ஒருவன் அத்தகைய முதியோர் களையே எதிர்த்துப் போராட வேண்டியது அவனு டைய கடமையாகும். அப்பொழுதே அவ் அரசன் சமுதாயத்துக்குத் தான் ஆற்றவேண்டிய கடமையை நிறைவேற்றியவனாகிறான். அப்பெரிய கடமையினின்று அர்ஜுனன் தாற்காலிகமாக வழுவி விட்டான். அவன் நெறிவழுவிய நிலையை நெறிநின்ற நேர்மையான நிலை என்று எடுத்துக்காட்ட அர்ஜுனன் முயன்றான். அத் தகைய செயலைப் பொய் வேஷம் என்றும், கோழைத் தனம் என்றும் கிருஷ்ணன் கண்டிக்கலானார். "பேரறி ஞன் போன்று பேசுகின்றாய். பயங்கொள்ளி போன்று நடந்துகொள்கின்றாய். இத்தகைய முரண்பாடு மேன் மகன் ஒருவனுக்கு மேவாது. அறநெறியை ஆதரிக்கும் ஆண்மையுடன் எழுந்திராய். புன்மையை எதிர்த்துப் போராடு," என்று கண்ணன் கர்ஜித்தார்.

கர்மயோகத்துக்கு நடுநாயகமாக இருக்கும் லக்ஷி யம் இதுவேயாம். எவ்வுயிர்க்கும் எந்நிலையிலும் தீங்கு செய்யாதிருப்பதே வாழ்க்கையின் மகோன்னதமான லக்ஷியம் என்பதைக் கர்மயோகி ஒருவன் அறிந்து கொள்கிறான். எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதிருத்தல் பேராற்றல் மிகப்படைத்திருக்கும் மகன் ஒருவனுக்கே

சாத்தியம் என்பதையும் அந்த யோகி அறிந்துகொள்கிறான். பேராற்றல் படையாத மனிதன் அஹிம்ஸா தர்மத்துக்கு அறவே அருகதையற்றவன். நிறைவாழ்வு என்னும் மலையுச்சிக்கு யோகி ஒருவன் வந்தாக வேண்டும். உச்சியைப் போய்ச்சேரும் வரையில் மலையெங்கும் படிகள் பல இருக்கின்றன. தீமையை எதிர்த்துப் போராடுதலே இத்தகைய படிகள் ஆகின்றன. மனிதன் ஒருவன் தீமையை எதிர்த்துப் போராடுகின்ற ஒவ்வொரு தடவையிலும் மலையின்மீது ஒருபடி மேலே வந்துவிட்டவன் ஆகின்றான். கணக்கற்ற படிகளை அவன் கடந்தாகவேண்டும். தனக்கும் சமுதாயத்துக்கும் தீங்குகள் வந்துவாய்க்கின்ற வேளைகளிலெல்லாம் அத்தீமைகளை எதிர்த்துத் தொடர்ந்து போராடியாக வேண்டும். வளர்கின்ற செடி ஒன்றைக்காற்று அசைக்கிறது. காற்றில் அசைந்து அசைந்து அந்தச் செடி உறுதியான ஆணிவேர் அடையப்பெறுகிறது. காற்றில் ஒடிந்துபட்டுப் போகாத அடிமரமும் நாளடைவில் அதற்கு வந்து வாய்க்கிறது. செடியின் வளர்ச்சிக்கு எதிரிபோன்று அப்பொழுது அடிக்கின்ற காற்றுத் தென்படுகிறது. தன் போக்கில் அதை எதிர்த்துப் போராடி செடி உறுதி வாய்ந்த மரமாக வளர்கிறது. உலக வாழ்க்கையில் மனிதனுக்கு வந்து வாய்க்கும் தீமைகளும் அத்தகையவைகளேயாம். முறையாகத் தீமைகளை எதிர்த்துப் போராடிப் படிப்படியாக மனிதன் மேலேறிப் போகவேண்டும். அப்படிச் செய்வதன் மூலம் அவனுக்குப் பேராற்றல் வாய்க்கிறது.

பேராற்றல் வாய்க்கப்பெற்ற பிறகு எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதிருத்தல் என்னும் அஹிம்ஸா தர்மம் அவனுக்கு இயல்பாக வந்தமைகிறது. மலையின் உச்சி போய்ச்சேரும் பரியந்தம் மனிதன் படிகளின்மீது ஏறி ஏறிப் போய்க்கொண்டே இருக்கவேண்டும். அதே பாங்கில் யோகி ஒருவன் நிறைநிலையை அடைந்து அஹிம்ஸா தர்மத்தில் நிலைபெற்றிருத்தல் என்னும் பரிபக்குவம் அடையும் பரியந்தம் தீமையை எதிர்த்துப் போராடிக் கொண்டே இருக்கட்டும். அவன் புரிகின்ற ஒவ்வொரு செயலும் ஏதேனும் ஒருவிதத்தில் தீமையை அகற்றுதற்கென்றே வந்தமைகிறது. வாழ்க்கை என்பது ஒரு பெரிய போராட்டம். போராடத் தெரிந்து கொள்ளுதல் மனிதனுக்கு முதல் கடமையாகிறது. போராட்டத்தின் மூலமே அவன் முன்னேற்றமடைந்து வருகிறான். எங்கெல்லாம் தீங்கு தென்படுகிறதோ ஆங்கு அதை அவன் எதிர்த்து நேராகத் தாக்கவேண்டும். தாக்குதலின் மூலம் அவனுடைய ஆண்மை திகழ்கிறது. அவன் ஒழுக்கம் மிக வாய்க்கப்பெற்றவன் என்பது அவன் தீமையை எதிர்த்து எடுத்துக்கொள்ளும் நடவடிக்கையினின்றே நன்கு விளங்கும். தீமையை எதிர்த்துத் தகர்க்கின்றவனே நல்ல வீரனாகின்றான். கேடுகளைக் களைதல் மூலம் கர்மயோகிக்குப் பேராற்றல் உண்டாகிறது. பேராற்றல் படைத்தான பிறகு ஓர் உயிர்க்கும் தீங்கு செய்யாதிருத்தல் என்னும் பாரமார்த்திகப் பெருநிலையை அடைய அவன் தகுதியுடையவனாகின்றான். ஒரு செயலும் செய்யத் தெரியாது

சோம்பேறியாய் இருப்பவன் உலகவாழ்க்கை என்னும் போராட்டத்துக்குச் சாக்ஷியாய் இருக்கிறான் என்று எண்ணி நாம் ஏமாற்றம் அடைந்துவிடலாகாது. உலக வாழ்க்கைக்கு சாக்ஷியாயிருப்பது ஞானி ஒருவனுக்கே சாத்தியமாகிறது. நன்கு போராடத் தெரிந்து கொண்ட பிறகு போராட்டத்தை யோகி வேண்டுமென்றே நிறுத்தி வைத்துவிட்டு சாந்த சொரூபியாக வீற்றிருக்கின்றபொழுது அவன் உலகுக்கு சாக்ஷியாக இருக்கும் ஆத்ம சொரூபத்தில் நிலைபெற்றிருக்கிறான் என்று சொல்லலாம். எனவே கேடுகளுடன் முறையாகப் போராடுவதே கர்மயோகத்தின் லக்ஷியமாகிறது.

வெளித் தோற்றத்துக்கு ஆத்ம சொரூபத்தில் நிலைபெற்றிருப்பவனும், சோம்பலுற்றுத் தமோகுணத்தில் மூழ்கி செயலற்றுக் கிடப்பவனும் ஒரே பாங்குடைய காட்சிகளைக் கொடுக்கின்றார்கள். இவ்விருவர்களுள் தமோகுணத்தில் மூழ்கிக் கிடப்பவன் யார் என்பதை நாம் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். அவன் அறிவு மழுங்கியவன். புத்திக் கூர்மை என்பது அவனிடத்தில்லை. நலம், கேடு ஆகியவைகளைத் தெரிந்துகொள்ளும் நுண்ணறிவு அவனிடத்தில்லை. தெரிந்துகொள்ளவேண்டும் என்கிற அவாவும் அவனுடைய உள்ளத்தில் உதிப்பதில்லை. அறிவியல் துறையில் ஜடம் போன்றவன் வெறும் உயிர் வாழ்ந்திருக்கும் பாங்கில் விலங்குக்கு ஒப்பானவனாக இருக்கிறான். அத்தகைய மனிதன் ஆத்மீய வாழ்வில் முன்னேற்றம் அடைய முடியாது. “கடவுளை அடைதற்கு

நான் என்ன செய்யவேண்டும்?" என்று அத்தகைய மனிதன் சான்ரோன் ஒருவரிடம் சென்று கேள்வி ஒன்று கேட்கிறான் என்று வைத்துக்கொள்வோம். முக்தியடைய வேண்டும் என்ற விருப்பம் தனக்கு இருப்பதாக அந்தச் சான்ரோனிடம் அவன் தெரிவிக்கிறான். அவனுடைய நிலையை முற்றும் அறிந்து கொள்ளும் சான்ரோன் அவனுக்கு என்ன விடை கொடுப்பார் என்று நாம் ஆராய்ந்து பார்ப்போம். "உன்னால் பொய்பேசமுடியுமா?" என்று அந்தச் சான்ரோன் அவனைக் கேட்கிறார். "இல்லை, நான் ஒரு பொழுதும் பொய் பேசுவதில்லை" என்று அந்த மந்த அதிகாரியிடமிருந்து விடை வருகிறது. பசு ஒன்று பொய் பேசுவதில்லை. இருந்த இடத்தில் வளர்ந்து வரும் மரம் ஒன்று பொய் சொல்லுவதில்லை. அந்தப் பசுவினுடைய நிலையினின்றும், மரத்தினுடைய நிலையினின்றும் இம்மனிதன் மேம்பட்டவன் அல்லன். இவனுடைய பாங்குக்கு நேர்மாறாக மற்றொரு மனிதன் அக்கிரமமே வடிவெடுத்தவனாக இருக்கிறான். வேண்டுமென்று பொய் சொல்லுகிறான். அந்த அக்கிரமசாலியினுடைய நிலையைச் சுட்டிக்காட்டி இந்த சும்மா இருக்கின்ற மனிதன் அந்த அடாத செயல் செய்கின்ற மனிதனுடைய நிலைக்கு வரமுடியுமா என்று சான்ரோன் திரும்பவும் அவனைக் கேட்கிறார். அந்த அக்கிரமசாலியினுடைய அடாத செயலைச் செய்யத் தனக்கு இயலாதென்று செயலற்றுக்கிடக்கும் ஆள் விடை விடுக்கின்றான். "நீ உடனே செய்யக்கிடக்கும் கடமை

ஒன்று உண்டு. கொஞ்சம் குறும்பு செய்து பழகு. பொய்யையும் பித்தலாட்டத்தையும் வேண்டுமென்றே கையாண்டு பழகு." இங்ஙனம் அந்தச் சான்றோன் அவனுக்கு ஹிதோபதேசம் செய்கிறார் என்றும் வைத்துக்கொள்வோம். அப்பாவியாக இருக்கின்ற அம்மனிதனைப் பார்த்துப் பொல்லாதவனாகும்படி புகட்டுவது பொருந்துமா என்று நாம் நினைக்கக்கூடும். இக்கேள்வியைச் சிறிது ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த மந்த அதிகாரிக்கு சான்றோன் வழங்கிய ஹிதோபதேசம் முற்றிலும் பொருத்தமானது என்பது நமக்கு விளங்கும். செயலற்று ஜடப்பொருள் போன்று கிடப்பது மானுட வாழ்க்கையின் லக்ஷியமல்ல. தகுந்த செயல்களையும், தகாத செயல்களையும் துணிந்து செய்கின்ற மனிதன் வெறும் சோம்பேறியைவிடப் பல படிகள் மேலே வந்துள்ளவன் ஆகிறான். ஏனென்றால் ஏதேனும் ஒரு விதத்தில் இந்த அக்கிரமசாலி தனது அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்துகின்றான். மற்றவனிடத்தோ அறிவும் ஆற்றலும் சும்மா அடைபட்டுக் கிடக்கின்றன. குறும்பு செய்கின்றவன் அதிவிரைவில் முன்னேற்றம் அடைய முடியும். செயல் புரியாது ஜட நிலையில் இருப்பவன் ஒரு நாளும் முன்னேற்றம் அடைவதில்லை. இந்தக் கோட்பாட்டை அடிப்படையாக வைத்துக்கொண்டே அந்த சான்றோன் ஜட நிலையில் இருந்தவனுக்கு இத்தகைய ஹிதோபதேசம் செய்ய முன்வந்துள்ளார் என்பதை நாம் யூகித்து அறிந்து கொள்ளவேண்டும். ஒரு வினையும் ஆற்றத் தெரியாத

வனைவிட துஷ்டத்தனம் நிறைந்த வினைகளை ஆற்று பவன் வல்லவன் என்பதை மீண்டும் நாம் ஞாபகத்துக் குக் கொண்டுவர வேண்டும். மனிதனுடைய ஆற்றலை யும் அறிவையும் வளர்ப்பதே கர்ம யோகத்தின் குறிக் கோள். வெறும் கல் போன்றோ மரக்கட்டைபோன்றோ வாளாவிருப்பது வாழ்க்கையின் குறிக்கோள் ஆகாது. தீவிரமாக வினையாற்றத் தெரிந்து கொள்பவனுக்கே வியவகாரங்கள் அனைத்துக்கும் அப்பால் இருக்கும் பரம சாந்த நிலையைப்போய் எட்ட முடியும்.

செயலற்று வாளாவிருப்பது யோகி ஒருவனுக்கு ஒருநாளும் பொருந்தாது. செய்கின்ற செயலைத் திறம் படவும், தீவிரமாகவும் செய்து சாதிப்பதே உண்மை யான யோக சாதனமாகிறது. மனிதன் எப்பொழு தெல்லாம் செயல் புரிய முன்வருகின்றானோ அப்பொழு தெல்லாம் அவனுடைய செயல்களினின்று உண்டா கும் விளைவு ஒன்று உண்டு. தீமைகளைக் களைதலும் நிராகரித்தலும் அத்தகைய விளைவாம். சில தீமைகள் மனத்தகத்துப் புதைந்து கிடக்கின்றன. வேறு சில தீமைகள் உடல் வாழ்க்கையோடு தொடர்வுடையவை களாய் இருக்கின்றன. இன்னும் சில தீமைகள் உலகி லுள்ள உயிர்கள் ஒன்றோடொன்று தொடர்வு வைப்ப தினின்று வருவனவாகின்றன. தீமையானது எந்த நிலையில் எப்படி வேண்டுமென்றாலும் உரு எடுத்து இருக்கட்டும். அந்தத் தீமையைத் தகர்க்க முயலு தலே கர்ம யோகத்தின் குறிக்கோள். பசித்திருக்கும் மனிதன் உணவை உண்கின்றான். உணவு உள்ளே

செல்லச் செல்ல பசி அடங்குவதை அவன் உணரு கிறன். மனிதனுடைய இயல்பு செயல் புரிதலில் விரைந்து செல்லும் பாங்குடையது. அப்படி மனிதன் புரிகின்ற செயல் தீமையை ஒழிப்பதற்கென்று அமைய வேண்டும். தீமையை ஒழிப்பதில் மனிதன் வெற்றிகர மாக வினையாற்றுகின்ற வேலைகளிலெல்லாம் அவன் மனத்தகத்து அமைதியும் சாந்தமும் தூய்மையும் தலை யெடுத்து வருவதை யோகி உணர்வான். உணவு உட லுக்குச் செய்கின்ற நலனை கர்மயோகம் உள்ளத்துக்குச் செய்கிறது. பல தடவைகளில் மனிதனுடைய முன் னேற்றத்துக்குப் பொருந்தாத ஹிதோபதேசங்களை நாம் முறைதவறிச் செய்துவிடுகின்றோம். "யாரை யும் வெறுக்கவேண்டாம். தீமையை எதிர்த்துப் போராடாதே"— இப்படியெல்லாம் ஹிதோபதேசம் செய்வது மிக எளிது. அன்றாட வாழ்க்கையின் நடை முறையில் இத்தகைய ஹிதோபதேசங்கள் எவ்வளவு தூரம் பயன்படும் என்பதுவே மிக முக்கியமான கேள் வியாகிறது. இந்த நல்லுபதேசத்தைக் கேட்டான பிறகு யாரையும் வெறுக்காதிருக்கிறோம் என்று நாம் பாசாங்கு பண்ணிவிடலாம். யாருக்கும் தீமை ஒன்றும் செய்வதில்லை என்றும் நாம் வெளித் தோற்றத்தில் காட்டிக் கொண்டிருக்கலாம். இத்தகைய புறச் செயல் களெல்லாம் உலகத்தவர்களுடைய கண்காணிப்பு நம் மீது சென்று கொண்டிருக்கும் அளவிலேயாம். உண் மையில் நாம் எத்தகைய பாங்குடையவர்கள் என்பதை நாமே அறிவோம். ஏனென்றால் நெஞ்சை ஒளித்தொரு

வஞ்சகமில்லை. தீமையை எதிர்த்துப் போராடும் இயல்பு நமது மனத்தகத்து ஓயாது வேலை செய்து கொண்டிருக்கிறது. அது வேலை செய்து கொண்டிருக்கும் பரியந்தம் நாம் தீமையை எதிர்த்துப் போராடியே ஆகவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அமைதி என்பது ஒருநாளும் நமக்கு உண்டாகாது. தீமைகளைச் சகித்துக் கொண்டிருப்பதைவிட அவைகளோடு சண்டைபோடுவது எவ்வளவோ மேலானது என்பதை நம் மனதுக்குள்ளேயுள்ள இயல்பே நமக்கு எடுத்து ஓத முன்வருகிறது. தீமையை எதிர்த்துப் போராடுகின்ற வனுக்கு நாளடைவில் சாந்தி வருகிறது. அதைச் சும்மா சகித்துக் கொண்டிருப்பவனுக்கு ஒரு நாளும் சாந்தி வருவதில்லை.

பணம் மிகப் படைத்திருக்க வேண்டும் என்னும் அவா ஒரு மனிதனுக்கு உண்டாகிறது. செல்வம் உடைத்திருக்கிறவனுக்கு வாழ்க்கையில் என்னென்ன வசதிகளெல்லாம் வந்து அமையக்கூடும் என்பதை அவன் அறிகிறான். ஆதலால் அதை ஏராளமாகச் சேகரிக்க வேண்டும் என்னும் எண்ணம் அவனுக்கு இருக்கிறது. ஆனால் உலகத்தவர்களுடைய அபிப் பிராயம் அவனுடைய ஆசைக்கு மாறுபட்டதாய் இருக் கிறது. காசு தேடுதலிலேயே கருத்துவைத்திருக்கின்ற மனிதனை மேலோனாக உலகம் பொருள்படுத்துவதில்லை. சாமான்யமான செல்வத்தைக்கொண்டு திருப்தியடைந் திருந்து எளிய வாழ்க்கை வாழுகின்ற மனிதனையே மேலோனாக உலகம் போற்றுகிறது. பொது மக்களு

டைய அபிப்பிராயம் அப்படியிருக்கிறது என்பதைக் காசு ஆசை படைத்தவன் அறிந்துகொள்கின்றான். பொதுமக்களிடத்திருந்து நல்ல மதிப்பைப் பெற வேண்டும் என்கிற எண்ணம் கொண்டு அவன் பணம் தேடுவதைப் புறக்கணித்துவிடுகிறான். எளிய வாழ்க்கையில் திருப்தியடைந்திருப்பவன் போன்று வெளிக்குக் காட்டிக்கொள்கிறான். ஆனால் அல்லும் பகலும் மனதுக்குள் திரவியம் தேடுவதைப்பற்றிய வேட்கை உதித்துக் கொண்டே இருக்கிறது. அத்தகைய மனிதன் உள் ஒன்றை வைத்துப் புறத்தில் ஒன்றைப் பாசாங்காகக் காட்டிக்கொள்கிறான். அதற்குத்தான் பொய் வேஷம் என்று பெயர். அத்தகைய பொய் வேஷம் போடுவதால் அம்மனிதன் ஒரு பயனையும் அடையமாட்டான். மனதில் அவனுக்கு சாந்தியும் உண்டாகாது. எளிய வாழ்க்கையில் உறுதியான எண்ணம் கொண்டிருப்பவன்போன்று நடித்துக்காட்டுதற்குப் பதிலாக அவன் பொருள் நாட்டத்தில் ஆழ்ந்து ஈடுபட்டுவிடுவது நலம் தரும். வேண்டியவாறு அவன் செல்வத்தைச் சேகரிக்கட்டும். சேகரித்த செல்வத்தை விதவிதமான சுகபோகங்களில் பயன்படுத்திப் பார்க்கட்டும். அப்படிச் செய்வதால் நாளடைவில் அவனுக்கு அனுபவம் ஒன்று உண்டாகும். பெருமிதமான செல்வத்தைப் படைத்திருப்பதினின்று இன்பம் ஒரு பக்கம் உதித்துவருவது போன்று துன்பம் மற்றொரு பக்கம் உதித்துவருகிறது என்பதை அவன் உணர்வான். மிகைபட்ட இன்பத்தை இவ்

விரும்புகின்றவர்கள் மிகைபட்ட துன்பத்தையும் இவ்வுலகினின்று பெற்றே ஆகவேண்டும் என்னும் பேருண்மையைப் பணத்தில் ஆசை பிடித்தவன் அனுபவ பூர்வமாகக் கண்டுகொள்வான். அனுபவத்தில் அவ்வுண்மையைக் கண்டுகொண்ட பிறகு பணத்தின்மீது வைத்த பற்றுதல் தானே அகன்றுபோய்விடும். விரக்தி அல்லது பற்றற்ற நிலை பிறகு அவனுக்கு வந்தமையும். பற்றற்ற நிலையினின்றே ஒரு மனிதனுக்கு சாந்தம் உண்டாகிறது. இன்னொரு மனிதனுக்கு ஆதிக்கத்தில் ஆசை மிக இருக்கிறது. அந்த ஆசை உள்ளத்தில் உதித்துக் கொண்டிருக்கும் வரையில் அவன் அமைதியை அறியான். விதவிதமான ஆதிக்கங்களைப் பெற அம்மனிதன் முயற்சி எடுத்துக்கொள்ளட்டும். பதவிகள் பலவற்றை அவன் அனுபவித்துப் பார்க்கட்டும். பெரிய பதவிகளைப் பெற்று அவைகளை அனுபவித்துப் பார்க்கிறவனுக்கே அவைகள் மிக அற்பமானவைகள் என்பது புலப்படும். குழந்தைகளுக்குப் பொம்மைகளை உடைத்திருப்பதில் பெரும் விருப்பம் உண்டு. வயது வரும்பொழுது அவ்விருப்பம் தானாக அடிபட்டுப் போய் விடுகிறது. ஆதிக்கங்களிலும் பதவிகளிலும் மோஹம் கொண்டிருப்பவர்கள் ஆத்மீகத்துறையில் குழந்தைகள் போன்றவர்கள். தாங்கள் விரும்புகின்ற பதவிகளையும் பட்டங்களையும் அதிகாரங்களையும் அவர்கள் ஏற்று அனுபவித்துப் பார்க்கட்டும். அவைகள் வெறும் பொம்மலாட்டம் என்பதைப் பிறகு அவர்கள் அறிந்துகொள்வார்கள். அத்தகைய விவேகம் வந்த

பிறகு ஆதிக்கத்தைத் துறப்பது மிக எளியது ஆய்விடு கிறது. அத்தகைய அனுபவம் வருவதற்கு முன்பு ஆதிக்கத்தின்மீது கொண்டுள்ள ஆசையை அகற்றி விட இயலாது. அந்த ஆசையை நிறைவேற்றுவதற் கான நானாவிதமான அனுபவங்களை அம்மனிதன் செய்தே ஆகவேண்டும். ஆசை உள்ளத்தில் உதித்துக் கொண்டிருப்பதற்கிடையில் ஒரு நாளும் அமைதி வந்து விடாது. ஆதிக்கத்தில் வைக்கும் ஆசை பொருளற்றது என்று அறிந்து அதை அகற்றிய பின்பே அமைதியும் சாந்தமும் பரம்பொருளைச் சார்ந்திருத்தலும் ஆகிய மேலாம் பாங்குகள் வந்து வாய்க்கின்றன.

ஆசை அறுமின், ஆசை அறுமின், ஈசனோடாயினும் ஆசை அறுமின் என்னும் சீரிய கோட்பாடு பல்லாயிரம் ஆண்டுகளாகப் புகட்டப்பட்டிருக்கிறது. ஆசையை அகற்றியவர்களுக்கே அமைதி உண்டாகிறது என்னும் கோட்பாடு யுக்தி பூர்வமாக பலப்பல இடங்களில் பலப்பல சந்தர்ப்பங்களில் பெரும்பாலோர்க்குப் புகட் டப்பட்டிருக்கிறது. न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः ந கர்மணா ந ப்ரஜயா தனேந த்யாகேனைகே அம்ருதத்வ மானசு: என்னும் சீரிய வேதாந்த வாக்கியத்தை ஆயிரக் கணக்கான பேர் ஓதுகின்றனர். அதன் உட்கருத்தை யும் யுக்திபூர்வமாக பெரும் சபைகளில் எடுத்து விளக்கி வந்திருக்கின்றனர். காமிய கர்மத்தினாலன்று, ச ந் த ா ன விருத்தியினாலன்று, செல்வத்தினாலன்று, தியாகத்தினாலேயே மரணமிலாப் பெருநிலை அடையப் பெறுகிறது என்னும் கோட்பாட்டை மக்களுக்கு எத்

தனையோ தடவை எடுத்துப் புகட்டியாய்விட்டது. அப்போதனையைக்கேட்டு அது உண்மை என்பது பலருடைய அறிவுக்கு எட்டியும் ஆய்விட்டது. குழந்தைப் பருவத்திலிருந்து பலபேர் இக்கோட்பாடுகளைக் கேட்டுக்கொண்டே இருக்கின்றனர். ஆனால் உலக ஆசைகளை விட்டு ஒழித்தல் என்னும் உயர்ந்த நிலையை அடையப்பெற்றிருப்பவன் பல்லாயிரத்தில் ஒருவனையுங்கூட காண்பது அரிது. வாய்ப்பேச்சுக்கு சம்மதம் கொடுப்பது ஒன்று; வாழ்க்கையில் அக்கோட்பாட்டை நடைமுறையில் கொண்டுவருவது மற்றொன்று. வாய்ப் பேச்சுக்கு சம்மதம் கொடுத்தவர்கள் எல்லாம் அப் பேச்சில் அடங்கிய கோட்பாட்டை நடைமுறையில் கொண்டு வந்தவர்கள் அல்லர். பரிபக்குவம் அடைந்துள்ள நன்மக்கள் உலகில் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதைப் பற்றிய உண்மை ஒன்றை உள்ளபடி நாம் அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. இதற்குச் சான்றாக விவேகானந்த சுவாமிகளின் அனுபவத்தை அவருடைய வாக்கைக் கொண்டே விளக்குவோம். "பூவுலகம் முழுதையும் நான் சுற்றிப் பார்த்திருக்கிறேன். ஆங்காங்கு வாழ்ந்துவரும் பெருமக்களையும் நான் சந்தித்திருக்கிறேன். அவர்களுள் அஹிம்ஸா தர்மத்தில் முற்றும் நிலை நின்றிருப்பவர்கள் எத்தனை பேர் என்பது கேள்வி. யார் அஹிம்ஸா தர்மத்தில் பரிபூரணமாக நிலைநிற்கின்றாரோ அவர் சாந்தமே வடிவெடுத்தவர் ஆய்விடுகின்றார். அத்தகைய சாந்த மூர்த்திகள் சுமார் இருபதுபேர் உலகில் இருக்கின்றார்களா

என்னும் ஐயம் எனக்கு உண்டாகிறது. நாம் பேசிக் கொண்டிருப்பது போன்று அஹிம்ஸா தர்மத்தை அனுஷ்டானத்தில் கொண்டுவருவது அவ்வளவு சுலப மன்று.'' இப்படிப் பகர்வதன் மூலம் அஹிம்ஸா தர் மத்தைக் கையாளத் தகுதியுடையவர் யார் என்பதை விவேகானந்த சுவாமிகள் விளக்கிக்காட்டுகிருர். பொது வாக உலக மக்கள் இந்த உயர்ந்த லக்ஷியத்தை அனுஷ் டிக்கத் தகுதியற்றவர்கள். ஆதலால் அவர்கள் செய்யக் கிடக்கும் கடமை ஒன்றே ஒன்று உளது. தங்களுக்குத் தென்படும் தீமைகளை எதிர்த்து அவர்கள் முறையாகப் போராடிக்கொண்டே இருக்கவேண்டும். அத்தகைய போராட்டத்தின் மூலம் மனபரிபாகமும் மன அமைதி யும் அவர்கள் அடையப் பெறுகின்றனர். அந்தப் பயிற்சி பூர்த்தியாகும் பொழுது அஹிம்ஸையில் நிலை பெற்றிருப்பதும் மன சாந்தியடைந்திருப்பதும் தாமாக வந்து அமைந்துவிடுகின்றன.

ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய மனபரி பாக [illegible] யத்தையே அவன் உறுதியாகப் பிடித்துக்கொள்ளப் பயின்று வரவேண்டும். லக்ஷியத்தை அடையும் வரை யில் அவன் தனது முயற்சியை நிறுத்திவிடலாகாது. ஒரு மனிதனுக்குப் பொருந்திய லக்ஷியத்துக்கு அவனு டைய சுதர்மம் என்பது மற்ருெரு பெயர். ஒவ்வொரு வனும் தனக்குகந்த முறையைக் கையாளுதலின் வாயி லாகவே முன்னேற்றமடைகிருன். இதை ஒரு திருஷ் டாந்தத்தின் மூலம் விளக்கலாம். உணவு வகைகளுள்

ஒரு மனிதனுக்குப் பொருந்துகிற உணவு மற்றொருவ னுக்குப் பொருந்தாது போய்விடலாம். தன் உடல மைப்புக்கு ஏற்ற உணவு யாதோ அதையே உண்டு அவன் உடலுறுதி பெறவேண்டும். வாழ்க்கையில் சுதர்மம் என்பதும் அத்தகையது. எத்தகைய அறத் தாறு ஒரு மனிதனுக்கு உகந்ததோ அதையே அவன் உறுதியாகப் பழகுதல் வேண்டும். பிறர்க்கு உகந்துள்ள அறத்தாறு தனக்கும் தகுந்தது என்று பிறர் போகும் அறநெறியில் தான் போகலாகாது. தன் ஆற்றலுக் கும் தகுதிக்கும் ஒத்துள்ள அறத்தாறே தனக்கேற்ற நன்னெறியாகும். இக்கோட்பாட்டை மனிதன் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசிய மாகிறது. மற்றொரு சான்றையும் ஈண்டு எடுத்துக் கொள்வோம். இப்பொழுதுதான் நடக்கக் கற்றுக் கொண்டுள்ள குழந்தை ஒன்று இருக்கிறது. அக் குழந்தையானது இருபது மைல் தூரம் நடந்துபோக வேண்டும் என்னும் கடமையை அக்குழந்தையின் மீது திணித்தால் என்ன ஆகும்? நடக்க முடியாமல் அக் குழந்தை வழியிலேயே மடிந்துபோய் விடலாம். அப் படி முயலுகின்ற ஆயிரம் குழந்தைகளுள் ஏதேனும் ஒன்று தட்டித் தள்ளாடி இருபது மைல் தூரத்தை நடந்து முடித்திருக்கலாம். குறியைப் போய்ச் சேரு கின்ற வேளையில் அக்குழந்தை முற்றிலும் களைத்துப் போய் சாகப்போம் தறுவாயில் இருக்கலாம். ஆக, எடுத்த எடுப்பிலேயே இருபது மைல் தூரம் நடக்க முயலுவது புதிதாக நடக்கக் கற்றுக்கொண்ட குழந்

தைக்கு சுதர்மம் ஆகாது. ஒரு சிறு குழந்தையை இப்படி நெடுந்தூரம் நடக்கச் செய்யும் தவறுதலை உலக மக்களது வாழ்க்கை முறையிலும் நாம் செய்துவிடுகிறோம். உலக மக்களுள் எல்லோரும் ஒரே விதமான மனபரிபாகமோ, உடல் வன்மையோ அடையப்பெற்றவர்கள் அல்லர். ஆண்பாலர்களுடைய பாங்கு ஒரு போக்கானது. இனி பெண்பாலர்க்கென்றே தனி இயல்புகளும் உண்டு. வெவ்வேறு சமுதாயங்களை ஆராய்ந்து பார்த்தால் எல்லாசமுதாயங்களும் ஒரேவிதமான நாகரீகத்தை உடைத்திருப்பவைகள் அல்ல என்பது விளங்கும். வாழ்க்கை முறையிலும், செயல்களைச் செய்து சாதிக்கின்ற வன்மையிலும் அந்தச் சமுதாயங்கள் வெவ்வேறு படித்தரங்களில் இருக்கின்றன. அந்தந்த சமுதாயத்துக்குரிய வாழ்க்கைத் திட்டத்துக்கே அறத்தாறு என்று பெயர். அறநெறிகள் அவரவருக்கு ஏற்றபடி வெவ்வேறு வடிவெடுத்திருப்பது அவசியம். ஒரு மனிதனுக்கோ சமுதாயத்துக்கோ பொருந்தியுள்ள வாழ்க்கைத் திட்டத்தை மற்றவர்கள் அலட்சியப்படுத்தலாகாது. தங்களுக்குப் பொருந்தாது இருக்கின்ற வாழ்க்கைத் திட்டங்கள் உலகத்திலுள்ள மக்கள் எல்லோருக்குமே பொருந்ாதவைகள் என்று அவைகளைக் குறித்து எள்ளி நகையாடலாகாது.

பள்ளிக்கூடத்தில் ஒரு பிள்ளை பாலர் வகுப்பில் படிக்கின்றான். மற்றொரு பிள்ளை ஐந்தாம் வகுப்பில் படிக்கின்றான். மேல் வகுப்பில் படிக்கின்றபடியினால் ஐந்தாம் வகுப்புப் பிள்ளை பாலர் வகுப்புப் பிள்ளையை

விட உயர்ந்தவன் என்று நாம் எண்ணலாகாது. இனி, நிலத்திணையின் வாழ்க்கை முறையை ஆராய்ந்து பார்ப் போம். நல்ல கனிகளை மக்களுக்குக் கொடுத்துதவும் மாமரங்கள் இருக்கின்றன. அதே நில உலகில் வேப்ப மரங்களும் வளர்ந்து வருகின்றன. பழம் தந்து உதவும் பாங்கில் வேப்பமரம் மாமரத்துக்கு ஒப்பாகாது. ஆகை யினால் வேப்பமரம் ஒன்றுக்குமே உதவாது என்கின்ற முடிவுக்கு நாம் வந்துவிடுவது பிசகு ஆகும். வளர்ந்து கொண்டிருக்கும் பொழுதே வேப்பமரம் வேறு ஒரு பாங்கில் மக்களுக்குப் பயன்படுகிறது. நல்ல மருந்து வகைகளுக்கு அது உதவுகிறது. குளிர்ந்த நிழலைத் தந்து ஆரோக்கியத்தை அது வளர்க்கிறது. ஆதலால் ஒரு மரத்தின் பயனை அளந்தெடுப்பதற்கு இன்னொரு மரத்தை அளவையாக நாம் எடுத்துக்கொள்ளலாகாது. மாமரத்தின் பயனை அளப்பதற்கு மாமரத்தையே அளவையாக எடுத்துக் கொள்ளவேண்டும். வேப்ப மரத்தின் பயனை அளப்பதற்கு வேப்ப மரத்தையே அளவையாக எடுத்துக் கொள்ளவேண்டும். இதே கோட்பாடு சமுதாயங்களின் வாழ்க்கை முறையை அளப்பதற்கும் பயன்படுகிறது. ஒரு சமுதாயத்துக்கு லக்ஷியமாய் இருப்பது இன்னொரு சமுதாயத்துக்கும் லக்ஷியமாக இருக்க வேண்டுமென்பது அவசியமல்ல. வெவ்வேறு லக்ஷியங்களைக் கடைப்பிடித்து ஒவ்வொரு சமுதாயமும் தன் தன் போக்கில் முன்னேற்றம் அடைந்து வரக்கூடும். தனது லக்ஷியத்தைக் கடைப் பிடித்து ஒரு மனிதனோ, சமுதாயமோ முன்னேற்ற

மடைந்து வருகிறதா அல்லவா என்பதைத்தான் நாம் கவனிக்கவேண்டும். அது முன்னேற்றம் அடைந்து வந்தால் அந்தச் சமுதாயம் பெற்றிருக்கும் லக்ஷியம் பாராட்டத்தக்கதே. ஒரு சமுதாயத்துக்குப் பொருந்து கிற லக்ஷியத்தை அளவையாக வைத்துக்கொண்டு மற் றொரு சமுதாயத்தை நாம் மதிப்பிடலாகாது. பண் பாட்டுக்கு எது உகந்ததோ அதையே அவர்களுக்கு எடுத்து வழங்குதல் வேண்டும். இந்தச் சிறந்த தத்து வத்தைக் கற்றுக்கொள்ள நாம் கடமைப்பட்டிருக் கின்றோம்.

எங்குப் பார்த்தாலும் வேறுபாடுகளை இயற்கை யில் நாம் வேண்டியவாறு காணலாம். ஆனால் அதற் கிடையில் அதனிடத்து மற்றொரு மகிமை உண்டு. இத்தனை விதமான வேறுபாடுகளுக்கிடையில் ஒற்று மைப் பகுதியையும் இயற்கையின்கண் காணலாம். வேற்றுமையில் ஒற்றுமையே இயற்கையின் பெருந் திட்டமாகும். இனி, மானுட உலகை ஆராய்வோம். ஒரே பாங்கில் அமைந்துள்ள இரண்டு மனிதர்களை இயற்கையில் காணமுடியாது. உடல் அமைப்பில் ஆயி னும் சரி, மன அமைப்பில் ஆயினும் சரி ஒரு மனிதன் போன்று மற்றொரு மனிதன் இருப்பதில்லை. அதே கோட்பாடு பெண் உலகுக்கும் பொருந்துகிறது. மங்கை யர் இருவர் ஒரே பாங்கில் அமைந்திருப்பதை நாம் காணமுடியாது. ஆயினும் இத்தனைவித வேறுபாடுகள் எல்லாம் அவர்களுடைய புற அமைப்பிலேயாம். இனி, அவர்களுக்கிடையில் அக அமைப்பு என்பது ஒன்று

இருக்கிறது. அக அமைப்பை ஆராய்ந்து அறிந்து கொள்ளுதல் எல்லார்க்கும் எளிதன்று. அந்த அக அமைப்பை ஆராய்ந்து பார்க்குமிடத்து இத்தனைவித உயிர்களுக்கிடையில் உள்ள ஒற்றுமை தோன்றும். எத்தனை எத்தனை குணபேதங்கள் இயற்கையில் இருக் கின்றன. எத்தனை எத்தனை வகுப்புகள் அதன்கண் இலங்குகின்றன. ஜட உலகிலும் அப்படியே, சேதன உலகிலும் அப்படியே. உயிர் வாழ்பவைகளுக்கிடையில் உள்ள எண்ணிறந்த வேற்றுமைகளே ஒரு விதத்தில் அவைகளின் பெருமைகளைப் புலப்படுத்துகின்றன. கணக்கற்ற கூறுகளுடன் இலங்கும் பெருமை மானுட உலகிலும் அமைந்திருக்கிறது. சிருஷ்டியின் விசித்திரம் இதுவேயாம். எண்ணிறந்த படித்தரங்கள் இயற்கை யின் அமைப்பில் இருக்கின்றன. ஆதலால் ஒரே அள வையை வைத்துக்கொண்டு உயிர் வகைகளை நாம் மதிப்புப் போடலாகாது. இயல்பு வேற்றுமையும் குண வேற்றுமையும் மக்களுக்கிடையில் இருப்பதனால் அவர்கள் எல்லார்க்கும் ஒரே லக்ஷியத்தை நாம் வழங் கலாகாது. பள்ளிக்கூடத்தில் படிக்கும் பிள்ளைகளுக் கிடையில் வகுப்புக்கு ஏற்றபடி பாடம் அமைகிறது. மாந்தர்க்கிடையில் மனபரிபாகத்துக்கேற்றபடி அவர் களுடைய கடமை அமைகிறது. அப்படியல்லாது எல்லா மக்களுக்கும் வாழ்க்கையில் லக்ஷியம் ஒன்றே என்றும், கடமை ஒன்றே என்றும் நாம் பாகுபடுத்து வோமானால் அது இயற்கையின் நடைமுறைக்குப் பொருந்தாத போராட்டத்தில் கொண்டு சேர்க்கும்.

வழங்கியுள்ள ஒரு லக்ஷியத்தைக் கடைப்பிடிக்க ஒரு மனிதனுக்கு இயலாது போய்விட்டால் அவன் தன்னையே நொந்துகொள்ளவும், வெறுக்கவும் ஆரம்பித்து விடுவான். வாழ்க்கையில் முன்னேற்றம் அடைந்து வருதல் பின்பு அத்தகையவனுக்குச் சாத்தியமாகாது. நலன் வாய்க்கப்பெற்றவனுகவும் அத்தகைய மனிதன் அமையமாட்டான். கோணலான மனப்பான்மை தன்னையறியாது அவனிடத்து உண்டாய்விடும். உலகுக்கு நலன் செய்ய விரும்பி உண்மையில் கேட்டையே விளைவித்து விடுவதாக இத்தகைய செயல் முற்றுப் பெற்றுவிடும். ஆதலால் ஒவ்வொரு மனிதனுக்கும் உகந்த லக்ஷியம் எதுவோ அதையே அவனுக்கு எடுத்து வழங்கவேண்டும். அவரவர்க்குப் பொருந்திய குறிக்கோளை வாழ்க்கையில் வைத்துக் கொள்ளுங்கால் சீலத்திலும் ஒழுக்கத்திலும் மனிதனுடைய வளர்ச்சி முறையாக வந்து அமையும். உயர்ந்த லக்ஷியம் ஒன்றையே ஒவ்வொரு மனிதனும் கடைப்பிடிக்கவேண்டும். அந்த உயர்ந்த லக்ஷியம் அவனுடைய மனபரிபாகத்துக்கு முற்றிலும் ஒத்ததாக இருக்கவேண்டும். அந்த உயர்ந்த லக்ஷியம் பாரமார்த்திக தத்துவத்துக்கும் ஒத்ததாக இருக்கவேண்டும். இந்தப் பாங்கில் விதவிதமான முறைகளிலே மக்கள் தத்தம் கடமைகளைச் செய்து முன்னேற்றம் அடைய முயன்று வருவார்களானுல் அதினின்று நலன் அனைத்தும் உண்டாகும்.

மனிதனுடைய வாழ்க்கையை வகைப்படுத்துதலில் ஸநாதன தர்மம் என்று அழைக்கப்படும் நமது

ஹிந்துமதம் கருத்தை மிகச் செலுத்தியிருக்கிறது. பல்லாயிரம் ஆண்டுகளாக வாழ்க்கைக்குரிய கோட்பாடுகளை முறையாக வகுத்துவைத்து மக்களுக்கிடையில் அது வழங்கியுள்ளது. அக்கோட்பாடுகளை ஈண்டுச் சுருக்கமாக ஆராய்வோம். தனது மனபரிபாகத்துக்கும் செயலுக்கும் ஒப்ப மனிதன் நான்கு வருணங்களாகப் பிரிக்கப்படுகிறான். அந்த நான்கு வருணங்கள் முறையே பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் எனப் பெயர் பெறுகின்றன. இச்சீரிய கோட்பாட்டை இக்காலத்திய மனிதன் முறையாக அறிந்துகொள்ளவில்லை. மனிதனுடைய மனபரிபாகத்தைப் புறக்கணித்து வைத்துவிட்டு அவனுடைய பிறப்பையே முதற்காரணமாக வைத்துக்கொண்டது இக்காலத்திய மக்கள் செய்துள்ள பெருந் தவறுதல் ஆகும். ஒரு மனிதன் யாருக்குப் பிள்ளையாகப் பிறக்கிறான் என்பது மிக முக்கியமானது அல்ல. எத்தகைய மனபரிபாகமுடையவனாக அவன் பிறந்திருக்கிறான் என்பதே மிக முக்கியமானது. சான்றோர்கள் அமைத்துள்ள ஏற்பாட்டின்படி நான்கு வருணங்கள் மக்கள் அடைந்துள்ள மனபரிபாகத்தையும் அவர்கள் ஆற்றிவரும் கடமைகளையும் அடிப்படையாகக் கொண்டனவாம். நான்கு வருணங்களை அனுசரித்து நான்கு ஆச்ரமங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு பிரம்மசரியம், கிரஹஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் எனப் பெயர்கள் முறையே அமைந்துள்ளன. அந்தந்த வருணத்துக்குரிய கடமைகள் உண்டு; அந்தந்த ஆச்ரமத்துக்குரிய

கடமைகள் உண்டு. கடமைகளுக்கு தர்மம் என்பது பெயர். வருணங்களையும், ஆச்ரமங்களையும், அவ்வவை களுக்குரிய தர்மங்களையும் தொகுத்து வர்ண ஆச்ரம தர்மம் என்று இயம்புவது மரபு. இன்றைக்கு வருணங் கள் என்பனவும் ஆச்ரமங்கள் என்பனவும்,தர்மம் என் பதும் எல்லாம் குழப்பமடைந்து கிடக்கின்றன. மனி தன் வருணத்தில் படிப்படியாக மேலே போகின்றபொ ழுது அவனுடைய கடமைகளும் மிக மேலானவைகளா கவும் பொறுப்பு மிகநிறைந்தனவாகவும் அமைகின்றன. ஆச்ரமத்தில் மனிதன் படிப்படியாக மேலே வருகின்ற பொழுது அம்மனிதனுக்கு ஏற்பட்டுள்ள கடமைகளும், பொறுப்புகளும் மிகமிக உயர்ந்தவைகளாகின்றன. )க் கோட்பாடுகளை அனுசரித்து மனிதன் வாழ்க்கை வாழ்ந்து வந்தால் நலன் அனைத்தும் உண்டாகும். தனி மனிதனுக்கோ அல்லது சமுதாயத்துக்கோ எந்த வித மான கேடும் வந்துவிடாது. அதற்கு மாறாக சீரும் சிறப் புமே ஓங்கும். வருண தர்மத்தையும் ஆச்ரம தர்மத்தை யும் தத்துவத்துக்கு ஒத்தபடி இருக்கின்றனவாவென்று ஆராய்ந்துஅறிந்து கொள்ளுதல் நமதுமுதல் கடமையா கின்றது. அதற்கு ஒப்ப நமது வாழ்க்கையை நடாத்து தல் நமக்கு அமைந்துள்ள அடுத்த கடமையாகும்.

மக்களாகப் பிறந்துள்ளவர்கள் அனைவருக்கும் பொதுவாக அமைந்துள்ள கடமைகள் பல இருக்கின் றன. நல்லொழுக்கமும், சீலமும் வடிவெடுத்தவர் களாக இருப்பது எல்லார்க்கும் பொதுவான கடமை யாகும். அதேபாங்கில் உயிர்கள் அனைத்திடத்தும்

அன்பாயிருத்தல் மக்கள் எல்லோர்க்கும் பொதுவாய் ஏற்பட்டுள்ள கடமையாகும். இனி, அவரவர்க்குரியவை என்று சிறப்பாய் அமைந்துள்ள கடமைகள் பல இருக்கின்றன. அதைத்தான் சுதர்மம் என்று நாம் சொல்லுகிறோம். ஒரு மனிதனுக்கு சுதர்மமாய் அமைந்தது மற்றொரு மனிதனுக்கும் அமைய வேண்டுமென்பது அவசியமல்ல. குழந்தைப் பருவத்தைத் தாண்டிப் பால்ய பருவத்துக்கு வரும்பொழுது பிரம்மசரிய ஆச்ரமத்தில் வாழ்க்கை துவங்குகிறது. அந்த ஆச்ரமத்தில் பெறவேண்டிய கல்வியையும், பயிற்சியையும் பெறுதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கின்றன. நல்ல பயிற்சியைப் பெற்ற பிறகு தக்க வயது வரும்பொழுது யுவன் ஒருவன் கிரஹஸ்த ஆச்ரமத்தை ஏற்றுக்கொள்கிறான். அப்பொழுது அவனுடைய கடமைகள் மாறியமைகின்றன. அதன் பிறகு அவனுக்கு விருத்தாப்பியம் வருகிறது. அந்நிலையில் அவன் வானப்பிரஸ்தன் ஆகிறான். இறுதியாக உலகப்பற்றுகள் அனைத்தையும் ஒழித்துவிட்டு அவன் சன்னியாச ஆச்ரமத்தில் பிரவேசிக்கிறான். இப்படி அமைந்துள்ள நான்கு ஆச்ரமங்களுக்கும் சுதர்மங்கள் வெவ்வேறு பாங்குடையவைகளாக வந்து அமைகின்றன. இந்த நான்கு ஆச்ரமங்களைப் பற்றிய பேருண்மை ஒன்றை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இவைகளுள் ஒரு ஆச்ரமத்தைவிட மற்றொரு ஆச்ரமம் உயர்ந்தது என்று எண்ணுவது பொருந்தாது. மானுடன் ஒருவன் முறையான பாங்கில் இல்லறத்தை நடாத்தி வருகிறான்.

மற்றொருவன் பிரம்மசரிய ஆச்ரமத்தினின்று நேரே சன்னியாச ஆச்ரமத்துக்குப் போய்விடுகின்றான். சம யத்துறையிலேயே அவன் தன்னுடைய வாழ்நாளை யெல்லாம் கழிக்கின்றான். இக்காரணத்தை முன்னிட்டு துறவி ஒருவன் இல்லறத்தானைவிட உயர்ந்தவன் என்று எண்ணலாகாது. துறவறம் எவ்வளவு பெரி யதோ அவ்வளவு பெரியது இல்லறமும். இதைத்தான் நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

மேலும் மக்களுக்கு அமைந்துள்ள வெவ்வேறு கடமைகளை ஆராய்ந்து பார்ப்போம். தெருவைக் கூட்டிச் சுத்தம் பண்ணும் தோட்டி ஒருவன் சமூகத் தில் இருக்கிறான். சிம்மாசனத்தின்மீது வீற்றிருந்து செங்கோல் செலுத்தும் கோமகன் ஒருவன் சமுதாயத் தில் இருக்கின்றான். ஆட்சி புரிகின்ற கோமகனுடைய வாழ்க்கையோ சிறப்பு அனைத்தும் அமையப் பெற்றது என்று மக்கள் பொதுவாகக் கருதுகின்றனர். ஆனால் வாழ்க்கையைப் பற்றிய முழு உண்மை அதுவன்று. ஓர் அரசனுடைய வாழ்க்கையிலுள்ள சீரும் சிறப்பும் ஒரு தோட்டியினுடைய வாழ்க்கையிலும் இருக்கிறது. ஊரெங்குமுள்ள மலம், குப்பை கூளங்களை வாரி யெடுத்து அப்புறப்படுத்துகின்ற கடமையானது ஆட்சி புரிகின்ற கடமைக்கு ஒப்பானது. எனவே ஒரு தோட்டி யினுடைய கடமையிலும் சீரும் சிறப்புக்களும் வேண் டியவாறு புதைந்து கிடக்கின்றன. இக்கோட்பாட்டை அறிந்து கொள்பவர்களே வாழ்க்கைத் தத்துவத்தை உள்ளபடி அறிந்து கொள்பவர்கள் ஆகின்றனர். ஒவ்

வொருவனும் தன் தன் நிலையில் உயர்ந்தவனே என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். அரசன் ஒருவனை சிம்மாசனத்திலிருந்து அப்புறப்படுத்தித் தோட்டி ஒருவனுடைய வேலையைச் செய்யும்படி நியமித்து வைத்துப் பார்க்கவேண்டும். தனக்கு அமைந்துள்ள புதிய கடமையை அவன் எங்ஙனம் நிறைவேற்றுகிறான் என்று ஆராய்ந்து பார்ப்பது அவசியமாகிறது. அதே பாங்கில் தோட்டி ஒருவனை அரசபதவியில் அமர்த்தி வைத்து ஆட்சி புரியும்படி ஏவினால் தனக்கு அமைந்துள்ள புதிய கடமையை அவன் எங்ஙனம் நிறைவேற்றுகிறான் என்று பார்க்கவேண்டும். பலதடவைகளில் ஆட்சி புரிபவன் தோட்டித் தொழிலைச் செய்யத் தகுதியற்றவனாகப் போய்விடுவான்; தோட்டித் தொழிலைச் செய்பவன் ஆட்சிபுரிய அருகதை அற்றவன் ஆய்விடுவான். இரண்டு தொழில்களும் அதனதன் நிலையில் பெரியதே. சமுதாய நடைமுறைக்கு இரண்டு தொழில்களும் இன்றியமையாதவைகளே. அதே விதத்தில் இல்லறத்தையும் துறவறத்தையும் மதிப்பிட்டுப் பார்க்கவேண்டும். இல்லம் துறந்து பாரமார்த்திக வாழ்க்கைக்கென்றே தன்னுடைய வாழ்க்கையை ஒப்படைத்திருக்கும் துறவி ஒருவன் இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவனை விட உயர்ந்தவன் என்று இயம்புவது பொருந்தாது. உலகத்தில் ஒரு மனிதனுக்கு ஏற்பட்டுள்ள கடமைகளையெல்லாம் நிறைவேற்றிக்கொண்டிருப்பதற்கிடையில் கடவுள் வணக்கத்தையும் முறையாகச் செய்து கொண்டிருப்பது மிகமிகக் கடினமானது.

உலகப் பொறுப்புகளை யெல்லாம் துறந்துவிட்டுக் கடவுள் வழிபாட்டுக்குக்கென்றே தன்னுடைய வாழ்க்கையை ஒப்படைத்திருக்கின்றவன் ஓயாது கடவுள் வழிபாடு செய்கின்றான். மற்றவன் குடும்ப பாரத்தைத் தாங்கிக் கொண்டிருப்பதற்கிடையில் கடவுள் வழிபாடு செய்கின்றான். இவ்விருவருள் உலகைத் துறந்தவனை உயர்ந்தவன் என்று நாம் ஏன் சொல்ல வேண்டும்! வாழ்க்கையை நான்கு ஆச்ரமங்களாகப் பிரித்து வைத்தது பண்டைக் காலத்திய ஏற்பாடு. நாளடைவில் இந்த நான்கு ஆச்ரமங்கள் இரண்டு ஆச்ரமங்களாகக் குறுகிப் போய்விட்டன. கிரஹஸ்த ஆச்ரமம், சன்னியாச ஆச்ரமம் ஆகிய இரண்டைத்தான் இக்காலத்தில் நாம் காண்கிறோம். வானப்பிரஸ்த ஆச்ரமம் சன்னியாச ஆச்ரமத்தில் ஒடுங்கிப்போய் விட்டது. பிரம்மசரிய ஆச்ரமம் மறைந்துபட்டுப் போய்விட்டது. இதுவே இக்காலத்தில் நாம் காணும் நிலைமையாகும். இவ் இரண்டு ஆச்ரமங்களுள் இல்வாழ்பவன் மணந்து கொள்கின்றான். சமூகத்தில் ஓர் அங்கத்தினனாக தனக்கு ஏற்பட்டுள்ள கடமைகளை அவன் நிறைவேற்றி வருகின்றான். மற்றவன் துறவியாய் விடுகின்றான். தன்னுடைய ஆற்றல் முழுவதையும் சமய வளர்ச்சிக்கென்றே அவன் பயன்படுத்துகின்றான். கடவுள் வழிபாடும், சமயத்தைப் பரப்புதலும் துறவறத்தானுடைய கடமைகள் ஆகின்றன. இந்து மதத்தில் அமைந்துள்ள சாஸ்திரங்கள் பலவற்றுள் மஹா நிர்வாண தந்திரம் என்பது ஒன்று. கிரஹஸ்த ஆச்ரமத்துக்கு

ஏற்பட்டுள்ள கடமைகளை அது விஸ்தாரமாக விளக்கு கிறது. அதை ஆராய்ந்து பார்க்குமிடத்து கிரஹஸ்த ஆச்ரம வாழ்க்கை எவ்வளவு கடினமானது என்பது விளங்கும். கிரஹஸ்த ஆச்ரமத்துக்கு ஏற்பட்டுள்ள கடமைகளை யெல்லாம் முறையாக நிறைவேற்றுபவர் கள் மிகமிகச் சிலரே என்பதும் வெளியாகும். அவை களை ஆராய்ந்து பார்ப்போம்:—

குடும்ப வாழ்வு வாழுகின்ற ஒருவன் கடவுள் பற்று மிக உடைத்திருக்க வேண்டும். கடவுளைப் பற்றிய ஞானத்தைப் பெறுவதே அவன் வாழ்க்கையில் கொண்டுள்ள குறிக்கோள் ஆகவேண்டும். பரம்பொரு ளைப்பற்றிய ஞானத்தைத் தன்னுடைய லக்ஷியமாக வைத்துக்கொண்டு ஓயாது வினையாற்றுதலும், தன்னு டைய கடமைகளை நிறைவேற்றுவதும் கிரஹஸ்த ஆச்ரம தர்மமாகும். எக்கருமத்தைச் செய்து எத்த கைய அரும்பெரும் காரியங்களைச் சாதித்து விட்டா லும் அக்கர்ம பலன்களை யெல்லாம் தன்னுடையவை என்று சொந்தம் பாராட்டாது கடவுளுக்கே அர்ப்பண மாக ஒப்படைத்து விடுவது கிரஹஸ்த ஆச்ரம தர்ம மாகும்.

இவ்வுலகில் மனிதனால் சாதிக்கப் பெறுபவை களுள் மிகமிகக் கடினமானது யாது என்னும் கேள்வி எழலாம். மனிதன் பெருவினையாற்றி உயர்ந்த காரியங் களைச் சாதிக்கக் கடமைப்பட்டிருக்கின்றான். ஆனால் அத்தகைய வினைகளின் விளைவு தனக்குச் சொந்தமல்ல என்று விட்டுவிடுவது மிகக்கடினமானது. தன்னால்

இயன்ற முறைகளில் எல்லாம் குடும்பி ஒருவன் மற்ற வர்களுக்கு உதவிபுரிய வேண்டும். தான் புரிந்த உதவிக் குக் கைம்மாருக மற்ற மனிதன் நன்றி காட்டுகின்ருனு இல்லையா என்கின்ற எண்ணம் ஒருபொழுதும் இல் வாழ்பவன் உள்ளத்தில் உதிக்கலாகாது. நல்வினை களேயே ஓயாது ஆற்றி அவைகளை வெற்றிகரமாக நிறைவேற்றி ஆக வேண்டும். ஆயினும் அத்தகைய உழைப்பின் விளைவாக இல்லறத்தான் ஒருவனுக்குப் பேரும் புகழும் வருகின்றனவா அல்லது அவனுடைய செயலைக் கண்ணெடுத்துப் பார்த்துப் பாராட்டுபவர் யாருமில்லையா என்கின்ற எண்ணம் அவனிடத்து உதிக் கலாகாது. இங்ஙனம் கைம்மாறு கருதாது தன் கட மையை நிறைவேற்றுவதே இவ்வுலகில் மிகக் கடின மானதாகும். உலகத்தவர் புகழ்ந்து பாராட்டுகிற பொழுது ஒன்றுக்கும் உதவாத பயங்கொள்ளியும் துணிவு மிக நிறைந்தவன் ஆய்விடுகின்ருன். சமுதாயம் முழுதும் ஒன்றுகூடி ஆதரிப்பதையும் புகழ்ந்துபாராட்டு வதையும் செய்துவிடுங்கால் அறிவிலியாகிய கயவன் ஒருவனும் வீரச் செயல்களைச் செய்ய முன்வந்து விடு கின்ருன். ஆனல் அல்லும் பகலும் நல்லறத்தையே நிறைவேற்றிக் கொண்டிருப்பதற்கிடையில் உலகத்த வர் தனது சீரிய செயல்களைப் பாராட்டுகின்ருர்களா என்று கனவிலும் கருதாது தனது கடமையிலேயே கண்ணும் கருத்துமாய் இருப்பவனைக் காண்பது அரிதி லும் அரிது. உலகத்தவரது வெகுமதியையும் பாராட்டு தலையும் நினையாதிருப்பது தியாகங்களுள் மிக உயர்ந்த

தியாகமாகும். தன் வாழ்க்கைக்குத் தேவையாய் இருக்கின்ற செல்வத்தைச் சேகரிப்பது இல்வாழ்பவனுடைய பெருங்கடமையாகிறது. ஆனால் அவன் பொய்யேதும் பகராது பொருள் சம்பாதித்தாகவேண்டும். மற்றவர்களை ஏமாற்றுவதும் பொருந்தாது. பிறர் பொருளைக் களவாடுகின்ற பாங்கில் அவன் செல்வம் சேகரிக்கலாகாது. தான் உயிர் வாழ்ந்திருப்பது ஆண்டவனுக்கும் ஆருயிர்களுக்கும் பணிவிடை செய்வதற்கென்றே என்பதை இல்வாழ்பவன் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பது மறுக்க முடியாத பேருண்மை. தாய் தந்தையரை கடவுள் சொரூபமாகவும், கடவுளின் பிரதிநிதிகளாகவும் கிரஹஸ்தன் ஒருவன் யாண்டும் கருதிவரவேண்டும். பெற்றோரைத் திருப்தியடையப் பண்ணுதற்பொருட்டு இல்வாழ்பவன் யாண்டும் உழைத்துவர வேண்டும். தாய் ஒருத்தி தன் மைந்தனுடைய பணிவிடையை ஏற்று மகிழ்ச்சியடைந்திருப்பாளாகில், அங்ஙனமே தந்தையும் தன் மைந்தனுடைய பணிவிடைகளை ஏற்று மகிழ்ந்திருப்பானாகில் அத்தகைய மைந்தனிடத்துக் கடவுளே மகிழ்வடைந்தவர் ஆகின்றார். தாய்தந்தையர் முன்னிலையில் கடும் சொற்கள் சொல்லாத மைந்தனே மேலான மைந்தன் ஆகின்றான்.

தாய் தந்தையர் முன்னிலையில் மகன் ஒருவன் கேலி செய்வது போன்ற சொற்களைப் பேசலாகாது. பெற்றோர் முன்னிலையில் பதைபதைப்பே வடிவெடுத்த

வனாகப் புதல்வன் இருக்கலாகாது. தன் தாய் தந்தைய ருடைய முன்னிலையில் சினத்தையோ, சீற்றத்தையோ ஒருபொழுதும் வெளிப்படுத்தலாகாது. அவர்கள் முன்னிலையில் மைந்தன் ஒருவன் வீழ்ந்து வணங்க வேண்டும். அவர்கள் பார்வையில் இருக்கும்போது மகன் அமர்ந்து கொண்டிருப்பது பொருந்தாது. வணக் கத்துடன் நின்று கொண்டிருப்பதே நன் மகனுடைய கடமையாகிறது. அமர்ந்திருக்கும்படி பெற்றோர்கள் அவனுக்கு ஆணையிடுதற்கு முன்பு அவன் உட்காரலா காது.

அன்னபானத்தையும் உடைகளையும் வேண்டிய வளவு சேகரிப்பது இல்லறத்தானுடைய கடமை. தன் னுடைய தாய் தந்தையர்களுக்கு அவன் முதலில் உணவை அன்புடன் வழங்கவேண்டும். பின்பு தன் குழந்தைகளுக்கு அவன் முறையாக உணவூட்டவேண் டும். அடுத்தபடியாக ஏழை எளியவர்களுக்குத் தேவை யாய் இருக்கும் உணவை அவன் எடுத்து வழங்கவேண் டும். அதன் பின்பே தானும் தன் மனைவியும் உணவு அருந்தவேண்டும். இதற்கு மாறாக நடந்துகொள்ளும் குடும்பி ஒருவன் பாபம் செய்பவன் ஆகிறான். தனது உடல் வாழ்க்கைக்கு முதல் காரணமாய் இருப்பவர்கள் தாயும் தந்தையும் ஆதலால் அவர்களுக்கு நலன் செய் தல் பொருட்டு ஆயிரக்கணக்கான துன்பங்களில் துய்த் துக்கிடக்கவும் குடும்பி ஒருவன் ஆயத்தமாய் இருக்க வேண்டும்.

இல்லறத்தான் ஒருவன் தன் மனைவிக்குச் செய்யும் கடமையும் மிகப் பெரியதாகும். இல்லாளைத் திட்டுவதும் திரஸ்கரிப்பதும் ஒவ்வாது. தன்னை ஈன்றெடுத்த தாய்க்கு ஒப்பாக தன்னை மணந்து கொண்ட மனைவியை இல்வாழ்பவன் யாண்டும் கருதவேண்டும். தனக்கு மாளாத துன்பங்கள் பல வந்து வாய்த்திருக்கலாம், மீளவொண்ணுத இடைஞ்சல்கள் பல நேர்ந்திருக்கலாம்; அத்தகைய நெருக்கடிகளுக்கிடையிலும் தன் மனைவியினிடத்து சினந்துகொள்ளுதல் இல்வாழ்பவன் ஒருவனுக்குப் பொருந்தாது.

தன் வாழ்க்கைத் துணை ஒருத்தி நீங்கலாக ஏனைய மாதர்களனைவரும் குடும்பி ஒருவனுக்கு மாதாவுக்கு ஒப்பாகின்றார்கள். பிறன் மனைவியை வெறும் மனதால் விழைந்தாலும் அம்மனிதன் கீழான காழ்நரகில் வீழ்பவன் ஆகின்றான்.

மாதர் முன்னிலையில் மிக மரியாதையாக நடந்து கொள்ளக் குடும்பஸ்தன் ஒருவன் கடமைப்பட்டிருக்கின்றான். பொருந்தாத புன்மொழிகளை அவர்கள் முன்னிலையில் அவன் பேசலாகாது. தன்னையே புகழ்ந்து பேசுகின்ற பேச்சும் மாதர் முன்னிலையில் அவனுடைய வாயினின்று வரலாகாது. நான் இதைச் சாதித்திருக்கிறேன், அதைச் சாதிக்கிறேன் என்கின்ற பேச்சுக்களெல்லாம் பொருந்தாத பேச்சுக்களாகும்.

இல்வாழ்பவன் ஒருவன் செல்வத்தைக்கொண்டும், ஆடைகளைக் கொண்டும், அன்பைக் கொண்டும், அமிர்தம் போன்ற இன்சொற்களைக் கொண்டும் தன்

மனைவியை மகிழ்வுறச் செய்தல் வேண்டும். மனைவிக்கு மனக்கிலேசம் உண்டாகின்ற செயல் எதையும் அவன் புரியலாகாது. கற்புடைய மனைவி ஒருத்தியின் முழு மனதோடு கூடிய அன்பைப் பெறவல்ல கணவனே வாழ்க்கைப் பயனை இனிது அடையப் பெற்றவன் ஆகின்றான். அத்தகையவனுக்கே அறத்தாறு நன்கு அமையப்பெற்றது ஆகிறது. மானுடப் பிறவியில் பெறுதற்குரிய நலன் அனைத்தையும் அவனே அடையப் பெற்றவன் ஆகிறான்.

தன் மகவுகட்கு இல்லறத்தான் ஒருவன் செய்யக் கிடக்கும் கடமைகள் பல உள. அவையாவன :— வயது நான்கு பூர்த்தியாகும் வரையில் சிசு ஒன்றை அன்போடு ஆதரித்து வளர்த்து வரவேண்டும். பிறகு வயது பதினாறு பூர்த்தியாகும் வரையில் அவ் இளைஞனுக்கு நல்லமுறையில் கல்வியை வழங்குதல் வேண்டும். அவனுக்கு ஆண்டுகள் இருபது பூர்த்தியாகும் பொழுது ஏதேனும் ஒரு தொழில் புரியத் தகுதியுடையவனாக அவன் பயிற்சி பெறுதல் அவசியமாகிறது. அதன் பிறகு தந்தை ஆனவன் மைந்தனை தனக்குச் சமமானவனாக அன்புடன் கருதுதல் வேண்டும். புதல்வி ஒருத்தியை இதே பாங்கில் ஆதரித்துவர பிதா கடமைப் பட்டிருக்கிறான். பெண் ஒருத்திக்குப் பொருந்திய கல்வியை முறையான பாங்கில் வழங்குதல் வேண்டும். பின்பு அவளைத் தக்கான் ஒருவனுக்கு மணம் புரிந்து கொடுத்தல் வேண்டும். பெண் ஒருத்திக்கு உரிய நகைகள், செல்வம் ஆகியவைகளை ஸ்ரீதனமாக வழங்கத் தந்தை கடமைப்பட்டிருக்கிறான்.

இல்லறத்தான் ஒருவன் தன் உடன் பிறந்த சகோதரர்களுக்கும், சகோதரிகளுக்கும் ஆற்ற வேண்டிய கடமைகள் சில உள. அதற்கு அடுத்தபடியாக அந்த சகோதரர்கள், சகோதரிகளுடைய சந்ததிகளுக்கும் சில கடமைகளை நிறைவேற்றி வைக்கவேண்டும். பொருளாதாரத்துறையில் அவர்கள் பின்னணியில் இருப்பார்களானால் அவர்களுக்கேற்ற பொருளுதவியைச் செய்வதும் இல்வாழ்பவனுடைய கடமையாகிறது. அதற்கப்பாலும் அவனுடைய பொறுப்புக்கள் சில இருக்கின்றன. தனக்கு உற்றார் உறவினர்களாய் இருப்பவர்களுக்கும், தனது நண்பர்களுக்கும், தனது வேலையாட்களுக்கும் பொருந்திய பாங்குகளில் பொருளுதவி செய்ய வேண்டும். இதற்கு மேலும் கிரஹஸ்தன் ஒருவனுடைய கடமை விரிவடைந்துகொண்டு போகிறது. தான் வசிக்கும் கிராமத்திலுள்ள மற்ற மக்களுக்கும் ஏழைகளுக்கும் தக்க விதத்தில் அவன் துணைபுரிதல் வேண்டும். இதைத் தவிர அம்மனிதனுடைய உதவியை நாடி வேறு சில மனிதர்களும் அவனிடம் வருவார்கள். இயலுகின்ற அளவுக்கும் பொருந்துகின்ற அளவுக்கும் அத்தகையவர்களுக்கும் உதவி புரிய அவன் கடமைப்பட்டிருக்கிறான். போதியவளவு தன்னிடம் செல்வம் இருக்கின்றபொழுது இல்வாழ்பவன் ஒருவன் உற்றார் உறவினருக்கும், ஏழை எளியவர்களுக்கும், மற்றவர்களுக்கும் உதவி புரிய மறுத்துவிடுவானாகில் அவன் மானுடனாகக் கருதப்படமாட்டான். அத்தகையவன் விலங்கு இனத்தைச் சேர்ந்தவன் ஆய்விடுவான்.

உணவு உண்பதில் மிகைபட்ட பற்றுதல் வைத்திருப்பது பொருந்தாது. உடைகளைப் பெருக்குவதும் விலையுயர்ந்தவைகளாக்குவதும், அவைகளிடத்து அலாதியான ஆசை வைப்பதும் ஒண்ணாது. உடலைப் பேணுதலிலும், அதை அலங்கரிப்பதிலும், அதனிடத்து அலாதியான அபிமானம் கொள்ளுதலிலும் கருத்தைச் செலுத்தலாகாது. முடியலங்காரத்தில் மிகைபட மனதைச் செலுத்துதலும் பொருந்தாது. இத்தகைய பற்றுதல்கள் மனிதனுடைய மனதைக் கீழ் நிலைக்குக் கொண்டு வந்து விடுகின்றன. இல்வாழ்பவன் ஒருவன் மனத்தூய்மையே வடிவெடுத்தவனாய் இருத்தல் வேண்டும். உடலைப் புனிதமான நிலையில் வைத்திருப்பதும் அவனுடைய கடமையாகும். சோம்பலுக்கு ஒருநாளும் இடம் கொடுத்து விடலாகாது. எப்பொழுதும் சுறுசுறுப்பும், வினையாற்றுதலில் விருப்பமும் வடிவெடுத்தவனாக இல்வாழ்பவன் இருக்கவேண்டும். தனக்கு வந்து அமையும் கடமை எதுவாயினும் அதைத் திறம்படச் செய்யத் தன்னைத் தகுதியுடையவனாகச் செய்து கொள்ளுதல் வேண்டும்.

உலக வாழ்க்கையில் எத்தகைய மனிதனுக்கும் எதிரிகள் என்பார் சிலர் அமைந்து விடுவார்கள். பகைவர்கள் இல்லாத பூவுலக வாழ்க்கை இல்வாழ்பவர் யாருக்கும் அமைவதில்லை. எதிரிகள் முன்னிலையில் இல்வாழ்பவன் ஒருவன் ஒரு வீரனாக நடந்துகொள்ள வேண்டும். பகைவர்களை எதிர்த்து அவர்களை அடக்கியாள இல்வாழ்பவன் கடமைப்பட்டிருக்கிறான்.

விரோதிகளிடத்திருந்து தனக்கு விபத்து வந்துவிட்டதே என்று ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு விம்மி அழுவது கிரஹஸ்தன் ஒருவனுக்குப் பொருந்தாது. எதிர்த்து வருகின்றவர்களுக்கு ஹிம்ஸை செய்யலாகாது என்ற பொருளற்ற பேச்சை அவன் பேசலாகாது. சத்துருக்கள் முன்னிலையில் பராக்கிரமம் வாய்ந்தவனுகத் தன்னைக் காட்டிக்கொள்ளாவிட்டால் கிரஹஸ்தன் ஒருவன் முறையாகத் தன் தர்மத்தைக் கடைப்பிடித்தவன் ஆகான். எதிரிகளின் முன்னிலையிலே அவன் சிம்ம ஏறு போன்றும், உற்ருர் உறவினர் முன்னிலையில் சாந்தமே வடிவெடுத்துள்ள ஓர் ஆட்டுக் குட்டி போன்றும் நடந்து கொள்பவனே இல்வாழ்க்கைக்குத் தகுதியுடையவனுகின்ருன்.

உலகில் எப்பொழுதுமே போக்கிரிகளும், பொருந்தாத ஒழுக்கமுடையவர்களும் இருந்து வருகிருர்கள். அத்தகையவர்களுக்கு கிரஹஸ்தன் ஒருவன் எந்த விதத்திலும் மரியாதை காட்டலாகாது. கெட்டவர்களைக் கண்டிக்கின்ற பாங்கிலேயே அவன் நடந்து கொள்ளுதல் வேண்டும். அதற்கு மாருக துஷ்டர்களுக்கு அவன் மரியாதை காட்டுவானுகில் அது துஷ்டத்தனத்தை ஆதரிப்பதற்கு ஒப்பாகும். தீமையையும் தீயவர்களையும் யாண்டும் எதிர்த்திருப்பதே இல்வாழ்பவனுடைய அறமாகும். இனி, உலகில் வணக்கத்துக்குரிய நன்மக்களும் யாண்டும் இருந்து வருகின்றனர். அத்தகைய நல்லார்க்கு மரியாதை காட்ட இல்வாழ்பவன் தவறிவிடுவானுகில் அது பெருங்குற்ற

மாகும். நல்லாரோடு நல்ல பாங்கில் உறவாடுவது முற்றிலும் அவசியமானது. ஆனால் நட்பை உண்டு பண்ணுவதற்கு ஆத்திரத்தோடு ஒருவன் முந்தலாகாது. எப்படியாவது பலபேரோடு நட்புக் கொண்டாடவேண்டும் என்கின்ற ஆர்வம் உதவாது. அடக்க ஒடுக்கத்துடன் இருந்து நேர்மையான பாங்கில் இயல்பாக அமைகின்ற நட்பையே வளர்த்துவர வேண்டும். யாருடன் தான் நட்புக் கொண்டாட விரும்புகின்றானோ அம்மனிதனுடைய செயல்கள் எத்தகையவைகள் என்று முதலில் அமைதியாக ஆராய்ந்து பார்க்கவேண்டும். தான் உறவாட விரும்பும் மனிதன் மற்ற மனிதர்களோடு எங்ஙனம் உறவாடுகின்றான் அல்லது நடந்து கொள்கின்றான் என்று கூர்ந்து கவனித்துப் பார்க்க வேண்டும். அம்மனிதனுடைய செயல்களெல்லாம் நெறிக்கு ஏற்புடையவைகளா, என்று ஆழ்ந்து எண்ணிப் பார்க்கவேண்டும். ஒரு மனிதனை முற்றிலும் நல்லான் என்று ஓர்ந்து ஆராய்ந்து அறிந்துகொண்ட பின்பே அவனோடு உறவாட வேண்டும்.

இல்வாழ்பவன் ஒருவனுக்கு நாவடக்கம் முற்றிலும் இன்றியமையாதது. எதைப் பேசவேண்டும், எங்கு பேசவேண்டும், எப்பொழுது பேசவேண்டும் என்னும் நல்லறிவு அவனிடத்து நிலைபெற்றிருக்கவேண்டும். கால தேச வர்த்தமானத்துக்கு ஒத்தபடி உரையாடுதல் அவசியமாகிறது. மூன்று விஷயங்களைப்பற்றி அவன் பொதுவாகப் பேசலாகாது. தன்னுடைய கீர்த்தியைப்பற்றி யாண்டும் பேசாதிருப்பதே பொருத்

தமானது. தன்னுடைய பேரையும் புகழையும் பற்றியோ அல்லது தனது பராக்கிரமத்தைப் பற்றியோ அவன் யாருக்கும் எடுத்துப் புகட்டலாகாது. தனக்குச் செல்வம் எவ்வளவு இருக்கிறது என்பதைப்பற்றியும் ஏனையவரிடம் பேசிக்கொண்டிருக்கலாகாது. உடையது விளம்பேல் என்பது கோட்பாடு. ஆனால் சில சந்தர்ப்பங்களில் தனது நண்பர்களிடம் ஈண்டு இயம்பியுள்ள விஷயங்களில் சிலவற்றை எடுத்து உரைப்பது குற்றமாகாது. இன்னும் சில விஷயங்களை யாரிடத்தும் எடுத்து இயம்பலாகாது, இரகசியமாகவே வைத்திருக்கவேண்டும் என்று நியமனம் செய்து யாராவது ஒருவர் தன்னிடம் சொல்லியவைகளை முற்றிலும் இரகசியமாகவே பாதுகாத்து வைத்திருப்பது குடும்பி ஒருவனுடைய கடமையாகும்.

தான் ஏழையென்றோ அல்லது பணக்காரனென்றோ ஒரு மனிதன் மற்றவர்களிடம் பேசலாகாது. தன்னிடத்து இன்னின்ன பொருள்கள் இருக்கின்றனவென்று அப்பொருள்களைச் சிலாகித்துப் பேசுவதும் பொருந்தாது. தன்னுடைய அபிப்பிராயங்களைத் தாராளமாகப்பிறர்க்கெடுத்துவழங்குதல் முறையன்று. வேண்டுமென்று விரும்பிக் கேட்பவருக்கு ஒருவன் தன் அபிப்பிராயத்தை அடக்கமாகவும் அமைதியாகவும் வெளியிடலாம். ஆனால் அவசியம் ஏற்படாத இடங்களிலெல்லாம் தன் கருத்துக்களைத் தங்குதடையின்றி வெளியிட்டுக்கொண்டிருப்பது பொருந்தாது. இங்ஙனம் அடக்கம் பழகியிருப்பது ஒருவனுடைய

அறச்செயல் ஆகின்றது. இப்படி ஒழுகுவது வெறும் லௌகிகத்துக்குரிய சாமர்த்தியம் அன்று. நல்வாழ்வுக்குரிய ஒழுக்கங்களாக இவை யாவும் வந்தமைகின்றன. இத்தகைய அறநெறிகளை ஒருவன் முறையாகக் கடைப்பிடிக்காவிடில் அவன் ஒழுக்கத்தினின்று தவறியவன் ஆவான்.

ஒரு மரத்தின் அடிப்பாகம் அதற்கு ஆதரவாயிருப்பதுபோன்று சமுதாயம் முழுதுக்கும் ஆதரவு அல்லது பற்றுக்கோடாயிருப்பவன் கிரஹஸ்தன். சமுதாயத்துக்குத் தேவையாய் இருக்கிற பொருள்களைச் சேகரிப்பவர்களுள் மிக முக்கியமானவன் கிரஹஸ்தன். அங்கவீனர்களும், பலவீனர்களும், குழந்தைகளும், பெண்பாலரில் பலரும் சமுதாயத்துக்குத் தேவையாய் இருக்கின்ற செயல்களை ஆற்றத் தகுதியற்றவர்களாய் இருக்கின்றார்கள். இவர்கள் அனைவரையும் தாங்குகின்ற நிலையில் கிரஹஸ்தன் இருக்கின்றான். மேலும்,

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை

என்பது மறுக்க முடியாத மறைமொழியாகும். ஆகவே குடும்பஸ்தன் ஒருவன் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் பல இருக்கின்றன. கடமைகளை முறையாக நிறைவேற்றுதற்கு ஏற்ற ஆற்றலும் ஊக்கமும் படைத்தவனாக இல்வாழ்பவன் இருந்தாகவேண்டும். தனக்குப் பொருந்தாத கடமைகள் பல தலைச்சுமைகளாக தன் மீது சுமத்தப்பட்டிருக்கின்றன என்று அவன் எண்ணலாகாது. குடித்தனமோ துரைத்தனமோ என்பது

பழமொழி. ஒரு சிறிய முறையில் அரசாங்கத்தை நடத்துவதற்கு ஒப்பாகிறது இல்வாழ்வு. இல்வாழ்பவன் எதைச் செய்கின்றான், எதைப் பேசுகின்றான் என்பனவெல்லாம் வாழ்க்கையைப் பண்படுத்துதற்கான முக்கியமான கோட்பாடுகள் ஆகின்றன. தன்னுடைய தகுதிக்கு ஒவ்வாத அற்பச் செயல் ஏதேனும் ஒன்றை இல்வாழ்பவன் செய்துவிட்டால் அதை அவன் மற்றவர்களுக்கு விளம்பரம் செய்யலாகாது. பின்பு சமுதாய நடைமுறைக்கு ஒவ்வாத குற்றம் ஒன்றையே இல்வாழ்பவன் அறிந்தோ அறியாமலோ செய்துவிட நேரிடலாம். அத்தகைய குற்றத்தையும் மற்றவர்களுக்கெல்லாம் தெரியும்படி வெளியிடுவது ஒவ்வாது. புதிய திட்டம் ஏதாவது ஒன்றில் இல்வாழ்வான் ஈடுபட்டிருக்கலாம். அத்தகைய திட்டத்தைத் துவக்கியான பிறகு அதில் தான் தோல்வியடையப் போகிறான் என்பதை அவன் அறிய வருகிறான். தான் துவக்கிய திட்டம் தோல்வியடையப் போகிறது என்று அதைப்பற்றி அவன் பேசிக்கொண்டிருக்கலாகாது. அந்த நெருக்கடியிலும் அமைதியாகவும் முறையாகவும் தான் தொடுத்த கர்மத்தை அவன் செய்துகொண்டே இருக்க வேண்டும். தன் கடமையை முறையாகச் செய்வதற்குப் பதிலாக அது பயன்படாது போவதைப் பற்றி அவன் பேசிக்கொண்டிருப்பானாகில் அவன் மேலும் மேலும் பலவீனன் ஆய்விடுவான்; எடுத்துக்கொண்ட காரியத்தை வெற்றிகரமாக நிறைவேற்றும் வல்லமையை அவன் இழந்துவிடுவான். மற்றவர்களுடைய

மனதில் குழப்பத்தை உண்டுபண்ணுவதும் பொருந்தாது. எடுத்துக்கொண்ட காரியத்தை முறையாகவும் ஒழுங்காகவும் செய்துவருவதன் மூலம் இல்வாழ்பவன் ஒருவன் மன உறுதி பெறுகின்றான். அப்படி மனத்திட்பம் அடைவது ஆத்ம சாதனம் எனப்படுகிறது. வாழ்க்கையில் அவனுக்கு என்னென்ன கடமைகள் அமைந்திருக்கின்றனவோ அவைகளையெல்லாம் திறம்பட ஆற்றுவது அவனுடைய ஆத்ம சாதனமாகிறது. பெரும் முயற்சி எடுத்துக்கொண்டு குடும்பஸ்தன் ஒருவன் ஞானத்தையும் செல்வத்தையும் சேகரிக்கவேண்டும். வெறும் செல்வத்தைச் சேகரிப்பதிலேயே அவன் கண்ணும் கருத்துமாய் இருந்தால் போதாது; அல்லது தனியாக ஞானத்தைத் தேடுவதிலேயே அவன் காலத்தைக் கழித்து விடுவதும் பொருந்தாது. தன்னுடைய சொந்த வாழ்வைச் செப்பனிடுதற்கு அவனுக்கு ஞானம் பயன்படுகிறது; தன்னுடைய வாழ்வு மற்றவர்களுக்குப் பயன்படுவதற்குச் செல்வம் உதவுகிறது. ஆக, இவ்விரண்டையும் தேடிச் சம்பாதிக்க அவன் கடமைப்பட்டிருக்கிறான். ஞானத்தையும் செல்வத்தையும் சேகரிக்காத குடும்பி ஒருவன் மானுடன் என மதிக்கப்படமாட்டான். செல்வத்தைத் திரட்டி எடுக்க முயற்சி பண்ணவிட்டால் நெறிவழுவியவன் என அவன் கருதப்படுவான். சோம்பலுக்கு அவன் இடம் கொடுத்து விடலாகாது. செயலற்ற சோம்பேறி போன்று அவன் வாழ்க்கையை நடாத்தலாகாது. சோம்பலுக்கு அடிமைப்பட்டிருக்கின்ற குடும்பி ஒரு

வன் நெறிவழுவியவன் எனக் கருதப்படுவான். தன்னைச் சார்ந்திருக்கும் பலபேரை ஆதரிக்கின்றவளவுக்கே அவன் தர்மத்தை நன்கு அனுஷ்டித்தவன் ஆகின்றான். நல்லான் ஒருவனுக்குச் செல்வம் மிகச் சேருவது நடுவூரி லிருக்கும் மரம் பழுப்பதற்கு ஒப்பாகும்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்; செல்வம்
நயனுடை யான்கட் படின்.

க்ஷேத்திரங்கள் பலவற்றில் பெரும் கோயில்களையும், அன்ன சத்திரங்களையும், தர்மசாலைகளையும் காண்கின்றோம். இவையெல்லாம் ஏற்படுவதற்குக் காரணம் யார் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். நூற்றுக் கணக்கான நன்மக்கள் பெரும் பாடுபட்டு பணத்தைச் சம்பாதித்தார்கள். சம்பாதித்த செல்வத்தை நல்ல காரியங்களில் செலவிட அவர்கள் தீர்மானித்தார்கள். அத்தீர்மானத்தின் விளைவாக பெரிய ஆலயங்களும் ஸ்தாபனங்களும் உரு எடுக்கலாயின. மக்களுக்கிடையில் நாகரிகம் ஓங்குதற்கு செல்வம் பெரிதும் பயன்படுகிறது. ஆதலால் குடும்பி ஒருவன் சிரமப்பட்டு நல்ல வழியில் தனத்தைச் சேகரித்தே ஆகவேண்டும்.

பணம் சம்பாதிப்பதை பொருந்தாத தீய செயல் என்று எண்ணலாகாது. பாடுபட்டுப்பணத்தைத் தேடி அதைப் புதைத்துவைப்பது அல்லது அது அடைபட்டுக் கிடக்கும்படி செய்வது அல்லது அதை யாருக்கும் வழங்காது காத்து வைப்பது கீழான செயல் ஆகும். தேடிய செல்வத்தை நல்ல பாங்கில் செலவிடுகின்றபொழுது அது பாராட்டத்தக்க அறச்செயல்

ஆகிறது. இத்தகைய சீரிய செயல்களையெல்லாம் குடும்பி ஒருவன் முறையாகச் செய்து வருவதால் மானுட வாழ்க்கைக்கே அவன் நடுநாயகமாகிறான். சமுதாய வாழ்க்கைக்கு ஆதரவு அளிப்பவனும் அவனே. ' இல்லறம் அல்லது நல்லறம் அன்று ' என்னும் கோட்பாடு மேற்போக்காக எழுந்ததன்று. நல்வாழ்வைப் பற்றிய அடிப்படையான உண்மை அதுவேயாம். கடவுள் வழிபாடு கணக்கற்ற வடிவங்களை எடுக்க வல்லது. செல்வத்தை முறையாகச் சம்பாதித்து அதை நல்ல வழியில் முறையாகச் செலவிடுவதும் ஒருவிதத்தில் கடவுள் வழிபாடு ஆகிறது. மக்களுள் ஒருவன் துறவியாகின்றான்; மற்றொருவன் இல்லறத்தான் ஆகின்றான். துறவி ஒருவன் மலைக்குகையிலோ அல்லது வேறு ஏதேனும் ஒரு ஒடுங்கிய இடத்திலோ இருந்து கொண்டு இடையறாது கடவுளைப்பற்றிச் சிந்திக்கிறான். அதற்கு நேர்மாறாக குடும்பஸ்தன் ஒருவன் நல்ல வழியில் பணத்தைச் சம்பாதிக்க அரும்பாடுபடுகின்றான். அப்படிச் சம்பாதித்த செல்வத்தை நலம் தருகின்ற மேலான காரியங்களிலேயே அவன் செலவிடுகின்றான். குடும்பி ஒருவன் எடுத்துக்கொள்கின்ற இத்தகைய முயற்சியும், துறவி ஒருவன் எடுத்துக்கொள்கின்ற அவனுக்குரிய முயற்சியும் மேலானவைகளேயாம். ஏனென்றால் முக்தி அல்லது வீடுபேறு அடைதற்கு இவ்விரண்டு விதமான முயற்சிகளும் மனிதனுக்கு நன்கு உதவுகின்றன. உயிர்கள் அனைத்தும் உண்மையில் கடவுளைச் சார்ந்திருக்கின்றன. தங்களுடைய

உடைமைகள் என்று மக்களால் உரிமை பாராட்டப் படுபவைகள் எல்லாம் உண்மையில் கடவுளுக்கு உரிய வைகள் ஆகின்றன. எவன் ஒருவன் தான் தனது என்பனவற்றை தெய்வத்துக்குரியவைகள் ஆக்கிவிடு கின்றனோ அவன் முக்தி அல்லது வீடுபேறு அடையத் தகுதியுடையவனாகின்றான். யான் எனது என்பன வற்றைத் துறவி ஒருவன் ஒரு போக்கில் தெய்வத்துக்கு உரியவைகள் ஆக்கிவிடுகின்றான். யான் எனது என்பன வற்றைக் குடும்பி ஒருவன் இன்னொரு போக்கில் கடவு ளுக்கு உரியவைகள் ஆக்கிவிடுகின்றான். அனைத்தையும் அன்போடு கடவுளுக்கு ஒப்படைக்கும் செயலை இரு தரத்தாரும் செய்கின்றனர். எடுத்துக்கொள்ளும் உபா யங்களுள் துறவியினுடையது ஒருவிதமானது; இல் வாழ்பவனுடையது மற்றொரு விதமானது. ஆனால் இருவருக்கும் விளையும் பயன் ஒன்றேயாம்.

இல்வாழ்வான் ஒருவன் நல்ல பேரையும் புகழை யும் பெறவேண்டும். பேரும் புகழும் பணம் கொடுத்து விலைக்கு வாங்கப்படுபவைகள் அல்ல. நல்வாழ்வு வாழ்பவனுக்குப் பேரும் புகழும் தாமாக வந்தமைகின் றன. பலரால் போற்றப்படுபவனாக இல்வாழ்பவன் ஒருவன் இருக்கிறானென்றால் அவன் நல்வாழ்வு வாழ்ந்து வருகிறான் எனப் பொருள்படுகிறது. சூதாட் டம் எதிலும் குடும்பஸ்தன் கலந்து கொள்ளலாகாது. முறை தவறிப் பணத்தைச் சம்பாதிக்க விரும்புகின்ற வர்களே சூதாட்டத்தில் ஆசைகொள்கின்றனர். அதில் ஈடுபடுகின்றவன் பெரும் கேட்டுக்கு ஆளாவான்.

கெட்டவர்களுடைய சஹவாசத்தையும் குடும்பி ஒரு வன் அறவே ஒதுக்கி வைத்துவிடவேண்டும். அவன் யாருடன் பழகுகின்ருனே அவர்களுடைய பாங்கைத் தானே பெற்றுவிடுகின்ருன். கெட்டவர்களோடு பழகு வதன் மூலம் தானே கேடுடையவன் ஆய்விடுவான். எக்காரணத்தை முன்னிட்டும் குடும்பி ஒருவன் பொய் பேசலாகாது. சத்திய விரதத்தில் அவன் உறுதியாக நிலைபெற்றிருத்தல் வேண்டும். மற்றவர்களைத் துன் புறுத்துகின்ற செயல் எதையும் குடும்பஸ்தன் செய்ய லாகாது. பிறரைத் துன்புறுத்துகின்றவன் பின்பு தானே துன்பத்தில் துய்த்துக் கிடப்பதற்கு விதை விதைப்பவன் ஆகின்ருன்.

ஏதேனும் ஒரு காரியத்தில் இறங்குதற்கு முன்பு அதைச் செய்து சாதிக்கின்ற ஆற்றல் தன்னிடத்திருக் கிறதா என்று குடும்பி ஒருவன் தன்னையே நன்கு அலசி ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரு சிலர் தங்களால் சாதிக்க முடியாத பெரிய செயல்களில் இறங்கிவிடு கின்றனர். பின்பு அவைகளை நிறைவேற்ற இயலாத நெருக்கடி ஏற்படுகின்றபொழுது பிறரை ஏமாற்று தற்கு முற்படுகின்றனர். அப்படிச் செய்வதால் தங் களுடைய வாழ்க்கையையே அவர்கள் அடியோடு கெடுத்துவிடுகின்றனர். வேறு சில முயற்சிகளுக்குப் பொருத்தமான காலம் என்னும் நியதி ஒன்று இருக் கிறது. பொருந்தாத ஒரு காலத்தில் துவங்கப்பெறு கின்ற நல்ல செயல் ஒன்று முற்றிலும் தோல்வி யடைந்து விடலாம். அதே நல்ல செயலைத் தக்க

தருணத்தில் தொடுத்தால் மிக வெற்றிகரமாக அது நிறைவேறிவிடும். ஆதலால் எச்செயலை எத்தருணத்தில் துவக்குவது, அதை எங்ஙனம் கொண்டு செலுத்துவது என்பதை யெல்லாம் பற்றி குடும்பி ஒருவன் முற்றிலும் உணர்ந்து இருத்தல் வேண்டும்.

உண்மையையே பேசுவது இல்வாழ்பவன் ஒருவன் எடுத்துக்கொள்ளும் விரதங்களில் மிக முக்கியமானது ஆகும். உண்மையைப் பேசும் பொழுதும் அவன் அதை அமைதியாகப் பேசவேண்டும். உண்மையை வெளியிடுதற்கு அவன் கையாளும் சொற்கள் இன்சொற்களாய் இருக்கவேண்டும். உலகம் ஆமோதிக்கும் நல்ல சொற்களைக் கொண்டே உண்மையை வெளியிடுதல் அவசியமாகிறது.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்

என்பது மறைமொழி. எவர்க்கேனும் கேடுவிளைவிக்கின்ற சொல் ஒன்று இருக்குமாயின் அது சத்தியம் எனக் கருதப்படமாட்டாது. பிறர்க்குத் தீங்கு விளைவிக்கின்ற சொல்லையும் செய்தியையும் வெளியிடாது மறைத்து வைப்பதே முறையாகும். இனிப் பிறருடைய அலுவல்களில் அனுவசியமாய்த் தலையிடுதல் ஒண்ணாது. மற்றவர்களுடைய அலுவல்களைப்பற்றி வீணாய்ப் பேசிக்கொண்டிருப்பது வாய்மையாகாது. புறங்கூறுதல், பிறரிடம் குற்றம் காணுதல் இவை போன்ற செயல்கள் நன்னெறியில் செல்லுபவனுக்கு

உதவா. பயன்படாச் சொற்களைப் பேசாதிருந்து பழக வேண்டும்.

பழங்காலந்தொட்டு இந்நாள் பரியந்தம் அறச் செயல்கள் என அங்கீகரிக்கப்பட்டுள்ள சீரிய செயல்கள் சில இருக்கின்றன. பிறர்க்குப் பயன்படுகின்றபடி நீர்நிலைகளை உண்டுபண்ணுதல், பாதையோரங்களில் மரங்களை வைத்துப் பயிர் பண்ணுதல், வழிப்போக்கர்கள் தங்குதற்காக சத்திரம், சாவடிகளைக் கட்டி வைப்பது ஆகியவைகள் அறச்செயல்கள் என அங்கீகரிக்கப்பட்டுள்ளன. மக்களுக்குப் பயன்படுவது போன்றே கால்நடைகளுக்குப் பயன்படுகின்ற நீர்நிலைகள், கொட்டகைகள் முதலியன அமைத்து வைப்பதும் அறச் செயல்கள் ஆகின்றன. ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போவதற்குச் சாலைகள் அமைப்பதும், பாலங்கள் கட்டுவிப்பதும் புண்ணியச் செயல்களாகின்றன. கல்விச் சாலைகள் ஸ்தாபிப்பதும், மருத்துவச் சாலைகள் ஏற்படுத்துவதும் பாராட்டுதற்குரிய புண்ணியச் செயல்களாம். இத்தகைய சீரிய முயற்சிகளைத் தன்னலம் கருதாது குடும்பி ஒருவன் செய்துவரக் கடமைப்பட்டிருக்கிறான். யோகி ஒருவன் அடைகின்ற ஆத்மபரிபாகத்தை இச்செயல்கள் வாயிலாகக் குடும்பியும் அடைகிறான்.

குடும்பி ஒருவன் செயலற்றுச் சும்மா இருக்கலாகாது; தனக்கு ஏற்பட்டுள்ள கடமையை அவன் ஊக்கத்துடன் செய்துகொண்டே இருக்கவேண்டும்—இப்படிப் புகட்டுவது கர்மயோகத்தினுடைய ஒரு

பகுதியாகின்றது. அதே கர்மயோகத்தில் மற்றொரு பகுதி இருக்கிறது. இல்வாழ்பவன் ஒருவன் தன்னுடைய தேசத்துக்காகவோ அல்லது மதத்துக்காகவோ போர்புரிந்து போர்க்களத்தில் மடிவானுகில் அவன் பிறவியின் பெரும்பயனை அடைகின்ருன். யோகி ஒருவன் பரம்பொருளைக் குறித்துத் தியானம் செய்து பரம்பொருளில் லயமாய்விடுகிருன் என்பது கோட்பாடு. உயர்ந்த லக்ஷியத்துக்காகப் போர்க்களத்தில் மடிகின்றவனும் அதே நிலையை அடையப் பெறுகிருன். இக் கோட்பாட்டினின்று நமக்குப் பேருண்மை ஒன்று விளங்குகிறது. ஒரு மனிதனுக்குக் கடமையாக எது அமைகின்றதோ அது மற்றொரு மனிதனுக்குக் கடமையாக இருக்கவேண்டும் என்பது அவசியமல்ல. கடமைகள் வெவ்வேறு வகைப்பட்டவைகளாக இருக்கலாம். எனினும் அவைகளுள் ஒரு கடமை உயர்ந்தது என்றும் மற்றொன்று தாழ்ந்தது என்றும் நியமனம் உண்டாகவில்லை. ஒவ்வொரு கடமைக்கும் ஏற்ற ஸ்தானம் ஒன்று இருக்கிறது. நாம் எத்தகைய சூழ்நிலையில் வைக்கப்பட்டிருக்கின்ரோமோ அதற்கேற்ற கடமையைச் செய்யவேண்டும்.

இவை யாவையும் தொகுத்து ஆராய்மிடத்து உயர்ந்தகோட்பாடு ஒன்று வெளியாகிறது. மனிதன் எந்த நிலையில் வைக்கப்பட்டவனுக இருந்தாலும் சரி, அல்லது ஏது கடமையைச் செய்பவனுக இருந்தாலும் சரி அவனிடத்து மனத்தளர்வு ஒன்று மட்டும் உண்டாகலாகாது. எக்காரணத்தைக் கொண்டாவது மனி

தன் வலிவற்றவன் ஆய்விடலாகாது. தளர்வுற்ற நிலே அறவே நிராகரிக்கப்படுகிறது. மனிதன் யாண்டும் உறுதிபடைத்தவனுக இருக்கவேண்டும் என்னும் போதனே நமது தத்துவ தர்சனங்களில் முன்னணி வகுத்து நிற்கிறது. நாம் பெற்றுள்ள சமயத்தில் இந்த ஒரு கோட்பாடு மற்றவைகளுக்கெல்லாம் மேலாக வைக்கப்பட்டிருக்கிறது. நாம் ஆற்றுகின்ற விளேகள் அனேத்திலும் உறுதிப்பாடும், திறனும் திகழ்ந்துகொண் டிருக்கவேண்டும் என்பதே நடுநாயகமான கோட்பா டாகும். வேதங்களே யெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் ஒரு கோட்பாடு திரும்பத் திரும்பப் பகரப்பெறுவது வெளியாகும். 'அபயம்' எதற்கும் அஞ்சாமை மனித னுடைய உள்ளத்தில் சர்வகாலமும் குடிகொண்டிருக்க வேண்டும். அச்சம் வலிவின்மைக்கு அறிகுறியாகும். அச்சம் தோல்விக்கு அறிகுறியாகும். அச்சம் தகுதி யின்மைக்கு அறிகுறியாகும். மற்றவர்கள் ஏளனம் செய்வதைக் குறித்துச் சிலர் அஞ்சுகின்றனர். சில செயல்களில் ஈடுபடும்பொழுது உலகத்தவர்கள் பரிகாசம் செய்வார்கள் என்று பயந்துகொள்கிறவர் கள் இருக்கிருர்கள். பயம் வீரனது அணிகலம் ஆகாது. தனக்கு ஏற்பட்டுள்ள கடமைகளே ஒருவன் துணிந்து எடுத்துக்கொள்ள வேண்டும். மற்றவர்கள் அதைக் குறித்து என்ன கருதுகிருர்கள் அல்லது இயம்புகிருர் கள் என்பதைப்பற்றியெல்லாம் எண்ணி வீரன் ஒரு வன் தயக்கம் கொள்ளலாகாது. மதம் பிடித்த யானே வழியில் கம்பீரமாக நடந்து போகிறது. அதைப் பின்

தொடர்ந்து குரைக்கின்ற நாய்களை அது கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை. தன் கடமையில் இறங்கும் வீரன் ஒருவன் அங்ஙனம் நடந்துகொள்ள வேண்டும். தன்னைப்பற்றி யார் என்ன பேசுகிறார்கள் என்பது அவன் கவனத்துக்கு வரலாகாது. தான் எடுத்துக்கொண்ட கருமத்தை ஒழுங்காகச் செய்து வருகிறானா என்பதிலேயே அவன் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும்.

ஒரு மனிதன் உலக வாழ்க்கையைத் துறந்துவிட்டுக் கடவுள் வழிபாட்டிலேயே ஈடுபட்டவனாக இருக்கிறான். மற்றொரு மனிதன் உலகில் வாழ்ந்திருந்து மற்றவர்களுடைய நலத்துக்காக ஓயாது உழைத்துக் கொண்டிருக்கின்றான். இவ் இருவர்களுள் முதல் மனிதன்தான் கடவுளை வணங்கிக் கொண்டிருக்கின்றான், மற்றவன் அங்ஙனம் செய்யவில்லை என்று நாம் எண்ணலாகாது. மற்றவர்களுக்காகப் பணிவிடை செய்வதன் மூலம் ஒரு மனிதன் தன்னைப்பற்றி அறவே மறந்துவிடுவானாகில் அதுவும் கடவுள் வழிபாடேயாம். இனி, உலகில் வாழ்ந்திருந்து மனைவி மக்களுக்காகப் பாடுபடுகின்றவர்கள் ஒருவித எண்ணம் எண்ணுவதுண்டு. அதாவது, உலகைத் துறந்துவிட்டவர்கள் பொறுப்பற்றவர்கள், வெறுமனே உயிர்வாழ்ந்திருப்பவர்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள். அவர்கள் அப்படி நினைப்பது முறையன்று. அவனவன் நிலையில் அவனவன் பெரியவனே. இக்கோட்பாட்டைத் தெளிவுபட விளக்குதற்கேற்ற வரலாறு ஒன்று இருக்கிறது :

முன்பு ஒருகால் அரசன் ஒருவன் இருந்தான். அவன் தன் நாட்டை நன்கு ஆண்டு வந்தான். அதற்கிடையில் பரம்பொருளைப்பற்றிய தத்துவ ஆராய்ச்சியிலும் அவ் வேந்தன் ஈடுபட்டிருந்தான். அவனிடம் சன்னியாசிகள் பலர் இடையிடையே வந்துகொண்டிருந்தனர். தன்னிடம் வருபவர்களிடத்திலெல்லாம் ஒரு கேள்வியை அக் கோமான் திரும்பத் திரும்பக் கேட்டு வந்தான். உலகை எல்லாம் துறந்துவிட்டு ஒருவன் சந்நியாசியாய்விடுகின்றான். மற்றொருவன் இல்வாழ்பவனாக மனைவி மக்களோடு வாழ்ந்திருந்து அவர்களுக்குத் தன் கடமையை முறையாக ஆற்றிவருகின்றான். இவ் இருவருள் யார் பெரியவன் ? இதுவே அவ் வேந்தன் கேட்ட கேள்வியாகும். அறிவாளர் பலர் இக்கேள்விக்கு விடை சொல்ல முயன்று வந்தனர். துறவறமே மேலானது என்று ஒரு சிலர் சாற்றினர். அதற்குத் தக்க காரணங்களை எடுத்து ஓதும்படி கோமான் கேட்டான். பலபேர் அதற்கேற்ற காரணங்களை எடுத்துக்காட்ட இயலாதவர்களாக இருந்தார்கள். அத்தகையவர்களைத் திரும்பவும் குடும்பிகள் ஆய்விடும்படி அரசன் ஆணையிட்டான். வேறு அறிஞர்கள் அவனிடம் வந்தார்கள். தன் கடமையை நன்கு நிறைவேற்றும் குடும்பியே மேலானவன் என்று அவர்கள் இயம்பினார்கள். அதற்கேற்ற சான்றுகளை எடுத்துக்காட்ட வேண்டுமென்று அரசன் ஆக்ஞாபித்தான். அவர்களில் பலர் அதற்கேற்ற ஆதாரங்களை எடுத்துக்காட்ட இயலாதவர்களாக இருந்தார்கள்.

அத்தகையவர்களையும் குடும்பிகள் ஆய்விடும்படி அரசன் உத்தரவு கொடுத்தான்.

இங்ஙனம் ஆண்டுகள் பல கழிந்தன. அதன் பின்னர் இளம் துறவி ஒருவன் அந்த வேந்தனுடைய முன்னிலைக்கு வந்து சேர்ந்தான். தனது பழைய கேள்வியை புதியதாக வந்தவனிடம் அரசன் கேட்டான். "வேந்தே, ஒவ்வொரு மனிதனும் தன் தன் நிலையில் பெரியவனே" என்று அம் முனிவன் விடைவிடுத்தான். "அதை எனக்கு நிரூபித்துக்காட்டும், பார்க்கலாம்" என்று அரசன் இயம்பினான். "நான் அதை நிரூபித்துக் காட்டுகிறேன். ஆனால் நீங்கள் என்னுடன் வந்து, நான் வாழ்ந்து வருகின்ற வாழ்க்கையைச் சிறிது காலத்துக்கு வாழவேண்டும். அப்பொழுதுதான் நான் சொல்லுவதை உங்களுக்கு நிரூபித்துக்காட்ட இயலும்" என்று ஆங்கு வந்திருந்த துறவி சொன்னான். அரசனும் அதற்கு இயைந்தவனாய் அத்துறவியைப் பின்பற்றிச் சென்றான். தனது நாடு நகரங்களையெல்லாம் தாண்டிப்போயாய்விட்டது. வேற்றரசு நாடுகள் சிலவற்றையும் அவர்கள் கடந்து போய்விட்டார்கள். புதிய ராஜ்யம் ஒன்றுக்கு அவர்கள் வந்துசேர்ந்தார்கள். அங்குத் தலைமைப் பட்டணத்தில் பெரிய விழா ஒன்று நிகழ்ந்துகொண்டிருந்தது. மாறுவேடம் பூண்டிருந்த அரசனுடைய காதிலும், அவனை அழைத்துச்சென்ற சன்னியாசியினுடைய காதிலும் மேளதாளங்களினுடைய இன்னிசை வீழ்வதாயிற்று. அதற்கிடையில் மக்கள் ஓலமிடுவதும் அவர்கள் காதில் விழுந்தது.

ஆடம்பரமாக ஆடைகள் அணிந்துகொண்டு மக்கள் கும்பல் கும்பலாய் வீதிகளில் கூடியிருந்தார்கள். பெரிய பிரகடனம் ஒன்று செய்யப்பட்டது. நிகழ்வது யாது என்பதை அறிந்துகொள்ள வழிப்போக்கர்களாக வந்திருந்த வேந்தனும் துறவியும் அங்குச் சற்று நின்றுர்கள். அந்த நாட்டு ராஜகுமாரி சுயம்வரம் கேட்கப் போகின்ருள், பெரும் திரளாகக் கூடியிருப்பவர்களுக் கிடையில் தனக்கேற்ற கணவனை அவள் தேர்ந்தெடுக்கப்போகிருள் என்கின்ற பிரகடனத்தை ஒருவன் பறைசாற்றிக்கொண்டு போனுன்.

மாறுவேடம் தாங்கிய அரசனும் அவனை அழைத்து வந்திருந்த சன்னியாசியும் அந்த சுயம்வரத்தை வேடிக்கை பார்க்கலாயினர். அந்த நாட்டுக்குரிய ராஜகுமாரி தனக்கேற்ற கணவனை அப்பெருங் கூட்டத்திலிருந்து தெரிந்தெடுக்கவேண்டிய விழாவாக அது அமைந்திருந்தது. அந்நாட்டு அரசனுக்கு மகப்பேறு ஆக அமைந்திருந்தவள் அவள் ஒருத்தியே. அவள் கட்டழகே வடிவெடுத்தவள். அந்த அழகியை மணந்துகொள்ளும் வாய்ப்பு எந்த இளவரசனுக்கு வாய்க்கிறதோ அவன் அந்நாட்டுக்கு எதிர்கால மன்னன் ஆவான். தன்னைப் போன்ற கட்டழகே வடிவெடுத்திருக்கும் இளைஞன் ஒருவனை மணந்துகொள்ள வேண்டுமென்று இந்த ராஜகுமாரி எண்ணியிருந்தாள். ஆனுல் அவளுக்கேற்ற மணுளன் அக்கூட்டத்தில் காணப்படவில்லை. இதுவரையில் நிகழ்ந்திருந்த சுயம்வரக் கூட்டங்களுள் மிகமிகச் சிறந்ததாக இது அமைந்

திருந்தது. இதற்கு முன்பு வாராதிருந்த பலபேர் இக் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். பல்லக்கில் ராஜ குமாரி அச்சபை நடுவே எடுத்துச் செல்லப்பட்டாள். அச்சபை முழுதையும் சுற்றிவந்தான பிறகும் அவளுக் கேற்ற மணாளனை அவள் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆங்குக் கூடியிருந்தவர்களில் யாரையும் அவளுக்குப் பிடிக்கவில்லை. அந்தப்பெரிய கூட்டமும் பயன்படாது முடிவுக்கு வரப்போகிறது என்று ஆங்குக் கூடியிருந்த வர்கள் எல்லாம் பெரிதும் ஏமாற்றமடைந்திருந்தனர். ஆயினும் எதிர்பாராத நிகழ்ச்சி ஒன்று அவ்வேளையில் அங்கு நேர்வதாயிற்று. இளம் சன்னியாசி ஒருவன் எங்கிருந்தோ அப்பொழுது அங்கு வந்து சேர்ந்தான். பால சூரியன் உதயமாய் வந்திருந்தாற்போன்று அவ னுடைய முகம் தேஜசுடன் ஜ்வலித்துக்கொண்டிருந் தது. கட்டழகின் உச்சநிலை அவனிடம் திகழ்ந்து கொண்டிருந்தது. அக்கூட்டத்தின் ஒரு மூலையில் அவன் நின்று கொண்டிருந்தான். ஆங்கு என்ன நிகழ்கிறது என்பதை வேடிக்கை பார்க்க வந்தவன் அவன். ராஜ குமாரி ஊர்ந்து சென்ற பல்லக்கு அவன் அருகில் வந் தது. சுந்தர சொரூபியாகிய அந்த சன்னியாசியைக் கண்டதும் ராஜகுமாரி பல்லக்கை நிறுத்தி அவனுக்கு மாலை சூட்டினாள். ஆனால் அந்த பால சன்னியாசியோ தன் கழுத்தினின்று மாலையைப் பிய்த்தெடுத்து சுழற் றிக் கீழே வீசினான். "என்ன அடாத செயல் இது. நான் ஒரு சன்னியாசி. விவாகம் என்னும் விலங்கம் எனக்கு எதற்காக?" என்றான். அந்த வனிதையின்

தந்தையாகிய பேரரசனும் அக்கூட்டத்தில் நின்று கொண்டிருந்தான். ஒருவேளை அந்த இளைஞன் தன்னுடைய வறுமையை முன்னிட்டு விவாகத்தை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டான் போலும் என்று மன்னன் கருதினன். ஆகவே அவனுடைய வறுமையைப் போக்குதற்காக மன்னன் மொழிவானாயினன்: "என் அருமைப் புதல்வியோடு என்னுடைய ராஜ்யத்தில் செம்பாதி இப்பொழுதே உமக்கு வந்து விடுகிறது. நான் காலமானதும் என்னுடைய ராஜ்யம் முழுதும் உமக்குச் சொந்தமாய்விடுகிறது." அரசன் இங்ஙனம் மொழிந்தவுடன் இளம் துறவியின்மீது மீண்டும் மாலை சூட்டப்பட்டது. இளைஞனே பழையபடி அம்மாலையை பிய்த்தெடுத்து அலட்சியமாக வீசி யெறிந்தான். "போகத்திலும், பொன்னிலும், மண்ணிலும் கட்டுண்பவன் நான் அல்லன். துறவறத்தின் பேரியல்பை அறிந்து கொள்ளாத இப்பேதையர்கள் வாய்க்கு வந்ததையெல்லாம் பிதற்றுகிறார்கள். எனக்கு இங்கு என்ன வேலை?" என்று சொல்லிக்கொண்டு அவன் அக் கூட்டத்தினின்று அப்பால் விரைந்து சென்றுவிட்டான்.

அவனுக்கு மாலை சூட்டிய ராஜகுமாரி தன்னை அவ்விளைஞனுக்கென்றே ஒப்படைத்து விட்டாள். அவன்மீது அவள் வைத்த அன்பை இனி மீட்டெடுக்க முடியாது. வேறு யாரிடத்திலும் அவ்வன்பைச் செலுத்துவது முறையன்று. "இவ்விளைஞனையே நான் மணப்பேன் அல்லது உயிர் துறப்பேன்" என்று அவள் இயம்பினள். அவன் சென்ற வழியைத் தொடர்ந்து

இவளும் ஓடினாள். மாறுவேடம் பூண்டிருந்த மன்னனை அழைத்து வந்திருந்த மற்ற சன்னியாசியும் மொழி வாறுயினன் : "வேந்தே, நாம் இவர்களுக்குப் பின் செல்வோம். நிகழ்வது யாது என்று பார்ப்போம்" என்று எடுத்துரைத்தான். சென்றவர்களுக்கு மிக எட்ட பின் தங்கியவர்களாக இவர்கள் இருந்தார் களெனினும் இவ்விருவரும் முன் சென்றவர்களை நாடிப் போய்க்கொண்டிருந்தார்கள். தனக்கு மாலை சூட்டிய தற்கு ஆக்ஷேபம் செய்த இளம் சன்னியாசி நாட்டுப் புறப் பக்கம் கொஞ்சதூரம் வந்தான். பிறகு கானகம் ஒன்றுக்கு அருகில் வந்து சேர்ந்தான். அதைக் கண்ட தும் அவன் அதனுள் நுழைந்துவிட்டான். ராஜகுமாரி யும் அவனைத் தேடிக்கொண்டு வனத்துக்குள்ளே போனாள். நிகழ்வது யாது என்று பார்ப்பதற்குப் பின் தொடர்ந்து போன இருவரும் வனத்துக்குள் நுழைந் தார்கள். தப்பித்துக் கொள்வதற்காக வனத்துக் குள்ளே சென்ற இளம் துறவிக்கு அவ்வனத்தினுள் இருந்த சிக்கல் நிறைந்த சிறு சிறு பாதைகளும் நன்கு தெரிந்திருந்தன. அப்பாதை ஒன்றனுள் அவன் மாய மாய் மறைந்து போய்விட்டான். அவன் எங்குச் சென் றான் என்று கண்டுபிடிக்க ராஜகுமாரிக்கு இயலவில்லை. இங்குமங்கும் ஓடி அலைந்து திரிந்து தான் கருத்தில் கொண்டவனைக் காண இயலாதவளாய் ஒரு மரத்தடி யில் உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டாள். இப் பொழுது வனத்தைக் கடந்து வெளியில் வரவும் அவ ளுக்கு இயலாது போய்விட்டது. நிகழ்வதை வேடிக்கை

பார்க்க வந்த வேற்றரசனும் துறவியும் அவளுக்கு அருகில் வந்தார்கள். "குழந்தாய் அழாதே. இவ்வனத்தினின்று வெளியே போவதற்கான வழியை நாங்கள் காட்டித்தருகிறோம். ஆனால் இப்பொழுது இருட்டிப் போய்விட்டது. இரவில் வழி கண்டுபிடிக்க முடியாது. இதோ பெரிய மரம் ஒன்று இருக்கிறது. இதனடியில் நாம் இளைப்பாறுவோம். விடியற்காலம் வந்ததும் உன்னை நாங்கள் இக்கானகத்தினின்று வெளியே அழைத்துச் செல்கிறோம்" என்றார்கள். எந்த மரத்தடியில் அவர்கள் இராத் தங்கியிருந்தார்களோ அந்த மரத்தின்மீது குருவியின் குடும்பம் ஒன்று இருந்தது. தாய் தந்தையர்களாக இருந்த குருவிகள் இரண்டு; குஞ்சுகள் மூன்று. ஆக, ஐந்து உயிர்கள் கூடிய குடும்பம் ஒரு கூடுகட்டி அங்கு வாழ்ந்திருந்தது. ஆண் குருவி மரக்கிளையினின்று கீழே பார்த்தது. மூவர் அங்கு இராத்தங்கியிருப்பது அதற்குத் தென்பட்டது. "என தன்பே, நாம் என் செய்வோம்! இதோ விருந்தினர் சிலர் நம் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். இது குளிர் காலம். நம்மிடம் தீயில்லை" என்றது அப்பறவை. உடனே அது பறந்து சென்று சிறிய கொள்ளிக்கட்டை ஒன்றைக் கவ்விக்கொண்டு வந்து அவர்கள் முன்னிலையில் போட்டது. சருகுகளையும், உலர்ந்த குச்சிகளையும் போட்டு அவர்கள் தீ மூட்டினார்கள். அது சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது. இவ்வளவுதூரம் அவர்களுக்கு உதவி செய்ததோடு அக்குருவி திருப்தியடையவில்லை. மேலும் அது தன் மனைவியிடம் மொழியலா

யிற்று: "எனதன்பே, என் செய்வது? இங்கு வந்திருப் பவர்களுக்கு அளிப்பதற்கு நம்மிடம் உணவு ஒன்று மில்லை. அவர்கள் பசித்திருக்கிறார்கள். நாமோ குடும்பி கள். நம் வீடுதேடி விருந்தினராக வந்திருப்பவர்களுக்கு உணவளிப்பது நம் கடமை. என்றால் இயன்றதை நான் செய்தே ஆகவேண்டும். என்னுடைய உடலை அவர்களுக்கு உணவாகக் கொடுத்துவிடுகிறேன்." அங்ஙனமே அக்குருவி தீக்குள் பாய்ந்து மடிந்து போயிற்று. விருந்தினராக வந்திருந்தவர்கள் குருவியின் உயிரைக் காப்பாற்ற முயன்றார்கள். ஆனால் அவர்களு டைய முயற்சிக்கு முன்பே குருவி தன் உயிரைக் கொடுத்தாய்விட்டது!

தன் கணவன் செய்தது என்ன என்பதைப் பெண் குருவி கவனித்தது. அது தனக்குத்தானே சொல்லிக் கொண்டதாவது: "இதோ இங்கு மூவர் வந்திருக் கின்றனர். ஒரே ஒரு சிறு குருவியின் உடல் அவர் களுக்கு உண்ணப் போதாது. என் கணவன் எடுத்துக் கொண்ட முயற்சி பயனற்றதாய்ப் போகவிட்டுவிடு வது என் கடமையன்று. வந்திருப்பவர்களுக்காக எனது உடலையும் கொடுத்துவிடுகிறேன்." அதுவும் தீக்குள் விழுந்து உயிர் துறந்தது.

இனிக் குஞ்சுகள் மூன்றும் நிகழ்ந்ததைக் கவனித் திருந்தன. தங்கள் தாய் தந்தையரின் உடலங்கள் விருந்தினருக்குப் போதவில்லை என்பதை அவைகள் உணர்ந்தன. தங்களுள் அவைகள் தீர்மானிக்கலாயின: "நம் தாய் தந்தையர் தங்கள் கடமைகளை நிறை

வேற்றினார்கள். ஆயினும் அதிதிகளாக வந்துள்ள மூவர்க்கு அவர்களின் சின்னஞ் சிறு இரு உடல்கள் போதவில்லை. அவர்களின் முயற்சி முற்றுப் பெறுகிருக் கிறது. அதைப் பூர்த்திபண்ணிவைப்பது நம் கடமை. நமது உடலங்களையும் வந்தவர்களுக்காகவென்று வழங்கிவிடுவோம்.'' மூன்று குஞ்சுகளும் சேர்ந்தாற் போன்று தீயினுள் பாய்ந்து மாண்டு போயின.

நிகழ்ந்ததைக் கண்டு மூவரும் பெருவியப்படைந் தனர். ஆனால் அப்பறவைகளின் ஊனை உண்ண வந் திருந்தவர்கள் ஒருப்படவில்லை. உணவில்லாமலேயே அவர்கள் ஆங்கு அந்த இரவைக் கழித்தனர். காலையில் ராஜகுமாரிக்கு மற்ற இருவரும் வழிகாட்டிக் கொடுத் தார்கள். அவள் தன் தாய் தந்தையரிடம் திரும்பிப் போய் விட்டாள். பிறகு சன்னியாசி தான் அழைத்து வந்திருந்த அந்நியநாட்டு அரசனிடம் இயம்புவாரு யினன்: ''வேந்தே, அவனவன் நிலையில் அவனவன் பெரியவனே என்னும் பேருண்மையை நீர் இப் பொழுது பார்த்தீர். உலகிலே குடும்பியாக நீர் வாழ விரும்புவீராகில் இச்சிறு பறவைகளைப்போன்று வாழ்ந் திரும். எந்த நொடிப்பொழுதில் ஆனாலும் உமது உயிரை மற்றவர்கள் நலத்தின் பொருட்டுக் கொடுத்து விட ஆயத்தமாய் இருக்க வேண்டும். அப்படியல்லாது துறவறம் பூணத் தாங்கள் விரும்புவீர்களாகில் அந்த இளம் துறவியைப்போன்று ஆய்விடுங்கள். கட்டழகே வடிவெடுத்த காரிகையும், செல்வம் நிறைந்த ராஜ்ய மும் அத்துறவிக்குத் துரும்புபோன்று தென்பட்டன.

குடும்பியாக இருக்க நீர் விரும்புவீராகில் உமது வாழ்வனைத்தும் மற்றவர்களுடைய நலன் என்னும் வேள்வியில் ஆகுதியாகப் படைக்கப்படட்டும். சன்னியாச மார்க்கத்தைப் பின்பற்றுவீராகில் கட்டழகையும், குபேர செல்வத்தையும், மண்ணுளும் ஆதிக்கத்தையும் பொருள்படுத்தவேண்டாம். அவனவன் நிலையில் அவனவன் பெரியவனே. ஆனால் ஒருவனுக்குக் கடமையாக அமைந்திருப்பது மற்றொருவனுக்குக் கடமையாக அமையவேண்டும் என்பது அவசியமல்ல."



# 3. வினையாற்றும் விதம்

ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்கு உதவி புரிய முடியும். புரிகின்ற உதவியில் படித்தரங்கள் பல இருக்கின்றன. உடலை ஒட்டிய தேவைகள் மனிதனுக்கு உண்டாகின்றன அப்படிப்பட்ட தேவைகளை ஒருவனுககாக இனமொருவன் நிறைவேற்றி வைக்கமுடியும். தேவைகளை நிறைவேற்றி வைப்பதற்கு உதவி என்று பெயர். உதவி புரிவது எந்த வடிவத்தில் வந்தாலும் அது பாராட்டத்தக்கதே. உதவியை மேன்மை வாய்ந்ததென்றே கருதவேண்டும். மனிதனுக்கு உண்டாகின்ற தேவைகளுள் தாற்காலிகமானவைகள் என்றும், நிலைத்தவைகள் என்றும் அவைகளை வகைப்படுத்தலாம். பெரிய தேவைகளை அகற்றி வைப்பது பேருதவியாகும். குறைபாடோ தேவையோ ஏதேனும் நெடுநாளைக்கு உண்டாகாத வண்ணம் உதவிபுரிவதும் பேருதவியாகிறது. வெறும் ஒருமணி நேரத்துக்கு வேண்டிய உதவியை ஒரு மனிதனுக்குச் செய்து வைத்தாலும் அது உதவி என்றே கருதப்படுகிறது. அதே மனிதனுக்கு ஓர் ஆண்டுக்கு முட்டு ஒன்றும் நிகழாவண்ணம் துணைபுரிவதும் உதவி என்றே கருதப்படுகிறது. இவ்விரண்டு உதவிகளுள் ஓர் ஆண்டுக்குப் பயன்படும் உதவி ஒருமணி நேரத்துக்குப் பயன்படும் உதவியை விடப் பெரியதென்று கருதப்படுகிறது. இப்படி ஒரு மனிதனுக்குச் செய்யப்படும் சகாயங்களுள் காலவரையறையிலோ, வேறு எத்தகைய வரையறையிலோ

கட்டுப்படாத நிரந்தரமான உதவியை ஒருவனுக்கு மற்றொருவன் செய்யக்கூடுமானால் அத்தகைய உதவியே ஒப்பு உயர்வு அற்றது எனக் கருதப்படுகிறது. ஒப்பு உயர்வு அற்ற உதவி எது என்னும் கேள்வி அடுத்தபடியாக எழலாம். மனிதனால் மனிதனுக்கு வழங்கப் பெறுபவைகளுள் ஆத்ம ஞானம் ஒப்பு உயர்வு அற்றது. ஏனென்றால் ஆத்ம ஞானத்தை அடையப் பெற்றவனுக்கே துன்பங்களும் துயரங்களும் நிரந்தரமாக ஒழிந்துபோய் விடுகின்றன. ஆத்ம ஞானத்துக்கு அன்னியமாயுள்ள ஏனைய ஞானங்கள் எல்லாம் ஏதோ சிறிது காலத்துக்குத்தான் மனிதனுக்கு உண்டாகும் குறைபாடுகளை அகற்றி வைக்க வல்லவைகள் ஆகின்றன. ஆத்ம சொரூபத்தைப் பற்றிய மெய்ஞானம் உள்ளத்தில் உதிக்கும்பொழுதே தேவை என்பதும் குறைபாடு என்பதும் அறவே அகற்றப்படுகின்றன. ஆக, மனிதனுக்கு மனிதன் செய்யும் சேவைகளுள் ஆத்ம ஞானம் என்னும் கொடையே முதன்மையும் மேன்மையும் பெற்று விளங்குகிறது. கோடானுகோடி மானுடர்களுள் வள்ளல் என்றும் பேருபகாரி என்றும் எம்மனிதனைப் பகர்வது என்னும் கேள்வி எழலாம். ஆத்ம ஞானம் என்னும் ஒப்பற்ற அருள் விருந்தை வழங்குகின்றவனே மானுட வர்க்கத்துக்குப் பேருபகாரம் செய்யும் பெருமகன் ஆகின்றான். வாய்ப்புகளுள் பெருவாய்ப்பு ஆகிய பாரமார்த்திகப் பெருவாழ்வை மக்களுக்கு எடுத்து வழங்கும் ஞானாசாரியராக இருக்கின்ற ஒருவர் சமுதாயத்தில் ஒப்பற்ற ஆதிக்கத்தையும்

இயல்பாகப் பெற்றுவிடுகிருர். உயிர்வாழ்ந்திருத்தல் என்னும் பெருநிகழ்ச்சிக்கு ஆதாரமாய் இருப்பது பார மார்த்திகம். வாழ்ந்திருத்தல் என்பதைப்பற்றிய மர் மங்களை யெல்லாம் உள்ளபடி விளக்கிக் காட்டுவது பாரமார்த்திகம். தகுந்த அஸ்திவாரமில்லாது வீடு நிலைபெற்று இருக்கமுடியாது. வாழ்க்கைக்கு அஸ்தி வாரமாய் இருப்பது பாரமார்த்திகம். ஆதலால்தான் ஏனையவற்றையெல்லாம் விட அது முதன்மை பெற் றுள்ளது. யார் ஒருவன் பாரமார்த்திக வாழ்வில் வலிவு மிகப் படைத்தவனுகின்ருனே அவன் ஏனைய எத்துறையில் வாழ்வைத் திருப்பினுலும் அத்துறை யிலே வலிவு மிகப் படைத்தவனுக இருப்பான். ஆத்ம ஞானத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு உல கில் வாழ்ந்து வருபவன் வாழ்விலே எந்தப் பேற்றினை அடைய விரும்பினுலும் அப்பேற்றினை அவன் நன்கு அடையப் பெறுபவன் ஆவான். உடல் வாழ்க்கைக்கு இன்றியமையாத தேவைகள் பல மனிதனுக்கு இருக் கின்றன. பொதுவாக இத்தகைய தேவைகளைப் பூர்த்திபண்ணுவது இயலாத காரியம். எரிகின்ற தீக்கு விறகுக்கட்டை கொடுத்து அதன் வேகத்தைத் தணிக்க முடியாது. அதேபோன்று உடல் வாழ்க் கைக்கு வேண்டியுள்ளவைகளை நிறைவேற்றி வைப் பதும் இயலாத காரியம். ஆனுல் யார் ஒருவனிடம் ஆத்ம ஞானம் ஓங்குகின்றதோ அவனே ஆசைகளையும் தேவைகளையும் ஒரு முடிவுக்குக்கொண்டுவர வல்லவ னுகிருன். ஆத்ம ஞானத்தை அடிப்படையாகக்

கொண்டுள்ள பாரமார்த்திகப் பெருவாழ்வே பாராட்டு தலுக்குரிய நல்வாழ்வு என்று மதிக்கப்படுகிறது. ஏனவே பாரமார்த்திகத்துறையில் எடுத்து வழங்கப் படும் அருள் கொடையே கொடைகள் அனைத்திலும் தலையாயது ஆகிறது.

அதற்கு அடுத்தபடியாக வாழ்க்கையில் அறிவுத் துறை இடம் பெற்றுள்ளது. யாரிடத்து அருளும் ஆத்ம ஞானமும் இருக்கிறதோ அவனே அருளையும் ஆத்ம ஞானத்தையும் வழங்க வல்லவனாகிறான். அறிவை வழங்குபவனுடைய அந்தஸ்து அதற்கு அடுத்தபடியாக வந்து அமைகிறது. அன்னதானம் வஸ்திரதானம் முதலியவைகள் நல்ல கொடைகளாக மதிக்கப்படுகின்றன. எனினும் இக்கொடைகளை விட அறிவுதானம் என்னும் கொடை சாலச் சிறந்தது. ஒரு மனிதனுடைய உயிரைக் காப்பாற்றுவதைவிட உயர்ந்தது அறிவு தானம் என்று இயம்பலாம். ஏனென்றால் அறிவு இல்லாத உயிர்வாழ்க்கை வாழ்வு என மதிக்கப்பட மாட்டாது. அறிவுடன் கூடிய மானுட வாழ்வே நல் வாழ்வு என நவிலப்படுகிறது. அறிவு கெட்ட நிலை சாவுக்குச் சமானமானது. அக்ஞானம் மரணத்துக்கு ஒப்பானது. அறிவே உயிரை ஓம்புகிறது. ஞானமே நல்வாழ்வை ஆக்குகிறது. அக்ஞான இருளிலே உழன்று துன்பங்கள் பலவற்றிற்கு ஆளாகின்ற மனிதன் வாழ்ந்திருப்பதும் வாழாது ஒழிந்து பட்டுப் போவதும் ஒன்றேயாம். வாழ்வுக்கு சிறப்பை நல்குவது நல்லறிவு. ஆதலால் ஆத்ம ஞானத்துக்கு அடுத்தபடி உள்ள இடத்தை அறிவு பெறுகின்றது.

தன்னிடத்து நல்லறிவு இல்லாவிட்டால் பிறர்க்கு அதை எடுத்து வழங்குதல் என்னும் பேச்சுக்கு இடமில்லாது போய்விடுகிறது. அறிவுத்துறையில் மேல்நிலைக்கு வராதவன் உலகுக்கு ஒருவிதமான கைங்கரியமும் செய்யமுடியாதா, என்னும் கேள்வி அடுத்தபடி எழலாம். ஆம், அத்தகைய மனிதனால் உலகுக்குக் கைங்கரியம் செய்யமுடியும். உடல் வாழ்க்கைக்குத் தேவையாக இருக்கின்றவைகளை எடுத்து வழங்குதலும் கைங்கரியம் எனக் கருதப்படுகிறது. உடல் வாழ்க்கையிலே ஒரு மனிதனுக்கு உள்ள குறைபாடுகளை அகற்றி வைப்பது ஒன்றுதான் கொடை என்று கருதுகின்றவர்கள் இருக்கின்றார்கள். அப்படிக் கருதுவது சரியல்ல. உடல்வாழ்க்கைக்கு இன்றியமையாதவைகளாக இருக்கின்றவைகளை எடுத்து வழங்குவதும் கொடையே. ஆயினும் அக்கொடையானது மானுட வாழ்க்கையில் மூன்றாவது இடம்பெறுகிறது. ஏனென்றால் உடல் வாழ்க்கைக்குத் தேவையாக இருக்கின்ற பொருள்கள் யாண்டும் நிலைத்துள்ள திருப்தியை அளிக்கமாட்டா. உணவு உடலின் தேவையாகிறது. உணவு இல்லாதவிடத்துப் பசி உண்டாகிறது. பிணிகளுள் திரும்பத் திரும்ப வரும் பிணி பசிப்பிணியாம். உணவு உண்டதும் பசிப்பிணி அகன்று போய்விடுகிறது. எனினும் சில மணி நேரத்துக்குப் பிறகு அப்பிணி திரும்பவும் தோன்றிவிடுகிறது. மனிதனுக்கு உண்டாகும் உடலின் தேவைக்கு ஒரு முடிவு இல்லை. பசி என்னும் குறைபாட்டைக் கடந்தவனுக்கே துன்பம் முடிவுறு

கிறது. யார் ஒருவன் பசிப்பிணியைக் கடந்துள்ள நிலையை எட்டிவிடுகின்றானோ அம்மனிதனைப் பின்பு பசிப்பிணி அல்லல்படுத்த மாட்டாது. தேவைகளையும் குறைபாடுகளையும் முட்டுப்பாடுகளையும் கடந்த நிலைக்கு ஒரு மனிதன் போய்விட்டால் பின்பு அவனுக்கு யாண்டும் துன்பமில்லை. பாரமார்த்திக நிலையை அடைகின்றவனுக்கே குறைபாடு ஒன்றும் உண்டாவதில்லை. எனவே ஒரு மனிதன் பாரமார்த்திக வாழ்க்கையில் உறுதிமிக அடையும்படி உதவி பண்ணுவதே உதவிகள் அனைத்திலும் பேருதவியாகிறது. வித்தியா தானம் அல்லது நல்ல கல்வியை எடுத்து வழங்குதல் அதற்கு அடுத்தபடியாக இடம்பெறுகிறது. உடலுக்கு உற்ற தேவைகளை அகற்றிவைப்பது அதற்கும் அடுத்தபடியில் இடம் பெறுகிறது.

உலகுக்கு உதவிபுரிய வேண்டும் என்னும் எண்ணம் கொண்டவர்களாகப் பலர் இம்மண்ணுலகில் இருக்கின்றனர். மற்றவர்களுக்குத் துணை புரியும் மனப்பான்மை அவர்களிடத்து மேலோங்கியிருக்கிறது. அத்தகைய மனப்பான்மை பாராட்டத்தக்கது. ஆனால் உலகத்தவர்க்கு உண்டாகும் உடலைப்பற்றிய குறைபாடுகளை அகற்றி வைப்பதிலேயே அவர்கள் கருத்துடையவர்களாய் இருக்கிறார்கள். அத்தகைய கைங்கர்யத்தால் உலகில் தென்படும் துன்பங்களை ஒருநாளும் அகற்றிவிட முடியாது. மனிதனுடைய மனப்பான்மையை மாற்றியமைப்பதே துன்பத்தைத் துடைப்பதற்கு உற்ற உறுதியான உபாயமாகும்.

உடலைப்பற்றியுள்ள குறைபாடுகள் ஓயாது உதித்துக் கொண்டே இருக்கும். ஆதலால் விதவிதமான துன்பங்களையும் மக்கள் துய்த்தே ஆகவேண்டும். உடை, உணவு, மருந்து போன்ற உடலுக்கு இன்றியமையாத உதவிகளை எவ்வளவுதான் எடுத்து வழங்கினாலும் உலகில் தோன்றும் துன்பங்களை அடியோடு துடைத்துவிட யாருக்கும் இயலாது. துன்பத்தை அகற்றுதற்கு ஏற்ற உபாயம் ஒன்றே உளது. மானுட வர்க்கத்தினுடைய மனப்பான்மையை தூயதாக மாற்றியமைக்கவேண்டும். கேடுகள் பல உலகில் இருக்கின்றன. அக்கேடுகளைத் தொடர்ந்து துன்பங்கள் பல உரு எடுத்துக்கொண்டே இருக்கின்றன. அத்தகைய கேடுகளுக்கும் துன்பங்களுக்கும் மூலகாரணமாய் இருப்பது அக்ஞானம். இந்த அக்ஞான இருளை அகற்றுவது முற்றிலும் அவசியமாகிறது. ஞான விளக்கை மக்களுக்கிடையில் ஏற்றி வைப்பது அவசியமாகிறது. நல்வாழ்வைத் தொடர்ந்து தூய்மையும் அவர்களுடைய உள்ளத்தில் உண்டாகிறது. பாரமார்த்திக ஞானத்துக்கு ஆதாரமாயுள்ள விவேகமும் வைராக்கியமும் வளரவேண்டும். சிற்றின்ப வாழ்க்கையில் பற்றற்ற நிலையே வைராக்கியம் எனப் பகரப்படுகிறது. பற்றை அறுப்பதற்கென்று புகட்டப்படும் கல்வியே நல்ல கல்வியாகிறது. அதைத் தொடர்ந்து ஞான வாழ்வு ஆரம்பிக்கிறது. பாரமார்த்திக ஞானமே மனிதனுக்கு உறுதியையும் தெளிவையும் வழங்குகிறது. மனம் தெளிந்தவனுக்கே துன்பம் நீங்குகிறது. மனத்தெளிவு அடைவதற்கு முன்பு துன்பம்

ஒருநாளும் அகன்றுபோய்விடாது. நாட்டிலுள்ள வீடு களனைத்தையும் அன்ன சத்திரங்களாக நாம் மாற்றி யமைத்துவிடலாம். வீதிதோறும் வைத்திய சாலைகளை நாம் நிறுவிவிடலாம். அத்தகைய செயல்களை செயற் கரியசெயல்கள் என்றே சொல்லலாம். எனினும் அவை களை முன்னிட்டு உலகில் உள்ள அல்லல்கள் அழிந்து பட்டுப்போகமாட்டா. அத்தகைய வசதிகளுக்கிடை யிலும் ஏதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டு மனி தன் துன்பத்தைத் துய்ப்பவனாகவே இருந்து வருவான். அவனுடைய மனப்பான்மை எப்பொழுது மாறு கிறதோ அப்பொழுதே அவனுக்கு அமைதியும் ஆனந்த மும் உண்டாகின்றன.

நாம் ஊக்கத்தோடு இடையறாது வினையாற்றிக் கொண்டிருக்கவேண்டும் என்று பகவத்கீதை போன்ற பெருநூல்கள் நமக்குப் போதிக்கின்றன. எக்கார ணத்தை முன்னிட்டும் நாம் ஆற்றிவரும் கருமங்களை நிறுத்திவிடலாகாது என்று அந்நூல்கள் வற் புறுத்துகின்றன. பின்பு கர்மங்கள் அனைத்தும் நலம் கேடு ஆகிய இரண்டோடு கலக்கப்பெற்றவைகளாகவே இருக்கின்றன. நாம் ஏதேனும் ஒரு செயல் புரிந்தால் அது ஏதேனும் ஒரு இடத்தில் யாருக்காவது நன்மையை உண்டுபண்ணுவது உறுதி. அதே வேளையில் அக் கருமம் மற்றோர் இடத்தில் வேறு சிலருக்குக் கேட்டை உண்டுபண்ணுவதும் உறுதி. ஆக, வினையைப்பற்றிய பேருண்மை ஒன்று உண்டு. நலம் கேடு ஆகிய இரண்டு இயல்புகளும் ஒவ்வொரு கருமத்திலும் கலந்தே இருக்

கின்றன. கருமத்தில் கேடு கலந்திருப்பதால் அக்கருமத்தைச் செய்யாது நாம் ஒழித்துவிடலாகாது. நமக்கு அமைந்துள்ள கருமத்தில் நாம் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும். ஊக்கத்துடன் அதைத் தொடர்ந்து செய்ய நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அப்படி வினையாற்றுவதால் ஓரிடத்தில் நலன் உண்டாகும். மற்றோர் இடத்தில் ஏதேனும் ஒரு விதத்தில் கேடும் உண்டாகும். நலத்தை உண்டுபண்ண வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களாக நாம் வினையாற்ற வேண்டும். நல்லெண்ணத்துடன் நாம் ஆற்றுகிற வினை நம் உள்ளத்தில் நல்லியல்பை வளர்க்கிறது. யாருக்காவது பொல்லாங்கை உண்டுபண்ணவேண்டும் என்னும் கருத்துடன் நாம் ஆற்றும் வினை நமது உள்ளத்தில் கெட்ட இயல்பை வளர்த்துவிடுகிறது. இனி பந்தபாசம் என்றால் என்ன என்பதையும் நாம் அறிந்துகொள்ள வேண்டும். நல்வினையிலும் நல்லியல்பிலும் கட்டுண்டு கிடப்பதும் பந்தபாசம். தீவினையிலும் கெட்ட இயல்பிலும் கட்டுண்டு கிடப்பதும் பந்தபாசம். நல்வினை தீவினை ஆகிய இருவினைகளும் பந்தபாசம் என்னும் இருள்சேர்ந்த வினைகளாம். ஆத்மாவை இருவினைகளும் பிறவிப் பெருங்கடலில் பிணைத்து விடுகின்றன. அப்படியானால் பந்தம் என்னும் தளையினின்று நம்மை விடுவித்துக் கொள்வதற்கு உற்ற உபாயம் யாது? வினைத் தளையினின்று நம்மை விடுவித்துக் கொள்வதற்கான உபாயத்தை பகவத்கீதை நமக்கு நன்கு எடுத்துப் போதிக்கின்றது. உலகுக்கு நலத்தை உண்டுபண்ண

வேண்டும் என்ற நல்லெண்ணத்துடனேயே நாம் ஓயாது வினையாற்றி வரவேண்டும். அப்படி வினையாற்றுவதற்கிடையில் அவ்வினையில் நாம் எந்தவிதமான பற்றுதலையும் வைத்துக்கொள்ளலாகாது. நல்வினையாற்றுவதற்கிடையில் அந்த நல்வினைக்கு நாம் கர்த்தா என்கிற எண்ணத்தை அறவே அகற்றிவிட வேண்டும். கருமத்துக்கு நாம் கர்த்தா என்கிற எண்ணம் போய்விடுகின்றபொழுது அக்கர்மம் நம்மைப் பந்தப்படுத்துவதில்லை. பற்றற்றவர்களாயிருந்து நாம் செயல் புரியவேண்டும். நிஷ்காமிய கருமம் என்பது இதுவே. நிஷ்காமிய கருமத்தை நாம் உள்ளபடி அறிந்து கொண்டால் வாழ்க்கையில் வினையாற்றும் விதத்தையும் நாம் அறிந்துகொண்டவர்கள் ஆகிறோம்.

பகவத்கீதைக்கு நடுநாயகமாய் இருக்கும் கருத்து ஒன்று உளது. இடையறாது வினையாற்றிக் கொண்டிரு. ஆனால் அந்த வினையில் நீ பற்று வைத்துவிட வேண்டாம். வினையாற்றுவதன் மூலம் மனத்தகத்துப் பதிவுகள் பல போடப்படுகின்றன. இந்தப் பதிவுகளுக்கு சம்ஸ்காரம் என்பது பெயர். மனத்தகத்து அமைந்திருக்கும் இயல்பு சம்ஸ்காரத்தினின்று உண்டாகிறது. மனதை ஒரு தடாகத்தோடு சீர்தூக்கலாம். தடாகத்தில் அலைகள் தோன்றுகின்றன. தடாகத்தில் தோன்றும் அலைபோன்றது மனதில் தோன்றும் எண்ணம். அலைக்கும் எண்ணத்துக்குமிடையில் ஒரு வித்தியாசம். உண்டு. தோன்றி மறைவதோடு ஓர் அலைக்கு முடிவு ஏற்பட்டு விடுகிறது. ஆனால் மனதில் தோன்றுகிற

எண்ணம் அடியோடு மறைந்துபோய் விடுவதில்லை. ஒவ்வொரு எண்ணமும் மனத்தினுள்ளே ஒரு பதிவைப் போட்டு வைத்துவிடுகிறது. அப்பதிவு மனத்தினுள் புதைந்து கிடப்பதால் அதே எண்ணம் திரும்பவும் தோன்றக்கூடும் என்பது வெளியாகிறது. திரும்பவும் மனதில் தோன்றிவரும் பாங்குடைய பதிவுக்கே சம்ஸ்காரம் என்று பெயர். நாம் செய்கின்ற செயல் ஒவ்வொன்றும் மனத்தினூடு சம்ஸ்காரத்தை உண்டு பண்ணுகிறது. உடலை நாம் அசைக்கின்றபொழுது உள்ளத்தில் அதைப்பற்றிய பதிவு அமைந்துவிடுகிறது. ஒவ்வோர் எண்ணத்தையும் எண்ணும்பொழுது அது மனதில் பதிவு பண்ணப்படுகிறது. மனதின் மேல் பரப்பில் இத்தகைய பதிவுகள் தென்படாது புதைந்து கிடக்கலாம். எனினும் இந்த சம்ஸ்காரங்கள் வலிவு மிக வாய்க்கப் பெற்றவைகள். மனதினுள் மறைந்திருந்து வேலை செய்யும் வன்மை இவைகளுக்கு உண்டு. நாம் எத்தகைய பாங்குடையவர்கள் என்பது இதினின்று வெளியாகிறது. மனத்தினுள் புதைந்திருக்கும் சம்ஸ்காரங்களின் தொகையே நம்முடைய இயல்பாக வடிவெடுத்து விடுகிறது. ஒவ்வொரு கணப்பொழுதிலும் நாம் எத்தகைய பாங்குடையவர்களாக இருக்கின்றோமோ அத்தகைய பாங்கு அதுபரியந்தம் நாம் பெற்றுள்ள சம்ஸ்காரங்களின் தொகையினின்று வந்தது எனலாம். இந்த வேளையில் ஒரு மனிதன் எத்தகைய இயல்புடையவனாக இருக்கிறான் என்பதை நாம் அறிய வருகிறோம். இந்த வேளையில் அவன் படைத்

திருக்கும் இயல்பு இதுவரையில் அவன் மனதினுள் பெற்றுள்ள சம்ஸ்காரத் தொகைகளின் விளைவாம். ஒரு மனிதனுடைய பண்பு அல்லது குணசீலம் என்பதன் விளக்கம் இதுவேயாம். அவன் புரிந்துவரும் செயல்கள் அவனுடைய இயல்பை வகைப்படுத்துகின்றன. ஒரு மனிதன் மனதினுள் பெறும் சம்ஸ்காரத்தின் தொகையே அவனுடைய இயல்பு ஆகிறது. நல்ல சம்ஸ்காரங்களே மனதினுள் வந்து அமையுமாயின் அம்மனிதன் குணத்திலும் சீலத்திலும் மேம்பட்டவன் ஆகிறான். கெட்ட சம்ஸ்காரங்கள் மனதினுள் வந்து பதியுமாயின் அம்மனிதன் குணக்கேடன் ஆய்விடுகிறான். கெட்ட வார்த்தைகளையே ஒரு மனிதன் ஓயாது கேட்டுக் கொண்டிருப்பானாகில், கெட்ட எண்ணங்களையே அவன் ஓயாது எண்ணிக்கொண்டிருப்பானாகில், கெட்ட செயல்களையே அவன் ஓயாது செய்து கொண்டிருப்பானாகில் அவனுடைய மனதில் கெட்ட சம்ஸ்காரங்கள் நிறைந்துவிடுகின்றன. பிறகு அம்மனிதனுடைய முயற்சியின்றியே கெட்ட எண்ணங்களும், கெட்ட செயல்களும் அவனிடத்திருந்து உதித்துக் கொண்டிருக்கும். மனதினுள் நிறைந்து கிடக்கின்ற கெட்ட சம்ஸ்காரங்கள் ஓயாது வேலை செய்ய ஆரம்பித்துவிடும். அதன் விளைவாக தீமை நேர்ந்து கொண்டிருக்கும். அத்தகைய செயல்களைப் புரிகின்ற மனிதனைப் பொல்லாதவன் என்றுபகர்கிறோம். பிறகு கேடுகளினின்று விலகிக்கொள்ள அம்மனிதனுக்கே இயலாது போய்விடும். தீமையின் வசப்பட்ட ஒரு கருவி

போன்று அம்மனிதன் ஆய்விடுகிறான். தான் விரும்பி ஞலும் விரும்பாவிட்டாலும் அவனிடத்திருந்து தீவினை கள் ஓயாது தோன்றிக் கொண்டே இருக்கும். இனி, அதற்கு நேர்மாருக ஒரு மனிதன் நல்லெண்ணங் களையே எண்ணிக் கொண்டிருப்பாஞகில், சத் கர்மங் களையே ஓயாது புரிந்து கொண்டிருப்பாஞகில் அவை கள் அவனுடைய மனதில் நல்ல சம்ஸ்காரங்களைப் பதிய வைக்கின்றன. மனதினுள் நல்ல சம்ஸ்காரங்கள் நிறைந்துவிடுகின்ற பொழுது அம்மனிதன் முயற்சி எடுத்துக் கொண்டாலும், எடுத்துக் கொள்ளாதிருந் தாலும் அவனிடத்திருந்து நல்வினைகளே ஓயாது தோன்றிக் கொண்டிருக்கும். புண்ணிய கர்மங்களைச் செய்து கொண்டிருப்பதே அம்மனிதனுடைய தொழி லாய் அமைந்துவிடுகிறது. மேலான நல்லெண்ணங்களை எண்ணிக் கொண்டிருப்பதே அவனுக்குப் பொழுது போக்கு ஆகிறது. இங்ஙனம் வினையாற்றும் மனிதன் ஒருவனிடத்து சத் கர்மங்களே வளர்ந்து வருகின்றன. முயன்ருலும் அம்மனிதன் பாபச் செயல்களைச் செய்ய மாட்டான். அவன் மனதில் நிறைந்துள்ள நல்வினை யின் வேகம் தீவினையில் செல்லாது அவனைத் தடுத்து விடும். நல்லியல்பின் வசப்பட்டவஞக அம்மனிதன் ஆய்விடுகின்ருன். மறந்தும் அவன் கேடு செய்ய முடி யாது. நல்லியல்பு அவனிடத்து உறுதியாக நிறைந்து விடுங்கால் அவன் மனபரிபாகம் அடைந்து சீலத்தில் உறுதி பெற்றவஞகின்ருன்.

நல்லியல்பில் நிலைபெற்ற மனிதனுடைய பாங்கு ஒரு உபமானத்தின் மூலம் விளக்கப்படுகிறது:

**यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यः तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥**

"ஆமை தன் அவயவங்களை அடக்கிக்கொள்வது போல் பொருள்களிடத்திருந்து பொறிகளை முழுதும் உள்ளிழுக்க வல்லவனுக்கு நிறைஞானம் நிலை பெறுகிறது."

தனது கால்களையும் தலையையும் ஆமை விரும்பிய மாத்திரத்தில் உள்ளே சுருக்கிக்கொள்கிறது. பிறகு அதைக் கொல்ல எவ்வளவுதான் பிரயத்தனம் எடுத்துக் கொண்டாலும் அவயவங்களை அது வெளியே நீட்டுவதில்லை. அதன் மேல் ஓட்டை சுக்கல் சுக்கலாக உடைத்தெறிய முயற்சி செய்யலாம். எனினும் அது தன் அவயவங்களை வெளியே நீட்டுவதில்லை. அவைகளை உள்ளே அடக்கிவைக்கும் பாங்கு ஆமைக்கு அவ்வளவு உறுதியாக இருக்கிறது. நல்லியல்புடைய மனதும் அத்தகையதாகிறது. அவனே நல்லொழுக்கத்தில் உறுதியாக நிலை நிற்பவன்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து

மனதில் எழும் எண்ணங்களை அவன் முறையாகக் கட்டி ஆளுபவன் ஆகிறான். ஆதலால் அவனுடைய புறக்கருவிகளும் கட்டில் அடங்கியவைகள் ஆய்விடுகின்றன. எத்தகைய நெருக்கடியிலும் அடக்கத்தினின்று அவன் பிசகுவதில்லை. மனம் போகின்ற

போக்கில் அவன் போகின்றவன் அல்லன். அது முற்றும் அவனுக்கு வசப்பட்டு விடுகிறது. உள்ளத்தை அவன் யாண்டும் ஆண்டு வருகிறான். அவன் ஆணையிட்டாலொழிய உள்ளிருக்கும் அவனுடைய உள்ளம் பொறிகளின் வாயிலாகப் புறத்தே போவதில்லை. மனதின்மீது அத்தகைய ஆட்சி புரிதற்கு அதை முதலில் நல்லெண்ணங்களிலேயே நிலைத்திருக்கும்படி பழக்க வேண்டும். அப்படிச்செய்வதால் நல்ல சம்ஸ்காரங்கள் மனதின் மேற்பரப்பில் ஓயாது வந்து பதிவு பெறுகின்றன. நல்வினையிலேயே ஈடுபடும் இயல்பு அதனால் மனத்தின்மிசை உறுதிபெற்றுவிடுகிறது. மனம் அடங்கப்பெற்றான பிறகு புறக்கருவிகளாகிய கண், காது, நா, மெய், மூக்கு ஆகியவைகளை அடக்கியாளும் திறமை வந்துவிடுகிறது. அகக் கரணமாகிய மனதையும் புறக்கரணங்களாகிய பஞ்சேந்திரியங்களையும் நன்கு கட்டியாளுகின்றவனுக்கே குணசீலம் என்னும் பண்பு வந்து அமைகிறது. மனதை முறையாக ஒழுங்குப்படுத்தியவன் அனைத்தையும் அடையப் பெறுபவன் ஆகின்றான். மனபரிபாகம் அடைந்தவனுக்கே மெய்ப் பொருள் காட்சி கிட்டுகிறது. மனதை வென்றவன் ஆபத்துக்கள் அனைத்தையும் அறவே தாண்டியவன் ஆகின்றான். அவன் ஒருபொழுதும் தீங்கு இழைக்கமாட்டான். பொருந்தியதோ அல்லது பொருந்தாததோ ஆகிய எத்தகைய சூழ்நிலையில் வேண்டுமானாலும் அவனை அமர்த்தி வைக்கலாம். அவனைக் கெடுத்துவிடக்கூடிய ஆபத்து ஏதும் இல்லாது போய்விடுகிறது. புற உலகம்

இழைக்கும் ஆபத்துக்கு ஆமை அடிமைப்படாதிருப்பது போன்று முற்றிலும் மனபரிபாகம் அடைந்த யோகி புற உலகினின்று எத்தகைய புன்மையாலும் தாக்கப்படுவதில்லை.

இனி, இதிலும் உயர்ந்த நிலை ஒன்று அந்த யோகிக்கு உண்டு. நல்லியல்பே வடிவெடுத்தவனாக அவன் இருந்தால் போதாது. அதற்குமேல் முமுக்ஷுத்வத்தில் அவனுக்கு ஆசை ஏற்பட வேண்டும். இயற்கையின் தளைகள் அனைத்தினின்றும் விடுபடுதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளுதலே முமுக்ஷுத்வம் என்பதாகிறது. முக்தி நெறியில் ஆழ்ந்து போதல் எனவும் அது பொருள்படுகிறது. ஜீவாத்மன் இயற்கையின் கட்டுகளிலிருந்து முக்தியடைவதே எல்லா யோகங்களின் குறிக்கோள் ஆகிறது என்பதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். விதவிதமான யோகங்களுள் ஒவ்வொரு யோகமும் மனிதனை முக்தியின்கண் எடுத்துச் செல்ல வல்லதாய் இருக்கிறது. முக்தியை வழங்கும் விஷயத்தில் ஒரு யோகம் மற்றொரு யோகத்துக்குப் பின்வாங்கியதல்ல. ஆழ்ந்து தியானம் புரிந்து புத்தர் பெம்மான் போதி சத்வத்தை அடைந்தார். அவர் கையாண்டது ராஜயோகம். பிரார்த்தனை புரிந்து ஏசுநாதர் பரம்பொருளை அடைந்தார். அவர் பின்பற்றியது பக்தி யோகம். அப்பெருமக்கள் அடைந்திருந்த பெருநிலையைக் கர்மயோகி ஒருவன் தான் புரியும் நிஷ்காமிய கர்மத்தாலேயே அடையலாம். உலகுக்குத் தொண்டுபுரிந்த ஞானியாக

புத்தர் திகழ்ந்திருந்தார். கடவுளின் பரம பக்தனாக ஏசுநாதர் இலங்கினார். ஆயினும் இருவரும் முக்தி என்னும் ஒரே குறியைச் சென்று அடைந்தவராயினர். முக்தியை உண்மையில் அறிந்துகொள்ளுதலில் கஷ்டம் ஒன்று உளது. கேடுகளினின்று விடுதலை அடைவது மட்டும் முக்தி ஆய்விடாது. வினைகள் அனைத்தினின் றும் மனிதன் விடுதலை அடைந்தாக வேண்டும். நலம் கேடு ஆகிய இரு வினைத்தளைகளினின்றும் மனிதன் விடுதலை அடைந்தாக வேண்டும். கேடு என்பது இரும் பினால் செய்யப்பட்ட சங்கிலி ஆகிறது. நலம் என்பது பொன்னால் செய்யப்பட்ட சங்கிலி ஆகிறது. மனிதன் இரும்புச்சங்கிலியில் தளைத்து வைக்கப்பட்டிருந்தாலும் சரி, பொன் சங்கிலியில் பிணைத்து வைக்கப்பட்டிருந் தாலும் சரி, சங்கிலியில் கட்டுண்டு கிடப்பதே உலக பந்தமாகிறது. இரண்டு சங்கிலிகளையும் உடைத்து எறிந்தாக வேண்டும். கைவிரலில் முள் ஒன்று தைத் துவிடுகிறது. விரலில் தைத்துள்ள முள்ளைக் களை தற்கு மற்றொரு முள் கையாளப்படுகிறது. விரலினுள் தைத்திருந்த முள்ளை நீக்கியான பிறகு இரண்டு முட் களையும் மனிதன் அப்பால் எறிந்துவிடுகிறான். களை தற்கென்று கையாண்ட முள்ளை பிறகு கையில் வைத் திருக்கவேண்டிய அவசியமில்லை. உள்ளிருந்த முள் ளைக்களைதற்கு அது பயன்பட்டது என்றாலும் முள், முள் தானே? முள்ளைப்போக்குதற்கு முள்ளைப் பயன் படுத்துவது போன்று வினையைப் போக்குதற்கு வினையைப் பயன்படுத்த வேண்டும். தீவினைகளை

யெல்லாம் தொலைத்துவிடுதற்கு நல்வினைகளைப் பயன் படுத்துதல் அவசியம். நல்வினையில் ஆழ்ந்து ஈடுபடு மளவு தீவினைகள் மனத்தகத்தினின்று விலக்கப்படு கின்றன. ஓயாது நல்வினைகளையே செய்துகொண் டிருக்குங்கால் தீவினைகள் அனைத்தும் அறவே அகன்று போய்விடுகின்றன; அல்லது மனத்தினுள் அடக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. தீவினைகளை யெல்லாம் அறவே அடக்கியாண்ட பிறகு நல்வினைகளையும் வென் ருகவேண்டும். இப்படிச் செய்வதால் தளைக்கும் பாங்கு டைய வினையினோடு முற்றும் பற்றற்றவன் ஆய்விடு கிருன். பத்தாத்மா முக்தாத்மா ஆகிருன். முக்தி என்னும் குறியை அம்மனிதன் அடைந்துவிட்டான் என்பதையும் யோகி ஆற்றும் வினையிலிருந்து நாம் அறிந்துகொள்ள முடியும். யோகி ஒருவன் ஒழுங்காக வும் உறுதியாகவும் தனக்கு ஏற்பட்ட கடமையை நிறைவேற்றுகிருன். அப்படி வினையாற்றுவதற்கிடை யில் மனதில் சம்ஸ்காரம் என்பது எதுவும் பதிவதில்லை. ஆழ்கடலின்மீது சிற்றலைகள் தோன்றி மறைந்து போய்விடுகின்றன. அதனுல் கடல் பாதிக்கப்படுவ தில்லை. யோகியினுடைய மனது ஆழ்கடல் போன்றது. அவன் ஆற்றும் வினைகள் மனதின் மேற்பரப்பில் தோன்றி மறைந்துபோய்விடுகின்றன. உலகத்தவர் காட்சியில் யோகி ஒருவன் செயற்கரிய பெரும் செயல் கள் பலவற்றைச் செய்துகொண்டிருப்பவனுகப் புலப் படுகிருன். உழைப்பதற்கேற்ற உறுதி வாய்ந்த உடலை அவன் படைத்திருக்கின்ருன். அந்த உடலைக்கொண்டு

அவன் நன்கு உழைக்கின்றான். தன் அறிவைக் கொண்டு நுட்பமான பல திட்டங்கள் போட்டு வேலை செய்கின்றான். இவை யாவும் செயற்கரிய செயல்களாகத் தென்படுகின்றன. ஆனால் இவைகளில் பட்டும் படாதவனாக யோகி வாழ்ந்திருக்கின்றான். அவனுடைய மனது இச்செயல்களால் சிறிதேனும் பாதிக்கப்படுவதில்லை. அவனுடைய அந்தராத்மா செயல் ஒன்றிலும் சம்பந்தப்படாததாக முற்றிலும் தன்மயமாய் இருக்கிறது.

கர்மத்தில் கட்டுப்படாதவனாக இருந்துகொண்டு கர்மம் செய்யமுடியுமா என்னும் கேள்வி கிளம்புகிறது. இதற்கேற்ற விடையை நாம் பெறமுடியும். எக்கர்மத்தின்மீது நாம் பற்று வைக்கின்றோமோ அக்கர்மம்தான் மனத்தினுள் சம்ஸ்காரம் என்னும் பதிவை அமைத்துவிடுகிறது. ஒரு நாள் முழுதும் நூற்றுக்கணக்கான மக்களை ஒரு மனிதன் சந்திக்கிறான். அத்தனை பேர்க்கிடையில் அம்மனிதன் தனது அன்புக்குரிய ஒரு நண்பனையும் சந்திக்கிறான். இந்நிகழ்ச்சிகள் எல்லாம் நேர்ந்தான பிறகு அம்மனிதன் இரவிலே படுத்துறங்கப் போகிறான். உறங்குதற்கு முன்பு தான் பகல் வேளையிலே கண்ட மனிதர்கள் எல்லாருடைய முகவிலாசங்களை ஞாபகத்துக்குக் கொண்டுவர முயலுகிறான். அவையாவும் எளிதில் ஞாபகத்துக்கு வருவதில்லை. தனது நண்பனுடைய முகத்தை ஒரு வேளை அரை நிமிஷத்துக்கு மட்டும் பார்த்திருக்கலாம். மற்ற முகங்கள் எல்லாம் கண்ணாடியில் தென்பட்டவை போன்று

மறைந்துபோய் விடுகின்றன. நண்பனுடைய முகம் மட்டும் மனதில் ஆழ்ந்து படிந்துவிடுகிறது. அந்த நண்பன்மீது அவன் கொண்டிருந்த அன்பே அதற்குக் காரணமாகிறது. உடலமைப்பினிடத்து நிகழவேண்டியவைகள் எல்லாம் ஒரே பாங்கில்தான் இத்தனை மனிதர்களுடைய காட்சியைக் குறித்தும் நிகழ்ந்தன. தென்பட்ட ஒவ்வொரு மனிதனுடைய வடிவமும் கண் பார்வையில் படிந்தது. அவ்வடிவம் நரம்புகளின் வழியாக மூளைக்கு எடுத்துச்செல்லப்பட்டது. எனினும் மனதில் ஏற்பட்ட பதிவில் ஏற்றத்தாழ்வு உண்டாயிருக்கிறது. நாளெல்லாம் கண்ட முகங்களில் பல முன்பு அறிமுகம் ஆகாதவைகளாக இருந்திருக்கலாம். அவைகளைப்பற்றிய எண்ணமும் அம்மனிதனுடைய உள்ளத்தில் உதிக்கவில்லை. ஆனால் ஒரே ஒரு மனிதனுடைய முகவிலாசம் சிறிது நேரத்திற்குத் தென்பட்டது எனினும் அது ஆழ்ந்து இடம் பெறுவதாயிற்று. பலவருஷங்களாக அந்த நண்பனைப்பற்றி அம்மனிதன் நினைந்து மனதில் பதிவு பண்ணியிருந்திருக்கலாம். அந்த நண்பனைப்பற்றிய நூற்றுக்கணக்கான நிகழ்ச்சிகள் அம் மனிதனுடைய மனத்தில் ஞாபகத்தில் இருந்திருக்கலாம். இன்றைக்கு நண்பனை ஒரு நொடிப் பொழுதுகண்டதின் விளைவாக மனத்தகத்துப்புதைந்து கிடந்த நூற்றுக் கணக்கான நினைவுகளை தோற்றத்துக்குக் கொண்டுவருவதற்கு இக்குறுகிய காட்சி பயன் பட்டுவிட்டது. நூற்றுக்கணக்கான மற்ற மனிதர்களின் முகச்சாயல் அம்மனிதனுடைய உள்ளத்தில்

அமைத்த பதிவுகளை யெல்லாம் விடப் பன்மடங்கு ஆழ்ந்த பதிவை நண்பன் என்னும் ஒரு மனிதனுடைய வடிவம் அமைத்துவிட்டது. பற்றுதல் ஒன்றே அதற்குக் காரணமாயிற்று. எதனிடத்து மனிதன் பற்று வைக்கின்றானோ அது ஆழ்ந்த பதிவை மனதினிடத்து செலுத்திவிடுகிறது.

இதுதான் யோகி ஒருவனுக்கும் சாமான்ய மனிதன் ஒருவனுக்கும் இடையிலுள்ள வித்தியாசம். உலகப் பொருள்கள் பலவற்றினிடத்து சாமான்ய மனிதன் பற்றுமிக வைத்திருக்கிறான். யோகி ஒருவனோ பற்றற்ற நிலையில் இருக்கிறான். பற்றை ஒழித்துவிடுவது ஒன்றே முறையாக வினையாற்றுதற்கு உற்ற உபாயமாகும். உடல்வாழ்க்கையில் வினைகள் நிகழ்ந்துகொண்டிருக்கட்டும். மூளையிலுள்ள ஒவ்வொரு பகுதியும் அதனதன் வேலையைச் செய்துகொண்டிருக்கட்டும். தொடுத்த கர்மங்கள் இடையறாது நிகழ்ந்துகொண்டிருப்பன வாகுக. ஆனால் அத்தனைவித அலுவல்கள் மனத்தின்மீது ஓர் அலையையும் உண்டுபண்ணாதிருக்கட்டும். ஏற்பது இகழ்ச்சி என்பது கோட்பாடு. எதை ஏற்கலாகாது என்று விசாரித்துப் பார்க்கவேண்டும். வடிவங்களைக் கண்ணாடி விளக்கிக் காட்டுகிறது. ஆனால் அவ்வடிவங்களைக் கண்ணாடி ஏற்றுக்கொள்வது கிடையாது. யோகி ஒருவனுடைய மனது அந்தக் கண்ணாடிக்கு ஒப்பானதாய்விடுகிறது. சம்ஸ்காரம் அல்லது பதிவு எதையும் யோகியினுடைய மனது வாங்கிக் கொள்வதில்லை, வழிப்போக்கன் ஒருவன் வழியிலே

நடந்து செல்லுகிறான்; வேறாக வேற்றாரிலே போய்க்கொண்டிருக்கிறான். வழியில் தென்படுபவர்களையெல்லாம்பற்றிய பதிவுகளை அவன் மனதில் வாங்கிக்கொள்வதில்லை. தன்போக்கில் அவன் போகிறான். யோகி ஒருவன் அங்ஙனம் வினையாற்ற வேண்டும். கர்மயோகியினிடத்து இடையீடின்றிக் கர்மம் நிகழுகிறது. ஆனால் கர்மத்தில் அவன் பந்தப்படுவதில்லை. கொடியவைகளுள் மிகக்கொடியது கர்மபந்தம்.

இவ்வுலகம் நமக்கு நிலையாய இருப்பிடம் ஆகாது. பல அரங்கங்களில் நாம் வழித்தங்கி நம் குறியை நோக்கிச் சென்றாகவேண்டும். வழிநெடுக உள்ள தங்குமிடங்கள் பலவற்றுள் இவ்வுலகமும் ஒன்று. பாதையிலுள்ள வீடு ஒன்றைத் தனக்குச் சொந்தம் என்று வழிப்போக்கன் கருதலாகாது. அங்ஙனம் கருதி அவ்வீட்டிலேயே தங்கியிருக்க அவன் முயலுவானாகில் அவன் பலவந்தமாக அப்புறப்படுத்தப்படுவான். அதே பாங்கில் இம்மண்ணுலக வாழ்க்கையில் பற்று வைத்திருப்பவர்களை மரணம் அப்புறப்படுத்திவிடுகிறது. சாங்கிய தர்சனத்தில் உயர்ந்ததோர் கோட்பாடு பகரப்பட்டிருக்கிறது. சாதகன் ஒவ்வொருவனும் அதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். "ஆத்மா பரிபக்குவம் அடைவதற்காக பிரகிருதி அமைந்துள்ளது. பிரகிருதியினுள் கட்டுண்டு கிடப்பது ஆத்மாவின் குறிக்கோள் அல்ல."

இயற்கை எதற்காக இருக்கிறது என்னும் கேள்வி எழலாம். பள்ளிக்கூடம் ஒன்றின் தேவையைப்பற்றி

நாம் அறிகிறோம். அதேவிதத்தில் இயற்கை ஒரு பெரும் பள்ளிக்கூடமாக இருக்கிறது. ஜீவாத்மாக் களுக்குப் பாடம் புகட்டுதல் இப்பெரும் பள்ளியின் நோக்கமாகும். இயற்கை நிலைபெற்றிருப்பதில் வேறு அர்த்தம் ஒன்றுமில்லை. அறிவையும் அனுபவத்தை யும் பெறுதற்காகவே ஆத்மாக்கள் வாழ்ந்திருக்கின்றன. மெய்யறிவைப் பெற்றன பிறகு அவ் ஆத்மாக்கள் முக்தியடைந்து விடுகின்றன. மாணுக்கன் ஒருவன் பள்ளிக்கூடத்தோடு நெருங்கிய தொடர்வுவைத்திருக்க வேண்டும். ஆனால் அப் பள்ளிக்கூடத்திலேயே கட் டுண்டு கிடப்பது அவனுடைய குறிக்கோள் அல்ல. தன் படிப்பைப் பூர்த்தி பண்ணிக்கொண்டு பள்ளிக் கூடத்தைவிட்டு வெற்றிகரமாக வெளியேகுவது மாணுக்கனுடைய குறிக்கோள் ஆகிறது. அதேபாங்கில் இயற்கை என்னும் பள்ளிக்கூடத்தினின்று பெற வேண்டிய அனுபவங்களையெல்லாம் பெற்றன பிறகு இதைக்கடந்து அப்பாலுள்ள பெருநிலைக்கு ஜீவாத் மாக்கள் போய்விடவேண்டும். இக் கோட்பாட்டை ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் நாம் ஒருபொழு தும் இயற்கையில் கட்டுண்டவர்கள் ஆய்விடமாட் டோம். புஸ்தகம் ஒன்றை நன்றாகக் கற்றன பிறகு அப் புஸ்தகத்தால் பண்டிதன் ஒருவனுக்கு ஒரு பயனு மில்லை. ஜீவாத்மாக்கள் பாடம் கற்பதற்கென்று அமைந்துள்ள பெருநூல் இப்பிரகிருதி. பிரகிருதியில் ஜீவர்கள் வாழ்ந்துவரும் வாழ்க்கையே அவர்கள் கற்கின்ற பாடமாகிறது. இன்ப துன்பங்கள் மயமாகப்

பாடங்கள் வந்து அமைந்துகொண்டிருக்கின்றன. அவைகளை அனுபவிப்பதன்மூலம் ஜீவர்கள் மேலும் மேலும் அறிவைப் பெற்றுவருகின்றார்கள். மெய்யறிவைப் பெற்றான பிறகு இயற்கை என்னும் புஸ்தகத்துக்குத் தேவை ஒன்றும் இல்லை; அதைப் புறக்கணித்துவிடலாம். இயற்கைக்கும் ஜீவாத்மாக்களுக்கும் இடையிலுள்ள தொடர்பு இதுவேயாம். ஆனால் உயிர்களில் பலபேர் இவ்வுண்மையை ஓர்ந்து அறிந்துகொள்வதில்லை. இயற்கையின்கண் முற்றிலும் மூழ்கியவர்களாக அவர்கள் ஆய்விடுகிறார்கள். இயற்கையின் நடைமுறைக்காகவென்றே தாங்கள் வாழ்ந்திருப்பதாகவும் பலபேர் எண்ணிக்கொள்கிறார்கள். உயிருக்காக என்று உடல் இருக்கிறது. ஆயினும் பலர் செய்யும் செயல் யாது? உடலுக்காகவென்று அவர்கள் தங்கள் உயிரைக்கொடுக்க ஆயத்தமாய் இருக்கிறார்கள். இக்கோட்பாட்டை இன்னொரு பாங்கில் பகரலாம். வாழ்க்கைத் தத்துவத்தை அறியாத மனிதன் ‘உண்பதற்காக உயிர் வாழ்ந்திருக்கிறான்.’ ‘உயிர் வாழ்ந்திருப்பதற்காக உண்ணுதல்’ என்னும் கோட்பாட்டை அவன் அறவே மறந்துவிடுகிறான். இத்தகைய தவறுதலை திரும்பத் திரும்பப் பலபேர் செய்துகொண்டிருக்கின்றனர். தங்களுக்கு தேகம்போன்று அமைந்துள்ள இயற்கையே தங்களுடைய நிஜ சொரூபம் என்று பலர் எண்ணி வருகின்றனர். அதனால் இயற்கையின்கண் அவர்களுக்குப் பெரும் பற்றுதல் உண்டாகிவிடுகிறது. இத்தகைய பற்றுதலால் தாங்கள்

இயற்கை மயம் என்னும் ஆழ்ந்த சம்ஸ்காரம் அவர்களுடைய மனத்தின்கண் பதிந்துவிடுகிறது. மாற்ற முடியாத அந்த எண்ணம் மற்றொரு தீமையில் ஜீவர்களைக் கொண்டுசேர்க்கிறது. விடுதலைக்காகவென்று வினையாற்றுதற்கு மாறாக அடிமைவாய்ப்பட்டவர்களாக இருந்துகொண்டு அன்னவர்கள் வினையாற்றி வருகின்றார்கள். இயற்கையில் கட்டுப்படாதிருப்பவர் முக்தி நெறியில் முன்னேறுபவர் ஆகின்றனர். இயற்கையில் கட்டுண்டு கிடப்பவர் மேலும் மேலும் அடிமைவாய்ப்பட்டவராகின்றனர்.

ஜீவர்கள் கற்றுக்கொள்ளவேண்டிய பாடத்தை சுருக்கமாக இங்ஙனம் சொல்லிவிடலாம்: ஜீவன் ஒருவன் தன் வாழ்க்கைக்குத் தலைவனாய் இருந்துகொண்டு இயற்கையின்கண் சிறிதேனும் தளைக்கப்பெறாதவனாக வினையாற்றவேண்டும்; இயற்கையின்கண் தளைக்கப்பெற்று அடிமையாக வினையாற்றலாகாது. இடையறாது வினையாற்றிக்கொண்டிரு. ஆனால் எதற்கும் அடிமையாய் இருந்துகொண்டு வினையாற்றாதே. உயிர்கள் அனைத்தும் ஓயாது வினையாற்றிக்கொண்டிருக்கின்றன என்பதை நீ காணவில்லையா? வினையாற்றாது அடங்கியிருக்க யாருக்கும் இயலாது. எல்லாரும் ஏதேனும் ஒருவிதத்தில் வினையாற்றிக்கொண்டே இருந்தாகவேண்டும். அப்படி வினையாற்றுபவர்களில் கிட்டத்தட்ட அனைவரும் அடிமைகளாக இருந்துகொண்டு வினையாற்றுகிறார்கள். துன்பமே அதன் விளைவு ஆகிறது. எவன் ஒருவன் கட்டுண்டு

கிடந்து செயல் புரிகின்றானோ அவன் துன்பத்திலிருந்து தப்பித்துக்கொள்ளமுடியாது. ஒரு மனிதனைக்கட்டும் தளைகளுள் சுயநலம் என்பது மிகக்கொடிய தளையா கின்றது. சுயநலத்துக்கு அடிமைப்பட்டவர்களாகப் பலர் அல்லும் பகலும் அல்லல்பட்டு வருகின்றனர். யோகி ஒருவன் அங்ஙனம் வினையாற்றலாகாது. சுய நலத்திலோ அல்லது வேறு எந்தவிதமான தளையிலோ கட்டுண்ணாதவனாக இருந்துகொண்டு அவன் வினை யாற்றவேண்டும். ஆசையில் கட்டுப்படாதவனே விடு தலையை அறிகின்றான். ஆசைக்கு அடிமைப்படா திருந்து வினையாற்று. தூய அன்பில் நிலைபெற்றிருந்து வினையாற்று. தூய அன்பு எது என்பதை அறிந்து கொள்ளுதல் மிகக் கடினமானது. ஆசையின் வசப் பட்டிருப்பவனுக்குத் தூய அன்பு இல்லை. ஆசைகள் அனைத்திடத்திருந்தும் முக்தியடையாதவனுக்குத் தூய அன்பு உதயமாவதில்லை. அடிமை ஒருவனுக்குத் தன்னைக் கட்டியாளுகின்றவனிடத்து உண்மையான அன்பு ஒருபொழுதும் உண்டாவதில்லை. அடிமை ஒருவனை விலைகொடுத்து வாங்கி அவனை சங்கிலியில் கட்டிவைத்துக்கொண்டு வேலை வாங்கினால் அவன் வேலைசெய்வது திண்ணம். ஆனால் அவன் மகிழ்வுடன் வேலைசெய்யமாட்டான், அன்புடன் வேலைசெய்யமாட் டான்; சலித்துக்கொண்டு மனம் நொந்து போன வனாக அவன் வேலை செய்வான். அத்தகைய வினை அன்பினின்று உதித்ததன்று. தூய அன்பை அந்த அடிமையினிடத்திருந்து எதிர்பார்ப்பது வீண்.

அந்த அடிமை நிலையில் நம்மில் பலபேர் இருக்கின்றோம். உலகப்பொருள்கள் பலவற்றிற்கும், போகங்கள் பலவற்றிற்கும் நம்மில் பலபேர் அடிமைகளாக ஆய்விட்டோம். பொருளாசையும் போகத்தில் ஆசையும் நம்மைக் கட்டித்தளைத்திருக்கும் தளைகள் ஆய்விட்டன. அவ் ஆசைகளின் வசப்பட்டு நாம் வினையாற்றுகிறோம். ஆதலால் நம்மிடத்து உண்மையான அன்பைக் காணமுடியாது. உண்மையான தொண்டு புரிபவர்களும் நாம் அல்லர். பலபேர் தங்களுடைய உற்றார் உறவினர்களுக்காகவென்றும் நண்பர்களுக்காகவென்றும் வினையாற்றுகின்றார்கள். அப்படி அவர்கள் உழைப்பதைத் தொண்டு என்று சொல்லலாகாது. பந்தபாசத்தில் கட்டுண்டு கிடப்பவர்களாக அவர்கள் செயல்புரிகின்றனர். இன்னும் பலர் தங்களுடைய சுயநலத்துக்காகவென்றே உழைக்கின்றனர். எங்குப் பற்றுதலும் சுயநல நோக்கமும் இருக்கின்றனவோ அங்குத் தொண்டுக்கு இடமில்லை. சுயநலத்தால் தூண்டப்பெற்றுச் செய்கின்ற செயல்கள் அனைத்தும் அடிமையினுடைய செயல்களாம். சுயநலப் பற்றுதலுடன் செய்கின்ற செயல் எது என்பதையும், சுயநலப்பற்றற்றுச் செய்கின்ற செயல் எது என்பதையும் அறிந்துகொள்ளுதற்கு உபாயம் ஒன்று உளது. பற்றற்றுச் செய்கின்ற செயல் ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறது. மனதுக்குள் அமைதி மேலும் மேலும் அமைகிறது. பற்றற்றுப் பணிவிடை புரிகின்றவன் அருள் நிலைக்கு அருகதை உடையவனாகின்றான். வாழ்

வில் போலி வாழ்வு என்பதும் பெருவாழ்வு என்பதும் ஒன்றோடொன்று ஒவ்வாதவைகள். பரநலத்துக் கென்று வாழ்பவனே பெருவாழ்வு வாழ்கின்றான். சுய நலத்துடன் வாழ்பவனுக்குக் கிட்டுவது போலிவாழ்வு. பெருவாழ்வு மெய்யறிவை வளர்க்கிறது. பெருவாழ்வு வாழ்கின்றவனுக்குத் தூய அன்பும் உள்ளத்தில் உரு எடுக்கிறது. பெருவாழ்வும், பேரறிவும், பேரன்பும் பிரிக்கமுடியாத பாங்கில் இணைக்கப்பட்டிருக்கின்றன. ஆத்மாவுக்குரிய மூவித இயல்புகள் என்று இவைகளைச் சொல்லவேண்டும். இம்மூன்றனுள் ஏதேனும் ஒன்று உறுதிபெறுங்கால் மற்ற இரண்டும் தாமாக உறுதி பெறுகின்றன. ஆத்மாவின் சொரூபம் என்றே இந்த மூன்று இயல்புகளைப்பற்றி இயம்பலாம். சத் - சித் - ஆனந்தம் என்று இம்மூவித சொரூபத்தை சாஸ்திரங் கள் சாற்றுகின்றன. ஆத்மாவின்கண் உள்ள சத் சொரூபம் கால தேச வர்த்தமானத்தில் கட்டுப்பட்ட தாய் விடுங்கால் அது உலகமாகக் காட்சிகொடுக்கிறது. சித் அல்லது அறிவு சொரூபம் காலதேசவர்த்தமானத் தில் கண்டுண்டு கிடப்பதாகக் காட்சிகொடுக்குங்கால் அது இவ்வுலகுக்குரிய ஞானமாய் விடுகிறது. இனி, ஆனந்த சொரூபம் கால தேச வர்த்தமானத்தில் கட்டுண்டு போய்விட்டால் அது உலகத்துக்குரிய பல வகைப்பட்ட இன்பங்களாகக் காட்சி கொடுக்கிறது. உலக பந்தபாசங்களாகவும் அப்பொழுது அது வடி வெடுக்கிறது. ஆக, இவ்வுலகில் நாம் காணும் பற்றுகள் அனைத்தும் ஆத்மாவின்கண் உள்ள ஆனந்தசொரூப

மேயாம். அது இயற்கையினூடு இங்ஙனம் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறது. உலகத்துக்குரிய அன்பைத் தூய தெய்வீக அன்பாக நாம் மாற்றியமைக்குங்கால் நமது நிஜ சொரூபமாகிய ஆனந்தசொரூபம் நமக்கு விளங்குகிறது. பாசம் என்னும் மலத்தோடு கலங்கிய அன்பு துன்பத்தை உண்டுபண்ணக்கூடியது. அன்பு பாராட்டுகிறவன் துன்பப்படுவானாகில் அவனுடைய அன்பில் அழுக்கு இருக்கிறது. மேலும் அன்புக்கு இலக்காக அமையும் உயிர்க்கு அவ்வன்பினின்று துன்பம் தோன்றுமாயின் அப்பொழுதும் அவ் அன்பில் அழுக்கு இருக்கிறது. நேசிக்கும் உயிர், நேசிக்கப்படும் உயிர் ஆகிய இரண்டு உயிர்களுக்கும் துன்பம் கலவாத பேர் இன்பம் பெருகுமாயின் அது தூய அன்பின் விளைவாம்.

ஈண்டு சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். மகன் ஒருவன் மகள் ஒருத்தியை நேசிக்கிறான். அவன் அவளை முற்றிலும் தனக்கு உரியவளாக ஆக்கிக் கொள்ள ஆசைப்படுகிறான். சுயநலத்தின் உச்சநிலை அது. தான் நேசிக்கும் தலைவியின் நடை, உடை, பாவனைகளில் அவன் கண்ணும் கருத்துமாய் இருக்கிறான். எங்கு அவள் தனக்கே உரியவள் ஆகாதுபோய் விடுகின்றாளோ என்கின்ற ஐயம் அவனுக்கு அடிக்கடி உண்டாகிறது. அவளுடைய நடமாட்டத்தைப் பொறுக்கமாட்டாதவனாக அல்லும் பகலும் அவளைத் தன் கண்காணிப்பிலேயே வைத்துக்கொள்ள அவன் பெரிதும் விழைகிறான். தன் அருகிலேயே அவள்

அமர்ந்திருக்கவேண்டும் என்றும் தன் முன்னிலை யிலேயே அவள் நின்றுகொண்டிருக்க வேண்டுமென் றும் அவன் மோகம் கொள்ளுகிறான். தன் தலைவி உண் பதும் நகர்வதும் தன் ஆணைக்குட்பட்டே இருக்க வேண்டுமென்று அவன் எண்ணுகிறான். இது தூய அன்பு அல்ல. இந்நிலையைத்தான் பந்தபாசம் என்று சொல்லவேண்டும். தன் தலைவிக்கு அவன் அடிமை யாய்விட்டான். ஆதலால் தன் செயலுக்குப் பிரதிச் செயலாக அவள் தனக்கு அடிமை ஆகவேண்டுமென்று அவன் ஆசைப்படுகிறான். இங்ஙனம் இருதரத்தா ரிடத்தும் அடிமைத்தனத்தை வளர்ப்பது அன்பு ஆகாது. காதலில் கட்டுண்டு கிடப்பவர்கள் உண்மையில் அடிமைகளேயாம். மயக்கத்தை உண்டுபண்ணும் அக்காதல் மெய்யன்பு என முறைதவறிக் கருதப்படு கிறது. இதை மெய்யன்பு என்று ஏன் சொல்லலாகாது என்பதற்குக் காரணம் உண்டு. மெய்யன்பு ஒருநாளும் துன்பத்தை உண்டுபண்ணுவதில்லை. ஆனால் குழம்பிய இக்காதல் துன்பத்தை உண்டுபண்ணவல்லது. தன் விருப்பத்துக் கேற்றவாறு தலைவி நடந்துகொள்ள வேண்டுமென்று தலைவன் ஆசைப்படுகிறான். அப்படி அவள் நடந்துகொள்ளாவிட்டால் அவனுக்குப் பெருந் துன்பம் உண்டாகிறது. ஆக, காதல் துன்பத்தில் முடி வுறுகிறது. மெய்யன்பிலோ துன்பத்துக்குச் சிறிதே னும் இடமில்லை. மெய்யன்பு மேலும் மேலும் ஆனந் தத்தை வளர்க்கிறது. எது ஆனந்தத்தை வளர்ப்ப தில்லையோ அது அன்பு அல்ல. வேறு ஏதோ ஒரு

மனநிலை அன்பு என்று தவறுதலாகக் கருதப்படுகிறது. மயக்கம் நிறைந்த பற்றுதலை மனிதன் வளர்க்கலாகாது. மெய்யன்பையே அவன் மேலும் மேலும் வளர்த்துவர வேண்டும். கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் உண்மையாக நேசிக்கக் கற்றுக்கொண்டால், பெற்றோர் தங்களுடைய குழந்தைகளை உண்மையாக நேசிக்கக் கற்றுக்கொண்டால், பின்பு அவர்கள் உலகனைத்தை யும் மெய்யன்போடு நேசிக்கக் கற்றுக்கொண்டால், " இன்பமே எந்நாளும் துன்பமில்லை " என்னும் பரந்த மனநிலை தானே வந்தமைவதாகும். துக்கத்துக்கும் பொறாமைக்கும் ஆங்கு இடமில்லை. சுயநல உணர்வு அ ேவ அகன்று போய்விடுகிறது. யாரிடத்து அத் தகைய பேரன்பு பெருக்கெடுக்கிறதோ அத்தகைய பெருமகனே பற்றற்ற நிலையை அடைந்திருக்கின்றான் என்று நாம் பகரலாம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் இங்ஙனம் பகர்ந்துள்ளார்: " அர்ஜுனா, எனது இயல்பைப் பார். ஒரு நொடிப் பொழுதுக்கு நான் வினையாற்றாது வெறுமனே இருந்து விட்டால் அண்டங்கள் அனைத்தும் அடிபட்டுப்போய் விடும். வினையினின்று நான் அடைய வேண்டிய ஊதி யம் ஒன்றுமில்லை. அனைத்துக்கும் நானே ஈசன் எனி னும் நான் ஏன் வினையாற்றுகிறேன்? உலகின்மீது நான் அன்பு கொண்டிருப்பதால் அங்ஙனம் செயல் புரிந்து வருகிறேன்." மெய்யன்பு ஒரு நாளும் பற்று தலை உண்டுபண்ணுவதில்லை. கடவுள் மெய்யன்பு சொரூபம். அன்பே கடவுள் என்பது கோட்பாடு.

அவரிடத்துப் பற்றுதல் சிறிதேனும் இல்லையாதலால் அவர் அன்பு சொரூபமாய் இருக்கிறார். மெய்யன்பு உதிக்குமிடத்துப் பற்றுதல் தானே அகன்றுவிடுகிறது. பற்றுதல் எங்கு இருக்கிறதோ, உலகப் பொருள்களை உறுதியாகப் பிடித்துக்கொள்ளுதல் என்னும் பாங்கு எங்கு இருக்கிறதோ அங்கு ஜடவஸ்துவிடத்து வைத்துள்ள பந்தம் இருக்கிறது என்று அறிந்துகொள்க. ஜடவஸ்துவினிடத்து ஜடவஸ்துவுக்கு உண்டாகின்ற கவர்ச்சியே அன்புபோன்று தென்படுகிறது. இரண்டு வடிவங்கள் ஒன்றனிடத்து ஒன்று கவரப்படும் நிலையில் இருக்கின்றன. அவைகள் ஒன்றை ஒன்று அணுக இயலாவிட்டால் துன்பம் உண்டாகிறது. ஆனால் எங்கு மெய்யன்பு இருக்கிறதோ அங்கு ஜடப்பொருள்கள் ஒன்றை ஒன்று கவர்ந்து இழுக்கும் பாங்கு கிடையாது. ஓர் உடலினிடத்து மற்றோர் உடல் கவர்ந்து இழுக்கப்படும் நிலை ஒரு நாளும் அன்பு ஆகாது. இரண்டு மெய்யன்பர்கள் ஆயிரம் மைலுக்கு அப்பால் பிரிந்திருக்கலாம். அத்தகைய பிரிவு அவர்களுக்குத் துன்பத்தை விளைவிப்பதில்லை. எட்ட இருந்துகொண்டிருப்பதற்கிடையிலும் அவர்கள் ஒருவரை ஒருவர் உள்ளன்போடு நேசித்து வருகிறார்கள். சரீரங்கள் பிரிந்திருப்பதால் அவர்களுடைய அன்பு அடிபட்டுப்போவதில்லை. மெய்யன்பினின்று துன்பம் என்னும் எதிர்ச்செயல் ஒரு நாளும் உண்டாவது கிடையாது.

இத்தகைய பற்றற்ற நிலையைப் பெறுதற்கு ஒருவன் ஆயுட்காலம் முழுதும் முயன்றாகவேண்டும்.

எவன் ஒருவன் பற்றற்ற நிலையை அடைந்துவிடுகின்றுனே அவன் அன்பு நிலையை அடைந்தவன் ஆகிருன். அதே வேளையில் அவன் பந்த பாசங்களிலிருந்து முக்தி அடைந்தவனும் ஆகிருன். இயற்கையின்கண்ணுள்ள பந்தமனைத்தும் அத்தகைய மனிதனிடத்திருந்து நழுவிப் போய்விடுகின்றன. பந்தங்கள் அகன்றுன பிறகு இயற்கையின் மெய்க்காட்சி சாதகனுக்கு உள்ளபடி விளங்குகிறது. பந்தம் என்னும் பாசக் கயிற்றினை இட்டுக் கட்டிப்பிடிக்க வல்லதாயிருப்பது இயற்கை. ஆனுல் அன்பின் நிலையை அடைந்தவனை இயற்கை அத்தகைய பந்த பாசங்களைப் போட்டுத் தளைத்து விடுவதில்லை. சாதகன் ஒருவன் அப்பொழுது ஜீவன் முக்தி நிலையை அடைந்து விடுகிருன். தான் ஆற்றிவரும் வினையின் விளைவு யாது என்பதையும் அவன் கருத்தில் வாங்கிக் கொள்வதில்லை. தனக்கு வந்து வாய்க்கும் வினைப்பயன் யாது என்பதைப்பற்றிப் பின்பு அவன் சிந்திப்பதே கிடையாது.

ஒவ்வொரு மனிதனும் தன் குழந்தைகளுக்குத் தன்னிடத்திருக்கும் பொருள்களை எடுத்து வழங்குகிருன். அதற்குக் கைம்மாருக அக்குழந்தையினிடத்திருந்து எதையேனும் எதிர்பார்க்கின்றுனு? ஒருபொழுதும் இல்லை. தன்னிடத்திருப்பவைகளை தன் மக்கட்கு எடுத்து ஓயாது வழங்குவது மனிதனுடைய கடமையாகின்றது. இந்த எண்ணம் பொதுவாக எல்லா உயிர்களிடத்தும் வந்துவிடவேண்டும். மற்றவர்களுக்காக யோகி ஒருவன் பணிவிடை செய்து பழகு

கிறான். அங்ஙனம் தொண்டுபுரிவதோடு அவனுடைய கடமை முடிந்துவிடுகிறது. ஒரு தனி மனிதனுக்கு ஏதேனும் ஒரு விதத்தில் கைங்கரியம் செய்யவேண்டிய நிலைமை அவனுக்கு ஏற்படுகிறது. பின்பு ஓர் ஊர் முழுதுக்குமே ஒரு மனிதன் தன் கடமையைச் செய்ய வேண்டியிருக்கும். அதில் அவன் நாளடைவில் உறுதி பெற்றவன் ஆகிறான். இன்னும் அதற்குமேல் மாகாணம் முழுதுக்குமே தான் செய்து முடிக்கவேண்டிய கடமை வந்து அமையலாம். அப்படி ஏற்படுகின்ற கடமையைப் பிரதிபலன் கருதாது செய்ய அவனுக்கு இயலுகிறது. தன் குழந்தைகளுக்கு ஒரு மனிதன் எப்படி தன் கடமையைச் செய்கின்றானோ அப்படி சமுதாயம் முழுதுக்குமே செய்து முடிக்க அவன் வல்லவனாகிறான். பிரதிபலன் எதையும் யாரிடத்திருந்தும் எதிர்பார்க்கலாகாது. கொடையாளி ஒருவனுடைய நிலையில் யோகி இருக்கவேண்டும். தன்னிடத்திருக்கின்ற அனைத்தையும் அத்தகைய வள்ளல் பிறர்க்கெடுத்து வழங்கிக் கொண்டே போகின்றான். அப்படி வழங்குகின்றவன் உலகத்திடத்திருந்து கைம்மாறு எதையும் எதிர்பார்ப்பதில்லை. கைம்மாறு கருதாது ஓயாது வழங்கிக் கொண்டிருப்பவனுக்குக் கர்மபந்தம் ஒன்றும் உண்டாவதில்லை. பிரதிபலனை எதிர்பார்க்கின்றவனிடத்தே பற்றுதலும் உண்டாகிறது. ஆக, கர்மம் மனிதனுக்குக் கெடுதல் செய்கிறதில்லை, கர்மபந்தமே மனிதனுக்குக் கெடுதல் செய்கிறது. பற்றற்றவனாய் இருந்துகொண்டு யோகி வினையாற்றுகிறான்.

அடிமைகளாக இருந்து வினையாற்றுகின்றவர்களுக்கு சுயநலம் அதிகரிக்கிறது. வினைப்பற்றும் அவர்களுக்கு உண்டாகிறது. ஆனால் தங்களுடைய மனதை முற்றிலும் கட்டியாளுகின்ற நிலையிலிருந்து கொண்டு வினையாற்றுகிறவர்கள் யாரோ சிலர் இருக்கின்றனர். தலைவர்கள் என்று அவர்களையே இயம்ப வேண்டும். அத்தகையவர்களுக்கு சுயநலப்பற்று ஒன்றும் கிடையாது. கரவாது எடுத்து வழங்குவதால் அவர்களுக்குப் பற்றற்ற நிலை தானாக வந்தமைகிறது. பற்றற்ற நிலையினின்றே பேரின்பம் பிறக்கிறது. மனிதனுக்குரிய உரிமைகளைப்பற்றியும், நீதியைப்பற்றியும் பலர் பேசுவதை நாம் அடிக்கடி கேட்கிறோம். இப்படி உரிமையையும், நீதியையும் பற்றிப் பேசுகின்ற பேச்சு எல்லாம் பாலர்களுடைய பேச்சு ஆகும். அக்கூற்றை ஆழ்ந்து ஆராயுமிடத்து சுயநலப்பற்றினின்று அப்பேச்சு எழுகிறது என்பது புலனாகும். மக்கள் புரிகின்ற செயல்களுக்குத் தூண்டுதல் அளிப்பவைகளாக இரண்டு இயல்புகள் அமைந்திருக்கின்றன. தங்களுடைய அதிகாரத்தை நிலைநாட்ட முயலுவது ஓர் இயல்பு. பிறரிடத்துப் பச்சாதாபமோ இரக்கமோ அன்போ பூண்டு புரியும் பணி மற்றொரு இயல்பினின்று உதிப்பதாகும். தன்னுடைய வல்லமையை நிலை நாட்டுதற்கென்று எடுத்துக்கொள்ளும் முயற்சிகள் எல்லாம் சுயநலத்தினின்று வருபவைகள் ஆகும். மாந்தருக்குச் சில அதிகாரங்களும் வசதிகளும் உரிமைகளும் இயல்பாக அமைந்திருக்கின்றன. அத்தகைய

அனுகூலமான அமைப்புகளை சந்தர்ப்பம் வாய்க்கின்ற பொழுதெல்லாம் முற்றிலும் பயன்படுத்திக்கொள்ளு தற்கே ஆடவரும் மகளிரும் முயன்று வருகின்றனர். அத்தகைய முயற்சியில் அவர்களைத் தூண்டுவது சுய நலம் என்னும் இயல்பேயாம். இரக்கம் என்பது இதற்கு நேர்மாறானது. பிரதிபலன் எதையும் எதிர் பாராது பிறரிடத்து காருண்யம் காட்டுதல் தெய்விக இயல்பு ஆகும். அன்பும் அனுதாபமும் இரக்கமும் கருணையும் ஓயாது காட்டுகின்றவர்களிடத்தே நலம் என்னும் பேரியல்பு நிலைபெற்றிருக்கிறது. நீதியையும் உரிமையையும் வழங்குதலிலோ, தேடுதலிலோ குறை யில்லை. ஆனால் நீதியையும் உரிமையையும் கேட்பவர் களிடத்தும் வழங்குபவர்களிடத்தும் காருண்யம் நிறைந்திருக்க வேண்டும்.

யோகி ஒருவன் கைம்மாறு எதையும் கருத்தில் கொள்ளாது வினையாற்றுகிறான். தான் புரிகின்ற பணி விடைக்குப் பிரதிபலனாகத் தனக்கு ஏதேனும் வந்து அமையவேண்டும் என்று ஒருவன் எண்ணுவானாகில் அவனுடைய ஆத்மீக வளர்ச்சி அதனால் தடைப்படு கிறது. ஆத்மசாதனம் தடைப்படுவதோடு நின்றுவிடுவ தில்லை. பிரதிபலனை எதிர்பார்த்துச் செய்கின்ற ஒவ் வொரு செயலும் இறுதியில் துன்பத்தை உண்டு பண்ணிவிடுகிறது. கைம்மாறு கருதாது வினையாற்று கின்றவனே யோகி ஆகிறான். அவன் ஆற்றும் வினையை மற்றொருவிதத்தில் கருதுவது உசிதமாகிறது. ஜீவர் கள்மீது வைத்துள்ள காருண்யத்தால் தன் கடமை

யைச் செய்வது என்பது சாலச்சிறந்தது. ஆயினும் சில வேளைகளில் அத்தகைய ஜீவகாருண்யத்துக்கு அடிப்படையாக அகங்காரம் உதித்துவிடுவதுண்டு. ஜீவர்களிடத்து நான் காருண்யம் காட்டுகிறேன் என்கின்ற எண்ணமே அகங்காரத்தை வளர்க்க வல்லதாகிறது. ஆதலால் அகங்காரம் தலையெடுக்காத வண்ணம் யோகி கர்மம் செய்வதற்கு மற்றொரு உபாயம் உண்டு. கர்மம் செய்வதைக் கடவுள் ஆராதனையாகச் செய்வது மிக மேலானது. கைங்கரியம் கணக்கற்ற வடிவங்கள் எடுக்கவல்லது. யோகி ஒருவன் எக்கர்மத்தைச் செய்தாலும் அதைக் கடவுள் ஆராதனையாகச் செய்துபழகுதல் உத்தமமானது. மக்கள் எல்லோரும் கடவுளின் குழந்தைகள். மக்களுக்குச் செய்கின்ற பணிவிடையே கடவுள் ஆராதனையாகிறது. ஆருயிர்களுக்கு யோகி ஆற்றும் பணிகள் எல்லாம் ஆண்டவனுக்குரிய பணிவிடைகள் ஆய்விடுகின்றன. ஆண்டவனுக்குரிய ஆராதனை உயிர்கள் பலவற்றுக்கும் பணிவிடையாக நிகழ்த்தப்படுகிறது என்கின்ற எண்ணத்தில் யோகி நிலைத்திருப்பானாகில் அகங்காரம் தலையெடுக்காது. தான் புரிகின்ற பணிவிடைக்குக் கடவுள் தனக்கு நன்றி செலுத்த வேண்டும் என்கின்ற எண்ணம் யோகிக்கு வருவதில்லை. ஆதலால் உயிர்கள் தனக்கு நன்றி செலுத்தவேண்டும் என்கின்ற எண்ணமும் அவனுடைய உள்ளத்தில் உதிப்பதில்லை. தான் வழிபடுகின்ற தெய்வத்துக்கு அர்ப்பணமாக தன்னுடைய கடமையைச் செய்கிறான். தன்னுடைய

ஆராதனையைக் கிருபைகூர்ந்து ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், அங்கீகரித்துக்கொள்ள வேண்டுமென்றும் அவன் கடவுளிடம் பிரார்த்திக்கிருன். எனவே பணிவிடையின் மூலமாக அகங்காரம் வலுத்து வருவதற்கு மாருக அது அறவே தேய்ந்துபோய்விடுகிறது. இத்தகைய மனப்பான்மையுடன் ஓயாது உழைத்து வருவதே நல்ல கர்ம யோகமாகிறது. எத்தனை விதமான கர்மங்களை வேண்டுமாஞலும் கர்மயோகி செய்துகொண்டே இருக்கலாம். அவன் ஆற்றுகின்ற அரும்செயலுக்குக் கைம்மாருக உலகத்தார் தனக்கு எதை நல்குகின்றனர் என்று கர்மயோகி கணப்பொழுதும் சிந்திப்பதில்லை. ஈசுவரனிடத்துள்ள சிறந்த பாங்கு இந்தக் கர்மயோகியினிடத்தும் நாளடைவில் வந்து அமைந்துவிடுகிறது. ஈசன் இடையருது வினையாற்றி வருகிருர். அதற்கிடையில் எவ்வினையிலும், எதனிடத்தும் பற்றற்ற நிலையில் ஈசுவரன் இருக்கின்ருர். அந்த நிலை யோகிக்கு வந்துவிடுகிறது. தாமரையிலைபோன்றவஞக யோகி ஆய்விடுகிருன். தண்ணீரிலே பிறந்து தண்ணீரிலே வளர்ந்து தண்ணீரிலேயே தாமரையிலை நிலைபெற்றிருக்கிறது. ஆயினும் ஒரு துளி தண்ணீரும் தன்மீது ஒட்ட அது இடம் தருவதில்லை. அங்ஙனம் யோகியினுடைய வாழ்வு முற்றிலும் கர்மசொருபமாய் இருக்கிறது; ஆஞல் கர்மம் அவனை பந்தப்படுத்துவதில்லை. சுயநலப்பற்றை விட்டவனுக்கே இத்தகைய பெரு நிலை வந்தமைகிறது. பற்று நீங்கிய யோகி ஒருவன் எத்தகைய சூழ்நிலையில் வேண்டு

மானாலும் வசித்திருக்கலாம். பாபங்கள் பல நிறைந்த ஒருபெரிய பட்டணத்தில் அவன் வாழ்ந்திருந்தாலும் மற்ற உயிர்களிடத்துள்ள தீமைகள் அந்த யோகியின் உயர்ந்த நிலையை வந்து பாதிக்கமாட்டா.

தான் ஆற்றும் வினையின் மூலம் 'தான், தனது' என்பனவற்றை அறவே துறந்துவிடுகின்றவன் நல்ல யோகி ஆகின்றான். இந்த மேலாம் கோட்பாட்டை நன்கு விளக்கவல்ல வரலாறு ஒன்று உண்டு:- குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் மஹாபாரத யுத்தம் நிகழ்ந்தது. அதில் பாண்டவர்கள் வெற்றியடைந்தனர். பிறகு ராஜசூய யக்ஞம் என்னும் பெரிய வேள்வி ஒன்று வேட்டினார்கள். அந்த யாகம் நடைபெற்றுக் கொண்டிருந்தபொழுது செல்வத்தை ஏராளமாக அவர்கள் வாரி எடுத்து வழங்கிவந்தார்கள். பாத்திரத்துக்கு ஏற்றவாறு பொருள் பெருமிதமாக பகிர்ந்து கொடுக்கப்பட்டது. இதைப்பார்த்த மக்கள் பெருவியப்படைந்தனர். இவ்வளவு பெரிய யாகத்தை இவ்வையகத்தில் முன்பு யாரும் நிகழ்த்தியதில்லை என்று அவர்கள் பாராட்டினார்கள். செல்வத்தை இப்பாங்கில் செலவிட முன்பு யாரும் முன்வந்ததில்லை என்றும் மொழிந்தார்கள். அத்தகைய பெருவேள்வி முற்றுப்பெறும் தறுவாயில் கீரிப்பிள்ளை ஒன்று அந்த யாகசாலைக்குள் ஓடிவந்தது. அந்த ஜந்துவின் உடலமைப்பில் புதுமை ஒன்று புலனாயிற்று. அதன் உடலில் செம்பாதி பொன்னிறமாய் இருந்தது. மற்ற பகுதி அதற்கு இயல்பாகிய சாம்பல் நிறம் உடைத்திருந்தது.

யாகசாலைக்குள் வந்த கீரிப்பிள்ளை தரையின் மீது படுத்துப்புரண்டது. பிறகு எழுந்து நின்று "இந்த யாகத்தை மெச்சுகிற நீங்கள் அனைவரும் பொய் பேசுபவர்கள். இது ஒரு யாகத்தோடு சேர்ந்தது அல்லவே அல்ல" என்றது அந்தக்கீரி. அதன் சொல்லுக்குச் செவி கொடுத்தவர்கள் மேலும் மொழியலாயினர்: "ஆ! இது யாகம் அல்ல என்று சொல்லுகின்றாயா? செல்வம் என்ன பாங்கில் மக்களுக்கிடையில் எடுத்து வழங்கப்படுகிறது என்பதை நீ காணவில்லையா? இந்த யாகத்தைப்பார்க்க வந்தவர்கள் அனைவரும் பணக்காரர் ஆய்விட்டனர். அவர்கள் மகிழ்வுற்றிருக்கின்றனர். இதெல்லாம் உனக்கு விளங்கவில்லையா? இது காறும் மாந்தர் நிகழ்த்தியுள்ள யாகங்களில் இதுவே மிக மிக மேலானது."

அவர்கள் மொழிந்ததற்கு மறுமொழியாக கீரி மேலும் பகர்வதாயிற்று: "கொஞ்ச காலத்துக்கு முன்பு குக்கிராமம் ஒன்றில் ஏழை அந்தணன் ஒருவன் வசித்து வந்தான். அவனுக்கு மனைவியும் ஒரு மகனும் இருந்தார்கள். நாளடைவில் அம்மகனுக்கும் மணம் முடிந்தது. எனவே அக்குடும்பத்தில் நான்கு பேர் இருந்தனர். கல்வி புகட்டுவது அவ் அந்தணனுடைய கடமையாய் இருந்தது. மாணாக்கர்களிடமிருந்து தானாக வலிய வந்த சிறு பொருள்களைக்கொண்டு அம் மனிதன் காலம் கடத்திவந்தான். தொடர்ந்து மூன்று வருஷங்களுக்கு அப்பக்கத்தில் பஞ்சம் ஒன்று உண்டாயிற்று. ஏற்கனவே ஏழ்மையில் இருந்த அந்தண

னுக்கு வறுமை பன்மடங்கு அதிகரித்தது. நாள் கணக்காக அக் குடும்பம் பட்டினி கிடந்ததுண்டு. ஒரு நாள் அச்சிறு குடும்பத்துக்குக் கோதுமை மாவு கொஞ்சம் கைங்கரியமாக வந்துசேர்ந்தது. சாகும் தறுவாயில் இருந்த அவர்களுக்குப் புத்துயிர் ஊட்டுவதுபோன்று அப் பொருள் வந்துசேர்ந்தது. அதைக் கொண்டு அவர்கள் நான்கு அப்பங்கள் ஆயத்தப்படுத்தினர். வழிபடு தெய்வத்துக்கு அவ் அமுது நைவேத்தியமாகப் படைக்கப்பட்டது. ஈசுவரப் பிரசாதமாக அதை அருந்த நால்வரும் உட்கார்ந்தனர். அப்பொழுது கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது. குடும்பத்துக்குத் தலைவனுயிருந்த அந்தணன் எழுந்து சென்று கதவைத் திறந்தான். வெளியே விருந்தினன் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். விருந்தை ஏற்கின்ற சிறந்த நிலையில் அக் குடும்பம் அப்பொழுது இருக்கவில்லை. சாகப் போகின்றவனிடமிருந்து உயிரைப் பிடுங்கவரும் கூற்றுவனுக்கு ஒப்பாகும் அந்நிலையில் வரும் விருந்து.

மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து

என்பது மறைமொழி. ஆனுல் இந்த நெருக்கடியில் எவன்தான் முகம்கோணி வந்தவனை நோக்காது இருக்கமுடியும்! எனினும் அவ் அந்தணன் வந்தவிருந்தை பயபக்தியோடு வரவேற்ருன். "அதிதி தேவோ பவ" என்னும் கோட்பாடு அவ்விப்பிரனது முகவிலாசத்தில் தெளிவுபடப் பொறிக்கப்பட்டிருந்தது. வந்த விருந்தைப் பணிவுடனும் ஊக்கத்துடனும் உள்ளே அழைத்துச்சென்ருன். ஆசனம் அளிக்கப்பட்டது.

பசியால் வாடியிருந்த விருந்தினன் முன்னிலையில் இலை யொன்றைப் பரப்பிவைத்துத் தனக்கு உரியதாயிருந்த உணவை எடுத்துப் படைத்தான். அதை ஏற்றருள வேண்டுமென்று பணிவுடன் அவன் விண்ணப்பித் தான். வந்த விருந்தினன் அதை எடுத்து விழுங்கி னான். ஆனால் வந்தவனை வாட்டிய கொடும்பசி சிறி தளவு உணவு உண்ணவே மேலும் கொதித்தெழ ஆரம்பித்தது. 'ஐயோ போதாத உணவைக் கொடுத்து என் பசியைப் பெருக்கி விட்டாயே' என்று அம்மனி தன் பரிதவித்தான். அவனுடைய நிலைமையும் பரிதாப கரமாய் இருந்தது. தனக்கு உயிர் போகிறது என்று அவன் முறையிட்டான். 'எனக்கு உரியதாயிருக்கும் உணவை எடுத்து விருந்தினனுக்கு வழங்கி விடுங்கள்' என்று மனைவி பணிவுடன் தன் கணவனிடம் விண்ணப் பித்தாள். அவளுக்குரிய உணவை எடுத்து வழங்குதல் மூலம் மெலிந்து கிடந்த அம்மாதுவின் உயிரை வாங்க அவளுடைய கணவன் ஒருப்படவில்லை. செய்வது இன்னதென்று தெரியாது இல்லத்தலைவன் தயங்கி நின்றான். தன் உணவை எடுத்து வழங்கியே ஆக வேண்டுமென்று இல்லக் கிழத்தி வற்புறுத்தினாள். 'வீட்டுத் தலைவனாகிய தாங்கள் துவக்கிய விருந்தோம் பல் விரதத்தை நிறைவேற்றி வைப்பது என் கடமை' என்று அவள் வற்புறுத்தினாள். எனவே அவளுக்குரிய உணவும் விருந்தினன் முன்னிலையில் வைக்கப்பட்டது. அதையும் ஏற்று அவன் புசித்தான். ஆனால் பசிமட்டும் இன்னும் அடங்கியபாடில்லை. வயிற்றினுள் வெந்தீ

போன்று அது எரிந்து கொண்டிருந்தது. அப்பொழுது தன் கடமையைச் செய்ய மைந்தன் முன்வந்தான். 'தாய் தந்தையர் துவக்கியுள்ள விருந்தோம்பல் என்னும் வேள்வியை நிறைவேற்றி வைப்பது புதல்வனுடைய பொறுப்பு ஆகிறது. எனவே எனக்குரிய உணவையும் கொடுத்து விடுகிறேன்' என்று அவன் அவ் உணவை விருந்தினன் முன்னிலையில் வைத்தான். விருந்தினனும் மகிழ்வோடு அதை ஏற்றுக் கொண்டான் எனினும் அவன் பசி அடங்கவில்லை. இன்னும் பசியால் சோர்ந்து கிடந்தவனாகவே அவன் தென்பட்டான். இறுதியில் மைந்தனுடைய மனைவியும் தனக்குரியதாய் இருந்த உணவை எடுத்து பக்தி விசுவாசத்துடன் படைத்து விட்டாள். வாடி வதங்கி வந்திருந்த விருந்தினன் இப்பொழுது சிறிது உயிர் பிடித்தவனாக எழுந்திருந்தான். **अन्नदातः सुखी भव ।** (அன்னதாத: சுகீ பவ) என்று அக்குடும்பிகளை மனமார ஆசீர்வதித்துவிட்டுத் தன் போக்கில் அவன் போய்விட்டான். அன்று இரவு அக்குடும்பத்தைச் சேர்ந்த நால்வரும் பசியால் மாண்டு போயினர்" என்று கீரிப்பிள்ளை பகர்ந்து கொண்டு போனது.

மேலும் நிகழ்ந்ததை அது மொழிவதாயிற்று: "அவர்கள் தங்களுக்குக் கிடைத்திருந்த கோதுமை மாவைக்கொண்டு அப்பம் ஆயத்தப்படுத்துகையில் அம் மாவில் சிறுபகுதி கீழே தரையில் விழுந்துகிடந்தது. அத்தரையின்மீது நான் படுத்துப் புரண்டேன். என் உடலின் ஒரு பகுதியில் அந்த மாவு படிந்தது.

அதன் புனிதத்தால் என் உடலின் அப்பகுதி பொன்னு டல் ஆய்விட்டது. இங்கு வீற்றிருக்கும் நீங்கள் அனை வரும் அதைப் பாருங்கள். அவ் ஏழைக் குடும்பத்தினர் நிகழ்த்தியது விருந்தோம்பல் என்னும் வேள்வி. தூய் மையில் அதற்கு நிகரான மற்றொரு வேள்வியை இவ் வையகத்தில் நான் எங்கேயாவது காண முடியுமா என்று சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். என்னு டைய உடலின் மற்றொரு பகுதியையும் பொன்னார்ந்த தாக அமைக்க முடியுமா என்று பார்த்து வருகிறேன். யுதிஷ்டிரர் தர்மராஜா வேட்கின்ற வேள்வி ஒப்பு உயர் வற்றதென்று உங்கள் போன்ற பலர் பகர்வதை நான் கேள்வியுற்றேன். இந்த யாகசாலையினுள் ஓடிவந்து படுத்துப் புரண்டு பார்த்தேன். என்னுடைய உடலின் மற்ற பகுதி பொன் மயமாக மாறவில்லை. ஆகையினால் தான் இதுவும் ஒரு வேள்வியா, என்று நான் இதை நிராகரிக்கிறேன்; நீங்கள் பகர்வது பொய் என்றும் சாற்றுகிறேன்.'' கீரிப்பிள்ளை தன் பேச்சை இங்ஙனம் சொல்லி முடித்தது. வேள்வி ஒன்றன் உயர்வு செல வாகும் செல்வத்தை முன்னிட்டல்ல. கொள்ளும் மனப்பான்மையை முன்னிட்டே என்பது இவ்வரலாற் றினின்று வெளியாகிறது.

கைம்மாறு கருதாத கொடை இந்தியாவின் குறிக் கோளாக நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் அச்சீரிய லக்ஷியம் இன்றைக்கு இந்நாட்டி னின்று பெரிதும் மறைந்து போய்விட்டது. நாள் ஏற ஏற சீரிய மனப்பான்மை படைத்துள்ள சான்றோர்

களின் எண்ணிக்கை குறைந்துவருகிறது. ஆங்கிலப்புத்த கங்கள் இக்காலத்தில் இந்தியச் சிறுவர்களுக்குப் பாட புத்தகங்களாக வைக்கப்படுகின்றன. அப்புத்தகம் ஒன் றனுள் மேல் நாட்டு வரலாறு ஒன்று விளக்கப்பட்டி ருந்தது. ஐரோப்பியச் சிறுவன் ஒருவன் வறுமைவாய்ப் பட்டிருந்தான். தொழில் புரிந்து ஜீவிக்கும் நெருக்கடி அவனுக்கு ஏற்பட்டிருந்தது. கஷ்டப்பட்டு அவன் சம்பாதித்த கூலியினின்று ஒரு சிறுபகுதியை வயோதிக நிலையிலிருந்த தன் தாய்க்குக் கொடுத்தான். அவனு டைய செயல் பாராட்டத்தக்க பெருஞ்செயல் என்று அப்புத்தகத்தில் மூன்று நான்கு பக்கங்களில் வருணிக் கப்பட்டிருந்தது. செயற்கரிய பெரிய செயல் என்று மேல்நாட்டவர்கள் அதைப் பாராட்டியிருக்கின்றனர். ஆனால் அதில் பெருமை யாது இருக்கிறது? ஹிந்து இளை ஞன் ஒருவன் அவ்வரலாற்றினின்று கற்றுக்கொள்ள வேண்டிய நீதிநெறி ஒன்றுமில்லை. கடமை என்பதைப் பற்றி மேல் நாட்டார்கள் கொண்டுள்ள கொள்கை ஒரு போக்கானது. கடமை என்பதைப் பற்றி இந்திய மக்கள் கொண்டிருக்கின்ற கொள்கை மற்றொரு போக் கானது. ஒவ்வொரு மனிதனும் தனக்குத்தானே உதவி பண்ணிக்கொள்ள வேண்டும் என்பது மேல் நாட்டவர் கள் கொள்கை. மற்று மனிதன் உயிர் வாழ்ந்திருப்பதே மன்னுயிர்களின் நலத்துக்காக என்பது இந்தியாவின் குறிக்கோள். மேல்நாட்டவர்களில் பெரும்பான்மை யோர் தங்களுக்காகவென்றே வாழ்ந்திருக்கின்றனர். தாய் தந்தையரைப் பராமரிப்பதும், மனைவியைப் பரா

மரிப்பதும், குழந்தைகளைப் பராமரிப்பதும் தங்களுடைய கடமை அல்ல என்று எண்ணியிருப்பவர்களையும் ஆங்குக் காணலாம். அத்தகைய மனப்பான்மை எந் நாட்டுக்கும் உகந்ததன்று. இல்வாழ்க்கை என்பது பிறர் நலத்துக்காகவென்றே அமைந்ததாகும். கிருஹஸ்த ஆச்ரமம் என்று இல்வாழ்வு பகரப்படுகிறது. ஆச்ரமம் என்னும் சொல் தூயதும், தன்னலம் கருதாததுமாகிய வாழ்க்கை முறை எனப்பொருள்படுகிறது. தனக்கென வாழாது பிறர்க்கென்று வாழ்பவனே பெருமகன் ஆகிறான்.

கர்மயோகத்தின் கருத்து யாது என்பது இப்பொழுது நமக்கு விளங்குகிறது. தனது உயிரையும் வழங்கி ஒருவன் மற்றவர்களுக்கு உதவி புரியவேண்டும் என்பது அதன் குறிக்கோள். தன் உயிரைத் தான் ஏன் வழங்கவேண்டும் என்கிற ஐயம் ஒரு யோகியினுடைய உள்ளத்தில் எழலாகாது. பிறர்க்கு நலம் புரிய முன்வருகின்றவன் பல தடவைகளில் பிறரால் ஏமாற்றமடைந்துவிடுவதுண்டு. யோகி ஒருவனை திரும்பத் திரும்பப் பிறர் வஞ்சித்துக் கொண்டே போனாலும் சரி, வஞ்சகர்களுக்கு நான் ஏன் துணைபுரிய வேண்டும் என்ற ஐயத்தை எழுப்ப வேண்டாம். யாண்டும் பிறர்க்குப் பணிவிடை செய்துகொண்டே இரு. அது உன்னிடத்திருந்து வரும் ஒரு சீரிய செயல் என்று அதைப் பெருமைப்படுத்தவும் வேண்டாம். நீ ஏழை எளியவர்க்குப் புரிகின்ற நன்கொடைகளைக் குறித்து விளம்பரங்கள் செய்ய வேண்டாம். ஏழை

எளியவர்கள் உனக்கு நன்றி பாராட்ட வேண்டும் என்கின்ற எண்ணத்தையும் அறவே அகற்றிவிடு. அதற்கு மாருக நீ வழங்கும் கொடைகளை ஏற்றுக் கொள்ளுகின்ற மற்றவர்களுக்கு நீ நன்றி பாராட்டு. ஏனென்ருல் நீ உன்னிடத்திருப்பதைப் பிறர்க்குக் கொடுத்துப் பழகுதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பத்தை அன்னவர்கள் உனக்கு அளித்திருக்கிருர்கள். பணிவுடனும் அடக்க ஒடுக்கத்துடனும் ஊக்கத்துடனும் பிறர்க்கெடுத்து வழங்குவதன் மூலம் நீ மனபரிபாகம் அடைகின்ருய். நீ மனபரிபாகம் அடைதற்கு நல்ல சந்தர்ப்பத்தை உண்டுபண்ணிக்கொடுத்த மற்றவர்களுக்குக் கடமைப்பட்டவனுக யோகியாகிய நீ இருந்தாக வேண்டும். மற்றுமோர் உண்மை வெளியாகிறது. சன்னியாச ஆச்ரமத்துக்குரிய சீரிய கடமைகளை நிறைவேற்றுவது மிகக் கடினமானதே. மற்று கிருஹஸ்த ஆச்ரமத்துக்குரிய சீரிய கடமைகளை நிறைவேற்றி வைப்பது அதைவிடப் பன்மடங்கு கடினமானது என்பதை யாண்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். துறவறத்தின் லக்ஷியம் எவ்வளவு உயர்ந்ததோ அவ்வளவு உயர்ந்ததாக இருக்கிறது இல்லறத்தின் லக்ஷியமும். துறவறத்தை முறையாகக் கடைப்பிடிப்பது எவ்வளவு துர்லபமாகத் தோன்றுகிறதோ அவ்வளவு துர்லபம் நெறியான இல்லற வாழ்க்கையிலும் அமைந்திருக்கிறது.

# 4. கடமை என்பது யாது?

கர்மயோகத்தைக் கற்க விரும்புகின்றவர்கள் கடமை என்பது யாது என்று அறிந்துகொள்வது முற்றிலும் அவசியமாகிறது. ஒரு மனிதன் ஒரு செயலை ஆற்றுதற்கு முன்பு அது அவனுடைய கடமையா என்பதை ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டும். பிறகு அச்செயலைச் செய்வது அவனுக்கு எளிதாகிறது. கடமையைப்பற்றிய எண்ணம் வெவ்வேறு சமுதாயங்களில் வெவ்வேறு வடிவெடுத்து வந்துள்ளது. முஸ்லீம் ஒருவன் தனது நூல் ஆகிய குர்-ஆனில் விதித்து வைக்கப்பட்டிருப்பது எதுவோ அதை அனுஷ்டிப்பது தன் கடமை என்று கூறுகிறான். ஹிந்து ஒருவன் தனது வேத ஆகம சாஸ்திரங்களில் சொல்லி வைக்கப்பட்டிருப்பவைகளைச் செயலில் கொண்டுவருவது தன் கடமை என்று இயம்புகிறான். இனிக் கிறிஸ்தவன் ஒருவன் தனது சமய நூல் ஆகிய பைபிளில் புகட்டப்பட்டிருப்பதைப் பின்பற்றுவது தன் கடமை என்று பேசுகிறான். இங்ஙனம் கடமையைப்பற்றிய கருத்துக்கள் வெவ்வேறு வகைப்பட்டவைகளாக இருக்கின்றன என்பதை நாம் காண்கிறோம். வாழ்க்கையில் மாந்தர் எத்தகைய நிலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றார்களோ அத்தகைய நிலைகளுக்கு ஏற்ப கடமையானது வெவ்வேறு வடிவெடுத்து வருகிறது. ஒரு காலத்தில் கடமையாக அமைந்திருப்பது மற்றொரு காலத்தில் கடமையல்லாது போய்விடுகிறது. ஒரு சமுதாயத்துக்குக்

கடமை என்று அமைந்திருப்பது மற்றொரு சமுதாயத்துக்குக் கடமையல்லாது போய்விடுகிறது. எல்லோருடைய வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவங்களை விளக்குதற்கென்று சில சொற்கள் அமைந்திருக்கின்றன. அச்சொற்களை எல்லார்க்கும் விளங்கும்படி தெளிவுபட எடுத்து இயம்புவது சாத்தியமல்ல. 'கடமை' என்பது அவைகளுள் ஒன்று. 'கடமை' என்கின்ற சொல்லை தெளிவுபட விளக்குவது இயலாத காரியமாம். சில செயல்களை வாழ்க்கையில் செய்து பார்த்து அச்செயல்களினின்று விளையும் பயன்களை ஆராய்ந்து பார்ப்பதன்மூலம் கடமை என்றால் என்ன என்பதை ஓரளவில் நாம் அறிந்துகொள்ள முடியும். நம் கண்ணெதிரே சில நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அந்நிகழ்ச்சிகளை ஆமோதிக்கின்ற பாங்கில் அல்லது நிராகரிக்கின்ற பாங்கில் நாம் நடந்துகொள்கிறோம். செயல்களை அங்ஙனம் ஆதரிப்பது அல்லது எதிர்ப்பது நம் உள்ளத்தில் ஊறி எழும் உணர்ச்சியைப் பொருத்ததாகும். வாழ்க்கையில் நாம் பெற்று வருகின்ற பயிற்சியின் விளைவாகவும் சில செயல்களை ஏற்க அல்லது மறுக்க முற்படுகிறோம். நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை அங்கீகரிப்பதா அல்லது ஆக்ஷேபனை செய்வதா என்னும் ஐயம் உள்ளத்தில் உதிக்கின்றபொழுது அந்த நிகழ்ச்சியைக் குறித்து மேலும் நாம் எண்ணிப்பார்க்கிறோம். எத்தகைய சூழ்நிலையில் எக்காரணத்தை முன்னிட்டு அந்த நிகழ்ச்சி நேர்வதாயிற்று என்று ஆராய்ந்துபார்க்கிறோம். குறிப்பிட்ட ஒரு சூழ்நிலை

யில் இன்ன போக்கில்தான் நடந்துகொள்ளவேண்டும் என்கின்ற முடிவுக்கு நாம் வருகிறோம். வேறு சில வேளைகளில் அதே நிகழ்ச்சிகளைக் குறித்து மற்றொரு போக்கில் நாம் முடிவுகட்டுகிறோம். சாதித்த செயல் ஒன்று ஒரு வேளையில் நல்லதாகத் தோன்றுகிறது. அதே செயல் மற்றொரு வேளையில் கெட்டதாகத் தோன்றுகிறது. இங்ஙனம் நமது மனதுக்குள்ளேயே கடமை எது என்பதைப்பற்றிய தடுமாற்றம் வந்து விடுகிறது. ஒரு சான்றின்மூலம் இதை விளக்குவோம். குற்றம் செய்த ஒருவனைக் கண்டிக்கவேண்டும் என்னும் உணர்ச்சி உண்டாகி நாம் அவனைக் கண்டித்து விடுகிறோம். அப்படி நாம் கண்டித்தது சரியல்ல என்று மற்றொரு வேளையில் தோன்றுகிறது. குற்றம் செய்தவனைக் குறித்து நாம் புரியக்கிடக்கும் கடமை யாது என்னும் கேள்வி இங்ஙனம் நம்மை ஒரு குழப்பத்தில் கொண்டு சேர்க்கிறது.

கடமையைப்பற்றிய கொள்கை எல்லார்க்கும் பொதுவானது ஒன்று இருக்கிறது. தனது மனசாட்சி நல்லான் ஒருவனை எங்ஙனம் தூண்டுகிறதோ அங்ஙனம் அவன் வினையாற்ற வேண்டும் என்னும் கோட்பாடு யாவர்க்கும் யாண்டும் பொதுவானது. பின்பு செயல் ஒன்றை கடமை என்று நிர்ணயிக்கும்படி நம்மைத் தூண்டுவது யாது? சமுதாயத்தில் கிறிஸ்தவன் ஒருவன் இருக்கிறான். தன் எதிரே மாட்டு மாமிசத்துண்டு ஒன்று வைக்கப்பட்டிருப்பதை அவன் காண்கிறான். தன் உயிரைப் பேணுதற்கு அவன்

அதை உண்ணுவிட்டால் தன் கடமையைச் செய்தவன் அல்லன் என்னும் முடிவுக்கு அவன் வருகிறுன். அவன் எதிரே பட்டினி கிடக்கின்ற மற்ெருரு மனிதன் இருக்கிருன் என்று வைத்துக்கொள்வோம். அப்படிப் பட்டினி கிடக்கின்றவனுக்கு இந்த மாட்டு இறைச்சியை அவன் எடுத்து வழங்காவிட்டால் தன் கடமையைச் செய்யவில்லை என்று அவன் உணருகிறுன். ஆனல் ஹிந்து ஒருவனுடைய உணர்ச்சியோ இதற்கு நேர். மாமுனது. மாட்டு இறைச்சி ஒன்றை எடுத்து உண்ண அவன் துணிவானுகில் அல்லது அதை மற்ெருரு ஹிந்துவுக்கு வழங்க முன்வருவானுகில் தான் நெறி வழுவிப் போய்விட்டதாக அவன் உணர்வது திண்ணம். ஹிந்து ஒருவன் பெற்ற பயிற்சியும், கற்ற கல்வியும் அவனே அங்ஙனம் உணரும்படிச் செய்கின்றன. கிறிஸ்தவன் ஒருவன் பெற்ற பயிற்சியும், கற்ற கல்வியும் வேறு ஒரு பாங்கில் உணரும்படி அவனேத் தூண்டுகின்றன. இங்ஙனம் இருதரத்தவர்க்குக் கடமை இரண்டு விதங்களில் வடிவெடுத்து வருகிறது.

கொஞ்ச காலத்துக்கு முன்பு நம் நாட்டில் கொடூரமான கொள்ளேக் கூட்டத்தார் வசித்து வந்தனர். அவர்களுக்குத் தக்கியர்கள் என்பது பெயர். கைக்கு அகப்பட்ட ஒவ்வொரு மனிதனேயும் கொன்றுவிடுவது தங்களுடைய கடமை என்று அவர்கள் உணர்ந்தார்கள். கொல்லப்பட்டவனுடைய பொருள்களேயெல்லாம் அபகரித்துக்கொள்வதையும் தங்கள் கடமையென்று அவர்கள் எண்ணிஞர்கள். எவ்வளவுக்கெவ்

வளவு அதிகமாக மற்ற மனிதர்களை அவர்கள் கொன்ருர்களோ அவ்வளவுக்கவ்வளவு தாங்கள் மேன்மையடைந்து வந்ததாக அவர்கள் உணர்ந்தார்கள். சாதாரண வாழ்க்கை வாழ்ந்து வருவதற்கிடையில் ஒரு மனிதன் வீதியில் சென்று மற்றொரு மனிதனைத் துப்பாக்கியால் சுட்டு மாய்த்துவிடுவாளுகில் தான் செய்த செயல் சரியல்லவென்று அவன் வருந்துவதற்கு இடமுண்டு. ஆனால் அதே மனிதன் ராணுவத்துக்குரிய ஒரு துருப்பு ஆகிறான் என்று வைத்துக்கொள்வோம். போர்க்களத்திலே அத்துருப்பு ஆனவன் ஒரு மனிதனை அல்ல, இருபதுபேரை மாய்த்துவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். அந்த நிகழ்ச்சியைக் குறித்து அவன் பெருமகிழ்ச்சியடைவான். போற்றுதற்குரிய பாங்கிலே தன் கடமையை நிறைவேற்றி வைத்ததாகவும் அவன் உணருவான். இத்தகைய சூழ்நிலைகளினின்றும் சம்பவங்களினின்றும் உண்மை ஒன்று நமக்குப் புலனாகிறது. செய்த செயலைப்பார்த்துக் கடமை என்று கூறுவது பொருந்தாது. கடமை யாது என்பதற்கு வெளிப்படையான விளக்கம் தருவது முற்றிலும் இயலாத காரியம். ஆயினும் அவரவர் மனநிலையை முகாமையாக வைத்துக்கொண்டு ஒருவனுடைய கடமை யாது என்று எடுத்துக்காட்டுவது நமக்கு இயலும். ஏதேனும் ஒரு செயலை செய்வதின் விளைவாக மனப்பான்மையில் மனிதன் மேலோன் ஆவாளுகில், கடவுள் சான்னித்தியத்துக்கு அருகில் செல்லத் தகுதியுடையவன் ஆவாளுகில் அவனுடைய செயலை நல்லது என்றும்,

கடமை என்றும் நாம் பொருள்படுத்த வேண்டும். அதற்கு மாருக ஒருவன் புரிகின்ற வினையின் விளைவாக அவன் கீழ்மையடைந்து வருவாஞகில் அச்செயலைக் கொடியது என்றும் அவனுடைய கடமை யல்ல என்றும் நாம் முடிவுகட்ட வேண்டும். ஆற்றுகின்ற வினை ஒன்று மனிதனுடைய மனத்தினுள் எத்தகைய மாறுதலை உண்டுபண்ணுகிறது என்பதை நாம் யாண்டும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியதாய் இருக்கிறது. சில செயல்கள் மனிதனை மேன்மைப்படுத்தும் பாங்குடையவைகளாய் இருக்கின்றன. அவனைச் சான்ருேன் ஆக்குதற்கு அத்தகைய செயல்கள் முகாமையாக அமைகின்றன. வேறு சில செயல்கள் மனிதனைக் கீழ்மைப்படுத்துகின்றன. விலங்குத் தன்மையில் அவனை ஆழ்த்துகின்றன. மனிதனை உயர் நிலைக்கு உயர்த்துகின்ற வினைகள் எல்லாம் அவனுக்குற்ற கடமைகள் எனப்படுகின்றன. மனிதனைச் சிறுமைப்படுத்துகின்ற செயல்கள் எல்லாம் கடமைகள் எனக்கருதப்படமாட்டா. கடமை என்பதற்கு இக் கோட்பாட்டை விளக்கமாக வைத்துக்கொண்டால் எல்லா மனிதர்களுடைய கடமைகளும் ஒரே பாங்கில் அமைந்திருக்கின்றனவென்று நாம் முடிவுகட்டமுடியாது. ஒரு மனிதனை மேன்மைப்படுத்துவதற்கென்று அமைந்துள்ள ஒரு செயல் மற்ருெரு மனிதனைக் கீழ்மைப்படுத்திவிடுவதும் இயல்பு. ஆதலால்தான் ஒரு மனிதனுக்குக் கடமையாக அமைகின்ற கர்மம் மற்ருெரு மனிதனுக்குக் கடமையல்லாது போய்விடக்

கூடும். இனி, அதற்குமேல் சந்தர்ப்ப பேதங்கள் ஏராளமாய் இருக்கின்றன. ஒரு சந்தர்ப்பத்தில் கடமையாக அமைகின்ற வினை ஒன்று மற்றொரு சந்தர்ப்பத்தில் கடமையல்லாது போய்விடக்கூடும். சில உபமானங்கள் இக்கோட்பாடுகளை நன்கு விளக்குவனவாகும். அவதூறு கூறுகிற ஒரு மனிதனை எதிர்த்து அவனைக் கண்டிப்பதும் வாயடக்குவதும் இல்வாழ்வான் ஒருவனுடைய கடமையாகிறது. ஆனால் பிறர் தன்னைக் குறித்து அவதூறு கூறுவார்களாயின் அதைக் காதில் போட்டுக்கொள்ளாது தன் போக்கில் போவது துறவி ஒருவனுடைய கடமையாகிறது. வினையாற்றத் தகுதியற்றவர்கள் யாசகம் எடுக்கும் பொழுது அவர்களுக்குப் பொருளுதவி பண்ணுவது பொருள் படைத்தவர்களுடைய கடமையாகிறது. பொருள் படைத்திருந்தாலும் மாணுக்கர்கள் அத்தகைய யாசகர்களுக்குப் பொருளுதவி செய்ய வேண்டும் என்கிற கடமை அவர்கள்மீது விதிக்கப்படவில்லை. ஏனென்றால் உழைத்துப் பொருள் சம்பாதிக்கின்ற நிலைக்கோ, பொருளைத் தங்களுடையதாக்கி நிர்வகிக்கின்ற நிலைக்கோ மாணுக்கர்கள் இன்னும் வந்து சேரவில்லை. பிறரால் பரிபாலிக்கப்படுகிற நிலையில் மாணுக்கர்கள் இருந்துவருகிறார்கள். சந்தர்ப்ப பேதத்தைப்பற்றிச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். பஞ்சத்தால், புயற்காற்றால் அல்லது பெருவெள்ளத்தால் ஒரு சாரார்க்கு ஓர் இடத்தில் பெரும் விபத்து ஏற்பட்டு விடுகிறது. உண்ண உணவில்லாது, தங்கு

வதற்கு இடமில்லாது அவர்கள் தவிக்கிறார்கள். அத்தகைய நெருக்கடியில் அவர்களுக்கு உணவு வழங்கித் தங்குதற்கு இடம் தேடித்தருவது மற்றவர்களுடைய கடமையாகிறது. ஆனால் அந்த நெருக்கடியினின்று மீட்டான பிறகும் அவர்களுக்கு உணவையோ வேறு உதவியையோ வழங்கிக்கொண்டு போவது கடமையாகாது. கடமை என்பது இங்ஙனம் கால தேச வர்த்தமானத்துக்கு ஏற்ப வெவ்வேறு வடிவெடுத்துக் கொண்டே போகிறது. இத்தகைய மாறுபாடுகளுக்கிடையில் அவரவர்க்குற்ற கடமையை அறிந்து அதைக் கடைப்பிடித்து வருவது கர்மயோகியின் குறிக்கோள் ஆகிறது. இனி, மாந்தர் அனைவர்க்கும் பொதுவாய் அமைந்த கடமை ஒன்று உண்டு. எல்லாக் காலங்களுக்கும் அத்தகைய கடமை பொதுவானதாக இருக்கிறது. எல்லா தேசத்துக்குமே அது பொதுவானது. எல்லா சமயத்தவர்களுக்கும் அதைப் பொது வானது என்று பகரலாம். அதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். 'எவ்வுயிர்க்கும் தீங்கு விளைவியாதே. எவ்வுயிர்க்கும் தீங்குவிளைவியாதிருப்பது தர்மம். எவ்வுயிர்க்காவது தீங்கு விளைவிப்பது பாபம்'— இக்கோட்பாடு மாந்தர் அனைவர்க்கும் பொதுவானது. ஹிம்ஸை செய்யாதிருப்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த கடமையாம்.

மனிதனுடைய கடமையைக் குறித்து பகவத் கீதை பல விதங்களில் புகட்டிவருகிறது. ஒரு மனிதன் எத்தகைய பாங்குடையவனாகப் பிறந்திருக்கின்றான்

என்பதை இந்த நூல் கணக்கில் எடுத்துக் கொள்கிறது. சமூகத்தில் ஒரு மனிதன் எத்தகைய பதவியை அல்லது பொறுப்பை வகித்து வருகிறான் என்பதையும் கீதா சாஸ்திரம் கணக்கில் எடுத்துக்கொள்கிறது. இக்கோட்பாட்டை மற்றொரு பாங்கில் பகருவோமாகில் ஒரு மனிதனுக்குரிய வருணத்தையும் ஆச்ரமத்தையும் அடிப்படையாக வைத்துக்கொண்டே அவனுடைய கடமை இன்னதென்று நிர்ணயிக்கப்படுகின்றது. ஐதிகமாக இது வருண ஆச்ரமதர்மம் எனப்பெயர் பெற்றுள்ளது. ஒரு மனிதனுடைய மனநிலை எத்தகையதோ அது அவனுடைய வருணமாகிறது. வாழ்க்கையில் எதை ஒருவன் குறிக்கோளாகக்கொண்டு வாழ்ந்து வருகின்றானோ அது அவனுடைய ஆச்ரமமாகிறது. மனபரிபாகத்துக்கு ஒப்ப மனிதன் சூத்திரன், வைசியன், க்ஷத்திரியன், பிராமணன் என நான்கு வருணங்களில் வகைப்படுத்தப்படுகிறான். வர்ணத்தை நிர்ணயிப்பதற்குப் பிறப்பை அடிப்படையாக பகவத்கீதை எடுத்துக் கொள்ளவில்லை. மனநிலையை வைத்துக்கொண்டே மனிதனை நான்கு வருணங்களில் அது பிரித்து வைக்கிறது. பின்பு கல்வியிலும் ஒழுக்கத்திலும் பயிற்சி அடைந்து வருகின்றவன் பிரம்மசரிய ஆச்ரமத்தில் இருக்கின்றான். சமுதாயப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டிருப்பவன் கிருஹஸ்த ஆச்ரமத்தை எடுத்துக் கொள்கிறான். உலகப்பற்றுகளினின்று விடுபடும் நிலையில் இருப்பவன் வானப்பிரஸ்த ஆச்ரமத்துக்குப் போகிறான். முற்றிலும் அருள்துறையில் ஈடுபட்டு

ஏனையவர்களுக்கும் அருள் துறையை காட்டித்தரும் நிலையில் இருப்பவன் சன்னியாச ஆச்ரமத்தில் தன் வாழ்வைப் பூர்த்தி பண்ணுகிறான். வருண தர்மம், ஆச்ரம தர்மம் ஆகிய இரண்டும் ஒன்றுசேர்ந்து வருண ஆச்ரம தர்மம் என்னும் பெயர் பெற்றுள்ளது. வருணத்தில் ஒருவன் மேல் நிலைக்குப் போகின்ற அளவு அவனுடைய கடமையும் மிகக் கடினமானதாகிறது. அதேபோன்று ஆச்ரமத்தில் ஒருவன் மேல் நிலைக்குப் போகுமளவு அவனுடைய கடமையும் மிகப் பெரியது ஆகிறது. ஒரு மனிதன் மன அமைப்பில் எந்த வருணத்துக்குத் தகுதியுடையவனாய் இருக்கிறான் என்பதை அறிந்து கொள்ளுதல் அவசியம். அதற்கு அடுத்தபடியாக எந்த ஆச்ரம வாழ்க்கைக்குத் தகுதியுடையவனாகத் தன்னை ஆயத்தப்படுத்தி வருகின்றான் என்பதை அறிந்துகொள்ளவேண்டும். இவ் இரண்டு நிலைகளையும் நிர்ணயித்துவிட்டால் ஒரு மனிதனுக்குரிய கடமை எது என்பதை நிர்ணயிப்பது பிறகு எளிதாய் விடுகிறது.

இங்ஙனம் வருண தர்மத்தையும் ஆச்ரம தர்மத்தையும் குறித்துக் காட்டுவது நூலோர்களுடைய போக்கு. ஒவ்வொரு சிறு சிறு பகுதியிலும் இந்த விதிகளை எல்லா சமுதாயத்தவர்களும் கடைப்பிடிக்க வேண்டும் என்பது அவசியமல்ல. உலகில் நாடுகள் பல இருக்கின்றன. சமுதாயங்களும் பல இருக்கின்றன. அவைகளின் நாகரிகங்கள் வெவ்வேறு வகைப்பட்டவைகள் ஆகின்றன. அந்தந்த நாகரிகத்துக்கு ஏற்ப மக்

களுக்கு ஏற்பட்டுள்ள கடமைகளை மாற்றியமைத்துக் கொள்வது அவசியமாகிறது. வேறுபாடுகள் பல அந்தந்த சமுதாயங்களில் இருந்தாக வேண்டும் என்பதை நாம் அறிந்து கொள்ளாமையினாலேயே ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் மற்றொரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்களை வெறுக்க முனைகின்றனர். ஒரு சான்றின் மூலம் இக்கோட்பாட்டை விளக்குவோம். அமெரிக்கா தேசத்து பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப அந்நாட்டு மனிதன் ஒருவன் தன் வாழ்க்கையை நடாத்துகிறான். அப்படிச் செய்து வருவதுதான் நன்மகன் ஒருவனுடைய ஒழுக்கத்துக்கு ஒத்தது ஆகிறது என்று அவன் நினைக்கிறான். தன் நாட்டுக்குரிய பழக்க வழக்கங்களைப் பின்பற்றாதவர்கள் எல்லோரும் கயவர்கள் என்றும் கீழ் மக்கள் என்றும் அவன் கருதுகிறான். மற்று இந்தியாவில் உள்ள ஹிந்து ஒருவன் தான் அனுஷ்டிக்கும் பழக்க வழக்கங்களே உலகில் மிகமிகச் சிறந்தவைகள் என்று எண்ணுகிறான். தான் பழகிவரும் பழக்க வழக்கங்களைப் பின்பற்றாதவர்கள் பொல்லாதவர்கள் என்றும் அநாகரிகமானவர்கள் என்றும் அவன் கருதுகிறான். இத்தகைய குற்றம் ஒன்றைக் கிட்டத்தட்ட எல்லா நாடுகளிலும் இருப்பவர்கள் செய்து வருகிறார்கள். இப்படி நாம் செய்யும் தவறுதல் சமுதாயத்துக்குத் தீங்கை விளைவிப்பதாய் விடுகிறது. உலகிலே ஒரு நாட்டுக்குரியவர் இன்னொரு நாட்டுக்குரியவரை வெறுப்பதும் ஏளனம் செய்வதும் சர்வசாதாரணமாகக் காணப்படுகிறது. இந்தியன் ஒருவன் அமெரிக்கா

தேசத்துக்குச் சென்றிருந்தான். ஆங்கு நடைபெற்ற பெரிய கண்காட்சி ஒன்றை அம்மனிதன் சுற்றிப்பார்த்துக் கொண்டிருந்தான். தன் தேசத்து வழக்கத்துக்கு ஒப்ப அந்த இந்தியன் தலையில் தலைப்பாகை கட்டியிருந்தான். அமெரிக்கன் ஒருவன் பின்புறமிருந்து அந்தத் தலைப்பாகையைப் பிடித்து இழுத்தான். அப்புல்லிய செயலைச் செய்த மனிதன் உண்மையாகவே நாகரிகம் நிறைந்த பெருமகன் ஆவான். அவனுடைய தோற்றமும் நடையுடைபாவனையும் அவன் பண்பட்டவன் என்பதையே விளக்கலாயின. அப்பெருமகன் ஏன் முறைதவறி நடந்துகொண்டான் என்று இந்தியன் அவனிடத்து ஆங்கில மொழியில் கேட்டான். அந்த இந்தியனுக்கு ஆங்கில மொழி தெரிந்திருக்கிறதென்பதை அறிந்து கொண்ட அமெரிக்கன் தனது புல்லிய செயலைக் குறித்துப் பெரிதும் வெட்கப்பட்டான். இந்தியனே அக்கண்காட்சியில் வேறு பகுதிகளையும் சென்று பார்த்துக் கொண்டிருந்தான். அவனைக் காணலுற்ற மற்றோர் அமெரிக்கன் அவனை மோதித் தள்ளினான். அவன் ஏன் அப்படி முறைதவறி நடந்துகொண்டான் என்று இந்தியன் கேட்டபொழுது அந்த அமெரிக்கனுக்கும் வெட்கம் வந்துவிட்டது. மன்னிப்புக் கேட்கின்ற பாங்கில் ஏதோ சில வார்த்தைகளை அவன் உளறிக்கொட்டினான். "ஆங்கிலம் தெரிந்துள்ள நீ இந்த விபரீதமான பாங்கில் ஏன் தலையின் மீது துணியைச் சுற்றிக் கொள்ளவேண்டும்" என்று அவன் வினவினான். இத்தகைய செயல்களினின்று

உண்மை ஒன்று வெளியாகிறது. பெரிதும் பண்பட்டுள்ள மனிதர்களுக்கிடையிலும் மற்றவர்களிடத்து அன்பு அனுதாபம் காட்டுதல் என்பது ஒரு குறுகிய எல்லைக்குள் அடங்கியிருக்கிறது. தாங்கள் பேசுகின்ற மொழியைப் பேசுகிறவர்களிடத்திலும், தாங்கள் அணிந்து கொள்கின்ற உடையை அணிந்து கொள்கிறவர்களிடத்தும் மரியாதை காட்டினுல் போதும் என்று அன்னவர் கருதி வருகின்றனர். வேற்ருளுக இருப்பவனிடத்தும், வேறுபட்ட மொழியைப் பேசுபவனிடத்தும், வேறுபட்ட உடையை அணிந்திருப்பவனிடத்தும் பெருந்தன்மையாக நடந்து கொள்ளவேண்டிய அவசியமில்லை என்று இத்தகையவர் எண்ணி வருகின்றனர். மற்ெருரு கொடிய கேடும் உலகில் இன்றுவரையில் தென்பட்டு வருகிறது. வலிவு படைத்த சமுதாயங்களைச் சேர்ந்தவர்கள் வலிவற்ற சமுதாயங்களை அடக்கி ஆளுகின்றனர். அது கொடுங்கோல் ஆட்சியாகவே வடிவெடுத்து விடுகின்றது. வலிவற்ற சமுதாயத்தவர்கள் சம உரிமைக்குத் தகுதியற்றவர்கள் என்கின்ற தவறுதலான அபிப்பிராயம் வலிவு படைத்தவர்களுடைய உள்ளத்தில் புகுந்து விடுகிறது. மனிதனுக்கு மனிதன் இணக்கம் காட்டி அன்பு அனுதாபத்தோடு நடந்து கொள்ளவேண்டும் என்கின்ற பண்பு அவர்களுடைய உள்ளத்தினின்று அறவே அகன்று போய்விடுகிறது. உடையில் அமைந்திருக்கின்ற மாறுபாட்டை முன்னிட்டு வெளி நாட்டவர்களைத் தாக்க முயன்ற அமெரிக்கக் குடிமகனுடைய விஷயத்தையே திரும்ப

வும் ஆராய்ந்து பார்ப்போம். வெளி நாட்டு மனிதனிடத்து அவன் முறைதவறி நடந்து கொண்டான் எனினும் தன் சொந்த நாட்டுக்கும் சொந்தக் குடும்பத்துக்கும் அவன் முற்றிலும் பொருத்தமானவனுகவே இருந்திருக்கலாம். தன் மக்களை அன்போடு பராமரிக்கின்ற தந்தையாக அவன் இருந்திருக்கலாம். அமெரிக்க சமுதாயத்துக்கு உகந்த நல்ல பிரஜையாகவும் அவன் அமைந்திருக்கலாம். வேறு ஒரு பாங்கில் உடை அணிந்திருந்த வேற்ருன் ஒருவனைப் பார்த்தவுடனே அன்பு வடிவினனுகிய அந்த அமெரிக்கனுடைய மனது நொடிப் பொழுதில் கல் நெஞ்சமாக மாறிவிட்டது. மக்களுள் பலரிடத்தில் நாம் காணும் விபரீதம் இதுவேயாம். எல்லா நாடுகளிலும் வெளிநாடுகளிலிருந்து வந்திருக்கும் வேற்ருர்களை ஏமாற்றுவதும் வஞ்சிப்பதும் ஆகிய செயல் சர்வ சாதாரணமாய் நடைபெற்று வருகிறது. பிறநாடுகளுக்குப் போகின்றவர்கள் பிறநாடுகளில் என்ன பாங்கில் நடந்து கொள்ளவேண்டும் என்பதை அறிந்துகொள்ளாதிருப்பதனுல் அவர்கள் இங்ஙனம் துன்புறுத்தப்படுகின்றனர். பிறநாடுகளில் அப்படிப் பல இடைஞ்சல்களுக்கு உள்ளாகின்றவர்கள் பிறநாட்டவர்களைப்பற்றி மிகத் தவறுதலான அபிப்பிராயங்களை மனதில் வாங்கிக்கொண்டு தமது சொந்த நாடுகளுக்குத் திரும்புகிருர்கள். மாலுமிகளும், ராணுவத் துருப்புகளும், வியாபாரிகளும் வெளி நாடுகளில் பிரயாணம் செய்வது பல தடவைகளில் அவசியமாய் விடுகிறது. அப்படி வெளிநாடுகளுக்குப் போகின்றவர்

கள் ஆங்கு மிக விபரீதமாக நடந்து கொள்கின்றனர். தங்கள் சொந்த நாடுகளில் அவர்கள் அங்ஙனம் ஒழுகி யிருக்கமாட்டார்கள். ஒரு நாட்டு மக்கள் இன்னொரு நாட்டு மக்களோடு சரியான இணக்கம் வைக்கத் தெரியாமையினாலேயே உலகில் மனத்தாங்கல்கள் ஏராளமாய் உண்டாகின்றன. ஐரோப்பியர்களையும் அமெரிக்கர்களையும் குறித்து 'வெளிநாட்டு வேதாளங் கள்' என்று சீனாக்காரர்கள் அழைக்கின்றார்கள். பண் பட்டிருக்கின்ற மேல் நாட்டு மக்களோடு சீனாக்காரர் கள் தொடர்வு வைத்திருந்திருப்பார்களாகில் இத்த கைய ஒவ்வாத அடைமொழிகளை அவர்கள் மீது வழங்கி யிருக்கமாட்டார்கள்.

ஆக, நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண் டிய கருத்து ஒன்று இருக்கிறது. ஒருவனுக்கு உற்ற கடமை யாது என்பதை வகைப்படுத்துதற்கு அவனுடைய வாழ்க்கையையும் அவனுக்கு ஏற்பட் டுள்ள சூழ்நிலையையும் முக்கியமான முகாமைகளாக எடுத்துக்கொள்ள வேண்டும். நமக்கு எது கட மையாக அமைந்திருக்கிறதோ அதுதான் மற்றவர்களுக் கும் கடமையாக வந்து அமைய வேண்டுமென்று நாம் கருதலாகாது. வாழ்க்கையில் நமக்கு அமைந்துள்ள பழக்க வழக்கங்கள்தான் மற்றவர்களுக்கும் உரிய பழக்க வழக்கங்களாக அமைய வேண்டுமென்று நாம் கருதலாகாது. பிரபஞ்சத்திலுள்ள மற்ற உயிர்களுக் கெல்லாம் நம்மில் எவரேனும் ஒரு மனிதன்தான் அள வையாகவோ முன்மாதிரியாகவோ அமைய வேண்டு

மென்பது நியமமல்ல. ஒவ்வொரு மனிதனும் தனக்குத் தானே அளவையாகிறன். அதாவது எச்செயலைச் செய்தால் ஒரு மனிதன் மேன்மையடையக்கூடுமோ அச்செயலே அவனுக்குப் பொருந்திய கடமையாகிறது. ஏதேனும் ஒரு மனிதனுக்குக் கடமையாக அமைந்திருப் பது மற்ருெரு மனிதனுக்குக் கடமையல்லாது போய் விடலாம். பின்பு உலகத்திலுள்ள மக்கள் எல்லாம் நம்முடைய போக்குக்கு ஒப்ப ஒழுகவேண்டுமென்று நாம் எதிர்பார்க்கலாகாது. உலகத்தவர்களை அனுசரித் தும், அவர்களைத் தழுவியும் வாழவேண்டிய பாடத்தை நாம் கற்றுக்கொள்ள வேண்டும். நம்மை அனுசரித்து உலகம் வரவேண்டும் என்னும் பான்மையை ஒழித்து விட்டு உலகுக்கு ஒப்ப உள்ள நல்லநெறியில் நாம் செல் லக்கற்றுக்கொள்ள வேண்டும். நாம் எத்தகைய இடத் தில் வசித்து வருகின்ருேமோ அது நமக்குற்ற சூழ்நிலை யாகின்றது. சூழ்நிலைகள் நமக்கு மாறி அமைந்துவிடு மாஞல் நமது கடமைகளும் அந்த சூழ்நிலைகளுக்கு ஒப்ப மாறியமைந்துவிடுகின்றன. சூழ்நிலைக்கு அடுத்தபடி காலகதி என்பது ஒன்று இருக்கிறது. எந்த வேளையில் எது நமக்குக் கடமையாக வந்தமைகின்றதோ அதை முழுமனதுடன் நாம் நிறைவேற்றி வைப்பது அவசிய மாகிறது. அமைந்த கடமையை முறையாக நிறை வேற்றி வைப்பதே உலகுக்கு நாம் செய்யும் கைங்கரிய மாகிறது. நாம் எடுத்துள்ள பிறவியை முன்னிட்டு நமக்கு ஏதேனும் ஒரு செயல் வாழ்க்கையின் கடமை யாக வந்தமைகிறது. அப்படி அமைந்துள்ள கட

மையை நாம் முறையாகச் செய்யவேண்டும். பிறகு சமுதாயத்தில் நாம் எத்தகைய பொறுப்பை வகிக்கின்றேமோ அதற்கேற்றபடி நமது கடமை மாறியமைகிறது. அப்படி மாறியமைகின்ற கடமையையும் முறையாக நாம் செய்துவர வேண்டும். இக்கோட்பாட்டை ஒரு சான்றின் மூலம் அறிந்துகொள்ள முயலுவோம். தாய் தந்தையர்க்குப் பணிவிடை செய்யும் நிலையில் தசரத ராமன் இளமைப் பருவத்தில் இருந்தான். பிறகு விசுவாமித்திரருடைய வேள்வியைக் காத்தல் என்னும் கடமையை நன்கு நிறைவேற்ற முன் வந்தான். அடுத்தபடி அவனுக்கு இளவரசுப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் சூழ்நிலை உண்டாயிற்று. அதற்கும் அவன் ஒருப்பட்டான். திடீரென்று அந்தச் சூழ்நிலையினின்று வனவாசம் என்னும் சூழ்நிலைக்கு அவன் மாற்றப்பட்டான். இங்ஙனம் மாறியமைந்த சூழ்நிலைகளைக் குறித்தோ தனக்கு அமைந்துள்ள பொறுப்புகளைக் குறித்தோ அவன் மனக்கிலேசம் அடையவில்லை; சிறிதேனும் தயக்கமும் கொள்ளவில்லை. அப்போதைக்கப்போது தனக்கு அமைந்த கடமைகளை முழு மனதோடு அவன் ஆற்றி வந்தான். அங்ஙனம் ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் தனக்குத் தற்செயலாய் வந்து அமையும் கடமைகளை முறையாக நிறைவேற்ற ஆயத்தமாய் இருக்கவேண்டும்.

மானுட இயல்பில் மற்றொரு இழுக்கு இருக்கிறது. தன்னையே அலசி ஆராய்ந்து பார்க்க எந்த மனிதனும் முற்படுவதில்லை. எச்செயலுக்கும் தான் தகுதி வாய்ந்

தவன் என்றே ஒவ்வொரு மனிதனும் தன்னை மிகை பட மதிப்புப் போட்டுக்கொள்கிறான். சிம்மாசனத்தின்மீது வீற்றிருந்து ஆட்சிபுரியும் தகுதி தன்னிடத்து இருக்கிறதென்று ஒவ்வொரு மனிதனும் எண்ணிக் கொள்கிறான். ஒருவேளை அத்தகைய தகுதி அவனிடத்து இருப்பதாயினும் அவன் உடனடியாகச் செய்யக்கூடிய கடமை ஒன்று இருக்கிறது. இயல்பாக வாழ்க்கையில் எத்தகைய பொறுப்பு அல்லது கடமை தனக்கு வந்து அமைந்திருக்கிறதோ அதை நன்கு நிறைவேற்றி வைப்பது அம்மனிதனுடைய முதல் கடமையாகிறது. தெய்வாதீனமாய் தனக்கு அமைந்துள்ள செயலை ஆற்றும் திறமையும் தகுதியும் தன்னிடத்து இருக்கிறதென்று அம்மனிதன் முதலில் நிரூபிப்பது அவசியமாகிறது. அப்படித் தனக்கு அமைந்துள்ள செயலை அவன் நன்கு நிறைவேற்றி வருவானாகில் அதைவிட உயர்ந்த கடமைகள் தாமாக அவனைத் தேடி வருகின்றன. உயர்ந்த கடமைகளைத் தேடிக்கொண்டு மனிதன் போகவேண்டியதில்லை. உயிர்களாகிய நம் அனைவர்க்கும் பாடம் புகட்டுதற்கென்று அமைந்துள்ள ஒரு பெரிய பள்ளிக்கூடம் ஆகும் இப்பிரபஞ்சம். இப்பிரபஞ்சத்தில் வாழ்க்கையிலே நாம் ஊக்கத்தோடு பிரவேசிக்கிறோம். காய்ச்சிய இரும்பைக் கொல்லன் சம்மட்டியால் அடிப்பது போன்று இயற்கையானது நம்மை ஓயாது அடித்து அல்லல் படுத்துகிறது. அப்படி அல்லல் படுத்துதல் மூலம் வாழ்க்கையில் எத்தகைய பதவிக்கு அல்லது பொறுப்புக்கு நாம்

தகுதி வாய்ந்தவர்கள் என்பதை இயற்கையே விளக்கிக்காட்டிவிடுகிறது. பெரிய செயல்களுக்குத் தகுதி வாய்ந்தவர்கள் என்று நம்மை நாம் மதிப்புப் போடுகிறோம். அது எவ்வளவு தூரம் உண்மை என்பதை இயற்கைத்தாய் நம்மை அல்லலுக்கு ஆளாக்கி நிரூபித்துவிடுகின்றாள். உயர்ந்த பதவி ஒன்றுக்கோ, பொறுப்பு ஒன்றுக்கோ, கடமை ஒன்றுக்கோ தகுதியற்ற மனிதனுக்கு அந்த உயர்ந்த பதவி வந்து வாய்க்குமாகில் அவன் அதை நெடுநாளைக்குக் காப்பாற்றி வைக்க முடியாது. அதிவிரைவில் அந்தப் பெரிய பதவியினின்று கவிழ்ந்து அவன் கீழே விழுந்துவிடுவான். தான் விரும்பிய மேலான பதவி தனக்கு வந்து வாய்க்கவில்லை என்று எம்மனிதனும் முறையிடலாகாது. ஒருவனுடைய தகுதியை உள்ளபடி விளக்கிக்காட்டும் செயலை இயற்கைத்தாய் ஓயாது செய்து வருகிறாள். ஒவ்வொரு மனிதனும் எச்செயலுக்குத் தகுதியுடையவனோ அச்செயலே அவனுக்கு இயல்பாக வந்தமைகிறது. இயற்கைத்தாயின் செயல் என்பதும் தெய்வத்தின் செயல் என்பதும் ஒன்றே. ஆதலால் தெய்வாதீனமாக நமக்கு அமைந்த கடமையை மகிழ்ச்சியோடு நாம் செய்துகொண்டு போகவேண்டும். நமக்கு அமைகின்ற கடமை சிலவேளைகளில் கீழ்த்தரமானதாக இருக்கலாம். அதை முன்னிட்டு நம்மை நாம் கீழோர் என்று எண்ணலாகாது. ஒரு மனிதனுக்கு அமைந்துள்ள கடமைகள் யாவை, எத்தகைய பாங்குடையவை என்பனவற்றைக்கொண்டு அம்மனிதனுடைய

தரத்தை நாம் மதிப்புப்போடலாகாது. தனக்கு அமைந்துள்ள செயல் அல்லது கடமை எதுவாயினும் அக்கடமையை என்ன பாங்குடன் மனிதன் நிறை வேற்றி வருகிறான், அக்கடமையைச் செய்வதற்கு அடிப்படையாக அவனுடைய மனநிலை எப்படி இருக் கிறது என்பதைப் பார்க்கவேண்டும். உயர்ந்த மனப் பான்மையுடன் ஒரு அற்பச் செயலையும் மனிதன் செய்து வருவானாகில் அவன் மேலோன் ஆகின்றான். மிகப்பெரிய கடமைகளையும் கீழான மனப்பான்மை யுடன் ஒரு மனிதன் செய்து வருவானாகில் அவன் கீழ்மையடைந்துவிடுவான். மனநிலையே ஒரு மனிதனை மேலோன் ஆக்குகின்றது அல்லது கீழோன் ஆக்குகின் றது. மிகச் சிறிய செயலையும் உயர்ந்த மனப்பான்மை யுடன் செய்து வருவது நம் கடமையாகிறது.

முறையாக ஒரு மனிதன் தன்கடமையைச் செய்து கொண்டு போவானாகில் அக்கடமையைப்பற்றி அவன் கொண்டுள்ள கருத்தில் மாறுதல் ஒன்று நாளடைவில் உண்டாகிறது. சாதாரண மனிதன் ஒருவன் சுயநலம் படைத்தவனாக இருந்துகொண்டு தன் கடமையைச் செய்துவருகிறான். என்றைக்கு சுயநலப்பற்று போகின் றதோ அன்றைக்கே தனக்கேற்பட்டுள்ள கடமையை மனிதன் ஒருவன் இன்னும் நன்றாகச்செய்து சாதிக்க முடியும் என்பதை அவன் அறிந்துகொள்கிறான். தன் கடமையை முறையாகச் செய்வதினின்று ஒரு மனித னுக்கு உண்டாகும் ஞான அனுபவம் இதுவேயாம். இது என் கடமை, இதை நான் செய்தே ஆக வேண்

டும் என்னும் எண்ணத்தால் தூண்டப்பெறுகிற பொழுதே ஒருவன் தனக்கேற்பட்டுள்ள வினையை நன்கு ஆற்றுகிறான். பிறகு அவன் பெறுகின்ற விவேகத்தினின்று இது என் கடமை என்கின்ற எண்ணம் அகன்று போய்விடுகின்றது. இது என் கடமை என்கின்ற எண்ணத்தைக் கடந்த நிலையில் இருந்துகொண்டு எவன் ஒருவன் வினையாற்றுகின்றானோ அவனே நன்கு வினையாற்றுபவன் ஆகின்றான். அத்தகைய மனநிலையை அவன் அடையும்பொழுது அந்த யோகிக்கு வினையாற்றுவதும் வழிபாடு செய்வதும் ஒன்றுபட்டுவிடுகிறது. மனபரிபாகம் அடையாதவனுக்கு வழிபாடு என்பது வேறு, வினையாற்றுவது என்பது வேறு. மனம் நன்கு தெளிவு அடையப்பெற்றவனுக்கோ தான் ஆற்றுகின்ற வினைகள் அனைத்தும் வழிபாடாக வடிவெடுத்துவிடுகின்றன. ஆற்றுகின்ற ஒவ்வொரு வினையும் வழிபாடு ஆய்விடுங்கால் அது பாராட்டத் தக்க பெருநிலையாம். அதுமட்டுமல்ல. அத்தகைய யோகி ஒருவன் மனப்பான்மையில் இன்னும் உயர்ந்த நிலைக்குப் போய்விடுகின்றான். வழிபாடு செய்கின்றவர்களில் சிலர் சுயநலப்பற்றுவைத்து வழிபடுகின்றனர். ஆனால் மேல்நிலைக்குப் போயுள்ள கர்மயோகியோ எவ்விதமான சுயநலமும் படையாதவனாக இருந்துகொண்டு வினையாற்றுகிறான். சுவாசிப்பது எங்ஙனம் மனிதனுக்கு இயல்பாக அமைந்திருக்கிறதோ அங்ஙனம் ஓயாது நல்வினையாற்றிக்கொண்டிருப்பது நலம் மிகப் படைத்துள்ள கர்மயோகியின் இயல்பு ஆய்

பிரதிபலன் எதையும் கருதாது அவன் பணிவிடை செய்கின்றான். இடையறாது அவன் வினையாற்றுகிறான். அதினின்றும் வரும் வினைப்பயன் யாது என்பதைப்பற்றி அவன் கணப்பொழுதும் கருத்தில் வாங்கிக்கொள்வதில்லை. 'என் கடன் பணிசெய்து கிடப்பது' என்பது கோட்பாடு. இறைவனுக்கு நான் பணிவிடை செய்கிறேன் என்கிற கருத்துடன் பக்தன் ஒருவன் தன் கடமையைச் செய்கிறான். நான் நல்லொழுக்கத்தில் நிலைபெற்றிருப்பதற்காக என் கடமையைச் செய்கிறேன் என்கிற எண்ணத்துடன் கர்மயோகி ஒருவன் தன் கடமையைச் செய்துவருகிறான். கடவுளுக்காகக் கைங்கரியம் செய்வது பக்தியோகத்தின் பாங்கு. நலத்திலே நிலைபெற்றிருப்பதற்காகத் தன் கடமையைச் செய்வது கர்மயோகத்தின் பாங்கு. இந்த இரண்டுவிதமான யோகங்களில் இரண்டுவிதமான மனப்பான்மைகள் இடம்பெற்று வருகின்றன. எனினும் இந்த இரண்டுவிதமான மனப்பான்மைகளின் விளைவு ஒன்றேயாம். 'நான்' என்னும் ஜீவபோதத்தைச் சிறிது சிறிதாகத் தேய்த்து ஒடுக்கிவிடுவது எல்லா யோகங்களின் குறிக்கோள் ஆகும். எவ்வளவுக்கெவ்வளவு 'நான்' என்னும் ஜீவபோதம் தேய்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு மனிதனுடைய மேலாம் இயல்பு ஆகிய பரபோதம் ஒளிர்கிறது. ஜீவபோதத்தை ஆத்மசாதகன் ஒருவன் ஒடுக்குகின்றவளவு அவனுடைய ஆற்றல்களுக்கு விரயம் ஏற்படுவதில்லை. ஜீவபோதம் தலையெடுக்குமளவு பொறிபுலன்களோடு

கூடிய வாழ்க்கையின் கீழான படிகளில் மனிதனுடை ஆற்றல்கள் அழிந்துபட்டுப்போகின்றன. ஜீவபோ தத்தை ஒடுக்கிவிடுங்கால் இந்த ஆற்றல்கள் ஆத்ம சக்தியாக உருவெடுத்து நிற்கிறது. அங்ஙனம் ஆத்ம சாதகனுடைய ஆற்றல்கள் நன்கு காத்துவைக்கப்படுங் கால் அவனுடைய மேலாம் இயல்புகள் தோற்றத் துக்கு வருகின்றன. கீழான ஆசைகளை ஒரு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு அகற்றுகின்றானோ அவ்வளவுக் கவ்வளவு அவனிடத்துள்ள ஆத்மசக்தி நன்கு பாது காத்து வைக்கப்படுகிறது. ஒரு மனிதன் தன் கட மையை முறையாக நிறைவேற்றி வரவேண்டும் என் னும் கோட்பாடு தனது கீழான ஆசைகளை யெல்லாம் அவன் ஒதுக்கிவைத்துவிட வேண்டும் என்னும் முடி வில் கொண்டு சேர்க்கிறது. கீழ்மையை அகற்று மளவு ஒருவன் மேன்மைக்குத் தகுதியுடையவன் ஆகிறான். சமுதாய அமைப்புக்கு நாகரிகம் என்று பெயர். சமுதாயத்தில் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொருவிதக் கடமை ஏற்படுகிறது. அக்கட மையைச் செய்துமுடிப்பதே வாழ்க்கையைப்பற் றிய ஒருவிதமான ஆராய்ச்சியாகும். எக்கடமையைச் செய்தால் மனிதன் மேன்மை யடைகின்றான் என்றும், எக்கடமையைச் செய்தால் மனிதன் கீழ்மையடைகின் றான் என்றும் திரும்பத்திரும்ப சமுதாயத்திலிருப்பவர் கள் ஆராய்ச்சிகள் பல செய்து அதன்மூலம் கடமை யைப்பற்றிய அனுபவங்களையே அவர்கள் பெற்றுள் ளார்கள். ஒவ்வொரு சமுதாயமும் தன் போக்கில்

மேல்நிலைக்கு வந்திருக்கிறது. அறிந்தோ அறியாமலோ அந்தந்த சமுதாயத்தில் உள்ளவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியின் விளைவாகவே அவைகளின் நாகரீகங்கள் உருவெடுத்திருக்கின்றன. அவையாவையும் தொகுத்து ஆராய்ந்து பார்த்தால் நமக்கு ஓர் அரிய உண்மை விளங்கும். சுயநலம் உருவெடுக்காதவண்ணம் எவ்வளவுக்கெவ்வளவு தடைகள் ஏற்படுத்தப்பட்டு உள்ளனவோ அவ்வளவுக்கவ்வளவு அந்த சமுதாயத்தின் நாகரிகம் உயர்ந்தது ஆகிறது. சுயநலம் மிகைபடத் தலையெடுக்குமளவு நாகரிகம் கீழ்த்தரமானது ஆய்விடுகிறது. சுயநலத்தை ஒழிக்குமளவு மனிதனுடைய மேலாம்இயல்பு ஆகிய தெய்வசம்பத்து ஓங்குகிறது. மனிதனிடத்துள்ள தெய்விகத்தன்மையை மேலும் மேலும் தோற்றத்துக்குக் கொண்டு வருதற்கேற்ற செயல்களே சிறந்த கடமைகள் எனக் கருதப்பட்டுள்ளன. இங்ஙனம் ஒவ்வொரு சமுதாயமும் தனக்கேற்பட்டுள்ள கடமை என்பதன் வாயிலாக மேலான நாகரிகத்தை வளர்த்து வந்திருக்கிறது.

கடமையைச் செய்வதில் யாண்டும் இன்பமிருக்கிறதென்று சொல்லுதற்கில்லை. பல தடவைகளில் தனக்கேற்பட்ட கடமையைச் செய்வது மிகக் கஷ்டமாய் இருக்கிறது. கடமையைச் செய்வதற்கு அடிப்படையாக அன்பு நிறைந்திருந்தால் அப்பொழுது கஷ்டம் ஒன்றும் உண்டாவதில்லை. சுழல்கின்ற சக்கரங்களுக்கு எண்ணெயோ, கொழுப்போ போட்டிருந்தால் அவை மிக இலகுவாகச் சுழலும். அப்படி எண்

ணையோ கொழுப்போ போடாவிட்டால் சுழல்கின்ற சக்கரங்கள் விகுத்தம் அடைந்து அவைகளின் இயக்கத்தில் தடை உண்டாகிறது. கடமை என்னும் யந்திரத்துக்கு அங்ஙனம் அன்பு என்னும் எண்ணெய் தடவப்பட்டிருக்கவேண்டும். அன்பினால் தூண்டப் பட்டிருப்பதால்தான் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை மகிழ்வுடன் புரிகின்றனர். சம்பளத்துக்காகவென்று நியமிக்கப்பட்டிருக்கின்றவர்கள் குழந்தைகளுக்கு அங்ஙனம் அல்லும் பகலும் அயர்வின்றி தங்கள் பணிவிடைகளைப் புரிய இயலாது. சம்பளத்தை அதிகப் படுத்துவதால் ஆற்றல் அதிகரித்துவிடாது. அன்பு பெருகுமளவு ஆற்றல் அதிகரிக்கிறது. கணவன்மார்கள் தங்கள் மனைவிமார்களுக்கு உறுதுணையாயிருந்து தங்கள் கடமைகளை நிறைவேற்றுகின்றனர். அதேவிதத்தில் மனைவிமார்கள் சலிப்பு என்பதைச் சிறிதேனும் அறியாதவர்களாய் தங்கள் தலைவர்களுக்குத் தொண்டுபுரிகின்றனர். அத்தகைய பணிவிடைகள் தயங்காது நிறைவேறுவதற்குக் காரணம் அன்பு ஒன்றேயாம். 'அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்பது கோட்பாடு. சமுதாயத்திலுள்ள நம்மவர்களுடைய வாழ்க்கைகளை நாம் ஆராய்ந்து பார்க்குங்கால் தடைகளும், தகராறுகளும், இன்னல்களும் அடிக்கடி நிகழ்வதைக் காண்கிறோம் அல்லவா? எப்பொழுதெல்லாம் கடமையை ஆற்றுங்கால் தடையும் தகராறுகளும் உண்டாகின்றனவோ அப்பொழுதெல்லாம்

அன்பு ஆங்கு பெருக்கெடுக்கவில்லை என்பது புலனு கிறது. அன்பு ததும்பி இருக்குமளவு கடமையைச் செய்வதில் இனிமை மிக உண்டு. இனி, அன்புக்கு இருப்பிடம் எங்கே என்னும் கேள்வி எழலாம். எங்கே கட்டுப்பாடும் நிர்ப்பந்தங்களும் இல்லையோ ஆங்கு அன்பு உரு எடுக்கிறது. சுதந்திரம் நிலவுகின்றவிடத்தே அன்பும் ஒளிர்கிறது. விலைக்கு வாங்கிய அடிமை ஒருவன் தன் தலைவனிடத்து உண்மையான அன்பு பாராட்ட முடியாது. சிறைச்சாலையில் வைத்துள்ள குற்றவாளி ஒருவன் சிறைச்சாலையின் அதிகாரியினிடம் உண்மையான அன்பு காட்டமுடியாது. ஏனென்றால் அடிமை ஒருவனும் குற்றவாளி ஒருவனும் நிர்ப்பந்தத்துக்கு உட்பட்டவர்கள். யாரெல்லாம் பந்தத்தில் தளைக்கப்பட்டிருக்கின்றார்களோ அவர்கள் அடிமைகள். உண்மையான அன்பு அவர்கள் உள்ளத்தில் உரு எடுப்பதில்லை. மக்களுள் பலபேர் ஐம்பொறிகளுக்கு அடிமைப்பட்டவர்களாய் இருக்கிறார்கள். சினத்துக்கு அடிமைப்பட்டவர்கள் உலகில் உளர். விதவிதமான பொறாமைக்கு ஆளானவர்கள் அகிலத்தின் மிசை இருக்கின்றனர். இன்னும் கணக்கற்ற அல்பத்தனங்களுக்கு ஆளானவர்களையும் உலகிலே காணலாம். இத்தகைய சிறுமைகளுக்கு அடிமைகள் ஆனவர்களை சுதந்திரத்தில் வாழ்ந்திருக்கிறார்கள் என்று பகரலாமா? ஆசாபாசங்களுக்கு ஆளானவர்கள் சுதந்திரத்தை ஒரு பொழுதும் அறியமாட்டார்கள். வாழ்க்கையிலே நாம் ஒருவரோடு ஒருவர் உறவாடுகின்றபொழுது கணக்கற்ற சிறுசிறு குத்

தல்களும், இடைஞ்சல்களும், இன்னுதவைகளும் தென்படுகின்றன. அத்தகைய இடுக்கண்களைச் சமாளிக்க வல்லவன் யார் என்பது கேள்வி. இடுக்கண்களை முன்னிட்டு வெகுளுபவன் சுதந்திரத்தை அறிந்தவன் அல்லன். இடுக்கண்களுக்கிடையிலே பொறை அல்லது சகிப்பை எவன் வகிக்கின்றானோ அவனே சுதந்திரம் இன்னது என்பதை ஓரளவு விளக்குபவன் ஆகின்றான். மகளிரில் பலர் சிடுசிடுக்கும் பாங்குடையவர்களாய் இருக்கின்றனர். பொறாமைப்படும் இயல்பும் அவர்களிடம் நிறைந்திருக்கிறது. அத்தகைய புல்லிய இயல்புடையவர்கள் தங்கள் கணவன்மார்கள்மீது ஏராளமாகக் குற்றங்கள் சாட்டுவார்கள். அவர்கள் குறை கூறியும் குற்றங்கள் சாட்டியும் தாங்கள் விரும்பியதை நிறைவேற்றிக்கொள்வதை 'சுதந்திரம்' என்று அவர்கள் கருதுகின்றனர். உண்மையில் அத்தகைய மாந்தர் ஆசாபாசங்களுக்கு அடிமைப் பட்டவர்களேயாம். அவர்களின் அடிமைத்தனம் சுதந்திரம் என்னும் பெயர் பெற்று இலங்கி வருகின்றது. அதே பாங்கில் ஆடவர்களில் பலர் குறைபாடுடையவர்களாய் இருக்கின்றனர். ஒவ்வோர் அற்ப விஷயத்துக்கும் தங்கள் மனைவிமார் மீது குறைகூறும் பாங்கு அவர்களிடத்திருக்கிறது. அத்தகைய ஆடவர்களும் ஆசாபாசங்களுக்கு அடிமைப்பட்டவர்களாம். ஆசாபாசங்களால் தூண்டப் பெற்று ஆற்றும் கடமைகளில் இனிமையை ஒரு நாளும் காணமுடியாது. சகிப்புத் தன்மையும், தியாகமும், மெய்யன்பும் நிறைந்துள்ளவிடத்தே கடமை இனிது நிறைவேறப்பெறுகிறது.

ஒழுக்கங்களுள் தலையாயது கற்பு அல்லது தூய்மை. கற்பு மகளிர்க்கு அணி என்று பலர் கருதுகின்றனர். ஆடவர்க்கும் அதுவே அணியாம். கற்பு ஒன்றே மாந்தரை மேன்மைப்படுத்துகிறது. நெறி வழுவிய ஆடவன் ஒருவன் இருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அவனைத் திருத்தியமைப்பதற்கு உற்ற உபாயம் ஒன்றே உளது. அத்தகைய ஆடவனை மணந்துள்ள மனைவி பொறுமையும், அன்பும், தூய்மையும் வடிவெடுத்தவளாய் இருப்பாளாகில் அவள் தன் கணவனைத் திருத்தியமைப்பது திண்ணம். கற்புடைய மனைவியின் முன்னிலையில் கற்பிழந்த கணவன் தான் நெறிவழுவியதை முன்னிட்டு நாணமுறுவான். நெறிவழுவுதல் என்னும் கேட்டை நீக்குதற்கு நெறி நிற்பது என்னும் கற்பு ஒன்றே உற்ற உபாயம். நெறி வழுவியவனை நெறிநிற்பவர் திருத்தியமைக்க முடியாது என்னும் சீர்கேடான நிலைக்கு உலகம் வந்துவிடவில்லை. மிருகங்கள் போன்று நடந்துகொள்ளும் கணவன்மார்கள் இருக்கிறார்கள் என்னும் செய்தியை உலகிலுள்ள எல்லாச் சமூகங்களிலும் கேள்விப்படுகிறோம். நெறி வழுவிப்போன ஆடவர்களைப்பற்றிய செய்திகளையும் கேள்விப்படுகிறோம். மகளிர்களுக்கிடையில் நெறி வழுவியவர்கள் இல்லையா என்பது அடுத்த கேள்வி. மிருகத்தன்மை படைத்தவர்களாக நடந்துகொள்ளும் மகளிர்களும் இருக்கின்றனர். ஆடவர்களைப் போன்றே மகளிர்களும் நெறிவழுவிப் போய்விடுகின்றனர். பொதுவாக மாதர்கள் கற்புடையவர்களாய் இருக்

திருர்களென்றும், கற்பினின்று வழுவியவர்கள் பெரி தும் ஆடவர்களே என்றும் கருதப்பட்டு வருகிறது. உண்மையில் உலகிலுள்ள மகளிர் அனைவரும் கற்பே வடிவெடுத்தவர்களாக ஆய்விடுவார்களாகில் ஆடவர் களும் நிச்சயமாகவே கற்புடையவர்களாக மாறிவிடு வார்களென்று உறுதி கூறலாம். அப்பொழுது உலகில் கற்பினின்று வழுவிய ஒரு மனிதனையும் காணமுடி யாது. இரு பாலர்களும் உடந்தையாய் இருப்பதாலே யேதான் நெறிவழுவுதல் நிகழ்கிறது. தூய்மையினு லும் கற்பினுலும் திருத்தியமைக்க முடியாத விலங்குத் தன்மை ஏதேனும் உண்டா? கற்புடைய மாது ஒருத்தி தன் கணவன் ஒருவனைத் தவிர ஏனைய ஆட வர்களனைவரையும் தனது குழந்தைகள் போன்று கருதவேண்டும். தாய் ஒருத்தி தன் குழந்தையிடம் நடந்துகொள்வது போன்று அம்மாது ஆடவர் அனைவ ரிடமும் நடந்துகொள்ளவேண்டும். அப்பொழுது தூய்மையில் அவள் மிக உயர்ந்த நிலைக்குப் போய்விடு வாள். அவளுடைய சன்னிதிக்கு வரும்பொழுதே ஆடவன் ஒருவன் தெய்வ சான்னித்தியத்திலிருப்பதாக உணர்வான். அம்மங்கையினிடமிருக்கும் தூய்மையின் வலிவால் ஏதேனும் ஓர் ஆடவனிடமிருக்கும் விலங்குத் தன்மை தானுக அகன்று போய்விடும். தெய்விகப் பண்பை அத்தகைய புல்லியன் அவளுடைய முன் னிலையிலே நன்கு உணர்வான். இக்கோட்பாடு இனி கணவன் ஒருவனுக்கும் அமையப் பெறுகிறது. தன் மனைவி ஒருத்தி நீங்கலாக ஏனைய பெண்பாலர்களை

அவன் தன் தாய் போன்ருே, தன் புதல்வி போன்ருே அல்லது தன் சகோதரி போன்ருே உணருதல் வேண்டும். இனி மக்களுள் சிலர் மதபோதனைக்காகவென்றே அமைந்திருக்கின்றனர். அத்தகையவர்கள் மணம் புரிந்துகொள்ளலாகாது. உலகிலுள்ள மாதர் அனைவரையும் தாய்சொரூபமாக அவர்கள் உணர்ந்து வர வேண்டும். தாயின் முன்னிலையில் சேய் ஒருவன் எங்ஙனம் நடந்துகொள்வாளுே அதே பாங்கில் மதபோதகர் மகளிர் அனைவர் முன்னிலையிலும் நடந்துகொள்ள வேண்டும்.

உலகத்தவர் வகிக்கும் அந்தஸ்துகளுள் தாய் ஒருத்தியின் அந்தஸ்தே தலை சிறந்தது. அதற்கேற்ற காரணமும் ஒன்று உண்டு. சுயநலப்பற்றற்ற நிலையில் தாய் ஒருத்தி இருக்கின்ருள். சுயநலத்தை நீத்தல் வேண்டும் என்னும் கோட்பாட்டை தாய் ஒருத்தியிடமிருந்தே மற்றவர்கள் கற்றுக்கொள்ள முடியும். கடவுளின் அன்புக்கு அடுத்தபடியில் இருக்கிறது தாய் அன்பு. ஆதலால் தாயின் அன்பு மூலமே கடவுள் அன்பை நாம் ஓரளவு அறிந்துகொள்ளமுடியும். ஏனைய அன்புகளெல்லாம் தாயின் அன்புக்கு நிகராகமாட்டா. மற்ற அன்புகளெல்லாம் கீழ்நிலையில் இருக்கின்றனவென்றே இயம்பலாம். தாய் ஒருத்தி தன் குழந்தைகளின் நலத்தைப்பற்றி முற்றிலும் கருத்தில் வைக்கின்ருள். தன் சொந்த நலத்தைப்பற்றி அவள் சிறிதேனும் நினைப்பதில்லை. சுயநலப்பற்றைப் போக்கியதாலேயே அவளிடத்து அத்தகைய புனிதமும் மேன்

மையும் வந்து அமைந்தன. இதற்குமாறாக பெற்றோர்கள் தங்களுடைய சுயநலத்தைப்பற்றியே ஓயாது எண்ணிக்கொண்டிருப்பார்களாகில் அதன் விளைவு விபரீதமாய்ப்போய்விடும். பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்குமிடையில் புனிதமான நட்பு உண்டாகாது. பறவைக்கும் அதன் குஞ்சுகளுக்குமிடையிலுள்ள இணக்கத்தைப் போன்று அது நிலையற்றதாய்விடும். குஞ்சுகள் பறக்கவும் இரைதேடவும் தெரிந்துகொண்டவுடனே தாய்ப் பறவையைப் பொருட்படுத்துவதில்லை. அத்தகைய கீழான இணக்கம் பண்புடைய மாந்தர்க்குப் பொருந்தாது. உலகிலுள்ள உயிர்களனைத்துக்கும் கடவுளே அம்மையப்பன் ஆயிருக்கின்றார். ஆதலால் உலகிலுள்ள பெண்பாலர் அனைவரையும் அன்னை பராசக்தியின் சொரூபமாகக் கருதவல்ல மானுடன் பாக்கியவான் ஆகின்றான். உலகிலுள்ள ஆடவர் அனைவரையும் கடவுளின் சொரூபமாகக் கருதவல்ல மாது ஒருத்தி பாக்கியவதி ஆகின்றாள். தமது தாய்தந்தையர்களை தெய்வ சொரூபமாகக் கருதவல்ல புதல்வர்கள் பாக்கியவான்கள்.

நமக்கு அப்போதைக்கப்போது இயல்பாக வந்து அமையும் கடமையை ஒழுங்காக நிறைவேற்றுவதே முறை. அப்படிச் செய்வதால் மனபரிபாகத்தில் நாம் மேன்மையடைகிறோம். பரிபாகம் அடைந்துள்ள மனதுக்கு ஆற்றல் மிக உண்டாகிறது. நேர்மையோடு கூடிய உறுதியும் அதற்கு உண்டாகிறது. பரிபூரணம் என்னும் ஒப்பு உயர்வற்ற நிலையை அத்தகைய மனது

யில் பெற்றுவிடுகிறது. இக்கோட்பாட்டை விளக்கவல்ல சம்பவம் ஒன்று முன்பு ஒரு காலத்தில் நிகழ்ந்தது. அது மிகப்பழைய நிகழ்ச்சி எனினும் எக் காலத்திலும் அனைவர்க்கும் அது பாடம் புகட்ட வல்லது. இளம் துறவி ஒருவன் தவத்தின் பொருட்டு ஒரு கானகத்துக்குச் சென்றிருந்தான். ஆங்கு அவன் ஆழ்ந்து தியானம் பழகினான். உள்ளன்போடு கடவுள் வழிபாடு செய்தான். யோக சாதனங்களை நெறியுடன் அவன் பழகி வந்தான். பாரமார்த்திக வாழ்க்கையில் அவன் அங்ஙனம் நெடுங்காலம் கழித்தான். பல ஆண்டுகளாக அவன் தவம் புரிந்தவன் ஆனான். சீரிய சாதனங்கள் பலவற்றை செய்து சாதித்தவன் அவனே. ஒரு நாள் அவன் ஒரு மரத்தடியில் அமர்ந்து கொண் டிருந்தான். அப்பொழுது உலர்ந்த இலைகள் சில மரத் தின் மேலிருந்து அவனுடைய சிரசின்மீது விழுந்தன. அதற்குக் காரணம் யாது என்பதை அறிதற்பொருட்டு அவன் நிமிர்ந்து மேலே பார்த்தான். மரக்கிளைகளின் மீது ஒரு காகமும் ஒரு கொக்கும் சண்டையிட்டுக் கொண்டிருந்ததைக் கண்டான். அதைப் பார்த்ததும் தன்னையறியாது அவனுக்குப் பெருங்கோபம் மூண்டு விட்டது. "ஆ! இத்தகைய உலர்ந்த இலைகளை நீங் கள் என் தலைமீது தூவுகின்றீர்களா?" என்று அவன் சினந்துகொண்டு சொல்லலாயினன். வெகுளியே வடி வெடுத்தவனாக அவன் அப்பறவைகளை உற்று நோக்கி னான். அக்கணமே அவனுடைய கண்களினின்று கனல் ஒன்று வேகமாக வெளிக்கிளம்பிற்று. தவத்தின்

விளைவாக அத்தகைய சித்தி அவனுக்கு உண்டாயிருந்தது. சண்டையிட்டுக்கொண்டிருந்த பறவைகள்மீது அந்த நெருப்புப் பாய்ந்து அவைகளைச் சாம்பலாக்கி விட்டது. அந்நிகழ்ச்சியைக் காணலுற்ற துறவி பெரு மகிழ்வு அடைந்தான். தன்னிடத்து உண்டாயிருந்த சித்தியைக் குறித்து அவன் பூரிப்பு அடைந்தான். வெறும் பார்வையினாலேயே அவன் காக்கையையும் கொக்கையும் கொளுத்திவிட வல்லவனானான்.

பின்பு அவன் பிக்ஷையின் பொருட்டுப் பக்கத்தி லிருந்த கிராமம் ஒன்றுக்குப் போக வேண்டியதாயிற்று. கிராமத்துக்குள்ளே அவன் நுழைந்தான். ஒரு வீட்டு வாயிலண்டை நின்றுகொண்டு "பிக்ஷாந்தேஹி — தாயே சிறிது அன்னம் அளிப்பாயாக" என்றான். "மகனே சற்றுப்பொறுத்திரு" என்னும் குரல் ஒன்று வீட்டின் உள்ளிருந்து வெளியே வருவதாயிற்று. அதைக்கேட்ட தியாகி தனக்குள்ளே எண்ணுவானா யினன்: "அற்ப மாதே, என்னைக் காத்திருக்கும்படிச் செய்ய நீ துணிகின்றாயா? என்னிடத்து எத்தகைய சித்தி இருக்கிறது என்பதை நீ அறியாய் போலும்." இங்ஙனம் அவன் இறுமாப்புற்று எண்ணிய அக்கணத் திலேயே வீட்டின் உள்ளிருந்து மற்றுமொருமுறை அம்மாது பேசிய குரல் வெளியே வந்தது: "சிறுவா, வீண் கர்வம் கொள்ளவேண்டாம். உனது கோபத் துக்கு இலக்காக இங்குக் காக்கையுமில்லை, கொக்கு மில்லை." இக்கூற்றைக் கேட்டதும் துறவி திகைத் துப்போய்விட்டான். மேலும் அவன் காத்திருக்க

வேண்டியதாயிற்று. கடைசியாக இல்லக் கிழத்தியாகிய அந்தத்தாய் வெளியில் வந்தாள். அவளுடைய பாதங்களில் வீழ்ந்து தவசி விண்ணப்பிக்கலாயினன். "தாயே, இவ்வரலாற்றை நீ எங்ஙனம் அறியலாயினை! சிறிது நேரத்துக்கு முன்பு நிகழ்ந்த அதை நான் யாரிடத்திலும் வெளியிடவில்லையே!" மாது மேலும் மொழியலானுள்: "மகனே, உனது யோக சாதனங்களைப்பற்றியும், இதர ஆத்மப் பயிற்சிகளைப்பற்றியும் நான் ஒன்றும் அறியேன். சர்வசாதாரணமாக வாழ்க்கை நடத்தும் மங்கை நான். காத்திருக்கும்படி உனக்குக் கட்டளையிடும் நெருக்கடி ஒன்று எனக்கு நேர்ந்திருந்தது. என் கணவர் நோய்வாய்ப்பட்டிருக்கிறுர். அவருக்கு நான் பணிவிடை செய்துகொண்டிருந்த வேளையில் நீ கூவிய குரல் கேட்டது. ஆயுட்கால முழுதிலும் எனக்கு அமைந்து வரும் கடமையை நான் முறையாகச் செய்துவர முயன்று வருகிறேன். மணம் புரிந்துகொள்ளுதற்கு முன்பு நான் கன்னிகையாய் இருந்தபொழுது என்னுடைய பெற்றேர்களுக்கு என் கடமையை நான் நிறைவேற்றி வந்தேன். மணம் புரிந்த நாள் முதல் என்னைக் கொண்டவர்க்கு என் கடமையை நான் ஆற்றி வருகிறேன். இதுவே நான் புரியும் கர்மயோகமாகும். இப்படி என் கடமையை நான் முறையாகவும் ஊக்கத்துடனும் செய்து வருவதால் எனக்கு மனத்தெளிவு உண்டாயிருக்கிறது. தெளிந்த மனம் படைத்திருப்பவர்களுக்கு மற்றவர்கள் மனதில் உதிக்கும் எண்ணங்கள் எளிதில் விளங்கிவிடு

கின்றன. ஆகவே உனது எண்ணங்களை உள்ளபடி அறிந்துகொள்ள எனக்கு இயன்றது. வனத்தில் நீ செய்து சாதித்தது யாது என்பதையும் நான் அறிந்து கொண்டேன். நான் பெற்றுள்ள பரிபாகம் இவ்வளவு தான். இதினும் மேலான கோட்பாடுகளை அறிந்து கொள்ள நீ விரும்புவாயாகில் அண்மையில் உள்ள அமரபுரி என்னும் ஊருக்குப் போ. ஆங்கு வியாதன் ஒருவன் இருக்கின்றான். அவன் வேட்டையாடியும், இறைச்சி விற்றும் ஜீவனம் பண்ணுகின்றவன். சந்தைக்குள் அவன் ஒரு கசாப்புக்கடை வைத்திருக்கிறான். நீ அவனை அணுகி மேலும் வினவுவாயாகில் நீ அறிந்து கொள்ளவேண்டிய அரிய கோட்பாடுகள் சிலவற்றை அவன் உனக்கெடுத்து உபதேசிப்பான். அவ்வுண்மைகளை அறிந்து நீ பெருமகிழ்வு அடைவாய்." இங்ஙனம் அம்மாது மொழிந்தாள்.

பேதை என்று பகரப்பெறும் பெண்பால் ஒருத்தியின் பேச்சைக்கேட்டு இந்த இளம் சன்னியாசி வியப்பு மிக அடைந்தான். அவன் தனக்குத் தானே எண்ணிக் கொள்வானாயினன்: "நடமாட்டம் மிக நிறைந்துள்ள அந்த அமரபுரிக்கு நான் ஏன் போக வேண்டும்? மேலும் இழிதொழில் புரிகின்ற வியாதன் ஒருவனிடம் எனக்கு என்ன வேலை இருக்கிறது?" சற்றுச் சிந்தித்துப் பார்த்த பிறகு அத்துறவிக்கு மற்றொரு கருத்து மனதில் எழுந்தது. 'பெறுதற்கரிய அனுபவம் ஒன்றை ஈண்டு இல்லக்கிழத்தி ஒருத்தியிடமிருந்து நான் பெறலானேன். அதனால் என்னுடைய மனது சிறிது விக

சிப்பு அடைந்தது. ஓரளவு பரந்த மனப்பான்மையும் எனக்கு உண்டாயிற்று. நிகழ்வது யாது என்று பார்க்கலாம்' என்ற எண்ணம் கொண்டவனாக அவன் அவ்வூரை நோக்கிப் புறப்பட்டுப் போனான். கலகலப்பு நிறைந்த அவ்வூர் கடைவீதியினுள் அவன் நுழைந்தான். சிறிது தூரத்துக்கப்பால் வண்ணத்தில் பருத்துக்கொழுத்திருந்த கசாப்புக் கடைக்காரன் துறவியினுடைய கண்ணுக்குப் புலனானான். தன் கடையில் காரியத்தில் ஈடுபட்டவனாக அவன் அமர்ந்திருந்தான். பெரிய கத்திகளை அவன் சாமர்த்தியமாகக் கையாண்டு வந்தான். இறைச்சியை வெட்டுவதும், கூறுபோடுவதும், எடைபோடுவதும், எடுத்து விற்பதும் ஆன செயல்கள் திறம்பட நிகழ்ந்து வந்தன. கைகள் அங்ஙனம் வேலை செய்துகொண்டிருப்பதற் கிடையில் அவன் வாய்விட்டுப் பேசிக்கொண்டும் இருந்தான். விலை கூறுவதும், வரவேண்டிய பாக்கிப் பணத்தை வற்புறுத்திக் கேட்பதும், கடன்கொடுக்கச் சம்மதிப்பதும், காசைக்கைமேல் வாங்கிக்கொண்டு கவிச்சியைக் கொடுப்பதும் நிகழலாயின. பின்பு விதவிதமான பாங்குடைய மனிதர்களிடத்து விதவிதமான பேச்சுக்களை அவன் சாதுர்யமாகப் பேசிவந்தான். விபரீதமான இந்த வியாதனைத் தேடிவந்த துறவி திகைத்துப்போய் விட்டான். "இறைவா, எனக்கு அருள் புரியும். இந்த பயங்கரமான பிரகிருதியிடத்திருந்தா நான் புதிய ஞானத்தைக் கற்றுக்கொள்ளப் போகிறேன்? அரக்கன் ஒருவன் இவ்வடிவத்தில் தோன்றி வந்திருப்பது

போன்று இவன் தென்படுகின்றானே.'' இங்ஙனம் சன்னியாசி தனக்குள் சிந்திக்கலானான். இதற்குள் அந்தக் கசாப்புக் கடைக்காரன் புதியதாய் அங்கு வந்திருந்த இத்துறவியை கண்ணெடுத்துப் பார்த்தான். "ஓய், சுவாமிகள், சற்று அங்கு நில்லும். பக்கத்துக் கிராமத்திலிருக்கும் அந்த மாதரசி ஒருத்தி உங்களை இங்கே அனுப்பிவைத்தாளா? உம்மோடு பேச எனக்கு இப்பொழுது நேரமில்லை. அதோ எட்ட இருக்கும் அம்மரத்தடியில் சற்று அமர்ந்திரும். என் அலுவல்களை முடித்துக்கொண்டு வந்து பிறகு நான் உம்மோடு பேசுகிறேன்.'' இங்ஙனம் இறைச்சிக் கடைக்காரன் பயமுறுத்துபவன் போன்று பேசினான். இதைக்கேட்ட சன்னியாசியாகிய தவசியின் வியப்பு இன்னும் அதிகரித்தது. "எனக்கு ஈண்டு நிகழப்போவதுதான் யாது?'' என்று அவன் எண்ணலானான். வியாதன் வேண்டிக் கொண்டபடி அத்துறவி ஆங்கிருந்த மரத்தடியில் அமர்ந்துகொண்டான். கசாப்புக்கடைக்காரனுடைய தொழில் மேலும் நிகழ்வதாயிற்று. அதில் அவன் கண்ணும் கருத்துமாய் இருந்ததை துறவி கவனித்துப் பார்த்தான். அன்று வியாதன் நிகழ்த்திய வாணிபம் முடிவுக்கு வந்தது. கடையை அவன் மூடினான். பணத்தைப் பையில் கட்டிக் கையில் எடுத்துக்கொண்டான். சன்னியாசி அமர்ந்திருந்த மரத்தண்டை வந்தான். "வாரும் பெரியோய். என் வீட்டுக்கு எழுந்தருளுங்கள்'' என்று உரத்த குரலில் அவன் உறுதியுடன் பேசினான். பதில் ஒன்றும் பேச இயலாத

வனுய், புன்னகை பூத்தவனுய் துறவியானவன் வியாதனைப் பின் தொடர்ந்தான். வீட்டுக்கு வந்ததும் வியாதன் திண்ணையின் மீது ஆசனம் ஒன்றை விரித்து அச்சன்னியாசியை அதில் அமர்ந்திருக்கும்படி வேண்டினுன். வீட்டினுள் தான் புரிதற்கிருந்த கடமையை நிறைவேற்றிவிட்டு வரும் பரியந்தம் ஆங்குக் காத்திருக்கும்படியும் துறவியை அவன் வேண்டிக்கொண்டான்.

விருத்தாப்பிய தசையை அடைந்திருந்த அவனுடைய பெற்ருேர்கள் இன்னும் உயிர் வாழ்ந்திருந்தார்கள். வீட்டுக்குள் சென்றவன் தாய் தந்தையர்களைக் குளிப்பாட்டினுன். பிறகு அவர்களுக்கு உணவு படைத்தான். மேலும் அவனுல் செய்யக்கிடந்த கடமைகளையெல்லாம் நிறைவேற்றினுன். அவர்களை முற்றிலும் திருப்திப்படுத்தியாய்விட்டது என்பதை வியாதன் உறுதிப்படுத்திக்கொண்டான். அதன் பிறகு வெளியே காத்துக்கொண்டிருந்த சன்னியாசியை உபசரிக்க அவனிடம் சென்ருன். பிக்ஷை ஏற்றுக் கொள்ளும்படி அவனிடம் பணிவுடன் வேண்டிக்கொண்டான். ஆனுல் அத்துறவியோ அன்று முற்பகலிலேயே தான் பிக்ஷை ஏற்று அருந்தியாய்விட்டது என்று உரைத்தான். அப்படியானுல் அத்துறவிக்குத் தன்னுல் செய்யக்கூடிய காரியம் வேறு ஏதேனும் இருக்கிறதா என்று இறைச்சி வர்த்தகன் மீண்டும் கேட்டான். வந்திருந்த துறவி ஜீவாத்மனைப்பற்றியும் பரமாத்மனைப்பற்றியும் அவனிடம் சில கேள்விகள் கேட்டான். வியாதனும் அக்கேள்விகளுக்கேற்ற விடை

களைத் தெளிவுபட விளக்கினன். இவர்களுக்கிடையில் இங்ஙனம் நிகழ்ந்த சம்வாதம் மஹாபாரதம் என்னும் இதிகாசத்தில் பொதிந்திருக்கிறது. இந்த சம்வாதத் துக்கு வியாதகீதை என்று பெயர். இந்துமதத்தில் அமைந்துள்ள பல சாஸ்திரங்களுள் கீதைகள் என்னும் பெயர் தாங்கியவைகள் பல இருக்கின்றன. பிரம்ம கீதை, சிவகீதை, கணேசகீதை, ரிபுகீதை, பகவத்கீதை ஆகியவைகளைச் சான்றாகச் சொல்லலாம். அவை களுள் வியாத கீதையும் ஒன்று. இந்த நூலின்கண் அரிய வேதாந்தக் கோட்பாடுகள் புதைந்து கிடக்கின் றன. அற்புதமான நூல்களில் இது ஒன்று. தான் பகரவேண்டியவைகளை யெல்லாம் வியாதன் நன்கு நிறைவேற்றியான பிறகு அவனை நாடி வந்திருந்த சன்னியாசி பெரு வியப்பு அடைந்தான். அத்துடன் அந்த வியாதனிடம் வந்திருந்த துறவி இறுதியான வினா ஒன்றை வெளியிட்டான்: "வேதாந்தத்தை நன்கு விளக்கவல்ல நீவிர் இந்த வெவ்விய வியாத உடலில் வசித்திருப்பானேன்? விப்ரன் ஒருவனுடைய உடலில் அன்றோ நீவிர் வாழ்ந்திருப்பது பொருந்தும். வியாதனுடைய உடலின்கண் இருப்பதுமல்லாது இத் தகைய இழி தொழிலையும் செய்வானேன்? அருவருப் புக்குரிய இச்செயல் பரந்த ஞானியாகிய உமக்குப் பொருந்துமா?"

புன்னகை பூத்தவனாக வியாதன் விடைவிடுக்க லானான்: "பெரியோய்! கடமை எதுவும் மாசுபடிந்த தன்று. சமுதாயத்துக்குத் தேவையாய் இருக்கும்

தொழில் எதிலும் தீங்கு இல்லை. எனக்குத் தற்செயலாய்ப் பிறப்பு ஈண்டு இத்தகைய மக்களுக்கிடையில் நிகழ்வதாயிற்று. இந்தச் சூழ்நிலையும் எனக்குத் தானாக வந்து அமைந்ததாகும். ஆதலால் சின்னஞ்சிறு வயதிலேயே இத்தகைய வியாபாரத்தை நான் கற்கலானேன். எத்தொழில் எனக்கு வந்து அமைகின்றது என்பதைப் பற்றி நான் கவலைகொள்ளவில்லை. இப்பொழுதும் விருப்பு வெறுப்பு இரண்டையும் கடந்தநிலையில் நான் இருக்கிறேன். பற்று அற்றவனாக பாரகத்தில் இருந்து கொண்டு என் கடமையை நன்கு நிறைவேற்ற நான் ஓயாது முயன்று வருகிறேன். குடும்பி ஒருவனுக்கு அமைந்துள்ள அறச்செயல்களை யெல்லாம் நன்கு நிறைவேற்ற நான் கடமைப்பட்டவன். என் தாய் தந்தையர் மகிழ்வுற்றிருக்குமாறு நான் பெரும் முயற்சிகள் எடுத்துக்கொள்கிறேன். அவர்களுக்கு நான் புரிய வேண்டிய குற்றேவல்களை யெல்லாம் முறையாக நிகழ்த்தி வருகிறேன். தாம் பயிலுகின்ற ராஜயோக சாதனங்களை யெல்லாம் நான் பயின்றவன் அல்லன். உம்மைப் போன்று நான் ஒரு சன்னியாசி ஆகவுமில்லை. நாட்டைத் துறந்துவிட்டு நான் காட்டுக்குச் சென்றவனும் அல்லேன். ஆயினும் தாம் என்னிடமிருந்து இப்பொழுது கேட்ட மேலாம் வேதாந்தக் கோட்பாடுகளை யெல்லாம் அறிந்து கொள்ளுதற்கான ஆத்மபரிபாகம் நான் புரிந்துவரும் கர்மயோகத்தினின்று எனக்கு உண்டாயிற்று. பிறப்பில் சிறுமையில்லை; செய் தொழிலிலும் சிறுமையில்லை. சிறுமை என்பது

மாசுபடிந்த மனத்தகத்தே உளது. பண்பட்ட மன முடையவருக்கு அமையும் கடமை யாவும் பரமனுக்கு உற்ற பணிவிடையாம். என் பிறப்புக்கு ஏற்ற பணி விடை ஒன்று எனக்கு அமைவதாயிற்று. பற்றற்றவ ஞக நான் அதைப் புரிந்து வருகிறேன்."

தாம் கண்டறிந்த பரமயோகி ஒருவரைப்பற்றி விவேகானந்த சுவாமிகள் பகரலானுர். பவாஹாரிபாபா என்பது அவருடைய பெயர். விவேகானந்த சுவாமிகள் தமது ஜீவிய காலத்தில் சந்தித்த பெருமக்களுள் அவரும் ஒருவர் ஆவார். விவேகானந்த சுவாமிகளுக்கு அவர் ஒரு உப குருவாக அமைந்தார் என்று இயம்ப லாம். ஆனுல் பிறர்க்கு எதையும் எடுத்து உபதேசிக் கும் மனப்பான்மை பவாஹாரிபாபாவிடம் ஒரு பொழு தும் வந்தது கிடையாது. அவர் ஓர் அலாதியான போக் குடையவராகத் திகழ்ந்திருந்தார். யாராவது கேள்வி ஏதேனும் ஒன்றைக் கேட்டால் அவர் அதற்கு நேரே விடையளிப்பதில்லை. போதகன் என்கின்ற பதவியை அவர் ஒரு பொழுதும் வகித்தது கிடையாது. போத கன் அல்லது குரு என்கின்ற நிலையே அவரை மருட்டி விடும். அத்தகைய எண்ணத்தை அவர் தூர ஒதுக்கி வைத்துவிட்டார். ஆயினும் அவரிடம் யாராவது கேள்வி கேட்டால் அதற்குத் தக்க விடை கிடைக்கும். அந்த விடையின் பொருட்டுச் சில நாள் காத்திருக்க வேண்டியது அவசியமாயிற்று. ஏதோ பேச்சுக்கிடை யில் அக்கேள்வியை பவாஹாரிபாபா தாமே கிளப்பி விடுவார். ஐயம் திரிபு அற அக்கேள்விக்கு ஏற்ற

விடைகள் எல்லாம் அவரிடமிருந்து பேச்சோடு பேச்சாக வந்துகொண்டிருக்கும். குரு என்கின்ற பெரிய ஸ்தானத்தில் தம்மை வைத்துக்கொள்ளாது குரு ஒருவர் ஆற்றுகின்ற சீரிய கடமைகளை அவர் பாங்குடன் செய்து வந்தார். வினையாற்றும் விதத்தைப்பற்றி அவர் ஒரு தடவை விவேகானந்த சுவாமிகளுக்கு இனிது விளக்கலானார். "சாதனத்துக்கு ஏற்ற அளவே சாத்தியம் வந்து வாய்க்கிறது." கர்மத்தைப்பற்றிய ரகசியம் இதுவே செய்கின்ற சாதனம் எவ்வளவுக்கெவ்வளவு தீவிரமானதாகவும் உறுதியானதாகவும் இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதன் விளைவும் மேம்பட்டதாகும். மாந்தர் உள்ளத்தனையது உயர்வு என்னும் கோட்பாடு செயலாக வடிவெடுக்குமிடத்து அது சாதனத்துக்கேற்றவளவு சாத்தியமாகிறது எனப் பொருள்படுகிறது. முயற்சியில் தளர்வுற்றிருப்பவர்களுக்குத் தொடுத்த கர்மத்தில் வெற்றியும் கீழ்த்தரமானதாகப் போய்விடும். ஏதேனும் ஒரு முயற்சியில் மனிதன் ஈடுபட்டிருக்கும் பொழுது மற்ற அலுவல்களையெல்லாம் அவ்வேளையில் முற்றிலும் மறந்துவிட வேண்டும். எடுத்துக்கொண்ட செயலில் கவனம் முழுதையும் செலுத்தவேண்டும். ஆழ்ந்த பக்தியுடன் கடவுள் வழிபாடு எங்ஙனம் செய்யப்படுகிறதோ அதே மனப்பான்மையுடன் எடுத்துக்கொண்ட கர்மத்திலும் ஈடுபடுவது அவசியமாகிறது. செய்கின்ற வினையைச் சீரிய வழிபாட்டுக்கு ஒப்பாக யார் ஒருவன் நிறைவேற்றி வருகின்றானோ அவன் அம் முயற்சியில் வெற்றி

யடைவான். அம் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் பரியந் தம் அவன் தனது உயிரனைத்தையும் அச்செயலுக் கென்றே ஒப்படைத்து விடுவது அவசியமாகிறது. இக்கோட்பாட்டை வியாதனுடைய வரலாறும், கற் புடைய மாதின் வரலாறும் விளக்கிக்காட்டுகின்றன. அருவருப்புக்குரிய கடமை ஒன்று தனக்கு வந்து வாய்த்துவிட்டதென்று வியாதன் ஒரு கணப்பொழுதி லும் விசனப்பட்டதுகிடையாது. மகிழ்ச்சியோடும் முழு மனதோடும் தன் கடமையை அவன் நிறைவேற்றி வந்தான். தன் கணவனுக்குப் பணிவிடை செய்து வந்த மங்கையின் மனப்பான்மையும் அத்தகையதே யாம். அவர்கள் கொண்டிருந்த மனப்பான்மையினுல் அவர்களுக்கு ஏற்பட்ட கடமைகள் மிக மேலானவை கள் ஆய்விட்டன. அதன் விளைவாக அவர்கள் இரு வரும் ஆத்ம ஞானத்துக்குத் தகுதியுடையவர்கள் ஆனுர்கள். மானுட வாழ்க்கைக்கு இன்றியமையாத கடமைகள் பல இருக்கின்றன. அவைகளுள் தற்செய லாய்த் தனக்கு வந்து வாய்க்கும் ஏதேனும் ஒரு கடமையை முறையாகவும் மகிழ்வுடனும் ஒரு மனி தன் நிறைவேற்றி வரவேண்டும் என்னும் கோட்பாடு ஈண்டு வெளியாகிறது. தான் ஆற்றுகின்ற வினையின் விளைவு எதுவாயினும் அதனிடத்து மனிதன் பற்று தல் வைக்கலாகாது. அவன் பற்றற்றவனுய் இருந்து கொண்டு தனக்கு வாய்த்த கடமையை நிறைவேற்றி வருவானுகில் அவன் ஆத்மபரிபாகம் அடைகிறுன். உயர்வுற உயர்ந்துள்ள ஆத்ம ஞானமும் அத்தகைய வனுக்கு வாய்க்கிறது.

தனக்கு வாய்த்துள்ள கடமை கீழானதென்றும், தனக்கு ஒவ்வாததென்றும் குறை கூறுகிற மனிதனை உலகில் காணலாம். வினைப்பயனில் பற்றுவைத்திருக்கின்ற மனிதனே அங்ஙனம் குறை கூற முந்துகிறான். பற்றற்ற கர்ம வீரனுக்கோ கடமைகள் அனைத்தும் நலம் வாய்ந்தவைகளாம். அவைகளுக்கிடையில் ஏற்றத் தாழ்வு இல்லை. தோட்டித் தொழில் செய்வதும், தேவாலயப் பணிவிடை செய்வதும் கர்மயோகி ஒருவனுக்கு ஒரே பாங்குடையவைகள் ஆய்விடுகின்றன. இவைகளுள் ஒரு கடமையை உயர்ந்தது என்றும் மற்றொரு கடமையைத் தாழ்ந்தது என்றும் கருதுபவன் வினைப்பயனில் பற்றுவைத்திருக்கிறான் என்பதாகிறது. தனக்கு வாய்த்துள்ள ஏதேனும் ஒரு கடமையை கர்மயோகி ஒருவன் முறையாக நிறைவேற்றி வருவானாகில் அதன் மூலம் 'தான் தனது' என்னும் சுயநலங்களையெல்லாம் அவன் அறவே அகற்றிவிடுகிறான். பொறிவாயில் ஐந்தையும் அவன் அவித்தவன் ஆகிறான். புலன்களில் பிறகு அவனுக்குப் பற்று உண்டாவதில்லை. கண்ணாடியில் தென்படுகின்ற விதவிதமான பிம்பங்கள் கண்ணாடியைப் பாழ்படுத்துவதில்லை. அங்ஙனம் ஆற்றுகின்ற வினை எத்தகையதாயினும் அது யோகி ஒருவனுடைய உள்ளத்தை மாசு படுத்துவதில்லை. அத்தகைய பரிபாகம் அவனுக்கு வந்து அமைந்தான பிறகு அவன் ஜீவன் முக்தன் நிலையை அடைந்தவனாகிறான். நம்முடைய முன்னேற்றத்துக்கு இடைஞ்சலாய் இருப்பது எது என்பதை நாம் உள்ளபடி அறிந்துகொள்ள

வேண்டும். நாம் ஒவ்வொருவரும் நம்மைப் பெருமதிப்புப்போட்டுவிடுகிறோம். நாம் படைத்துள்ள மேன்மைக்கேற்ற மேலாம் கடமை நமக்கு வந்து அமையவில்லை என்று நாம் முறையிடுகிறோம். ஆனால் உண்மை அதுவன்று. எத்தகைய வினையாற்ற நாம் தகுதியுடையவர்களாய் இருக்கிறோமோ அத்தகைய வினைகளே தற்செயலாய் நம் கடமைகளாக நமக்கு வந்து வாய்க்கின்றன. வினைப்பயனைப்பற்றிய விதி இதுவே. ஒருவனோடு ஒருவன் போட்டிபோடுவதால் பொறாமை அதிகரிக்கிறது. போட்டி மனப்பான்மையானது பச்சாதாபத்தை அறவே அகற்றிவிடுகிறது. குறைகூறிக்கொண்டிருப்பவனுக்கு ஏற்படுகின்ற கடமைகளுள் ஒன்றுமே அவன் மனதுக்குப் பிடிப்பதில்லை. அத்தகையவனுக்கு வாழ்வு வெறும் தோல்வியாக முடிவது திண்ணம். கர்மயோகத்தில் பிரவேசிக்கின்றவனுக்கு அத்தகைய மனப்பான்மை உதவாது. தற்செயலாய் தனக்கு வந்து அமையும் கடமை எதுவாயினும் அதை மகிழ்வோடு நிறைவேற்ற ஆத்ம சாதகன் ஒருவன் ஆயத்தமாய் இருக்க வேண்டும். எவன் ஒருவன் தனக்கு தெய்வாதீனமாய் வந்தமையும் கடமையை தேவாராதனை போன்று நிகழ்த்திவருகின்றானோ அவனே ஈசனுடைய பெருந்திட்டம் என்னும் தர்ம சக்கரத்தில் பங்கெடுத்துக் கொள்பவன் ஆகிறான். அத்தகையவன் பரஞானத்தைப் பெற்று பரம்பொருளை அடைவது திண்ணம்.

---

## 5. உலகுக்கு உதவிசெய்வது நமக்கு உதவியாகிறது

அவரவர்க்கு ஏற்பட்டுள்ள கடமைக்கு சுதர்மம் என்று பெயர். சுதர்மத்தை ஒருவன் முறையாகச் செய்துவருவாஞகில் பாரமார்த்திகப் பெருவாழ்வில் அவன் முன்னேற்றமடைகிருன். முன்னேற்றத்துக்குத் துணைபுரியாத கர்மம் தர்மமெனக் கருதப்படமாட்டாது. சுதர்மத்தைப்பற்றி மேலும் ஆராய்ச்சி செய்வதற்கு முன்பு கர்மம் என்னும் சொல்லுக்கு அமைந்துள்ள மற்ருெரு கருத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொரு சமயத்திலும் மூன்று அம்சங்கள் அமைந்திருக்கின்றன. அம்மூன்றனுள் தலையாயது தர்சனம். அதற்கு அடுத்தபடியில் இருப்பது புராணம். கிரியைகள் மூன்ரும் ஸ்தானம் பெறுகின்றன. இம்மூன்றனுள் தர்சனம் ஒன்றே ஒவ்வொரு சமயத்தின் சாரத்தை விளக்கவல்லது. அதன் அடிப்படைத் தத்துவம் அல்லது உண்மை இன்னதுதான் என்று நாம் அறிந்துகொள்கிறபொழுது அது தர்சனம் என்று இயம்பப்படுகிறது. அடிப்படை உண்மைகளை நேரே அறிந்துகொள்ளுதல் எல்லார்க்கும் இயலுவதில்லை. அத்தகையவர்களுக்கு உண்மை விளங்குதல் பொருட்டு புராணங்களில் விளக்கங்களும் உபமானங்களும் வேண்டியவாறு அமைக்கப் பெற்றிருக்கின்றன. இதிகாசங்களும் ஒருவிதத்தில் புராணங்களில் இடம் பெறுகின்றன. பெருமக்களுடைய பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கு இதிகாசம் என்று பெயர். தசரதராமன்,

கிருஷ்ணபரமாத்மா போன்றவர்களுடைய பெருவாழ்வுகளுக்கு இதிகாசங்கள் என்று பெயர். இவர்கள் போன்ற பெருமக்களுடைய வரலாறுகளை புராணங்களில் பொருத்திவைப்பதுண்டு. ஐதிகமாக வந்துள்ள கதைகளையும் கட்டுக்கதைகளையும் புராணங்களுள் புகுத்தலாம். வியப்புக்குரிய இத்தகைய பல விஷயங்களைப் புராணங்களுள் அடக்கிவைப்பது மரபு ஆகும். அடிப்படைக் கோட்பாடுகளை விளக்குதற்கென்றே அமைந்தவைகளாகும் அத்தகைய வரலாறுகள். தர்சனங்களை நேரே அறிந்துகொள்ள இயலாதவர்கள் புராணங்கள் வாயிலாகவும் இதிகாசங்கள் வாயிலாகவும் பல பேருண்மைகளைத் தெரிந்துகொள்ளலாம். தத்துவங்களை வாழ்க்கை மயமாக விளக்குங்கால் அவைகள் புராணம் என்று பெயர் பெறுகின்றன. மூன்றாவது அம்சமாகிய கிரியைகளைப்பற்றி இனி ஆராய்வோம். புராணங்கள் தருகிற விளக்கங்களைவிட இன்னும் ஸ்தூலமானவைகளாகவும் எளிதில் கிரகிக்கக் கூடியவைகளாகவும் கிரியைகள் வந்து அமைந்துள்ளன. எத்தகைய பாமரனுக்கும் கிரியை எளிதில் விளங்கிவிடும். உயிர் வாழ்க்கையை உடல் வாழ்க்கையின் மூலம் நாம் அறிந்துகொள்வதுபோன்று தர்சனம் அல்லது அடிப்படை உண்மையைக் கிரியைமூலம் அறிந்துகொள்ளலாம். உயிர்க்கு ஒப்பாய் இருப்பது தர்சனம். அது எடுத்துள்ள உடலுக்கு ஒப்பாயிருப்பது கிரியை. உடலின் மூலம் உயிர் விளங்குவதுபோன்று கிரியையின் மூலம் தத்துவம் விளங்குகிறது. பரமாத்

மாவாகிய ஒரு பொருளே ஜீவாத்மாக்களாகிய பல பொருள்களாகத் தன்னைத் தோற்றுவித்துக்கொள்கிறது. இது தர்சனம். எல்லார்க்கும் இது விளங்காது. கணக்கற்ற கோபியர்களுக்குக் கண்ணபிரான் என்னும் பரமாத்மா தன்னைக் கணக்கற்ற கிருஷ்ண மூர்த்திகளாகத் தோற்றுவித்துக்கொண்டார். இது இதிகாசம் அல்லது புராணம். தர்சனத்தைவிட இது ஒருவிதத்தில் எளிதில் விளங்கக்கூடிய விளக்கமாகிறது. கோயில் கிரியைகளுள் தெய்வத்தின் விக்கிரகத்திற்குப் பின் ஒரு தீபத்தை ஏற்றுவித்து அதைப் பல தீபங்களாகப் பல கண்ணுடிகளில் பிரதிபிம்பிக்கும்படி செய்து காட்டுகிருர்கள். ஸ்ரீரங்கத்திலுள்ள கண்ணுடி அறை இதற்கு நல்ல எடுத்துக்காட்டு ஆகிறது. ஏற்றி வைத்துள்ள ஒரு தீபம் எங்குத் திரும்பிப்பார்த்தாலும் கணக்கற்ற தீபங்களாகத் தென்படுகிறது. அங்ஙனம் பரமாத்மா எண்ணிறந்த ஜீவகோடிகளாகத் தன்னைக் காட்டிக்கொண்டிருக்கிறது. இத்தகைய கிரியையின் மூலம் இக்கோட்பாட்டை விளக்குகின்றபொழுது இது எல்லார்க்கும் எளிதாய் விடுகிறது. வழி பாட்டில் நாம் கையாளும் கிரியைகளும் கர்மம் என்னும் பெயர் பெற்றிருக்கின்றன. பாரமார்த்திகப் பெருவாழ்வில் முன்னேற்றம் அடைந்திருக்கிறவர்களுக்கு தர்சனம் அல்லது கோட்பாடு நேரே விளங்கிவிடுகிறது. மற்றவர்களுக்கு அவரவர் பரிபாகத்துக்கு ஏற்ப புராணங்களும், கிரியைகளும் முற்றிலும் அவசியமாகின்றன. இதை முன்னிட்டே ஒவ்வொரு சமயமும் இந்தமூன்று

கோட்பாடுகளாகிய தர்சனம், புராணம், கிரியை என்னும் பகுதிகளைத் தன்னகத்து அடக்கிவைத்திருக்கின்றன.

தத்துவம் அல்லது அடிப்படை உண்மையைத் தாம் நேரே தெரிந்துகொள்ள முடியுமென்று மாந்தர் எண்ணுகின்றனர். ஆனால் வாழ்க்கையின் நடைமுறையைப் பார்க்குமிடத்து தத்துவங்கள் சாமான்ய அறிவுக்கெட்டாத மேலாம் கோட்பாடுகள் என்பது வெளியாகிறது. ஆதலால் சின்னங்கள் நமக்கு முற்றிலும் தேவையாய் இருக்கின்றன. சின்னங்கள் மூலமாகக் கோட்பாடுகளை அறிந்துகொள்ளுதல் சாத்தியம். கடவுள் அவயவங்கள் அற்றவராகவும் அவயவங்கள் உடையவராகவும் இருக்கிறார் என்பது தத்துவம். அவர் அவயவங்கள் அற்றவர் என்பதை சிவலிங்கம், சாளக்கிராமம் ஆகிய சின்னங்கள் நன்கு விளக்கிக் காட்டுகின்றன. அவர் அவயவங்கள் உடையவர் என்பதை நடராஜவடிவமும், அரங்கநாதருடைய வடிவமும் நன்கு விளக்கிக்காட்டுகின்றன. இத்தகைய சின்னங்களின் துணை இல்லாதுபோய்விட்டால் மக்களில் பெரும்பான்மையோர் மதக்கோட்பாடுகளை அறிந்துகொள்ளமாட்டார்கள். கடவுளுக்குரிய விக்கிரகங்களே சின்னங்கள் ஆகின்றன. சரித்திரத்துக்கும் எட்டாத மிகமிகப் பூர்வீககாலம்தொட்டு சின்னங்கள் யாண்டும் எல்லாவிதமான மதங்களிலும் கையாளப்பட்டு வந்துள்ளன. நமது மன அமைப்பையே நாம் முறையாக ஆராய்ச்சிசெய்து பார்க்கவேண்டும். சின்

னங்களின் துணையின்றி எண்ணுதற்கே நமக்கு இய லாது என்பதுதான் நம்மைப்பற்றிய உண்மை. சொற் களை நாம் கையாளுகின்றோம். எண்ணத்துக்குச் சின் னமாக அமைந்திருப்பது சொல். சொல்லின் மூலம் எண்ணமானது நமக்கிடையில் வழங்கப்பட்டு வரு கிறது. சொல் என்னும் சின்னம் இல்லாது போய் விட்டால் எண்ணத்திற்கே விளக்கம் கொடுக்கமுடி யாத நெருக்கடி நமக்கு நேர்ந்துவிடும். இக்கோட் பாட்டை இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் சின்னத்தின் சிறப்பு நமக்கு மேலும் விளங் கும். பிரபஞ்சத்திலுள்ள யாவும் சின்னங்களேயாம். பிரபஞ்சம் முழுதுமே ஒரு சின்னமாகிறது. இந்தப் பெரிய சின்னத்தின்மூலம் கடவுள் தம்மை விளக்கிக் கொண்டிருக்கிறார். இக்கோட்பாட்டை இன்னொரு போக்கில் விளக்குவோம். உடல் என்னும் சின்னத் தின்மூலம் உயிர் ஆகிய நாம் அனைவரும் நம்மை விளக் கிக்கொண்டு வருகிறோம். நமது சொரூபத்தை விளக்கு தற்கு நமது உடல் சின்னமாய் இருப்பதுபோன்று கடவுள் சொரூபத்தை விளக்குதற்கு அகிலாண்டங் களும் ஒன்று சேர்ந்து ஒரு சின்னம் ஆகிறது. எனவே அவர் அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகன் என இயம்பப்படுகிறார்.

இப்படி அமைந்துள்ள கடவுளைப்பற்றிய சின்னங் கள் மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டவைகள் என்று கருதலாகாது. ஒவ்வொரு மதத்தையும் சார்ந்துள்ள யாரோ சிலர் ஒன்றுகூடி உட்கார்ந்துகொண்டு தங்கள்

கொள்கைகளுக்குப் பொருத்தமான சின்னங்களை அவர்கள் கற்பித்தார்கள் என்று எண்ணலாகாது. மனிதர் யாரோ சிலருடைய கருத்துக்களுக்கு விளக்கங்களாக இந்தச் சின்னங்கள் வந்துள்ளன என்றும் எண்ணக்கூடாது. இவைகள் இயல்பாக வந்தமைந்தவைகள். உயிருக்கு ஏற்ற உடல் அமைவதுபோன்று உயர்ந்த தத்துவங்களுக்கு ஏற்ற வடிவங்கள் இங்ஙனம் இயல்பாக உரு எடுக்கலாயின. அந்தந்த உயிர்க்கேற்ற உடலம் என்பதை நாம் நன்கு அறிந்துகொள்கிறோம். அதேபாங்கில் அந்தந்த தத்துவத்துக்கேற்ற விளக்கமே அத்தகைய விக்கிரகங்களாக அமைந்திருக்கின்றன. கருத்துக்களுக்கேற்ற விளக்கங்கள் என்றே அவைகளை வகைப்படுத்த வேண்டும். தத்துவ விசாரம் செய்கின்ற எல்லாருடைய மனதிலும் அந்த வடிவங்கள் அவைகளுக்கேற்ற கருத்துக்களையே உண்டுபண்ணி வருகின்றன. மனிதன் எந்த மதத்தைச் சேர்ந்தவன் என்பது முக்கியமானதல்ல, அவன் எத்தகைய கருத்துக்களில் ஊறி வளர்பவன் ஆகிறான் என்பதே முக்கியமானது. சின்னங்கள் சில வெவ்வேறு மதங்களைச் சேர்ந்த மக்கள் அனைவருக்குமே பொதுவானவைகளாய் இருந்து வருகின்றன. அத்தகைய சின்னங்கள் யாருக்கும் தனி உடைமைகள் ஆகமாட்டா. சான்றுகள் இரண்டொன்று எடுத்துக்கொள்வோம்; சிலுவையானது ஒரு சின்னம். இது அலாதியாக கிறிஸ்துவ மதத்துக்குரிய ஒரு சின்னம் என்று மக்களில் பலர் நினைக்கலாம். கிறிஸ்துவமதக் கருத்தை விளக்குதற்கு வந்துள்ள

சின்னம் என்று அதைக் கருதுவது ஒவ்வாது. கிறிஸ்து மதம் உருவெடுப்பதற்கு முன்பே சிலுவையைப்பற்றிய கொள்கை மக்களுக்கிடையில் இருந்துவந்திருக்கிறது. ஏசு கிறிஸ்துவுக்கு நெடுநாளைக்கு முன்பே மோசஸ் என்னும் பெரியார் யூதர்களுக்கிடையில் தோன்றியிருந்தார். அந்த மோசஸுக்கு முன்பே சிலுவையைப் பற்றிய கொள்கை மக்களுக்கிடையில் இருந்துவந்திருக்கிறது. சரித்திரத்துக்கும் எட்டாத மிகப் பூர்வீகமான சின்னம் என்று அதைக் கருதவேண்டும். ஆகவே உயர்ந்த கருத்து ஒன்றை விளக்குதற்கென்று அமைந்துள்ள சின்னம் சிலுவையாம். ஆஸ்டெக்ஸ் (Aztecs) என்கின்ற பூர்வீக மாந்தர்களுக்கிடையில் சிலுவையைப்பற்றிய கொள்கை இருந்துவந்திருக்கிறது. அதே பாங்கில் பொனீஷியர்களுக்கிடையிலும் (Phoenicians) சிலுவையைப்பற்றிய கருத்து வழங்கி வந்திருக்கிறது. ஒருவிதத்தில் உலகிலுள்ள எல்லா மக்களுக்கிடையிலும் சற்று ஏறத்தாழ சில வடிவங்களில் அது வழக்கத்தில் இருந்துவந்திருக்கிறது. மற்றொரு அதிசயம். சிலுவையிலே அறையப்பெற்று உலக மக்களை உய்வித்த மஹான் ஒருவர் ஏசுநாதர் என்னும் கொள்கை கிறிஸ்தவர்களுக்கிடையில் உதித்தது என்று எண்ணலாகாது. ஏசுநாதர் தோன்றுவதற்கு முன்பே சிலுவையில் அறையப்பெற்ற மனிதனே உலகை உய்விப்பவன் என்னும் கருத்து எல்லா சமுதாயங்களிலும் நிலவி வந்துள்ளது எனலாம். தனது சிறுமையைப் பலி கொடுக்கிற மனிதன் பெருநிலைக்குத் தகுதியுடையவன்

ஆகிறான் என்பது அதன் கருத்து. சிலுவை ஒருவிதத்தில் சூலாயுதத்தை ஒத்திருக்கிறது. அதைச் சிவபிரான் கையில் ஏந்தியிருக்கிறார் என்பது ஹிந்துக்களுக்கிடையிலுள்ள ஐதிகம். திரிசூலத்தைக்கொண்டு அவர் அரக்கர்களை அழித்துவிடுகிறார் என்னும் கோட்பாடு இந்தியாவுக்குரியது. அரக்கர்களை அழிப்பது என்பது மனிதனுடைய கீழ்மையை அகற்றிவிடுதல் எனப் பொருள்படுகிறது.

உலகெங்கும் வட்டத்தை ஒரு பெரிய சின்னமாக உபயோகப்படுத்தி வந்திருக்கிறார்கள். சக்கரம் என்று அது இயம்பப்படுகிறது. பிரபஞ்சத்திலுள்ள கோளங்களெல்லாம் வட்டமாக அமைந்திருக்கின்றன. வான வெளியில் அவைகள் வட்டமிட்டு இயங்குகின்றன. நேர்கோடு ஒன்றை அகண்டாகாரத்தில் செலுத்தினால் அது ஒரு எல்லைகாணாத வட்டமாய்விடுகிறது. இக் கருத்தை முன்னிட்டே இயற்கையின் நடைமுறை யாவும் சக்கரம் என்னும் சின்னத்தின் வாயிலாக ஆன்றோர்கள் அறியலாயினர். சக்கரத்தை மஹாவிஷ்ணு தம்கையில் ஏந்தியிருக்கிறார். ஆதலால் அவருக்கு சக்ர பாணி என்கின்ற பெயர் வந்துள்ளது. இயற்கையின் ஒழுங்குப்பாடான இயக்கத்துக்கு இந்த சக்கரம் சின்னமாக இருப்பதால் இது தர்ம சக்கரம் என்று இயம்பப் படுகிறது. எனவே இந்தச் சின்னம் அலாதியாக ஏதேனும் ஒரு மதத்துக்கு உரியது என்று கருதலாகாது. உலகம் முழுதுக்குமே இது பொதுவானது. சக்கரத்துக்கு நிகராக ஸ்வஸ்திகா என்னும் ஒரு சின்னம் இருக்

கிறது. மானுடவர்க்கம் முழுதுக்குமே இது பொதுவானது. முன்பு ஒருகாலத்தில் பௌத்தர்கள் இந்தச் சின்னத்தை உலகெங்கும் எடுத்துச் சென்றார்கள் என்னும் கொள்கை உலவி வருவதாயிற்று. உலகெங்கும் அதைப் பரப்புதற்குப் பௌத்தர்களே முகாமையாயிருந்தார்கள் எனக் கருதப்பட்டது. ஆனால் அது உண்மையல்ல. புத்த மதம் தோன்றுதற்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வெவ்வேறு சமுதாயத்தார்கள் இந்தச் சின்னத்தைப் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள் என்பது வெளியாகிறது. பண்டைக்காலத்திய பாபிலோனிய நாட்டிலும், எகிப்து நாட்டிலும் ஸ்வஸ்திகா என்னும் சின்னம் நிலவி வந்திருப்பதாக ஆராய்ச்சியால் அறியப்படுகிறது.

இதினின்று நமக்கு விளங்கும் உண்மை யாது? இந்தச் சின்னங்கள் ஏதோ வெறும் ஐதிகமாகத் தோன்றியவைகள் அல்ல. அவைகள் மக்களுக்கிடையில் பயன்பட்டு வந்ததற்கு அடிப்படைக் காரணம் ஒன்று இருந்திருக்கவேண்டும். இயற்கையின் நடைமுறையும் அதைக்குறித்து மக்கள் மனதில் கொள்ளும் கருத்தும் ஒன்றோடொன்று தொடர்புகொண்டிருக்கின்றன. இயற்கையின் நடைமுறைக்கு இந்தச் சின்னங்கள் விளக்கங்களாகவும், அடையாளங்களாகவும் இருந்துவந்திருக்கின்றன என்று இயம்புவது பொருந்தும். இதே விதத்தில் பாஷை அல்லது மொழியும் வெறும் ஐதிகமாக வந்ததன்று. சில கருத்துக்களை விளக்குதற்குச் சில சொற்களைத் தங்கள் சௌகரியம்

போல் அமைத்துக்கொள்ளலாம் என்று மாந்தர் சிலர் கூடி முடிவு கட்டியதின் விளைவாக மொழி உரு எடுத்தது என்று இயம்பலாகாது. எப்பொழுதாவது ஒரு காலத்தில் சொல் இல்லாத கருத்து இருந்ததென்றோ, கருத்து இல்லாத சொல் இருந்ததென்றோ நாம் எண்ணலாகாது. சொல்லும் சொல்லினுடைய பொருளும் யாண்டும் இணைபிரியாது இருந்து வந்திருக்கின்றன. உயிரும் உடலும் சேர்ந்திருப்பது போன்று சொல்லும் அதன்பொருளும் எப்பொழுதுமே சேர்ந்திருக்கின்றன. உயிரையும் உடலையும் எப்படிப் பிரிக்கமுடியாதோ அதே விதத்தில் சொல்லையும் அந்தச் சொல் குறித்துக் காட்டுகிற கருத்தையும் எவ்விதத்திலும் பிரித்துவிட முடியாது. எனவே கருத்துக்களைக் குறித்துக் காட்டுதற்கு ஓசை ஒலி சின்னமாக இருந்து வந்திருக்கின்றன. இந்த ஓசை ஒலிக்கு எழுத்து என்று பெயர். எழுத்துக்கு வருணம் என்பது மற்றொரு பெயர். எழுத்து அல்லது வருணம் ஒலி வடிவமாய் இருக்கின்றது. இந்த ஒலியும் அது விளக்குகிற கருத்தும் இணைபிரியாதவைகளாம்.

பிறவியிலேயே செவிடராய் இருப்பவர்கள் ஊமையும் ஆய்விடுகின்றனர். ஓசை ஒன்றும் அவர்கள் காதில் படுவதில்லையாதலால் அவர்கள் ஓசையைக் கேட்டு அறிந்திலர். ஆதலால் தாங்களே ஓசையை உண்டுபண்ண இயலாதவர்களாய்விடுகிறார்கள். பிறவிச் செவிட்டின் விளைவு ஊமை. அத்தகைய ஊமையரும் கருத்துக்களை எண்ணுகிறார்கள். அவர்கள்

எண்ணுதற்கு ஓசை வடிவத்திலுள்ள சின்னங்கள் அல்லது மொழிகள் பயன்படுவதில்லை. ஓசைக்கு அன்னியமான ஏதோ ஒரு சின்னத்தின் மூலமாக ஒரு சிறிதளவு அவர்கள் எண்ணிவருகின்றனர். மனதில் உதிக்கின்ற ஒவ்வொரு எண்ணத்துக்கும் ஒரு வடிவம் இருக்கிறது. அந்தவடிவம் எண்ணத்தினுடைய நகல் என்று சொல்லலாம். தத்துவதர்சனத்தில் இக்கோட்பாடு நாம ரூபம் என்று இயம்பப் பெற்றுள்ளது. அதாவது ஒவ்வொரு சொல்லுக்கும் இணையாக ஒரு வடிவம் இருக்கிறது என்பது அதன் கருத்து. ஓசை வடிவமாய் இருக்கின்ற சின்னங்களை மக்கள் கூடி தாங்கள் விரும்புகிறபடி அமைத்துக்கொள்ளமுடியாது. ஆதலால் மொழியையும் தாங்கள் விரும்புகிறபடி சிருஷ்டித்துக்கொள்ள அவர்களுக்கு இயலாது. இயற்கையின் நடைமுறையை ஒத்தே சின்னங்களும் மொழியும் உருவெடுத்து இருக்கின்றன என்றுதான் இயம்ப வேண்டும். உலகிலுள்ள சமயங்களெல்லாம் கிரியைகள் என்னும் சின்னங்களைக் கையாண்டு வந்திருக்கின்றன. எனவே கிரியைவாயிலாக ஜனசமூகம் தன்னுடைய சமயக்கோட்பாடுகளையும் கருத்துக்களையும் தெரிவித்திருக்கின்றது. மாந்தர்க்கு ஆலயங்கள் தேவையில்லையென்றும் அதற்குமேல் ஆலயங்களுள் ஆடம்பரமான கிரியைகளைச் செய்யத்தேவையில்லை என்றும் மிக எளிதில் யார் வேண்டுமானாலும் பேசிவிடலாம். அனுவசியமான இந்தக் கிரியைகள் எல்லாம் எதற்காக இருக்கவேண்டுமென்று இக்காலத்தில் ஒவ்வொரு பால

கனும் தங்குதடையின்றிப் போய்விடுகிறான். இத்தகைய பொருளற்ற பேச்சுக்களுக்கிடையில் பேருண்மை ஒன்றை நாம் ஆராய்ந்து அறிந்துகொள்ளுதல் அவசியமாகின்றது. கோயிலுக்குச் சென்று சின்னங்களின் வாயிலாகவும் கிரியைகளின் வாயிலாகவும் கடவுள் வழிபாடு செய்கின்ற கூட்டத்தார் இருக்கின்றனர். இன்னொரு கூட்டத்தினர் கோவிலுக்குப் போவதுமில்லை. சின்னங்களின் துணைகொண்டு கடவுள் வழிபாடு செய்வதுமில்லை. இந்த இருதரத்தார்களுக்கிடையில் மன அமைப்பிலேயே வேற்றுமை இருக்கிறது என்பதை நாம் அங்கீகரித்தாகவேண்டும்.

ஆலயவழிபாடு என்னும் சின்னத்தைப் பயன்படுத்துகிறவர்களுக்கு ஆக்கத்துக்கு ஏதுவான அனுஷ்டான முறைகள் இருக்கின்றன. வாழ்க்கைக்கு ஆதரவு தருகிற உடன்பாடான சில கொள்கைகள் அவர்களுக்குப் பற்றுக்கோடாக இருந்துவருகின்றன. கடவுளின் பெயரால் மக்களுக்குக் கைங்கரியம் செய்தல், அவர்களை நேசித்தல் போன்ற மேலாம் கொள்கைகள் சில அவர்களிடம் இருந்துவருகின்றன. ஆனால் ஆலயவழிபாடு வேண்டாம் என்று சொல்லுகிறவர்களுக்கிடையிலும், வழிபாட்டுக்காகவென்று அமைந்துள்ள சின்னங்களைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பாதவர்களுக்கிடையிலும் இதற்கு நேர்மாறான மனப்பான்மை வந்து அமைந்துவிடுகிறது. வழக்கத்தில் இருப்பவைகளையெல்லாம் அழித்துவிட வேண்டுமென்றும், ஒழித்துவிட வேண்டுமென்றும் அவர்கள் ஆரவாரம் செய்வார்

கள். அவர்கள் மனத்தினுள் நிறைந்திருப்பவைகள் எல்லாம் ஒன்றுக்கும் உதவா எதிர்மறைக் கருத்துக் களாம். அவர்களுடைய கொள்கை ஆக்கத்துக்குத் துணைபுரிவதில்லை. இருப்பதை அழித்துவிடுவதே அவர்களின் நோக்கமாகும். சின்னங்களில் நம்பிக்கை வைத்து வாழ்க்கையை நடாத்தி வருகின்றவர்களுக்கு அவை பெரிதும் துணைபுரிகின்றன. அது எப்படி என்று பார்ப்போம். வெவ்வேறு மதங்களுக்குரிய தேவாலயங்கள் இருக்கின்றன. அவைகளைப் பார்த்த வுடனே கைகூப்பி வணங்குதல், கடவுள் சிந்தனை செய் தல் போன்ற சீரிய உணர்வுகள் இயல்பாகவே அந்தந்த மதத்துக்குரியவர்களுக்கு வந்து விடுகின்றது. தேவா லயங்களில் மதசம்பிரதாயத்துக்கு ஒப்ப மணி அடிக் கின்றார்கள். மணியோசையைக் கேட்டதும் வழிபடு தலில் ஈடுபட்டுள்ள பக்தர்களுக்குக் கடவுள் சிந்தனை இயல்பாகவே வந்துவிடுகின்றது. மனிதன் பண்பாடு அடைந்து வருவதற்கு ஏற்பட்டுள்ள உபாயம் யாது என்பதை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரு பொருளைப் பார்க்கின்றபொழுது அப்பொருள் நமது மனத்தில் எத்தகைய எண்ணத்தை ஊட்டுகிறது என் னும் கோட்பாடு மிக முக்கியமானது. களிமண்ணையும் சாயத்தையும்கொண்டு செயற்கையாகப் பழவகை களைச் செய்து வைக்கலாம். அத்தகைய செயற்கைப் பழங்களைப் பார்த்ததும் உண்மையான பழங்களைப் பற்றிய எண்ணம் தானாக வருகிறது. அத்தகைய எண்ணத்தை எளிதில் ஊட்டுதற்குச்செயற்கைப்பழம்

நன்கு பயன்படுகிறது. தேவாலயங்களும் அவைகளில் அமைந்துள்ள சின்னங்களும் அத்தகையவைகளேயாம். நடைபெற்று வருகின்ற ஆராதனை முறைகளைப் பார்த்தவுடன் அல்லது கேட்டவுடன் பக்தன் ஒருவனுக்குக் கடவுள் சிந்தனை தானாக உள்ளத்தில் ஊற்றெடுக்கிறது. கடவுள் சிந்தனையை ஊட்டுதற்கு ஏதுவாக அமைந்துள்ள சின்னங்கள் அனைத்தும் வேண்டப்படுபவைகளாம். ஆங்கு அனுஷ்டிக்கப்படுகின்ற விதவிதமான கிரியைகளும் முற்றிலும் வேண்டப்படுபவைகளாம். கிரியைகளையும் கோயில்களையும் முகாமையாக வைத்துக்கொண்டு கடவுள் எண்ணத்தை ஊட்டுகின்ற நெறிகளும் கர்மயோகத்தில் இடம் மிகப் பெற்றிருக்கின்றன. ஆத்ம சாதகனைப் பண்படுத்துதற்கு கிரியைகள் பெரிதும் உதவுகின்றன. அக்கிரியைகளை எப்படி அனுஷ்டிப்பது, அனுஷ்டிப்பதற்கிடையில் எத்தகைய எண்ணங்களை வளர்ப்பது ஆகிய இவை போன்ற கிரியா விசேஷங்கள் கர்மயோகத்தில் பெரிதும் இடம் பெற்றிருக்கின்றன. கிரியைகளை முறையாகக் கற்று அனுஷ்டித்து வருவதும் கர்மயோக சாதனத்தின் ஒரு பகுதியாம்.

கர்மயோக சாஸ்திரத்தில் இன்னும் சில முக்கியமான பகுதிகள் அமைந்திருக்கின்றன. அவைகளில் ஒன்று மந்திர சாஸ்திரம். ஓசைக்கும் எண்ணத்துக்குமுள்ள தொடர்பை விளக்கிக்காட்டுவது மந்திர சாஸ்திரம். ஓசை மந்திரமாக வடிவெடுக்கிறது. மந்திரத்துக்கு ஏராளமான சக்தியுண்டு. உரு ஏறத் திரு ஏறும்

என்பது மந்திரத்தைப்பற்றிய கோட்பாடு. முறையாக மந்திரத்தை ஜபித்துக்கொண்டிருப்பதும் கர்ம யோகத்தின் ஒரு பகுதியாகின்றது. உலகிலுள்ள ஒவ்வொரு மதத்திலும் மந்திரம் இடம் பெற்றிருக்கிறது. மந்திர சக்தியினின்றுதான் பிரபஞ்சத்தின் சிருஷ்டியே உருவெடுத்திருக்கிறது என்று சில சாஸ்திரங்கள் இயம்புகின்றன. மந்திர சொரூபமாக இருக்கிற தெய்வத்துக்கு நாதப்பிரம்மம் என்று பெயர். தெய்வத்திடத்திருந்து நாதம் உருவெடுத்தது. அந்த நாதத்தின் ஸ்தூல தோற்றம் பிரபஞ்சம். முதலில் எண்ணம் அல்லது சங்கல்பம் கடவுளிடத்து உருவெடுத்தது. அந்தச்சங்கல்பத்தினுடைய புறத்தோற்றம் மந்த்ரம் அல்லது நாதம். அந்த நாதத்தினுடைய புறத்தோற்றம் பிரபஞ்சம். இங்ஙனம் மந்த்ரம் வித்து ஆகவும் பிரபஞ்சம் அதினின்று வந்துள்ள விருக்ஷமாகவும் அமைந்திருக்கின்றன என்பது கோட்பாடு.

இக்காலத்திய வாழ்க்கை முற்றிலும் உடல்மூலமாகப் பெறுகிற சுகத்தை அடிப்படையாகக் கொண்டது. அல்லும் பகலும் அவசர அவசரமாகச் செய்யும் செயல்கள் எல்லாம் சுகபோகத்தின் பொருட்டேயாம். விலங்கு இனத்துக்குப் பொருந்தியுள்ள அத்தகைய வாழ்க்கையை வாழ்ந்து வருவதால் மக்களுடைய நாடி நரம்புகள் எல்லாம் தரத்தில் கீழானவைகள் ஆய்விட்டன. நுண்ணிய உணர்ச்சிகளையோ கருத்துக்களையோ வாங்கிக்கொள்ளும் வல்லமை அத்தகைய உடலமைப்புக்கு இல்லை. இந்தக் கீழான குறிக்

கோளை வைத்துக்கொண்டு வாழ்ந்து வருகின்றவர்களுக்கு வயது வர வர உணர்ச்சியற்ற நிலையும் தானே வந்து விடுகிறது. அதற்குமேல் இவ்வுலக வாழ்க்கை துன்பத்துக்குமேல் துன்பத்தைத் தலையின்மீது கொண்டுவந்து ஏற்றிவைக்கிறது. இத்தகைய துன்பங்களில் பழகிப்போனதின் விளைவாக மாந்தர் மேலும் உணர்ச்சியற்றவர் ஆய்விடுகின்றனர். அதனால் தங்களைச் சுற்றிலும் ஓயாது நிகழ்ந்து வருகின்ற பெரும் நிகழ்ச்சிகள் பலவற்றை முறையாகப் பொருள்படுத்திக்கொள்ள அவர்களுக்கு இயலாது போய்விட்டது. நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாயுள்ள மெய்ப்பொருளை அறிந்துகொள்ளுதலில் அவர்கள் கவலையற்றவர்கள் ஆய்விட்டார்கள்.

மானுட இயல்பை இழந்துவிட்டு விலங்கு நிலைக்கு கீழே இறங்கி வருகின்றவர்கள் க்ஷீணதசை அடைகின்றனர். கேடு விளைவிக்கும் செயல்களைப்பற்றி ஆராய்ச்சி செய்யாமலேயே அவர்கள் பின்னணிக்குப் போய்க் கொண்டிருக்கின்றனர். ஆனால் அப்படிப் பின்னணிக்குப்போவதற்கும் வரையறை ஒன்று உண்டு. மனத்தினுள்ளே புதைந்து கிடக்கும் மனிதனுடைய மேலான இயல்பு நாளடைவில் தலையெடுக்க ஆரம்பிக்கிறது. அப்பொழுது விதவிதமான கர்மங்களைப்பற்றிய விசாரமும், அத்தகைய கர்மங்களினின்று உண்டாகும் விளைவைப்பற்றிய விசாரமும் மனதில் உதயமாகிறது. வினையின் விளைவாகத்தானே மனிதனுக்கு நலமும் கேடும் மாறிமாறி வந்து அமைகின்றன என்னும்

விசாரம் மனிதனுக்கு எப்பொழுது உண்டாகின்றதோ அப்பொழுது ஆத்ம ஞானத்தை அடைதற்கான முதல் படியில் மனிதன் மேலேறுகிறான். மனிதனைத் திருத்தியமைப்பதற்கான பாரமார்த்திகப் பேராற்றல் மந்திரத்தினிடத்து உண்டு என்பதை அப்பொழுது அவன் சற்று அறிந்துகொள்கின்றான். ஞான வாழ்க்கையில் உயர்நிலைக்குச் சென்று மந்திரத்தின் சக்தியை அறிந்துகொள்ள எல்லார்க்கும் இயலுவதில்லை. எனினும் மானுட வாழ்க்கை என்னும் நாடகத்தில் சொற்கள் என்னும் சின்னங்கள் முக்கியமான இடம்பெற்று வருகின்றன என்பதை சாமான்யமனிதன் ஒருவன் அறிந்துகொள்ள முடியும். ஒருவன் மற்றொருவனோடு பேசுகிறான். அப்படிப் பேச்சு நிகழ்கின்றபொழுது ஒருவனை ஒருவன் தொட்டு உணர்வதில்லை. பேசுகின்ற பேச்சு காற்றில் ஒரு சலனத்தை உண்டுபண்ணுகிறது. அந்தச் சலனம் காற்றால் எடுத்துச்செல்லப்பட்டு மற்றொருவனுடைய காதில் போய்த் தோய்கிறது. காதினின்று உடலினுள்ளே உள்ள நாடி நரம்புகளைத் தொடுகிறது. நாடி நரம்புகள் அந்த ஓசையின் பொருளை மூளையின் வாயிலாக மனதுக்கு எடுத்துச் செல்லுகின்றன. அங்ஙனம் வெளி உலகினின்று ஓசையின் மூலமாக மனதுக்கு எட்டுகின்ற உணர்ச்சிகளைத் தடுக்க யாருக்கும் இயலாது. இங்ஙனம் ஓசையின் மூலமாக மக்களுக்கிடையிலே ஓயாது தொடர்வு உண்டாய்க்கொண்டிருப்பது அதிசயங்களுள் பேர் அதிசயமல்லவா? ஒரு மனிதன் மற்றொரு மனிதனைப்பார்த்து 'மடையா' என்று

மொழிகிறுன். எத்தகைய விளைவை இந்த ஓசை உண்டுபண்ண வல்லது என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். தனக்கு ஒவ்வாத இவ் ஓசையைக் கேட்ட தும் மற்ற மனிதன் ஆவேசத்துடன் எழுந்து நிற்கிறுன். தன்னுடைய கை விரல்களை மடக்குகிறுன். தான் விரும்பாத வார்த்தையை விளம்பிய மனிதனது மூக் கின்மீது ஓங்கி ஒரு குத்து விடுகின்றுன். இத்தகைய முரட்டுச் செயலுக்குச் சொல் ஒன்று மூலகாரணமாய் இருந்தது. சொல்லினிடத்து எத்தகைய ஆற்றல் அமைந்திருக்கிறது என்பதை இப்பொழுது எண்ணிப் பார்க்கவேண்டும். மற்ருெரு சான்று எடுத்துக்கொள் வோம். மாது ஒருத்தி கண்ணீரும் கம்பலையுமாக துய ரப்பட்டுக்கொண்டிருக்கிறுள். மற்ருெரு மாது அவள் அருகில் வருகிறுள். இன்சொல் சிலவற்றை அவள் அழுகின்றவளுக்குப் பரிவுடன் எடுத்துப் பகர்கின்றுள். துயரத்தால் வாடிவதங்கி வளைந்து கிடந்த மாது நிமிர்ந்து எழுந்திருக்கின்றுள். அவளுடைய துயரமும் அவளைவிட்டு அகன்று போய்விடுகிறது. அவள் புன் முறுவல் பூக்கும் அறிகுறிகள் அப்பொழுதே தென்படு கின்றன. சொல்லுக்கு எத்தகைய சக்தி இருக்கிறது என்பதை இப்பொழுது திரும்பவும் எண்ணிப்பார்க்க வேண்டும். எனவே இதினின்று நாம் ஒரு முடிவுகட்ட முடியும். பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கு ஆனாலும் சரி, சாமான்யமான தினசரி வாழ்க்கைக்கு ஆனாலும் சரி எல்லாத் துறைகளிலும் சொல்லுக்குச் சக்தி மிக உண்டு என்பதை நாம் யாண்டும் ஞாபகத்தில் வைத்

துக்கொள்ள வேண்டும். சொல்லுக்கு இத்தகைய சக்தி இருக்கிறது என்பதைப்பற்றி எண்ணிப் பார்க்காமலும், அதன் அடிப்படைத் தத்துவத்தை விசாரித்துப் பார்க்காமலும் அல்லும் பகலும் சொல் என்னும் இப்பெரிய சக்தியை நாம் பயன்படுத்திக்கொண்டே வருகிறோம். சொல்லினிடத்து சக்தியிருப்பதால் அது மந்த்ரம் என்று அழைக்கப்படுகிறது. மந்த்ரத்தின் தத்துவத்தை முறையாக ஆராய்ச்சி பண்ணி மனிதனுடைய முன்னேற்றத்துக்காக அதை நன்கு பயன்படுத்துவது கர்மயோகத்தின் ஒரு பகுதியாகும்.

உலகிலுள்ள மற்றவர்களுக்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம் என்பது கோட்பாடு. இதன் பொருள் யாது என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும். நாம் புரிகின்ற செயல்களின் வாயிலாக அவர்களுக்கு உதவி புரியவேண்டும் என்பதே இதன் கருத்து ஆகும். உலகுக்கு நன்மை செய்வது நம் கடமை. ஈண்டுக் கேள்வி ஒன்று எழலாம். உலகுக்கு நாம் ஏன் நலம் செய்ய வேண்டும்? மேற்போக்காகப் பார்க்குமிடத்து உலகுக்கு நலம் செய்தற் பொருட்டு நாம் செயல் புரிகிறோம் என்கிற முடிவுக்கு வருகிறோம். ஆனால் அச் செயலை இன்னும் நன்றாக ஆழ்ந்து ஆராய்ச்சி செய்து பார்த்தால் அத்தகைய செயலின் மூலம் நாம் நமக்கு நலம் புரிந்துகொள்கிறோம் என்பது புலப்படும். உலகுக்கு நலம் புரிய நாம் எப்பொழுதுமே முயன்று வரவேண்டும். பிறர் நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருப்பது நாம் கொண்டுள்ள எண்ணங்கள் அனைத்திலும் மிகமிக

உயர்ந்ததாகும். அப்படி மேலாம் எண்ணம் கொண்டிருப்பதற்கிடையில் உலக நலத்தைப் பற்றிய அடிப்படைத் தத்துவத்தை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். நம்முடைய உதவியை உலகம் ஒருநாளும் எதிர்பார்த்திருப்பதன்று. நம் போன்றவர்களுடைய உதவியை எதிர்பார்த்து இவ்வுலகம் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதன்று. மதபோதகர் ஒருவர் ஒரு தடவை இங்ஙனம் இயம்பலானார் : "அழகு நிறைந்த இவ்வுலகம் நலம் மிக உடையதாய் இருக்கிறது. மற்றவர்களுக்கு உதவி புரிவதற்கான அவகாசத்தையும் வாய்ப்பையும் இவ்வுலகம் நமக்கு நல்குகிறது." இக்கூற்றில் அடங்கியுள்ள உணர்வு மேன்மை வாய்ந்ததாகத் தென்படுகிறது. எனினும் இவ்வுலகம் நம் உதவியை எதிர்பார்த்திருக்கிறது என்று சொல்லுவது இறைவனுடைய திட்டத்தை சிறுமைப்படுத்துவதல்லவா? இவ்வுலகம் துக்கம் மிக நிறைந்திருக்கிறது என்பதை நாம் மறுக்க முடியாது. ஆதலால் இவ்வுலகத்தினுள் சென்று மற்றவர்களுக்குத் துணைபுரிவது நாம் செய்யும் செயல்கள் அனைத்திலும் மிக உயர்ந்தது ஆகும். இப்படி நெடுநாளைக்குப் பிறர்க்கு உபகாரம் செய்து கொண்டே போனால் நாளடைவில் அவ்வுபகாரத்தைப் பற்றிய அடிப்படை உண்மை நமக்கு விளங்கும். பிறர்க்கு உதவி செய்வதன் மூலம் நம்மை நாம் உயர்த்திக்கொள்கிறோம் என்பதுவே உண்மை.

பிறர்க்கு நலன் செய்வது என்னும் கோட்பாட்டை இன்னும் நன்றாகத் துருவி ஆராய்ந்து பார்ப்போம்.

வெள்ளெலி சிலவற்றை நாம் கூண்டில் அடைத்து வைத்து வளர்க்கின்றோம். அக்கூண்டினுள் சுழன்று வரும் சக்கரங்கள் சில அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தச் சக்கரங்களைத் தாண்டிச் செல்ல வெள்ளெலிகள் முயற்சி செய்கின்றன. சக்கரத்தின்மீது ஓட அவைகள் முயலுகின்றன. அப்பொழுது சக்கரங்கள் தாமாக சுழல்கின்றன. சுழன்று வருகிற சக்கரங்களின் மீது வெள்ளெலிகள் வேகமாக ஓடுகின்றன. தாங்கள் எங்கேயோ நெடுந்தூரத்துக்கு அப்பால் ஓடிக்கொண்டிருப்பதாக அவைகள் எண்ணுகின்றன. உண்மையில் இருந்த இடத்திலேயே தான் அவ் எலிகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. கூண்டினுள் சக்கரங்களும் இருந்த இடத்திலேயே சுழன்று சுழன்று வருகின்றன. சக்கரம் சுழன்று வருவது போன்றது இவ்வுலக அமைப்பு. சக்கரங்களின் மீது எலிகள் ஓடுவது போன்றது உலகுக்கு நாம் செய்யும் உதவி. சக்கரத்தின்மீது ஓடுவதால் எலிகளுக்கு நல்ல உடற்பயிற்சி உண்டாகிறது. புதிய இடத்துக்கு அவைகள் ஓடிவிட்டவைகள் அல்ல. உலகத்துக்கு உதவி செய்ய உழைப்பதன் மூலம் உலகைப் புதிய முறையில் நாம் திருத்தி அமைத்தவர்கள் அல்லர். உலகுக்கு உழைப்பதன் மூலம் நமது உள்ளத்தை நாம் பண்படுத்துகிறோம்.

இவ்வுலகம் நலம் மிக வாய்க்கப்பெற்றது என்கின்றனர் ஒரு சாரார். இல்லை, இவ்வுலகம் கேடு சூழ்ந்தது என்கின்றனர் இன்னொரு சாரார். ஆனால் ஞானிகள் இவ்வுலகைப்பற்றி இயம்பும் கோட்பாடு வேறு. இவ்

வுலகம் நலம் நிறைந்ததுமன்று, கேடுநிறைந்ததுமன்று. ஒவ்வொரு மனிதனும் அவனவன் மன இயல்புக்கு ஏற்ப இவ்வுலகைப் பொருள்படுத்துகிறான். பிறவிக் குருடன் ஒருவன் இவ்வுலகைப்பற்றி என்ன எண்ணு கின்றான் என்று ஆராய்ந்து பார்ப்போம். தொட்டு உணர்வதன் மூலம் அவன் பெறுகின்ற அனுபவத்தை முன்னிட்டு இவ்வுலகம் மிருதுவானது என்றோ கடின மானது என்றோ அவன் பொருள்படுத்துகிறான். அதே ஸ்பர்ச உணர்ச்சியின் துணைகொண்டு இவ்வுலகம் தணுப்பானது என்றோ, வெப்பம் நிறைந்தது என்றோ அவன் எண்ணுகிறான். அதற்குமேல் இவ்வுலகத்தைப் பற்றி அவன் அதிகமாக ஒன்றும் அறிந்துகொள்ள முடியாது. அவன் படைத்துள்ள பொறிகளுக்கு ஏற்ற வாறே புற உலகம் அவனுக்குப் புலனுகிறது. மக்க ளாகிய நமது அனுபவம் அங்ஙனம் வெவ்வேறு படித் தரங்களில் இருக்கிறது. இன்பமே வடிவெடுத்தவர் களாக நம்மில் சிலர் இருக்கிறோம். துன்பமே வடி வெடுத்தவர்களாக இன்னும் சிலர் இருக்கிறோம். நம் முடைய வாழ்நாட்களைத் துருவி ஆராய்ந்துபார்த்தால் நூற்றுக்கணக்கான தடவைகளில் நாம் இன்புற்றிருப் பதும், துன்புற்றிருப்பதும் நமக்கு விளங்கும். இதற் கிடையில் நம்மைப்பற்றிய பொதுவிதி ஒன்று உளது. இளைஞராய் இருப்பவர்கள் உலகம் இன்பம் மிக நிறைந்தது என்று நம்பியிருக்கின்றனர். முதியோர் களுக்கோ உலகில் இன்பம் ஒன்றும் இல்லை என்ற எண் ணம் வந்துவிடுகிறது. நாளடைவில் உலகத்தைப்பற்றி

அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கைகளை அவர்கள் இழந்துவிடுகின்றனர். வாழ்வு என்னும் வாய்ப்பு தங்கள் கைவசத்தில் இருக்கிறது என்று இளைஞர் ஊக்கம் மிகக்கொண்டிருக்கின்றனர். தங்களுக்கு வாழ்நாள் எல்லாம் கடந்துபோய்விட்டது என்று முதியவர்கள் முறையிடுகின்றனர். அன்னவர்கள் நிறைவேற்றி வைக்க இயலாத நூற்றுக்கணக்கான ஆசைகள் தங்கள் உள்ளத்தினுள் திண்டாடிக்கொண்டிருக்கின்றன. ஆனால் இளைஞர்களுடைய உறுதியும் முதியவர்களுடைய தளர்வும் பொருளற்றவைகளாம். இருதரத்தாரும் மயக்கம் பிடித்தவர்கள் ஆவர். மடமையே வடிவெடுத்தவர்கள் என்றும் அவர்களை இயம்பலாம். மனது என்னும் கண்ணாடியின் மூலம் வாழ்வை நாம் பார்க்கிறோம். நம்முடைய மனப்பான்மை எத்தகையதோ அதற்கு ஏற்றவாறு வாழ்வு நலமுடையதாகவோ அல்லது கேடுடையதாகவோ தென்படுகிறது. உண்மையில் வாழ்வு தன்னளவில் நலம் கேடு ஆகிய இரண்டிலும் தட்டுப்படாதது. இதற்கு இன்னொரு சான்று எடுத்துக்கொள்வோம். தீ தன்னளவில் நல்லதுமல்ல, கெட்டதுமல்ல. நாம் குளிரால் வருந்திக் கொண்டிருக்கும்பொழுது குளிர்காய்வதற்கு அதைப் பயன்படுத்துகிறோம். அப்பொழுது அது கதகதப்பை உண்டுபண்ணுகிறது. "அனல் எவ்வளவு அருமையானது!" என்று நாம் அப்பொழுது இயம்புகிறோம். ஆனால் அதன்மீது நாம் முறைதவறிக் கையை வைத்துவிட்டால் நமது விரல்களை அது சுட்டுவிடுகிறது.

அப்பொழுது நாம் அதன்மீது குறை கூறுகிறோம். இப்படி அதைப் புகழ்ந்து பேசுவதாலும், இகழ்ந்து பேசுவதாலும் அதன் இயல்பில் எந்தவிதமான மாறுபாடும் வந்துவிடுவதில்லை. தன்னளவில் அது நலம் கேடுகளில் தோய்வற்றதாய் இருந்து வருகிறது. நாம் அதை எங்ஙனம் பயன்படுத்துகின்றோமோ அதற்கேற்றவாறு நம் மனத்தினுள்ளே நல்லுணர்வை அல்லது கெட்ட உணர்வை அது உண்டுபண்ணுகிறது. இத்தொல்லுலகமும் அத்தகையதேயாம். இவ்வுலகத்தினிடத்துப் பரிபூரணத்தன்மை இருக்கிறது. பரிபூரணத் தன்மை என்றால் என்ன என்பதை ஈண்டு அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. எதற்காகவென்று இவ்வையகம் அமைந்திருக்கிறதோ அக் காரியத்தைத் தங்கு தடையின்றி அது நிறைவேற்றி வருகிறது. அதனால் ஆக வேண்டிய செயல் எதுவும் தடைபட்டுப் போய்விடுவதில்லை; முறைதவறியும் போய்விடுவதில்லை. அதன் நிகழ்ச்சிகள் எல்லாம் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. இக்காரணத்தை முன்னிட்டே அது பரிபூரணம் நிறைந்தது என்கிறோம். உலகின் நடைமுறையில் நாம் தலையிடாவிட்டால் அதற்கு ஏதேனும் குறைபாடு வந்துவிடுமென்று நாம் எண்ணவேண்டியதில்லை. அகங்காரத்தால் அத்தகைய எண்ணம் நமக்கு வருகிறது. உலகுக்கு ஏதேனும் ஒரு விதத்தில் உதவி செய்ய வேண்டுமே என்று நாம் கவலை மிகஎடுத்துக்கொள்கிறோம். இத்தகைய கவலையை அறவே ஒழித்து விடுவதும் அவசியமாகிறது. நமது உதவியை எதிர்பார்த்து

இவ்வுலகம் காத்திருக்கிறது என்கின்ற ஆணவம் நமக்கு வேண்டாம்.

உலகத்தோடு ஒருவிதமான தொடர்வும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று இக்கோட்பாட்டினின்று நாம் முடிவுகட்டலாகாது. நம்மால் இயன்ற நலத்தை நாம் யாண்டும் செய்துகொண்டே இருக்கவேண்டும். நலம் செய்ய வேண்டுமென்று நாம் ஆசைப்படுவது நம் மிடத்துள்ள மேலான இயல்பை விளக்குகிறது. அறம் செய்ய விரும்பு என்பது கோட்பாடு. சீரிய மனப்பான் மைகளுள் எல்லாம் மிக மிகச் சிறந்தது மற்றவர்களுக்கு நலம் புரிய வேண்டும் என்னும் நல்லெண்ணத்தை உடைத்திருப்பதாம். பிறர்க்கு உதவி செய்வது நமக் குக் கிடைத்துள்ள ஒரு சிறந்த வாய்ப்பு என்று எண் ணிக்கொண்டு நாம் தொண்டுபுரிய வேண்டும். அன்பி னால் தூண்டப்பெற்று பிறர்க்குப் பணிவிடை செய்வ தால் நமது மேலான இயல்பு இன்னும் மேல்நிலைக்குப் போகிறது. பிறரை ஆதரிக்கக்கூடிய ஒரு மேலான அந்தஸ்து தனக்கு அமைந்திருக்கிறதாக எண்ணி எம் மனிதனும் ஆணவம் கொள்ளலாகாது. தானம் கொடுப்பதற்கு ஓர் அணுவைக் கையில் எடுத்து வைத் துக்கொண்டு "ஓய், ஏழை மனிதா இதோ இதை எடுத் துக்கொண்டு பிழைத்துப்போ" என்று தற்பெருமை படைத்த பாங்கில் எச்செயலையும் கர்மயோகி செய்ய லாகாது. கர்மயோகியின் மனப்பான்மை பணிவும், செயலில் ஊக்கமும் படைத்ததாக இருக்கவேண்டும். ஏழை ஒருவன் உலகில் இருப்பதை முன்னிட்டு கர்ம

யோகி நன்றி செலுத்துகிறான். ஏழைக்குத் தானம் செய்யும் பொழுது இறைவனுக்கு நைவேத்தியம் செய்வது போன்ற மனப்பான்மையை அத்தொண்டன் வரவழைத்துக் கொள்ள வேண்டும். ஏழைக்கு வழங்குவதை தேவாராதனை என்று உணர அவன் கடமைப்பட்டிருக்கிறான். தான் வழங்கிய சிறிய பொருளை ஏற்றுக்கொண்டதற்காக ஏழை வடிவெடுத்து வந்துள்ள மனிதனுக்குக் கர்மயோகி நன்றி செலுத்துகிறான். அவனுக்குப் பொருளை எடுத்துப் பணிவுடன் வழங்குதல்மூலம் தனது இயல்பை மேலான இயல்பாக மாற்றிக் கொள்ளுதற்கான வாய்ப்பு அவனுக்குக் கிடைத்திருக்கிறது. சுயநலத்தை நீக்குதற்கான சந்தர்ப்பமும் அவனுக்குக் கிடைத்திருக்கிறது. எனவே யாசகத்தை ஏற்றுக்கொண்டவன் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பவன் அல்லன்; பணிவுடன் அதை எடுத்து வழங்குகிறவனே ஆசீர்வதிக்கப்பட்டிருப்பவன் ஆகிறான். தான் பரந்த மனப்பான்மை படைத்திருப்பவன் ஆவதற்கு உலகம் ஒரு நல்ல சந்தர்ப்பத்தைக் கொடுத்திருக்கிறது. பிறரிடத்து இரக்கத்தையும் அன்பையும் காட்டுதற்கு உலகம் ஒரு நல்ல சந்தர்ப்பத்தைக் கொடுத்திருக்கிறது. பிறர்க்குப் பணிவிடைசெய்கின்ற மனப்பான்மையினின்று தொண்டன் ஒருவனுக்கு மனத்தூய்மை உண்டாகிறது. பரிபூரணத் தன்மையையும் அச்செயலின்மூலம் அவன் படிப்படியாகப் பெற்றுவருகிறான். இப்படித் தன்னைப் பக்குவப்படுத்துவதற்கு வசதியான சூழ்நிலையை உலகம்

அமைத்துக் கொடுத்திருப்பதால் உலகத்துக்கும் உலகத்தவர்களுக்கும் நன்றியுடையவனாக யோகி ஒருவன் இருக்கவேண்டும். பிறர்க்குப் பணிவிடை செய்தல் என்னும் சத் கர்மங்கள் எல்லாம் நம்மை மேலும் மேலும் தூய்மைப்படுத்துகின்றன. நாம் பரிபக்குவம் அடைவதற்கும் அத்தகைய சத் கர்மங்களே உற்ற உபாயங்கள் ஆகின்றன. எனவே நம்மை நாம் ஒழுங்குபடுத்துதற்கு வேண்டியவசதிகளை இவ்வுலகம் நமக்குத் தந்திருக்கிறது என்னும் எண்ணத்தில் நாம் யாண்டும் நிலைபெற்றிருப்பது அவசியமாகிறது.

உலகத்துக்குப் பெரிய நன்மைசெய்துவிட முடியும் என்ற நம்பிக்கையையும் உற்சாகத்தையும் நாம் மிகக் கொண்டிருக்கிறோம். அப்படி நாம் செய்து சாதித்துவிடுபவைகளுள் மிக மேலானவை எவை என்று சிறிது ஆராய்ந்து பார்ப்போம். கொடிய நோய்களை நீக்குதற்குரிய ஆஸ்பத்திரிகள் கட்டலாம். பட்டணங்களுக்கிடையில் போக்குவரத்துக்குரிய நல்ல சாலைகளை அமைக்க இயலும். தர்மசாலைகள், தொழிற்சாலைகள், ஏழையர் விடுதிகள் இவைபோன்ற ஸ்தாபனங்களை அமைக்கமுடியும். பொது நலத்துக்காகவென்று சில லக்ஷக்கணக்கான ரூபாய்களைத் திரட்டியெடுப்பதும் நமக்குச் சாத்தியமாகிறது. அதற்காகவென்று ஒரு சங்கத்தையும் அமைக்கிறோம். இப்பொழுது இயம்பியுள்ள ஸ்தாபனங்கள் ஏதேனும் ஒன்று இரண்டுக்கு சில லக்ஷம் ரூபாய்களைச் செலவிடுகிறோம். இன்னும் சில லக்ஷம் ரூபாய்களைச் சங்கத்தோடு சம்பந்தப்பட்ட

பலபேர் உண்டு உடுத்துக் களித்திருப்பதில் செலவிடு கிறோம். ஸ்தாபனங்களை நிர்வகிப்பதற்குச் சில காரி யஸ்தர்களை அமைக்கிறோம். அவர்களில் சிலர் இப் படித் திரட்டியெடுக்கப்பட்ட செல்வத்தில் ஒரு பகுதி யை என்னென்னவோ பாங்கில் வீண் விரயம் செய்து விடுகின்றனர். எஞ்சியிருக்கின்ற தொகை ஏழை எளிய வர்களுடைய பணிவிடைக்காகவென்று போய்ச்சேரு கிறது. இப்படியெல்லாம் செய்வதால் உலகமே திருந்தியமைந்து விடுகிறதா? திடீரென்று தோன்றி வருகிற புயல்காற்று ஒன்று ஐந்து நிமிஷத்துக்குள் இங்ஙனம் அமைக்கப்பெற்றுள்ள பெரிய கட்டிடங் களைத் தகர்த்துக் கீழே தள்ளிவிடுகின்றது. அதன் பிறகு நாம் செய்யக்கிடப்பது யாது? எரிமலை ஒன்று திடீரென்று ஓரிடத்தில் கிளம்பி வருகிறது. நாம் அமைத்துள்ள சாலைகளையும், ஆஸ்பத்திரிகளையும், பட்டணங்களையும், ஏனைய கட்டிடங்களையும் அது தகனம் செய்துவிடுகிறது. நெடுநாளாக நாம் எடுத் துக்கொண்ட பெரும் பிரயத்தனங்களை யெல்லாம் நொடிப்பொழுதில் அனர்த்தமாக்கிவிட இயற்கைக்கு இயலுகிறது.

உலகத்துக்கு உதவிசெய்ய மக்கள் முயற்சி எடுத் துக்கொள்ளவேண்டும் என்னும் கொள்கை உலகில் புதியதாய் இக் காலத்தில் உண்டானதன்று. முற் காலத்தில் இந்தியாவில் அத்தகைய முயற்சிகளை ஏராளமாக எடுத்துக்கொண்டிருந்தனர். அதில் அவர் கள் பெரிதும் வெற்றி யடைந்தவர்கள் போன்றும்

நன்பட்டார்கள். மனிதனுக்குத் தேவையாய் இருந்த உணவு, உடை, கல்வி, வைத்திய உதவிகள் ஆகியவைகளை யெல்லாம் தாராளமாக சமுதாயம் மக்களுக்கு எடுத்து வழங்கிவந்தது. அப்படியிருந்தும் உலகத்தின் குறைபாடுகள் அடியோடு நீங்கிவிடவில்லை. தனக்குக் குறைபாடு இருக்கிறதென்று உணர்கின்ற மனிதனுக்குப் புற உலகிலிருந்து எவ்வளவுதான் உதவி கிடைத்தாலும் அவனுடைய குறைகள் நீங்கிவிடுவதில்லை. இத்தொல்லுலகின் நடைமுறையைப்பற்றி ஆன்றோர்கள் அரிய கருத்து ஒன்றை வெளியிட்டார்கள் : न कदाचिदनीदृशं जगत् என்பது அது. இப்பொழுது இருப்பதைவிட வேறு ஒருபோக்கில் உலகம் ஒருநாளும் இருந்ததில்லை என்பது அதன் கருத்து. எனவே உலகத்துக்கு நலம்செய்தல் என்னும் சிறுபிள்ளைத்தனமான பேச்சுக்களை யெல்லாம் நாம் ஒதுக்கிவைத்துவிடுவோமாக. நாம் புரிதற்கு இருக்கும் உதவிகளை எதிர்பார்த்துக்கொண்டு உலகம் காத்திருப்பதில்லை. அது தன் போக்கில் போய்க்கொண்டிருக்கிறது. ஆயினும் நம்மைப் பொறுத்தவரையில் இடையறாது நம் கடமையை நாம் செய்துகொண்டிருக்கவேண்டும். நம்மால் இயன்றவளவு நலத்தை நாம் புரியவேண்டும். அப்படிச் செய்வதால்தான் நம்மை நாம் சீராளர் ஆக்கிக்கொள்கிறோம். நம்மை நாம் இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமுடையவர்களாகப் பண்படுத்திக் கொள்ளுதற்கும் பணிவிடை ஒன்றே உற்ற உபாயம். வறியன் ஒருவனுக்கு நாம் சிறிது செல்வம் கொடுத்து

உதவிபுரிந்திருக்கலாம். ஆனால் அதை முன்னிட்டு அவன் நமக்குக் கடமைப்பட்டிருக்கிறான் என்கின்ற எண்ணம் கனவிலும் நம் உள்ளத்தில் புகலாகாது. ஆனால் அவனுக்குச் செல்வத்தை எடுத்து வழங்கியதின் விளைவாக நாம் முற்றிலும் அவனுக்குக் கடமைப்பட்டிருக்கிறோம். ஏனென்றால் அப்படி வழங்குதலின் மூலமாக நமக்கு மனபரிபாகம் உண்டாதற்கு ஏற்ற வாய்ப்பை அந்த வறியன் நமக்கு நல்கியவன் ஆகின்றான். அதை முன்னிட்டே நாம் அவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். உலகத்துக்கு நாம் ஏதேனும் நலம் செய்திருக்கிறோம் என்று எண்ணுதல் முற்றிலும் தவறானது. உலகுக்கு நலம்செய்கிற ஆற்றல் நம்மிடத்து இருக்கிறது என்று எண்ணுவதும் பொருந்தாது. இன்னின்ன மாந்தர்களுக்கெல்லாம் இன்னின்ன பாங்கில் நாம் உதவிகள் பல செய்திருக்கிறோம் என்று எண்ணுவதும் முறையன்று. இத்தகைய எண்ணங்கள் எல்லாம் அறியாமையினின்று உதிப்பவைகளாம். அறியாமையை அடிப்படையாகக் கொண்டுள்ள எண்ணங்களெல்லாம் துன்பத்தை உ

மக்களுள் யாரோ ஒருவனுக்கு நாம் பேருபகாரம் செய்திருக்கிறோம் என்று எண்ணிக்கொள்கிறோம். அம்மனிதன் நமக்கு நன்றிகாட்டும் நிலையில் இருக்கிறான் என்றும் எதிர்பார்க்கிறோம். ஆனால் அம்மனிதனே நன்றிகெட்டவனாக நடந்துகொள்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அவனுடைய மனநிலையை

முன்னிட்டு நாம் பெரிதும் வேதனைப்படுகிறோம். நாம் வேதனைப்படுவதற்குப் பொறுப்பாளி அம்மனிதன் அல்லன்; நம்மிடத்துள்ள அறிவின்மையே நாம் படும் துன்பத்துக்கு அடிப்படைக் காரணமாகிறது. நாம் செய்கிற ஏதோ ஒரு உபகாரத்துக்கு நன்றியுணர்தல் போன்ற பிரதிபலனை அம்மனிதனிடத்திருந்து நாம் ஏன் எதிர்பார்க்கவேண்டும்? எம் மனிதனுக்கு நாம் உபகாரம் செய்கின்றோமோ அம்மனிதனுக்கு நாம் நன்றியுள்ளவர்களாக இருந்து பழகவேண்டும். அம் மனிதனுடைய வடிவத்தில் கடவுளே எழுந்தருளி யிருக்கிறார் என்றும், நமது கொடையை ஏற்றுக்கொள் ளுதல் மூலம் நாம் சுயநலத்தியாகம் பண்ணுதற்கு அவர் ஒரு நல்ல வாய்ப்பைக் கொடுத்திருக்கிறார் என் றும் உணர்வது நமது கடமையாகும். கடவுள் ஒரு வரே உலகனைத்தும் ஆயிருக்கின்றார். அனந்தங்கோடி உயிர்வகைகளாகப் பரிணமித்திருப்பவரும் அவரே. கடவுளை வழுத்துதற்கான வாய்ப்பு நமக்குக் கிடைத் திருப்பதைக் குறித்து நாம் பெருமகிழ்வு அடைய வேண்டும். ஆருயிர்களுக்குச் செய்கின்ற அரும்பணிகள் எல்லாம் ஆண்டவனுக்குச் செய்கின்ற பணிகள் ஆகின்றன. ஜீவர்களுக்குச் செய்கின்ற சேவைகள் எல்லாம் சிவனார்க்குரிய ஆராதனையாகிறது. நரர்களுக் குப் புரிகின்ற நல்வினைகள் எல்லாம் நாராயணனுக் குரிய வழிபாடு ஆகிறது. இத்தகைய மனப்பான்மை யுடன் நாம் தொண்டுபுரிந்து பழகவேண்டும்.

பாத்திரமறிந்து பிச்சையிடு என்னும் கோட்பாடு தீவிரமான கர்மயோகிக்குப் பொருந்தாது. தன்னை ஒரு கொடையாளி யென்று வைத்துக்கொள்கின்ற லௌகிகி ஒருவனுக்கு அத்தகைய மனப்பான்மை இருக்கிறது. ஏழை ஒருவனுக்குக் கொஞ்சம் பொருளை எடுத்துக் கொடுக்கின்றபொழுது தான் கடவுளுடைய பொருளை எடுத்து வழங்குவதாகக் கர்மயோகி கருதுகிறான். அப்பொருளை வாங்கிய மனிதன் அதைக் கொண்டு உணவுதேடி உண்டு நன்குவாழ்ந்திருக்கலாம். கஞ்சா அபினி வாங்கி உண்டு கெட்டுப்போய்விடலாம். கர்மயோகிக்கு அதைப்பற்றிய கவலையில்லை. தான் புரிகின்ற பணிவிடைகளை யெல்லாம் கடவுள் ஆராதனையாகச் செய்கிறான். ஆதலால் நாம் முற்றிலும் பற்றற்றவர்கள் ஆய்விடவேண்டும். பற்றற்றுப் பணிவிடை செய்கின்றவன் பாருலகினின்று பிரதிபலன் எதையும் எதிர்பார்ப்பதில்லை. பிரதி பலனை எதிர்பார்க்கின்றவனுக்கே துன்பங்கள் வருகின்றன. கைம்மாறு கருதாது கடமையைச் செய்கின்றவர்களுக்கு யாண்டும் துன்பமில்லை. பெருமகிழ்வோடு இம்மண்ணுலகில் தொண்டுபுரியப் பற்றற்றவர்களுக்கு இயலுகிறது. பற்றற்ற நிலையிலிருந்துகொண்டு பணிவிடை செய்கின்றவர்களுக்குத் துன்பமும், துயரமும், ஏமாற்றமும் உண்டாவதில்லை. இறைவனுக்குப் பணிவிடை செய்கின்றபொழுது இறைவன் நமக்கு நன்றிகாட்ட வேண்டுமென்று நாம் எதிர்பார்ப்பதில்லை. உயிர்களுக்குப் பணிவிடை செய்கின்றபொழுதும் அதே மனப்

பான்மையை நாம் படைத்திருப்பது அவசியமாகிறது. இனி, இறைவனே இவ்வுலகமாக யாண்டும் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கின்றார். இன்பமும் துன்பமும் இணைபிரியாது கலந்திருப்பது இவ்வுலக நடைமுறையாகும். இன்பதுன்ப மயமாய் சர்வகாலமும் நிலைத்திருப்பதுதான் உலகத்தின் இயல்பு. அதன் நடைமுறையை மாற்றி அமைத்துவிட நமக்கு இயலாது என்பதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

ஏழை ஒருவன் இருந்தான். அவனுக்குப் பணத் தாசை மிகப் பிடித்திருந்தது. யாரோ ஒருவர் சொல்லக்கேட்டு அவனுக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. அதாவது பிசாசு ஒன்றை வசீகரம் செய்துவிட்டால் அதனிடத்திருந்து அவன் வேண்டியவாறு விதவிதமாக வேலை வாங்கலாமென்றும், விரும்பியவளவு செல்வம் திரட்டிவிடலாமென்றும் அவன் கருதலானான். தனக்குத் தேவையாயிருந்த இதர பொருள்களையும் அந்தப் பிசாசை ஏவிப் பெற்றுவிடலாம் என அவன் முடிவு கட்டினான். இனிப் பிசாசை வசப்படுத்துவதற்கான வழி யாது என்று ஆவலுடன் தேடியலைந்து திரிந்து கொண்டிருந்தான். சான்றோர் யாராவது ஒருவருடைய உதவியை நாடினால் அவர் மூலமாக தான் அப்பிசாசை கட்டிப்பிடித்துவிடலாம் என்று நினைத்தான். ஆதலால் பெரியவர் யாராவது ஒருவரைத் தேடி அவன் வெவ்வேறு இடங்களுக்குச் சென்றான். நாடெல்லாம் சுற்றியதின் விளைவாகச் சான்றோர் ஒருவரை அவன்

சந்தித்தான். உண்மையில் அவரிடத்தில் சித்திகள் பல இருந்தன. அப்பெரியவர் முன்னிலையில் பணத் தாசை பிடித்தவன் வீழ்ந்து வணங்கித் தனக்கு உதவி புரியும்படி அவரைக் கெஞ்சிக் கேட்டான். பிசாசை வசப்படுத்துவதால் அவனுக்கு ஆகப்போவது யாது என்று அப்பெரியவர் கேட்டார். "நான் விரும்பிய வாறு எனக்கு வேலைகள் செய்வதற்காகப் பிசாசு ஒன்று என் கைவசப்படவேண்டும். அதை எங்ஙனம் வசீகரிப்பது என்பதை தேவே, எனக்குப் புகட்டியருள வேண்டும். எப்படியாவது அதை நான் வசப்படுத்தியே ஆகவேண்டும் என்னும் ஆவல்கொண்டவனாய் இருக் கிறேன்" என்று அம்மனிதன் மறுமொழி கூறினான். "இத்தகைய கவலை உனக்கு வேண்டாம். அமைதி யுற்றவனாய் நீ வீடு போய்ச்சேர்" என்று முனிவர் அம் மனிதனுக்கு எச்சரிக்கை செய்தார். ஏமாற்றம் அடைந்தவனாக அம்மனிதன் வீட்டுக்குத் திரும்பினான். ஆனால் அவனுக்கு அமைதி ஏற்படவில்லை. அல்லும் பகலும் அதே எண்ணத்தில் மூழ்கியவனாக அவன் இருந்தான். மறுபடியும் அம்மனிதன் அதே மேலோ ரிடம் சென்றான். கண்ணீரும் கம்பலையுமாக அவரிடம் அவன் பிரார்த்தனை செய்தான். "எனக்குப் பிசாசு ஒன்றை வசப்படுத்தித் தாருங்கள். எப்படியும் நான் அதைப்பெற்றே ஆகவேண்டும். தாங்கள் எனக்கு உதவிபுரிய முடியும்" என்று அவன் பணிவுடன் விண் ணப்பித்தான். அந்தப் பேராசைக்காரனுடைய பிடி வாதத்தைப் பார்த்த பெரியவருக்குச் சிறிது சலிப்பும்

சங்கடமும் ஏற்பட்டது. அவனுடைய உபத்திரவத்துக்குக் கொஞ்சம் இரக்கம் காட்டினர். "இதோ இந்த மந்திரத்தை ஏற்றுக்கொள். இதைத் தொடர்ந்து உருப்போடு. உருப்போடுதலில் நீ வல்லவன் ஆய்விட்டால் பிசாசு வசப்பட்டு உன்முன் தோன்றும். நீ இடுகிற ஆணையையெல்லாம் அப் பிசாசு நிறைவேற்றி வைக்கும். ஆனல் உனக்கு எச்சரிக்கை ஒன்று செய்கிறேன். பிசாசு மிகப் பொல்லாதது. ஓயாது அதற்கு வேலை கொடுத்துக்கொண்டே இருக்கவேண்டும். அதற்கு வேலைகொடுக்க நீ தவறிவிடுவாயாகில் உன் உயிரை அது வாங்கிவிடும். இது விஷயத்தில் நீ கவனமாய் இருக்கவேண்டும்" என்று முனிவர் மொழிந்தார். மகிழ்ச்சியடைந்த அம்மனிதன் அதற்கு மறுமொழி புகலுவானுயினன்: "தேவே, அது மிகச் சுலபமானது. அந்தப் பிசாசுக்கு அது வாழ்ந்திருக்கும் பரியந்தம் வேலை கொடுக்க எனக்கு இயலும்." இங்ஙனம் இயம்பி விட்டுப் பெரியவரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு அம்மனிதன் போய்விட்டான்.

வனாந்தரம் ஒன்றுக்கு அவன் போய்ச்சேர்ந்தான். தான் பெற்ற மந்த்ரோபதேசத்தை அவன் நெடுங்காலம் உருப்போட ஆரம்பித்தான். அவன் செய்த மந்த்ரஜபம் சித்தியாயிற்று. தக்க தருணத்தில் வடிவத்தில் மிகப்பெரிய பிசாசு ஒன்று அவன்முன் தோன்றிற்று. பயங்கரமான தொனியில் அது பேச ஆரம்பித்தது: "நான் ஒரு பிசாசு. மந்த்ரசக்தியால் நீ என்னை வசப்படுத்திவிட்டாய். உனது ஏவல்களை

யெல்லாம் நிறைவேற்றி வைக்க நான் கடமைப்பட்டிருக்கிறேன். எனினும் உனக்கு ஒரு நிபந்தனை கூறுகிறேன். ஓய்வின்றி நீ எனக்கு வேலைகொடுத்துக் கொண்டே யிருக்கவேண்டும். எப்பொழுது நீ வேலை கொடுக்கத் தவறிவிடுவாயோ அப்பொழுது நான் உன்னைக் கொன்றுவிடுவேன்."

அதை வசப்படுத்திய மனிதன் விடைகொடுக்கலானான்: "எனக்குப் பெரியமாளிகை ஒன்று கட்டு." இது அவன் கொடுத்த முதலாவது உத்திரவாகும்.

"இதோ ஆய்விட்டது. மாளிகை ஒன்றைக் கட்டி முடித்தாய்விட்டது." இங்ஙனம் பிசாசு பதில் சொல்லிற்று.

"எனக்குத் திரவியம் தேடிக்கொண்டுவா" என்று அம்மனிதன் இரண்டாவது உத்திரவு போட்டான். "இதோ உனக்கு வேண்டியவளவு பணம் வந்துவிட்டது" என்று பிசாசு பதில் பகர்ந்தது.

பேராசைக்காரன் மூன்ருவது உத்திரவு போட்டான். "இந்தக் காட்டை யெல்லாம் அழித்து ஒரு பெரிய பட்டணத்தைக் கட்டுவாயாக" என்பது அவன் இட்ட ஆணை.

"இதோ பட்டணம் ஆய்விட்டது. மேலும் நான் செய்யக்கிடப்பது யாது?" என்று பிசாசு வினவிற்று.

இப்பொழுது அம்மனிதனுக்குக் கொஞ்சம் பீதி உண்டாயிற்று. தனக்குள்ளே அவன் எண்ணுவாரு யினன். "மேற்கொண்டு பிசாசுக்குத் தருதற்கு வேலை

ஒன்றுமில்லையே. எதைச் சொன்னாலும் நொடிப்பொழுதில் அது செய்து முடித்துவிடுகிறது. என்ன செய்வது ?'' என்று ஏங்கி நின்றான்.

"எனக்கு ஏதாவது வேலைகொடு, இல்லையேல் நான் உன்னை விழுங்கிவிடுவேன்'' என்று பிசாசு பகர்ந்தது. பரிதாபகரமான அம் மனிதன் என்ன செய்வதென்று தெரியாது திகைத்தான். பிசாசுக்குக் கொடுப்பதற்கு மேலும் ஒரு வேலையும் அவனுக்குத் தென்படவில்லை. எனவே அவன் பயந்துபோய்விட்டான். உடனே அவ்விடத்தைவிட்டு எழுந்து ஓடினான். தனக்கு மந்த்ரோபதேசம் செய்துவைத்த மஹானைச் சந்திக்கும் வரையில் விலாவெடிக்க விரைந்து ஓடினான். அவர் முன்னிலைக்குச் சென்று பேசமுடியாதவனாய் பரிதவித்து நின்றான். பின்பு பெருமூச்சுக்கிடையில் "ஐயனே, என் உயிரைக் காப்பாற்றுங்கள்!'' என்று முறையிட்டான். நிகழ்ந்தது யாது என்று அப்பெரியவர் அவனிடம் விசாரித்தார். "பிசாசுக்குப் புதிய வேலை எதுவும் கொடுக்க எனக்கு இயலவில்லை. நான் அதற்கு ஏதேனும் ஒரு வேலை கொடுத்தால் அக்கணத்திலேயே அது செய்து முடித்துவிடுகிறது. இனி அதனிடம் எப்படி வேலை வாங்குவதென்று எனக்கே விளங்கவில்லை. அதற்கு வேலை கொடுக்காவிட்டால் என்னை எடுத்து விழுங்கிவிடுகிறேன் என்று அந்த வேதாளம் என்னைப் பயமுறுத்துகிறது'' என்று அம் மனிதன் அச்சத்தோடு இயம்பினான்.

இப்படி அவன் பேசி முடிப்பதற்குள் அந்தப் பிசாசு அவனைத் துரத்திக்கொண்டு அங்கே வந்து விட்டது. "இதோ உன்னை எடுத்து உண்டு ஏப்பம் விடப்போகிறேன்" என்று அப்பிசாசு பகர்ந்தது. இன்னும் சிறிது நேரத்துக்குள் அம்மனிதனும் ஒழிந்து போய்விடுவான்.

அந்த நெருக்கடியில் அவன் நடுங்கி நின்றான். தன் உயிரைக்காப்பாற்ற வேண்டுமென்று அம்முனிவரிடம் கெஞ்சி விண்ணப்பித்தான். அவனுடைய துன்பகர மான நிலையை உணர்ந்த பெரியவர் பகரலானார். "இந் நெருக்கடியினின்று நீ தப்பித்துக்கொள்வதற்கு நான் உபாயம் ஒன்று கண்டுபிடிக்கிறேன். வளைந்த வாலுடைய நாய் ஒன்றைத் தேடிப்பார். அத்தகைய நாய் ஒன்று தென்பட்டதும் வாளை உருவி அதன் வாலை நொடிப்பொழுதில் துண்டித்துவிடு. அதைக்கொண்டு வந்து பிசாசிடம் கொடு. வளைந்துள்ள அவ்வாலை நிமிர்த்தித்தர வேண்டுமென்று அதற்கு உத்திரவு போடு" இங்ஙனம் அம்மஹான் மொழிந்தார்.

சிறிது நேரத்துக்குள் பிசாசுக்குப் புதிய வேலை தருவதாக வாக்களித்துவிட்டு அம்மனிதன் வெளியேகி னான். வளைந்திருந்த நாய்வால் ஒன்றை வெட்டி அவன் கொண்டு வந்து சேர்த்தான். பிசாசின் கையில் அதைக் கொடுத்தான். "இந்த வாலை நிமிர்த்தி என்னிடம் தா" என்று அவன் உத்திரவு போட்டான்.

பிசாசும் அவ்வாலைக் கையில் வாங்கிக்கொண்டது. மிக மெதுவாகவும் எச்சரிக்கையாகவும் நாய்வாலை அது

நிமிர்த்தியது. ஆனால் பிடிப்பை விட்டவுடனே அது பழையபடி அக்கணமே வளைந்துகொண்டது. மறு படியும் அதை நிமிர்த்தும் செயலில் பிசாசு ஈடுபட்டது. சிரமம் மிக எடுத்துக்கொண்டு வாலை அது நிமிர்த்திப் பிடித்தது. அதனால் என்ன ! கைப்பிடியை விட்ட வுடனே அது பழையபடி வளைந்துகொண்டது. பின்னு மொருமுறை பொறுமையுடன் பிசாசு அந்த வாலை நேர்மைப்படுத்த முயன்றது. ஆனால் கையைவிட்ட வுடன் அது திரும்பவும் வளைந்துகொண்டது. இத் தகைய முயற்சி தொடர்ந்து பல நாட்கள் நிகழ்வ தாயிற்று. திரும்பத் திரும்ப முயற்சி செய்துபார்த்து பிசாசு சலித்துப்போய்விட்டது. "இதற்கு முன்பு இத்தகைய உபத்திரவத்தில் என் ஆயுட்காலத்தில் நான் ஒருநாளும் இருந்ததில்லை. நான் வயது மிக வந் துள்ள பிசாசு ஆவேன். ஆனால் இது வரையில் இது போன்ற துன்பத்தை நான் அனுபவித்தது கிடையாது. இப்பொழுது சங்கடமான ஓர் இக்கட்டில் நான் மாட் டிக்கொண்டிருக்கிறேன்" என்று சிறிது மனம் கலங் கிய பாங்கில் தனக்குள்ளே அது எண்ணிக்கொண்டது. "உன்னோடு நான் ஒரு உடன்படிக்கை செய்துகொள் கிறேன்" என்று அப்பிசாசு மனிதனிடம் மொழிந்தது. "என்போக்கில் என்னைப் போகவிட்டுவிடு. இது பரி யந்தம் நான் உனக்குக் கொடுத்துள்ள பொருள்களை யெல்லாம் உனக்கு உரியவைகள் ஆக்கிவிடுகின்றேன். அவைகளை எனக்குத் திருப்பித்தந்துவிடவேண்டு மென்று நான் வற்புறுத்தமாட்டேன். மேலும் நான்

வந்து உன்னைத் தொந்தரவு செய்யவும் மாட்டேன்" என்றது. அம்மனிதனுக்கும் அப்பேச்சைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. பிசாசின் ஒப்பந்தத்தை அவன் மகிழ்வோடு ஏற்றுக்கொண்டான்.

இவ்வுலகம் நாய்வால் போன்றது. வளைவு அதனிடத்து இயல்பாக அமைந்திருக்கிறது. அதை நிமிர்த்தி எடுப்பதற்குக் காலமெல்லாம் மக்கள் முயற்சி செய்திருக்கின்றனர். பல்லாண்டு பல்லாண்டாக அவர்கள் என்னென்ன விதங்களிலோ உலகைத் திருத்தியமைக்க யத்தனித்திருக்கின்றனர். ஆனால் அவர்களின் முயற்சி தளர்வடைந்தவுடனே உலகின் போக்கு பழையபடி வளைவடைந்து விடுவதாயிற்று. தன் இயல்புக்கேற்றபடியல்லாது வேறு எப் பாங்கில் இவ்வுலகம் திருந்தியமையப் போகிறது? உலகத்தைப் பற்றிய இவ்வுண்மையை மனிதன் முதலில் அறிந்து கொள்ள வேண்டும். அடுத்தபடியாக அவன் பற்று தலை அறவே அகற்றி விட்டவனாக இருந்துகொண்டு உலகில் பணியாற்ற வேண்டும். அத்தகைய மனபரி பாகம் அவனுக்கு வந்து விடுமாகில் அவன் மதவெறி பிடித்தவன் ஆகமாட்டான். நாய் வாலை எங்ஙனம் நேராக நிமிர்த்தி வைக்க முடியாதோ அங்ஙனம் இவ்வுலகையும் குறைகள் அற்றதாக மாற்றிவைக்க நமக்கு இயலாது. இக்கோட்பாட்டை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அப்பொழுது உலகைத் திருத்தியமைக்கும் விஷயத்தில் நாம் வெறி பிடித்தவர்கள் ஆகமாட்டோம். சமுத்திரத்தில் அலை

உண்டாவதால் அதனிடத்து உயர்வும் தாழ்வும் இருப்பது போன்று உலகத்தில் எப்பொழுதுமே நலம் கேடு ஆகிய இரண்டும் மாறிமாறி அமைந்துகொண்டே வரும். அதனுடைய முன்னேற்றம் என்பது தாற்காலிகமாக நாம் காணும் ஒருவிதக் காட்சியாகும். முன்னேற்றத்தைத் தொடர்ந்து பிற்போக்கு அதனிடத்து வந்துவிடுவதும் உண்டு. தன் இயல்புக்கு ஏற்ப உலகம் ஏதேனும் ஒருவிதத்தில் மாறியமைந்து கொண்டே வருகிறது. நமக்கு அனுகூலமான மாறுதல்களை நாம் காணுமிடத்து அது முன்னேற்றம் அடைந்து வருகிறது என்று சொல்லுகிறோம். அத்தகைய முன்னேற்றத்துக்கு வெறிபிடித்த மனப்பான்மை ஒருவிதத்தில் இடைஞ்சலாய் அமைந்துவிடுகிறது. வெறிபிடித்தவர்களுடைய கூட்டம் உலகில் இல்லாது போய்விட்டால் உலகின் முன்னேற்றம் இப்பொழுது நிகழ்வதை விட இன்னும் ஒழுங்காக நடைபெற்று வரும். மனதில் ஓரளவு வெறியும் ஆவேசமும் கொண்டிருந்தால்தான் மனிதன் உற்சாகத்தோடு வேலை செய்ய முடியுமென்று பலர் கருதுகின்றனர். ஆனால் உண்மை அதுவன்று. வெறியும் ஆவேசமும் மானுடவர்க்கத்தின் முன்னேற்றத்துக்குத் தடைகளை உண்டுபண்ணிவிடுகின்றன என்பதை அறிந்துகொள்வது அவசியமாகிறது. தடை என்ன பாங்கில் வருகிறது என்னும் கேள்வி எழலாம். வெறியும் ஆவேசமும் பிடித்திருக்கிறவர்களிடத்தே வெறுப்பும் சினமும் பெருமிதமாக உண்டாகின்றன. கோபத்தினின்று மக்களுக்கிடையில் சண்டை சச்சரவு

கள் அதிகரிக்கின்றன. வெறுக்கின்றவர்களும் சினந்து கொள்ளுகின்றவர்களும் மற்றவர்களிடத்து முறையாக அனுதாபம் காட்டமுடியாது. வெறிபிடித்தவர்களுக்கிடையில் ஓரம் சார்ந்த எண்ணம் உருவெடுத்து விடுவதுண்டு. வெறிபிடித்தவர்கள் எதைச் செய்கின்றார்களோ அதுதான் உலகுக்கு மிக நல்லது என்கிற இறுமாப்பு அவர்களுக்கு வந்துவிடுகிறது. வெறிபிடித்தவர்கள் எதை உடைத்திருக்கின்றார்களோ அதுதான் உலகத்துக்கே மிக நல்லது என்னும் வீராப்பு அவர்களுக்கு வந்துவிடுகிறது. வெறிபிடித்தவர்களுடைய செயல்களுக்கு அன்னியமாயுள்ள செயல்கள் எல்லாம் ஒன்றுக்கும் உதவாதவைகள் என்னும் இறுமாப்பும் உண்டாகிறது. வெறிபிடித்தவர்கள் எதை உடைத்திருக்கின்றார்களோ அதற்கு அன்னியமான உடைமைகள் எல்லாம் பயனற்றவைகள் என்னும் பான்மையும் அவர்களுக்கு வந்துவிடுகிறது. எனவே மதவெறி பிடிக்கின்ற மனப்பான்மை நம் மனத்தகத்து உருவெடுக்கும் வேளைகளில் எல்லாம் உலகைப்பற்றிய இவ்வுண்மையை நாம் ஞாபகத்துக்குக் கொண்டுவர வேண்டும். உலகத்தின் இயல்பு நாய்வால் போன்றது என்பதை நமக்கு நினைவூட்டிக்கொள்ள வேண்டும். உலகம் இத்தகைய பரிதாபகரமான நிலையில் இருக்கிறதே என்று அதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அதைப் புதிய பாங்கில் திருத்தியமைக்க வேண்டுமென்று எண்ணியெண்ணிச் சஞ்சலப்படும் பாங்கு உனக்கு வேண்டாம்; அத்தகைய சஞ்சலத்தால்

நீ தூக்கம் கெட்டவன் ஆய்விடவேண்டாம். இவ்வுலகம் உன்னுடைய ஆதரவை எதிர்பார்த்திருக்கிறதென்று எண்ணவேண்டாம். நீ இல்லாது மறைந்துபோய்விட்டால் அதனால் உலகுக்கு ஒருவிதமான குறையும் வந்துவிடாது. தன் போக்கில் இவ்வுலகம் போய்க்கொண்டே இருக்கும். இவ்வுலகத்தை நல்ல உலகமாகத் திருத்தியமைக்க வேண்டும் என்கின்ற வெறி உன்னிடத்திருந்து எப்பொழுது ஒழிந்துபோகின்றதோ அப்பொழுதே நீ நன்கு வினையாற்ற வல்லவன் ஆவாய். தன் கடமையைச் செவ்வையாகச் செய்யவல்லவன் யார் என்பது கேள்வி. எண்ணும் எண்ணத்தில் ஒருவன் நடுநிலை வகிக்க வேண்டும். அமைதி அவனிடத்துப் பொலிதல் அவசியம். உண்மையை உள்ளபடி மதிப்புப்போடுகிற நுண்ணறிவு அவனிடத்தில் இருக்க வேண்டும். தனது நாடி நரம்புகளில் கொந்தளிப்புக்கு இடம் தராது மனிதன் சாந்தத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். மன்னுயிர்களிடத்து அன்பும் அனுதாபமும் ஒரு மனிதனுக்கு ஏராளமாய் இருக்கவேண்டும். மற்றவர்களுக்குச் செய்கின்ற பணிவிடைகள் எல்லாம் தன்னைப் பண்படுத்துதல் பொருட்டு என்னும் எண்ணத்தில் அவன் நிலைபெற்றவன் ஆகவேண்டும். இத்தகைய பரிபாகம் யாரிடத்தில் வந்து அமைகிறதோ அவன் நல்ல தொண்டன் அல்லது கர்மயோகி ஆகிறான். இதற்கு மாறாக தன் கொள்கையில் வெறிபிடித்திருக்கின்றவன் நல்லறிவை இழந்து விடுகின்றான். மடமை அவனிடத்துக் குடிகொள்கிறது. மற்றவர்களிடத்து

உண்மையான அன்புகாட்ட அவனுக்கு இயலாது. தனது ஆவேச நிலையின் மூலம் அவன் உலகை நேராக நிமிர்த்தி அமைக்க வல்லவனாக ஒருபொழுதும் ஆக மாட்டான். மற்று, தன்னையாவது அவன் சீர்படுத்திக் கொள்கின்றானா வென்று கேட்போமாகில் அதுவும் அவனுக்குச் சாத்தியமாவதில்லை. அவனுடைய மனதில் மேலும் மாசுவந்து படிகிறது. தூய்மையில் தோன்றி வந்துள்ள நிறைநிலைக்கும் அவனுக்கும் வெகு தூரம் ஆய்விடுகிறது.

இவ்வுலகைப்பற்றிய அடிப்படையான உண்மைகள் சிலவற்றை நாம் திரும்பவும் ஞாபகத்துக்குக் கொண்டுவருவோம். முதலாவதாக நாம் வாழ்ந்துவரும் இவ்வுலகினிடத்து நாம் கடன்பட்டவர்களாய் இருக்கின்றோம். இவ்வுலகம் நமக்காக எடுத்துத் திருப்பித் தரவேண்டியது ஒன்றுமில்லை. இவ்வுலகுக்குப் பணிவிடை செய்யும் மனப்பான்மையே நம்மிடத்து இருக்க வேண்டும். பணிவிடை செய்யவேண்டும் என்னும் மனப்பான்மைவேறு, சீர்திருத்தம் செய்யவேண்டும் என்னும் மனப்பான்மைவேறு. உலகுக்குத் தொண்டு புரியும் வாய்ப்பு நமக்குக் கிடைக்குமாகில் அதை ஒரு பாக்கியமாக நாம் கருதுதல் வேண்டும். சீரிய மனப்பான்மையுடன் உலகுக்குப் பணிவிடைசெய்தல் மூலம் நமக்கு நாம் உதவிபுரிந்துகொள்கிறோம். உலகை நாம் உய்விக்கிறோம் என்பது உண்மையல்ல; உலகுக்கு ஊழியம் செய்வதன்மூலம் நாம் உய்வு அடைகிறோம். இரண்டாவதாக இவ்வுலகத்தின் நடைமுறையைக்

கண்காணித்து வருவதற்குக் கடவுள் ஒருவர் இருக்கிறார். நிலைகுலைவு பிரபஞ்சத்தின்கண் நிகழ்ந்துவருகிறது என்பது உண்மையல்ல. அப்படி உலகுக்கு ஏற்படுகின்ற நிலைகுலைவினின்று அதைப் பாதுகாக்க வேண்டுமென்று நம்மில் எவரிடத்திருந்தாவது அது உதவியை எதிர் பார்க்கிறதில்லை. இப் பிரபஞ்சத்தினுள் இதற்கு சாக்ஷியாகக் கடவுள் யாண்டும் ஊடுருவி இருக்கின்றார். அவர்க்கு அழிவில்லை. உலகின் இடையறாத இயக்கத்துக்கு அவர் மூலகாரணம். அவருடைய கண்காணிப்போ ஒப்பு உயர்வு அற்றது, எல்லையில் அடங்காதது. அண்டமெங்குமுள்ள மற்ற உயிர்கள் எல்லாம் உறங்கிக்கொண்டிருக்கின்ற வேளையிலும் அவர் இமையாது, உறங்காது விழித்திருக்கின்றார். பிரபஞ்சத்தின் நடைமுறை என்னும் இயக்கத்தை இடையீடின்றி அவர்நிறைவேற்றிவைக்கின்றார். உலகில் உண்டாகின்ற பெரிய பெரிய மாறுதல்களும், புதிய தோற்றங்களும் அவருடைய ஆணையால் நிகழ்வனவாகின்றன. உலகுக்கு உதவிபுரிதல் என்கின்ற எண்ணம் கடவுளுக்கு உதவி புரிவதாக வந்துமுடிகிறது. அத்தகைய ஆணவம் நமக்குவேண்டாம். மூன்றாவதாக யாரையும் நாம் வெறுக்கலாகாது. நலம் கேடு ஆகிய இரண்டும் கலந்ததாக இவ்வுலகம் யாண்டும் இருந்து வருகிறது. பலவீனர்களாகவும் எளியவர்களாகவும் இருக்கின்றவர்களிடத்து அனுதாபம் காட்டுவது நமது கடமை. கேடு செய்கின்ற மனிதனிடத்தும் நாம் அன்பு பாராட்டவேண்டும். உடற்பயிற்சி சாலையில்

பயிலுகின்றவர்கள் உடல் உறுதிபெறுகின்றனர். இவ்வுலகம் அத்தகைய பயிற்சிசாலை போன்றது. நல்லொழுக்கத்தில் நாம் பயிற்சிபெறுதற்கான சிறந்த ஆலயமாக இவ்வுலகம் அமைந்திருக்கிறது. மன பரிபாகத்திலும் பண்பிலும் நாம் மேன்மையடைதற்குப் பிரபஞ்சம் என்னும் இப் பயிற்சிசாலை நமக்குப் பேருதவி புரிகிறது. நமது வாழ்வை முறையாக நடாத்துவது நமக்கு அமைந்துள்ள நல்ல பயிற்சியாகும். நல்ல பயிற்சி பெறுதலின் மூலம் நமக்கு மேலும் மேலும் மனத்திட்பமும், நேர்மையும் உண்டாகின்றன. மனதில் நாம் மாசற்றவர்கள் ஆகுமிடத்து பாரமார்த்திகப்பெருநிலைக்கு நாம் தகுதியுடையவர் ஆகிறோம். நான்காவதாக எத்தகைய வெறியோ ஆவேசமோ பிடித்தவர்களாக நாம் ஆகக்கூடாது. யாரிடத்து மதவெறியிருக்கிறதோ அவனிடத்து அன்பு இல்லை. ஏனென்றால் வெறி என்பது அன்புக்கு நேர் மாறுபட்டது. வெறி பிடித்தவர்களில் சிலர் வாய்ப்பேச்சைப் பெருமிதமாக வாரிக்கொட்டுகின்றனர். "பாபிகளை நான் வெறுப்பதில்லை. பாபத்தை மட்டும் நான் வெறுக்கிறேன் என்று பகர்கின்றவர்கள் இருக்கிறார்கள். இக்கூற்றைக் காதில் கேட்பதற்கு நயமாய் இருக்கிறது. ஆனால் பாபி ஒருவனைப் பாபத்திலிருந்து பிரித்தெடுப்பது நமக்குச் சாத்தியமா? உலகில் எப்பகுதிக்கு வேண்டுமென்றாலும் நாம் பிரயாணம் போகலாம். பாபம் வேறு, பாபிவேறு என்று பாகுபடுத்திக்காட்ட வல்லவனாகிய விவேகியை உலகத்தில் எவ்விடத்திலும் நாம்

காணமுடியாது. எனவே இத்தகைய வாய்ப்பேச்சில் நாம் மயங்கிவிடலாகாது. இவர்கள் இயம்புகின்ற இத்தகைய கூற்றில் பொருளொன்றுமில்லே. வஸ்து ஒன்றை அதனுடைய குணத்தினின்று பிரித்தெடுக்க வல்லவன் ஒருவன் இருப்பானுகில் அவன் உண்மையி லேயே பரிபூரண நிலேயை அடைந்தவன் ஆகின்றுன். பொருள்வேறு, அதனுடைய பண்பு வேறு என்று பாகுபடுத்துவது அவ்வளவு எளிதன்று. மேலும் எவ் வளவுக் கெவ்வளவு நாம் அமைதியே வடிவெடுத்த வர்கள் ஆகின்ருேமோ அவ்வளவுக்கவ்வளவு நாம் நன்கு விணயாற்ற முடியும். எவ்வளவுக் கெவ்வளவு நமது நாடி நரம்புகள் எல்லாம் அதிர்ச்சியடையாதிருக் கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு நல்லறம் புரிய நாம் வல்லவர் ஆகின்ருேம். எவ்வளவுக் கெவ்வளவு தூய அன்பு படைத்தவர்களாக நாம் ஆகின்ருேமோ அவ்வளவுக்கவ்வளவு நாம் நல்ல தொண்டர் ஆகமுடி யும். பணிசெய்து கிடப்பது நம் கடன். உலகைத் திருத்தியமைக்க நமக்கு இயலாது.

## 6. பற்று ஒழியுமளவு ஜீவபோதம் ஒழிகிறது

நாம் செய்கின்ற செயல் எதும் வீண்போவதில்லை. செயலுக்கேற்ற வினைப்பயன் உண்டு. விரைவில் அல்லது நாளடைவில் அந்த வினைப்பயன் நமக்கே உரியதாக நம்மிடத்து வந்துசேருகிறது. வினைப் பயனினின்று நாம் ஒருபொழுதும் தப்பித்துக்கொள்ள முடியாது. தன் வினைப்பயன் தன்னைச் சார்வது போன்று பிற வினைப்பயனும் தன்னை வந்து சார்வதுண்டு. நாம் செய்கின்ற கர்மங்களோ மற்றவர்களிடத்தும் பயனளிக்கக் கூடியவைகளாய் இருக்கின்றன. அதே பாங்கில் மற்றவர்கள் ஆற்றுகின்ற வினைகளும் நம்மிடத்துப் பயனை உண்டுபண்ணக் கூடியவைகளாக அமைவதும் உண்டு. இனி மக்களுடைய வாழ்க்கை முறையை ஆராய்ந்துபார்த்தால் உண்மை ஒன்று புலனுகும். கெட்ட செயல்களைச் செய்ய மக்கள் முற்படுவார்களாகில் அவர்களுடைய தீவினைகள் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே போவதுண்டு. அதற்கு மாருக மக்கள் நல்வினைகள் ஆற்றுவார்களாகில் அவர்கள் மேலும்மேலும் உறுதிபடைத்தவர்கள் ஆகிருர்கள். அவர்கள் ஆற்றும் நல்வினைகள் மேலும் மேலும் வலிவுடையவைகள் ஆகின்றன. அதனுல் அத்தகைய நன்மக்கள் யாண்டும் நல்வினைகளையே புரிந்து கொண்டிருக்கக் கற்றுக்கொள்கின்றனர். அதினின்று உண்மை ஒன்று நமக்கு விளங்குகிறது. நாம் எச்செயலைச் செய்தாலும் அதை அலாதியாக நமக்குரியதாகவே தடுத்து வைத்

துக்கொள்ள முடியாது. ஒருவன் ஆற்றுகின்ற கர்மம் ஏதேனும் ஒரு விதத்தில் மற்றவர்களையும் சென்றடைகிறது. ஒருவன் இயற்றுகின்ற பாபச்செயலோ அல்லது புண்ணியச் செயலோ மேலும் புதிய வேகத்தைப் பெறுதற்கு இதுவே காரணமாகிறது. நலம் செய்கின்ற ஒருவனுக்குத் துணையாக ஏனையவர்கள் செய்கின்ற நல்வினைகள் வந்து உதவுகின்றன. கேடு செய்கின்ற ஒருவனுக்கு மற்றவர்கள் ஆற்றுகின்ற தீச்செயல்களும் துணையாக வந்தமைகின்றன. ஒருவனுடைய மனது மற்றொருவனுடைய மனதோடு எங்ஙனம் இணைக்கப் பெற்றிருக்கிறது என்பதை அறிந்துகொள்ளுதற்கு வானொலியைத் தக்கதொரு சான்றாக எடுத்துக்கொள்ளலாம். ஓரிடத்திலிருந்து வானொலி பரப்பப்பெறுகிறது. அந்த வானொலிக்கு ஏற்ற அலைநீளம் இருக்கிறது. பல இடங்களில் (Radio Receiver) வானொலியை வாங்கிக்கொள்ளும் கருவிகள் இருக்கின்றன. வாங்கிக் கொள்ளும் கருவிகளிடத்து எத்தகைய அலை நீளத்தை நாம் அமைத்து வைக்கின்றோமோ அத்தகைய ஒலி அலை எங்கிருந்து வந்தாலும் அதை அது ஏற்றுக்கொள்கிறது. எனவே ஒலிபரப்பியினிடத்தும் ஒலி வாங்கும் கருவியினிடத்தும் அலை நீளம் ஒன்றுபட்டிருப்பது அவசியமாகிறது. அலை நீளம் ஒன்றுபட்டுவிட்டால் பரப்பப்பெறுகிற ஒலியை வாங்குகிற கருவி எளிதில் எடுத்துக்கொள்கிறது. இதே விதத்தில் மனது செயல்புரிந்து வருகிறது. ஒரு மனிதன் ஒரு விதச் செயலாற்றுகின்றபொழுது அதற்கேற்றபடி

அவனுடைய மனதில் சலனமுண்டாகிறது. அதே பாங்குடைய சலனம் இன்னும் யார் யார் மனதிலெல்லாம் அமைந்திருக்கிறதோ அவர்களுடைய மனதில் இந்த மனிதன் எண்ணுகிற எண்ணம் தோன்றுகிறது. மற்றுமொரு உபமானத்தை எடுத்துக்கொள்வோம். விதவிதமான இன்னிசைக் கருவிகள் இருக்கின்றன. வீணை, தம்புரா, மிருதங்கம், பியானோ ஆகியவைகளிடத்து ஒரேபாங்கில் சுருதி மீட்டி ஒரே அறைக்குள் வைத்துவிட்டால் அவைகளுக்கிடையில் உண்டாகின்ற அரிய தொடர்வு ஒன்றை நாம் தெளிவுபடக் காணலாம். இந்தத் தொடர்வுக்கு (Sympathetic Vibration) உடன் இயக்கம் என்று பெயர். ஒரே பாங்கில் சுருதிமீட்டி வைக்கப்பட்டிருக்கின்ற இன்னிசைக் கருவிகளுள் வீணை ஒன்றை எடுத்து அதன்கண் ஒரு வித ஓசையை அல்லது ராகத்தை நாம் உண்டுபண்ணினால் அதே ஓசையை அல்லது ராகத்தை எதிரொலிக்க வல்லவைகளாக ஏனைய இன்னிசைக் கருவிகளாகிய மிருதங்கம், தம்புரா, பியானோ முதலியவைகள் ஆய் விடுகின்றன. இக்கோட்பாடு மனதுக்கும் உரியதாகிறது. ஒரே பாங்கான மனம் படைத்திருக்கின்றவர்கள் சிலர் இருக்கின்றார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர்களுள் ஒரு மனிதனுடைய உள்ளத்தில் உதிக்கின்ற நல்லெண்ணம் மற்றவர்களுடைய உள்ளத்திலும் தோன்ற ஆரம்பிக்கிறது. ஒரேவித மனம் படைத்தவர்கள் பக்கம் பக்கம் இருப்பார்களானால் ஒரு மனிதனுடைய உள்ளத்தில் உண்டாகும் எண்ணம்

மற்றவர்களுடைய உள்ளத்தில் விரைவில் தோன்ற ஆரம்பிக்கிறது. இவர்கள் நெடுந்தூரத்துக்கு அப்பால் இருப்பார்களாகில் அதற்கேற்றபடி மனதோடு மனது தொடர்வு கொள்ளுதற்குக் காலதாமதம் உண்டாவதுண்டு. மனப்பான்மையில் சற்று ஏறத்தாழ வேற்றுமை இருந்தாலும் அதற்கேற்றபடி ஒருவனது மனதில் உண்டாகும் எண்ணம் மற்றொருவனது மனதில் பதிவது அரிதாய்விடுகிறது. எனினும் மனோதத்துவத்தைப்பற்றிய பேருண்மை ஒன்று பொய் போகாதது. ஒரு மனது மற்றொரு மனதினிடத்து ஆதிக்கம் செலுத்த வல்லது என்பதே அக்கோட்பாடாகும். ஒழுக்கம் தவறிய ஒருவன் கெட்ட செயல் ஒன்றைச் செய்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அத்தீச் செயலுக்கு ஏற்ற சலனம் அவன் உள்ளத்தில் உண்டாகிறது. அண்டத்தில் எங்கெங்கெல்லாம் இதே மனப்பான்மையும் சலனமும் படைத்தவர்கள் இருக்கிறார்களோ அவர்களுடைய உள்ளங்களில் எல்லாம் இந்தத் தீவினையின் வேகம் பரவிச்சென்று தோன்றவல்லதாகிறது. அப்படியல்லாது அம்மனிதன் நல்வினை ஒன்றை நிகழ்த்துவானாகில் அதற்கேற்ற நல்ல சலனம் ஒன்று அவனுடைய உள்ளத்தில் உண்டாகிறது. அந்த நல்ல மனப்பான்மையையும் சலனத்தையும் படைத்துள்ள மாந்தர் பிரபஞ்சத்தில் எங்கெங்கெல்லாம் இருக்கின்றார்களோ ஆங்காங்குச்சென்று அவன் எண்ணிய நல்லெண்ணங்கள் அவர்களுடைய உள்ளங்களில் தோன்றுவது எளிதாய்விடுகிறது. இதற்குமேல் மனோ

தத்துவத்தைப்பற்றிய மற்றோர் உண்மையும் உண்டு. அதற்கும் சான்றாக வானொலியை எடுத்துக்கொள்வோம். வானொலியைப் பரப்புகின்ற கருவியானது எவ்வளவுக்கெவ்வளவு ஆற்றல் மிகப் படைத்ததாகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு அதனிடத்திருந்து கிளம்புகிற அலைகள் நெடுந்தூரத்துக்குச் சென்று தெளிவுபட ஆங்காங்குள்ள கருவிகளில் எதிரொலிக்க வல்லவைகள் ஆகின்றன. அதே பாங்கில் நல்ல எண்ணம் அல்லது கெட்ட எண்ணம் எண்ணுகின்ற மனிதனுடைய மனோவேகத்தில் பேராற்றல் நிறைந்திருக்குமாகில் அது பலபேர் உள்ளங்களைச் சென்று தாக்க வல்லதாகிறது. எனவே கேடு மிகப்படைத்த பேராற்றல்காரன் ஒருவன் பலபேர்க்கிடையில் கேட்டைப் பரப்புகின்றான். நலம் மிகப்படைத்த பேராற்றல்காரன் ஒருவன் பலபேர்க்கிடையில் நலத்தைப் பரப்ப வல்லவனாகின்றான். இங்ஙனம் மன அமைப்பில் மக்களோடு மக்கள் தொடர்வு கொண்டுள்ளவர்களாய் இருந்து வருகின்றனர்.

மனதோடு மனது எங்ஙனம் சம்பந்தப்பட்டிருக்கிறது என்னும் இக்கோட்பாட்டை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் சத்சங்கத்தைப்பற்றிய உண்மையும் நமக்கு விளங்கும். ஆத்ம சாதனத்தில் செல்ல விரும்புகின்றவர்களுக்கு நல்லார் இணக்கம் பெருந்துணை புரிகிறது. மேலாம் எண்ணத்தை எண்ணுகிற நல்லார் எண்ணிக்கை அதிகரிக்குமளவு மேலான எண்ணத்துக்கு வலிவு மிக உண்டாகிறது.

வெளிச்சத்தைப்பற்றிய ஒரு தத்துவத்தோடு மனேதத்துவத்தைச் சீர்தூக்கி அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. நக்ஷத்திரங்கள் நெடுந்தூரத்துக்கு அப்பால் இருக்கின்றன. அது எவ்வளவு தூரம் என்பதைப்பற்றிப் பொதுவாக நாம் எண்ணிப்பார்ப்பதில்லை. எண்ணிப்பார்க்காமல் அதன் தொலைவை நம்மால் எளிதில் கிரகிக்கமுடியாது. ஒரு நக்ஷத்திரத்தினின்று புறப்பட்ட வெளிச்ச அலைகள் கோடிக்கணக்கான வருஷங்கள் பிரயாணம் செய்து நம் பூமிபோன்ற ஓர் இடத்தை எட்டுவதுண்டு. ஒரு நிமிஷத்துக்கு வெளிச்ச அலை ஒன்று ஒரு கோடி மைலுக்கு மேல் போகக்கூடிய வேகமுடையது. அவ்வளவு வேகமுடைய வெளிச்ச அலைகள் பல்கோடி வருஷங்கள் பிரயாணம் செய்வதினின்று நக்ஷத்திரங்கள் எவ்வளவு தொலைவில் இருக்கின்றன என்பதை ஒருவாறு யூகிக்கலாம். மனத்தினின்று உதிக்கின்ற எண்ணத்தின் அலைகளுக்கும் இத்தகைய சக்தியுண்டு. நூற்றுக் கணக்கான வருஷங்களாக எண்ணத்தின் அலைகள் இயற்கையின்கண் இயங்கிக்கொண்டிருந்த பிறகு அவைகளுக்கு ஒத்த மன அமைப்பை உடைய மக்களிடம் அவைகள் சென்றடைய வல்லவைகளாம். எனவே வானவெளியில் விதவிதமான எண்ண அலைகள் சதா இயங்கிக்கொண்டிருக்கின்றன என்று யூகிக்க இடமுண்டு. அப்படிச் சலித்துக்கொண்டிருக்கின்ற எண்ண அலைகளுள் மேலானவைகளும் உண்டு; கீழானவைகளும் உண்டு. ஒவ்வொரு மனிதனுடைய உள்

ளத்தினின்று உதிக்கின்ற ஒவ்வொரு எண்ணமும் வானவெளியில் வந்து இயங்கிக்கொண்டிருக்கிறது. இந்த எண்ணத்தை ஏற்றுக்கொள்ளத் தகுதிவாய்ந்த மற்றோர் உள்ளத்தைச் சென்றடையும் வரையில் அந்த எண்ண அலை இயங்கிக்கொண்டே இருக்கிறது. இயங்குகின்ற எண்ண அலையில் ஏதேனும் ஒன்றை ஏற்றுக்கொள்ளத் தகுதி வாய்ந்திருக்கிற மனது ஒரு கணப்பொழுதில் அந்த எண்ண அலையை ஏற்றுக் கொள்கிறது. இயற்கையின்கண் உள்ள எண்ண அலை களுக்கும் அவைகளை ஏற்றுக்கொள்ள வல்லவைகள் ஆகின்ற மன அமைப்புக்கும் இங்ஙனம் நெருங்கிய தொடர்வு இருக்கிறது என்பதை நாம் யாண்டும் ஞாப கத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கெட்ட செயல் களைச் செய்ய ஒரு மனிதன் முற்படுகின்றான் என்று வைத்துக்கொள்வோம். அத்தகைய தீர்மானத்தால் அவன் தனது மனதைக் கேடு நிறைந்த ஒரு நிலைக்குக் கொண்டுவந்துவிடுகிறான். அதன் விளைவாக ஏற்கனவே வான வெளியில் நிலவிக்கொண்டிருக்கின்ற கீழான எண்ணங்கள் அந்தக் கீழான மனதில் நுழைய முற்படு கின்றன. கெட்ட மனதில் அவை இடம் பெற்றுவிடு கின்றபொழுது அவன் இன்னும் பல கேடுகளைச் செய் யத் துணிகின்றான். இவ்விதத்தில்தான் நெறி வழுவித் தீயசெயல்களைச் செய்கின்றான்; மேலும் மேலும் தீய செயல்களில் துணிந்து செல்லுகின்றான். அவனுடைய கீழான செயலினுடைய வேகம் பன்மடங்கு அதிகரித்து விடுகிறது. கெட்ட செயல்களைப்பற்றிய இக்கோட்

பாடு நல்ல செயலுக்கும் பொருந்துகிறது. நல்ல செயலைச் செய்யத் தீர்மானிக்கின்ற ஒரு மனிதன் தனது மனதை அதற்கேற்ற நல்ல நிலைக்குக்கொண்டு வருகிறான். வான வெளியில் இயங்கிக்கொண்டிருக் கின்ற நல்ல எண்ணங்கள் அவைகளுக்குகந்த நல்ல மனதினிடத்துப் புகுந்து செயல்புரிய ஆரம்பிக்கின்றன. நல்ல எண்ணங்களின் வேகம் ஒருவனுடைய உள்ளத் தில் அதிகரிக்கின்றபொழுது அதற்கேற்ற புதிய வலிவு அவனுக்கு உண்டாகிறது. இக்கோட்பாட்டினின்று மற்றோர் உண்மை நமக்கு விளங்குகிறது. கேடு செய் கின்ற மனிதன் ஒருவன் இரண்டுவிதமான ஆபத்துக் களை உண்டுபண்ணி விடுகின்றான். முதலாவது ஆபத்து தனக்கே உரியதாகிறது. ஏற்கனவே உலகிலுள்ள கேடான எண்ணங்களுக்கு அவனுடைய உள்ளம் இருப்பிடமாய்விடுகிறது. அவைகள் அவனுடைய சித்தமிசை குடிபுகுந்து அவனுடைய வாழ்வைச் சின்னபின்னப்படுத்தி விடுகின்றன. இரண்டாவதாக கேடுடைய அம்மனிதன் மற்றவர்களுக்குத் தன்னிடத் துள்ள கேட்டைப் பரப்புகிறான். அவன் கிளப்பியுள்ள கேடுநிறைந்த எண்ணங்கள் ஒருவேளை அப்போதைக் கப்போதே செயல்புரிய இயலாதவைகளாய்ப் போய் விடலாம். நூற்றுக்கணக்கான வருஷங்களுக்குப் பிறகாவது யாருடைய உள்ளத்திலாவது புகுந்து அவைகள் தீமையைப் பெருக்க ஆரம்பித்துவிடுகின் றன. எனவே தீய செயல்களைச் செய்கின்ற நாம் நம்மையே கெடுத்துக்கொள்கின்றோம்; மற்றவர்களையும்

நாம் கெடுத்துவிடுகின்றோம். நல்ல செயல்களைச் செய்கின்ற நாம் நமக்கே நலம்புரிந்து கொள்கின்றோம்; மற்றவர்களுக்கும் நலம் புரிந்து வருகிறோம். மனிதன் வெளியுலகிலிருந்து விதவிதமான பாங்கில் வலிவைப் பெற்று வருகின்றான். உட்கொள்ளும் உணவினின்றும், பருகுகின்ற நீரினின்றும், சுவாசிக்கின்ற காற்றினின்றும், மேனியில் படிகின்ற வெப்பத்தினின்றும் அவன் சக்தியைப் பெற்று வருகிறான். மன அமைப்பிலும் அதே பாங்கில் அவன் வெளியுலகினின்று வலிவைப் பெற்று வருகின்றான். வெளியுலகிலிருக்கின்ற கெட்ட எண்ணங்களை வாங்கிக் கொள்கின்றவன் அசுர இயல்பு வாய்ந்த மன வலிவைப் பெறுகிறான். வெளியுலகினின்று தூய நல்ல எண்ணங்களின் வலிவை வாங்கிக் கொள்கின்றவன் தெய்வ சம்பத் நிறைந்த மேலான வலிவை ஏற்றுக்கொள்பவன் ஆகின்றான்.

கர்மயோகத்தைப்பற்றிய கோட்பாடு ஒன்று உண்டு. அதாவது ஒருவன் செய்கின்ற கர்மத்தை அழித்துவிட எவர்க்கும் இயலாது. கர்மத்துக்கேற்ற கர்மபலன் வந்தே தீரும். வினைப்பயன் விளைவுபெறாது போகும்படி தடுக்க இயற்கையின்கண் உள்ள எதற்கும் சக்தியில்லை. ஒருவன் தீவினையாற்றுவானாகில் அதற்கேற்ற துன்பத்தை அவன் அனுபவித்தே ஆகவேண்டும். அந்த வினைப்பயனைத் தடுக்கவோ ஒத்திப்போடவோ பிரபஞ்சத்தின்கண் உள்ள எதற்கும் ஆற்றலில்லை. இதே பாங்கில் மனிதன் ஒருவன் நல்வினையாற்றுவானாகில் அதன் விளைவாக நலன் உண்டாவதைத் தடுக்

கவோ, ஒத்திப்போடவோ இயற்கையின்கண்ணுள்ள எதற்கும் இயலாது. காரணகாரிய மயமாக வினை நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. காரணமும் காரியமும் இணைபிரியாதவைகள். காரணத்துக்கேற்றபடியே காரியம் வந்தமைகிறது. இப்படி நிகழ்வதைத் தடுக்கவோ விலக்கவோ யார்க்கும் இயலாது. இனி, கர்மயோகத்துக்குரிய முக்கியமான கேள்வி ஒன்று எழுகிறது. அது மிக நுட்பமானதாகவும் இருக்கிறது. கணக்கற்ற கர்மங்களை நாம் செய்துகொண்டே இருக்கிறோம். அவைகளில் சில நலம் வாய்ந்தவைகளாகவும், வேறு சில கேடுவாய்ந்தவைகளாகவும் இருக்கின்றன. இத்தனைவித கர்மங்கள் ஒன்றோடொன்று இணைக்கப் பெற்றவைகளாய் இருக்கின்றன. இத்தனைவித வினைகளுக்கிடையில் முற்றிலும் நலம் வாய்ந்தவைகள் எவை, முற்றிலும் கேடானவை எவை என்று வரையறை அமைக்க நமக்கு இயலாது. வசதிக்காகவென்று நல்வினை, தீவினை என வினைகளை இரண்டுவிதமாகப் பாகுபடுத்துகிறோம். வினையின் பாங்கை ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குமிடத்து அதைப்பற்றிய உண்மை ஒன்று விளங்கும். ஒவ்வொரு வினையிலும் நலம் கேடு ஆகிய இரண்டும் கலந்தே இருக்கின்றன. எனவே மனிதனுல் செய்யப்படுகின்ற கர்மம் ஒன்று பலன்தர ஆரம்பித்துவிட்டால் அதனிடத்திருந்து நல்ல பலன், கெட்டபலன் ஆகிய இரண்டும் சேர்ந்தே உண்டாகும். அதற்குத் தக்கதொரு சான்றை எடுத்துக்கொள்வோம். கர்மயோக சம்பந்தமான மேலாம் விஷயங்களைப்பற்றி

ஒருவன் மற்றவர்களுக்கு எடுத்து விளக்கிக்கொண்டிருக்கிறான். அப்படி விளக்கப்பெறுகிற கோட்பாடுகளுக்குச் செவி கொடுக்கிறவர்கள் கர்மயோகத்தை விளக்குகிற மனிதன் நல்வினையைச் செய்துகொண்டிருக்கிறான் என்று நினைக்கிறார்கள். ஆனால் அதே வேளையில் கர்மயோகத்தைப் புகட்டுகிற மனிதன் இன்னும் என்ன செய்கிறான் என்று ஆராய்ந்துபார்ப்போம். காற்றிலே அவனைச் சூழ்ந்துள்ள கணக்கற்ற அணுமயமான உயிர்களைத் தன் பேச்சின் மூலமாக அவன் கொன்றுகொண்டிருக்கிறான். இங்ஙனம் மக்களுக்கு நலன் செய்கின்ற மனிதன் அதே வேளையில் வேறு சிற்றுயிர்களுக்குத் தீங்கு செய்கின்றான். செய்யப்படுகிற வினை நம்மையே சார்ந்திருந்து நமக்கு நலன் எதையேனும் உண்டுபண்ணுமாகில் அது நல்வினை என்று நாம் பகர்கிறோம். கர்மயோகத்தைப் புகட்டுதல் என்னும் பேச்சை சத்கர்மம் என்று அதைப் பயன்படுத்துகின்ற மக்கள் பகர்வார்கள். ஆனால் அணுமயமான உயிர்கள் அதே கர்மத்தைக் குறித்து அங்ஙனம் பகரமாட்டா. மக்களாகிய நாம் பயனடைந்து வருகிற மற்ற மக்களைப் பார்க்கிறோம்; துன்பமடைந்து வருகின்ற மற்ற அணு உயிர்களை நாம் பார்ப்பதில்லை. கர்மயோக விளக்கம் என்னும் பேச்சு மக்களிடத்து எத்தகைய வினைப்பயனை உண்டுபண்ணுகிறது என்பதை அவர்கள் உணருகிறார்கள். ஆனால் அதே பேச்சு அண்மையில் இருந்த அணு உயிர்களையெல்லாம் தாக்கியது என்பதை அவர்கள் உணர்வதுமில்லை, காண்பது

மில்லை. இதே பாங்கில் நாம் இயற்றுகின்ற தீய கர்மங்கள் சிலவற்றை ஆராய்ந்து பார்க்கவேண்டும். நமக்குக் கேடு விளைவிப்பதற்கிடையில் வேறு ஏதோ சில உயிர்களுக்கு வேறு ஒரு போக்கில் அதே வினைகள் நலன்கள் சிலவற்றை உண்டுபண்ணியிருக்கக் கூடும். நல்வினை என்று பகரப்படுவதில் கெட்ட வினைப்பயனும் ஓரளவு அமைந்திருக்கிறது என்பதை எவன் ஒருவன் காண்கின்றானோ, தீவினை என்று பகரப்படுவதில் ஓரளவு நலனும் அமைந்திருக்கிறது என்பதை எவன் ஒருவன் காண்கின்றானோ அவன் கர்மத்தின் உட்பொருளைக் கண்டறிந்தவன் ஆகின்றான். கர்மத்தின் ரகசியம் என்று அதைப்பற்றி இயம்புவதும் பொருந்தும். ஒரே வினையில் நலம் கேடு ஆகிய இரண்டும் புதைந்து கிடக்கின்றன என்னும் உண்மையை அறிந்துகொள்பவனே கர்மயோகத்தை முறையாக அனுஷ்டிக்க வல்லவனாகின்றான்.

இதினின்று மற்றொரு கோட்பாடு வெளியாகிறது. முற்றிலும் நலமே வடிவெடுத்துள்ள நல்வினை என்பது ஒன்று இல்லவே இல்லை. முற்றிலும் தீயது என்று பகரப்பெறும் தீவினை ஒன்று இல்லவே இல்லை. ஒரே வினையினின்று இனியது, இன்னாதது என இரண்டுவித வினைப்பயன்கள் வந்தமைகின்றன. வினைப்பயன் ஒன்று ஒரு நிலையில் தீமையாக வடிவெடுக்கிறது; மற்றொரு நிலையில் அதே வினைப்பயன் நலனாக வடிவெடுக்கிறது. கேடுவிளைவிக்கிற வினையை ஹிம்ஸை என்கிறோம். நலன் விளைவிக்கின்ற வினையை அஹிம்ஸை

என்கின்றோம். ஹிம்ஸை, அஹிம்ஸை ஆகிய இவ்விரண்டு கோட்பாடுகளையும் இப்பொழுது ஆராய்ந்து பார்ப்போம். நாம் சுவாசிக்கிறோம். இது ஒருவினை. இது நல்வினையா அல்லது தீவினையா என்னும் கேள்வி எழுகிறது. சுவாசிப்பதால் நாம் உயிர் வாழ்ந்திருக்கிறோம். ஆதலால் சுவாசிப்பது நமக்கு நல்வினை. ஆனால் அப்படி சுவாசிப்பதால் கட்புலனாகாத மற்ற சிற்றுயிர்களுக்கு நாம் ஹிம்ஸையை விளைவிக்கிறோம். அந்த சிற்றுயிர்களின் நிலையில் வைத்து ஆராய்ந்து பார்க்குமிடத்து நாம் சுவாசிப்பது ஹிம்ஸை ஆகிறது. உணவு அருந்துவதை நல்வினை என்று நாம் நவிலுகிறோம். ஆனால் நாம் அருந்தும் ஒவ்வொரு கைப்பிடி அன்னமும் வேறு ஏதோ ஒரு ஜீவனிடத்திலிருந்து அபகரிக்கப்பட்டது ஆகும். இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குமிடத்து நாம் உயிர் வாழ்ந்திருப்பதை முன்னிட்டு வேறு பல உயிர்கள் அழிந்துபட்டுப் போக வேண்டியிருக்கிறது. அப்படி அழிந்துபட்டுப் போகும் உயிர்கள் மக்களாக இருக்கலாம், விலங்குகளாக இருக்கலாம், பறவைகளாக இருக்கலாம், மரம் செடி கொடிகளாக இருக்கலாம், கட்புலனாகாத அணு உயிர்களாக இருக்கலாம். உலகிலுள்ள உயிர்த்திரளினிடத்திருந்து ஏதோ சிலவற்றை அழித்து விடுவதால் தான் நாம் உயிர் வாழ்ந்திருக்கிறோம். நிகழ்கின்ற கர்மத்தின்கண் உள்ள குறைபாடு இதுவேயாம். எனவே கர்மம் புரிந்து கொண்டிருப்பதற்கிடையில் நாம் பரிபூரண நிலையை அடைந்தவர்கள் ஆவது ஒருக்காலும்

சாத்தியமன்று. பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்து நூருண்டு கற்ப காலங்களாக நாம் வினையாற்றிக் கொண்டே இருக்கலாம். அப்படி வினையாற்றிக் கொண்டிருப்பதற்கிடையில் இந்த இருவினைப் பயன் களினின்று விடுதலை அடைவதற்கு நமக்கு வழியில்லை. ஜீவன் ஒருவன் உழைக்கிருன், உழைக்கிருன், ஓய் வின்றி உழைக்கிருன். என்ன பாங்குடன் உழைத்தா லும் அவனுடைய வினையினின்று விளைகின்ற பயன் களாகிய நலம் கேடுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள அவனுக்கு இயலாது. எனவே வினையானது ‘இருள்சேர் இருவினை’ என்று இயம்பப்படுகிறது.

ஆராய்ச்சிக்குரிய அடுத்த கேள்வி ஒன்று எழு கிறது. கர்மத்தின் முடிவு யாது என்பது அக்கேள்வி. உலகெங்கும் வாழ்ந்து வருகிற மக்களுக்கிடையில் சர்வ சாதாரணமான நம்பிக்கை ஒன்று நிலவி வருகிறது. தங்களுக்கு நல்லகாலம் ஒன்று எப்பொழுதாவது வந்து அமையும் என்று அவர்கள் நம்பி வருகிருர்கள். அத்த கைய நல்லகாலம் வந்துவிடுகின்றபொழுது இம்மண் ணுலக வாழ்வு நிறைநிலையை எய்திவிடும் என்று அவர் கள் கருதுகின்றனர். அந்த நிறை நிலையில் நோய் உண்டாகாது என்று அவர்கள் நினைக்கின்றனர். உயிர் களைக் கொல்லுகின்ற கூற்றுவனுக்கு வேலை ஒன்றும் ஏற்படாது என்றும் அவர்கள் எண்ணுகின்றனர். துன்பத்துக்கோ, துயரத்துக்கோ அப்பொழுது அவ காசம் ஏற்படாது என்றும் அவர்கள் எண்ணுகின்ற னர். கொடுமையும் துஷ்டத்தனமும் ஆங்குத் தலை

யெடுக்கமாட்டா என்றும் அவர்கள் கருதி வருகின்றனர். மனத்தினுள் எண்ணிக்கொண்டிருப்பதற்கு அது மிக நல்லதொரு கருத்து ஆகிறது. அவிவேகிகளை உற்சாகப்படுத்துதற்கும் அவர்களைச் சிறிது உயர் நிலைக்கு உயர்த்துதற்கும் அத்தகைய எண்ணம் நல்லதொரு தூண்டுதல் ஆகிறது. ஆனால் விசாரித்துப் பார்க்குமிடத்து நற்காலத்தைப்பற்றிய இத்தகைய எண்ணம் பொருளற்றது என்பது புலப்படும். நாணயம் ஒன்றுக்கு தலைப்பக்கம், பின்புறம் என்று இரண்டு பக்கங்கள் இருப்பது போன்று வினையின்கண் நலம் கேடு ஆகிய இரண்டு பகுதிகளும் இணைபிரியாது அமைந்திருக்கின்றன. நலத்துக்கு அன்னியமாகக் கேடு இல்லை; கேட்டுக்கு அன்னியமாக நலம் இல்லை. இந்த நிலையில் கேட்டினின்று நலனைப் பிரித்து எடுப்பது எங்ஙனம்? ஒரு நாணயத்தைக் கையில் எடுத்தால் அதன் தலைப்பக்கம், பின்புறம் ஆகிய இரண்டு பக்கங்களையும் நாம் உடைத்தே இருந்தாகவேண்டும். வினையின் விளைவும் அத்தகையதேயாம். தீமை என்னும் வினையை ஒதுக்கி வைத்து விட்டு நலன் என்னும் வினையை மட்டும் ஏற்றுக்கொள்வது எப்படி சாத்தியமாகும்? நலம் கேடு ஆகிய இரண்டினுள் ஒன்றுள்ள இடத்தில் மற்றதும் இருந்தே தீரும். அப்படியானால் பரிபூரண நிலையில் உள்ள வாழ்வு என்பதன் கருத்து யாது? வாழ்ந்திருப்பதற்கிடையில் பரிபூரண வாழ்வு என்பது இல்லவே இல்லை. பரிபூரணம் என்பதும் வாழ்வு என்பதும் ஒன்றோடு ஒன்று முரண்படுபவை

களாம். இப்பொழுது வாழ்வு என்பதை விளக்க முயலுவோம். நமக்கும் நம்மைச் சூழ்ந்திருக்கின்ற ஏனையவைகளுக்கும் இடையில் உள்ள இடையருப் போராட்டத்துக்கு வாழ்வு என்னும் பெயர் வந்துள்ளது. கணந்தோறும் புறத்தே உள்ள இயற்கையோடு நாம் போர்புரிந்து கொண்டே இருக்கிறோம். அப்போராட்டத்தில் நாம் தோல்வியடைந்து விட்டால் நமது வாழ்வு ஒழிந்துபட்டுப்போகிறது. இக்கோட்பாட்டை இன்னும் கொஞ்சம் தெளிவு படுத்துவோம். உணவுக்காகவும் நீருக்காகவும் காற்றுக்காகவும் நாம் ஓயாது போராடிக் கொண்டிருக்கிறோம். உணவாவது, நீராவது, காற்ருவது நமக்குக் கிடைக்காவிடில் நாம் மாண்டு போகிறோம். வாழ்வு என்பது இனிதாகவும் எளிதாகவும் பெருகிக்கொண்டிருக்கும் நீர்ப்பெருக்கைப் போன்றதன்று. பலதரப்பட்ட செயல்களின் கூட்டுப்பயனாக வாழ்வு வந்து அமைந்துள்ளது. பலதரப்பட்ட கூட்டுப்பயனை உண்டுபண்ணுவதற்கு பலதரப்பட்ட இயக்கங்களும் முயற்சிகளும் போராட்டங்களும் இருந்தே ஆகவேண்டும். இத்தகைய போராட்டம் நமக்கும் வெளியுலகத்துக்குமிடையில் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. இந்தப் போராட்டத்தை வாழ்வு என்று விளக்குகிறோம். என்றைக்குப் போராட்டம் முடிவுக்கு வந்து விடுகிறதோ அன்றைக்கு நம்முடைய வாழ்வு முடிவுக்கு வந்துவிடுகிறது. இது தான் நம்முடைய வாழ்வைப் பற்றிய உண்மை. போராடிக்கொண்டிருப்பதற்கிடையில் இதனுள் பரிபூரணத்தைக் காண்பது எங்ஙனம்?

எங்குப் பரிபூரண நிலை ஏற்படுகிறதோ அங்குப் பேரானந்தமும் உண்டு. ஆனால் பேரானந்தப் பரிபூரண நிலையில் இந்தப் போராட்டத்துக்கு இடமில்லை. எல்லா விதமான முயற்சிகளும் பிரயத்தனங்களும் ஆங்கு நின்று விடுகின்றன. அப்படி முயற்சி முற்றுப்பெற்ற விடத்தில் வாழ்வும் நின்று விட்டது என்று சொல்ல வேண்டியதாகிறது. சுவாசித்துக் கொண்டிருக்கும் பொழுதுதானே ஒரு மனிதன் உயிர் வாழ்ந்திருக்கிறான் என்று சொல்லுகிறோம். சுவாசித்தல் என்னும் முயற்சி முற்றுப் பெறுகிற இடத்து வாழ்வு முடிவுக்கு வருகிறது. போராட்டமும் வாழ்க்கையும் இணை பிரியாதவைகள் என்று ஏற்கனவே ஆராய்ந்துள்ளோம். எனவே எப்பொழுது உயிர் வாழ்க்கைக்கு முடிவு ஏற்படுகிறதோ அப்பொழுதுதான் போராட்டமும் ஒரு முடிவுக்கு வருகிறது. மற்றோர் உண்மையை ஏற்கனவே நாம் அறிந்துள்ளோம். அதாவது உலகுக்கு உதவி செய்ய முயலுதலின் மூலம் நமக்கு நாமே உதவிசெய்து கொள்கிறோம். சுயநலத்தை மறந்துவிட்டு உலகத்தவர்க்குத் தொண்டுபுரியவேண்டும் என்னும் எண்ணத்துடன் நாம் ஆற்றுகின்ற வினைகள் எல்லாம் நம்மைத் தூய்மைப்படுத்துகின்றன. தன்னலம் கருதாது ஆற்றும் தொண்டின் மூலம் நாம் தூய்மை அடைவது ஒன்றே முக்கியமான வினைப்பயன் ஆகிறது. உலகத்தவர் அதன் மூலம் எவ்வளவுதூரம் பயன் அடைந்துள்ளார்கள் அல்லது அடையவில்லை என்பது நம் கைவசத்தில் இல்லை. பிறர் நலத்தின் பொருட்டே

இடையருது உழைத்தல் கர்மயோகிக்குக் குறிக்கோள் ஆகிறது. நாம் கர்மயோகிகளாக இருந்துகொண்டு அப்படித்தொண்டு புரிவதால் நாம் அடையப்பெறுவது யாது? பிறர் நலத்திலேயே கண்ணும் கருத்துமாய் இருக்கின்ற பொழுது நம்மை நாம் மறந்துவிட முயலு கிறோம். பல பிறவிகள் வாயிலாக நெடுங்காலம் நாம் ஜீவித்திருந்தான பிறகு நாம் கற்றுக்கொள்ள வேண் டிய மிகப் பெரிய பாடம் ஒன்று உளது. நம்முடைய நலத்துக்காகவென்று உழைத்து வந்துள்ள நாம் எப் பொழுது நமது சுயநலத்தை மறந்துவிடுகின்றோமோ அப்பொழுதுதான் பேரானந்தப் பெருநிலையை நாம் எய்துகிறோம். தான் விரும்புகின்ற வெவ்வேறு பொருள் களையும், பதவிகளையும், போகங்களையும் பெறுவதன் வாயிலாக தனக்கு இன்பம் விளைவித்துக் கொள்ள முடியுமென்று மனிதன் எண்ணி வருகின்றான். இத்த கைய எண்ணத்தில் மருளும் மயக்கமும் செறிந்துகிடக் கின்றன. இன்பத்தை நாடி இப்படி நெடுங்காலமாக உழைத்தான பிறகு இந்தப் பேருண்மை மனிதனுக்கு விளங்குகிறது. சுயநலத்தை எப்பொழுது மனிதன் சம்ஹாரம் செய்துவிடுகின்றானோ அப்பொழுதுதான் உண்மையான பேரானந்தம் அவனுக்குக் கிட்டுகிறது. கடவுள் வெவ்வேறு வடிவங்களில் தோன்றி வெவ் வேறு அசுரர்களை சம்ஹாரம் செய்த வரலாறுகளைப் பற்றிப் புராணங்களில் படிக்கிறோம். அப்படி அசுரர் களை அழிப்பது என்பதன் பொருள் சுயநலத்தை அழிப் பதேயாம். சுயநலம் தலையெடுத்திருப்பதே அசுர

இயல்பு ஆகிறது. சுயநலம் என்னும் அசுரத் தன்மை ஒரு மனிதனிடத்து ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக் கின்றபொழுது அவனுக்கு இன்பத்தைத் தருதற்கு வேறு எவர்க்கும் இயலாது. ஒவ்வொரு மனிதனும் தனக்குத் தானே இன்பத்தை வழங்கியாக வேண்டும். சுயநலத்தை அகற்றிவிடுகின்ற பொழுதே அத்தகைய இன்பம் தானாக வந்தமைகிறது. பிறர்க்குக் கொடுத்தல், ஈதல், தானம் வழங்குதல் முதலிய செயல்கள் நிகழ் கின்றன. பிறரிடத்து அனுதாபம் காட்டுகிற எண்ணம் உள்ளத்தில் எழுகிறது. தன்னலமற்ற ஏதோ ஒரு உதவியை ஒரு மனிதன் மற்றொருவனுக்குச் செய் கிறான். நலம் நிறைந்த புண்ணிய கர்மம் என்பதை ஒருவன் நிகழ்த்துகிறான். இத்தகைய செயல் ஒவ் வொன்றுக்கும் அடிப்படையாக உயர்ந்த கோட்பாடு ஒன்று நிலை பெற்றிருக்கிறது. தன்னைப் பெருமிதப் படுத்திய எண்ணம் அவ்வளவுக்கவ்வளவு ஒரு மனித னிடத்திருந்து அகற்றப்பெறுகிறது. தன்னைப் பெருமி தப்படுத்துகின்ற எண்ணம் ஆணவத்தோடு கூடியது. ஆணவம் ஒடுங்குகின்ற அளவு மனிதனிடத்துத் தற் பெருமை போய்விடுகிறது. அதை வேறு ஒரு பாங்கில் சொல்லுமிடத்து மனிதனிடத்திருந்து ஜீவபோதம் சிறிது சிறிதாக ஒடுங்கிவிடுகிறது. ஜீவபோதம் ஒடுங்கு கின்ற அளவு மனிதன் தன்னை மற்ற உயிர்களுக்கெல் லாம் அடியவனாகவும், இறைவனுக்கு அடியவனாகவும், அடியார்களுக்கெல்லாம் அடியவனாகவும் கருதிக்கொள் கின்றான். கடவுளுக்கும், கடவுளுடைய திருவடியாகிற

உயிர்கள் அனைத்துக்கும் தான் கடைப்பட்டவன் என்று கர்மயோகி உணர்கின்ற பொழுது ஆணவத்தோடு கூடிய ஜீவபோதம் அவனை விட்டு அகன்று போய்விடுகிறது. அப்படி ஜீவபோதம் அகன்றுபோய் விடுகின்ற இடத்து பரபோதம் தானாக மிளிர்கிறது. இந்த பரபோதத்தை வளர்ப்பதற்குத் துணை புரிந்த செயல்கள் அனைத்தும் நல்வினைகளாம்.

ஜீவபோதத்தை அறவே ஒடுக்குதல் என்னும் குறிக்கோள் யோகங்கள் அனைத்துக்கும் ஒப்பமுடிந்ததாகிறது. ஞானயோகத்தின் குறிக்கோள் ஜீவபோதத்தை ஒடுக்குவதாம். பக்தி யோகத்தின் குறிக்கோள் ஜீவபோதத்தை ஒழிப்பதாம். கர்மயோகத்தின் குறிக்கோள் ஜீவபோதத்தைத் துடைப்பதாம். எனவே ஜீவபோதத்தை அகற்றிவிடுதல் என்னும் கொடுமுடியில் யோகங்கள் அனைத்தும் ஒன்றுபட்டு விடுகின்றன. வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோள் எது என்கின்ற கேள்வி எழலாம். எல்லாக் காலங்களிலும், எல்லாவித சூழ்நிலைகளிலும் வாழ்க்கைக்கு குறிக்கோளாக அமைந்துள்ளது யாது என்னும் கேள்வி எழலாம். ஆணவ அகங்காரத்தோடு கூடிய ஜீவபோதத்தை அறவே அகற்றிவிடுவது ஒன்றே அனைவருக்கும் ஒப்ப முடிந்த குறிக்கோள் ஆகிறது. 'நான்' என்னும் ஜீவபோதம் அகன்றுபோய் அதற்குப் பதிலாக 'தான்' என்னும் பரபோதம் தலையெடுக்குமாகில் பரமானந்தத்தோடு கூடிய பரிபூரணநிலை தானே வந்துவிடுகிறது. இப்படி ஜீவபோதத்தை அறவே அழித்து விடுவதுதான் வாழ்க்

கையின் குறிக்கோள் என்பதைக் கர்மயோகி ஒருவன் அறிந்திருக்கலாம் அல்லது அறியாதிருக்கலாம். அதனால் பழுது ஒன்றும் அவனுடைய சாதனத்துக்கு வந்து விடாது. பற்றற்ற பாங்கில் அவன் கர்மத்தைப் புரிந்து வருவானாகில் ஜீவபோதத்தை அழித்துவிடுதல் என்னும் இந்த உயர்ந்த குறியினிடத்தே அவன் வந்து கொண்டிருக்கிறான்.

கடவுள் ஏககாலத்தில் சகுண பிரம்மமாகவும் நிர்க்குண பிரம்மமாகவும் இருக்கிறார். சகுண பிரம்மம் வெவ்வேறு மூர்த்திகளாக வடிவெடுத்துள்ளார். நிர்க்குணப் பிரம்மமோ குணம் குறிகளையெல்லாம் கடந்த அமூர்த்தமாகின்றார். அவருடைய அமூர்த்த நிலை மத போதகர்கள் பலருக்கு விளங்குவதில்லை. குணங் குறியற்ற பரபிரம்மம் என்னும் கோட்பாட்டைக் கேட்டு மதவாதிகள் பெரிதும் மருண்டுபோய் விடுகின்றனர். அது எம்பெருமானுக்குச் செய்கின்ற பெரிய அபராதம் என்று அவர்கள் கருதுகின்றனர். கடவுள் எப்பொழுதும் வடிவத்தோடு கூடிய ஈசனாக இருந்துவருகிறார் என்றும் அவர்கள் கருதலாம். ஜீவன் ஒருவனுக்குத் தனது ஜீவ வியக்தி சர்வகாலம் இருந்துவருகிறது என்றும் அவர்கள் கருதலாம். இத்தகைய கொள்கைகளைக் கீழ் நிலையிலுள்ள மதவாதிகள் உறுதியாகப் பிடித்துக்கொண்டிருக்கட்டும். அதனால் தோஷம் ஒன்றுமில்லை. ஜீவன் நித்தியமானவன் என்னும் எண்ணத்தை அவர்கள் பற்றிப் பிடித்துக் கொண்டிருப்பதற்கிடையில் உயர்ந்த சன்மார்க்கம்

ஒன்றின் முன்னிலையில் அவர்கள் தலைவணங்கி வரு கின்றனர். சுயநலத் தியாகம் என்பதே சன்மார்க்கங் களுள் தலைசிறந்ததாகிறது. சுயநலத் தியாகத்தைக் காணுமிடத்தெல்லாம் அவர்கள் அதைப் போற்றிப் பாராட்டுகின்றனர். சுயநலத் தியாகத்திலேயே நல் லொழுக்கம் என்பது நிலைபெற்றிருக்கிறது. சுயநலத்தை மறந்துவிட்டு மனிதன் ஒருவன் மற்ற மனிதர்களுக்குப் பணிவிடை செய்யலாம்; அல்லது விலங்குகள், பறவைகள் ஆகிய சிற்றுயிர்களுக்குப் பணிவிடை செய்யலாம்; அல்லது எண்ணிறந்த தேவர்களுக்குப் பணிவிடை செய்யலாம்; மற்றவர்களுக்குக் கைங்கர் யம் செய்வதன் வாயிலாக தனது ஜீவபோதத்தை கர்மயோகி ஒருவன் ஒதுக்கிவைத்து விடுகிறான். இப் படி ஜீவபோதத்தை ஒதுக்கிவைக்கிற செயலைச் சமய வாதிகள் எல்லோரும் பாராட்டியாகவேண்டும். ஜீவ போதத்தை அகற்றுகின்ற செயலை உயிர்கள் அனைத் துமே பாராட்டுகின்றன. ஜீவபோதத்தை அகற்றுதல் ஒன்றே நன்னெறிகள் அனைத்துக்கும் அடிப்படையாய் உள்ள குறிக்கோளாம்.

இவ்வுலகிலுள்ள மாந்தர் அனைவரும் ஒரே பாங்கு டையவர்கள் அல்லர். எத்தனை மனிதர் இருக்கின்ற னரோ அத்தனைவிதப் பாங்குகள் உலகில் இருக்கின் றன என்று இயம்பலாம். ஆனால் அத்தனைவிதப் பாங்குடைய மனிதர்களையும் நாம் பாகுபடுத்திவிட லாம். தலைத்தரமான மனிதர் என்பவர் சிலர் இருக் கின்றனர். அவர்கள் தெய்வீகமே வடிவெடுத்தவர்கள்.

சுயநலத்தை அவர்களிடத்துச் சிறிதும் காணமுடியாது. தங்களுடைய உடல் வாழ்க்கையைப்பற்றிய உணர்வே அவர்களுக்கு உண்டாவதில்லை. ஜீவபோதத்தை அறவே மறந்துவிட்டார்கள் என்று அவர்களைப் பற்றி மொழியலாம். தன்னலம் அகன்றுவிட்டதற்கு அறிகுறியாகவே அவர்கள் ஆற்றும் செயல்களும் வந்து அமைகின்றன. பிறர்க்கு நலனே செய்துகொண்டிருப்பது அவர்களது இயல்பு. தேவை உண்டாகுமிடத்து தங்கள் உயிரையே பிறர்க்காகவென்றுவழங்க அத்தகையவர் ஆயத்தமாய் இருக்கின்றனர். மக்களுள் அவர்களே மிக மிக மேலோர் ஆகின்றனர். 'தான், தனது' என்பனவற்றை அறவே துறந்துவிட்ட பெருமக்கள் ஒரு நாட்டிலே ஒரு நூறு பேர் இருந்தால் போதுமானது. அத்தகையவர்களின் மகிமையால் அந்த நாட்டுக்குக் கேடு ஒன்றும் வந்துவிடாது. அத்தகைய நல்லார் நிறைந்துள்ள நாட்டுக்கு நலிவு ஏதேனும் வந்துவிடும் என்று கவலைப்படவேண்டிய அவசியம் சிறிதேனும் இல்லை. ஆனால் இவ்வுலகில் அத்தகைய பெருமக்கள் மிக மிகச் சிலரே உளர். இனி இவ்வுலகில் இரண்டாந்தரமான மாந்தர் ஒரு கூட்டத்தார் இருக்கின்றனர். அவர்களும் ஒரு விதத்தில் நலனே வடிவெடுத்தவர்கள் ஆகின்றனர். ஆனால் அவர்கள் புரியும் நலனுக்கு ஒரு வரையறையுண்டு. தங்களுக்குக் கேடு ஒன்றும் நிகழாது இருக்கும் பரியந்தம் அவர்கள் மற்றவர்களுக்கு நலம்செய்கின்றனர். தங்களுக்கு இன்னலோ, இடைஞ்சலோ விளைவதாய்

இருந்தால் அத்தகைய ஆபத்தை முன்னிட்டுப் பிறர்க்கு நன்மை செய்வதினின்று அவர்கள் விலகிக் கொள்கின்றனர். மற்று மூன்றாந்தரமான கூட்டத்தார் ஒருபுறம் இருக்கின்றனர். சுயநலம் ஒன்றையே அவர்கள் குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றனர். எப்பொழுது எவ்விடத்தில் எம்முறையைக் கையாண்டால் தங்கள் சொத்தையும் சுகத்தையும் மேலும் பெருக்கிக்கொள்ளலாம் என்பதில் அவர்கள் யாண்டும் கண்ணும் கருத்துமாயிருக்கின்றனர். தங்களுக்கு நலனைத் தேடிக்கொள்ளுதல் பொருட்டு பிறரை அவர்கள் பெரிதும் துன்புறுத்துகின்றனர். சுயநலத்துக்காக வென்று மற்றவர்களைத் துன்புறுத்துகின்றவர்கள் உலகில் ஏராளமாய் இருக்கின்றனர். இந்த மூன்றுதர மனிதருக்கு அன்னியமானவர்கள் ஒரு அலாதியான கூட்டத்தாரும் உலகில் இருக்கின்றனர். அவர்கள் எந்த நியதியிலும் கட்டுப்படாதவர்கள். தங்களுக்கு நன்மை உண்டானாலும் உண்டாகாவிட்டாலும் அதைப்பற்றி அவர்களுக்கு அக்கரையில்லை; மற்றுப் பிறரைத் துன்புறுத்துதலிலேயே அன்னவர் பெரு மகிழ்வு அடைகின்றனர். உலகத்தவரைத் துன்புறுத்து தற்கு என்றே அவர்கள் இம்மண்ணுலகில் பிறந்திருக்கின்றனர் போலும்! இத்தனைவிதப் பாங்குடைய மனிதர்களுள் ஒரு தரத்தாரை வட துருவத்தில் வைத்தால் மற்றொரு தரத்தாரைத் தென் துருவத்தில் வைக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஒரு துருவத்தில் வைக்கப்பட்டுள்ள மாந்தர் நலனே வடிவெடுத்

தவர்கள் ஆகின்றனர். பிறர்க்கு நலன் புரிதல் ஒன்றே அவர்களின் வாழ்க்கைச் செயலாகிறது. மறந்தும் அவர்கள் மற்றவர்களுக்கு ஒருவிதமான தீங்கையும் இழைத்துவிட மாட்டார்கள். அன்னவர்களுக்குமாருக மற்ற துருவத்தில் இருக்கின்றவர்களோ மறந்தும் பிறர்க்கு நன்மை ஒன்றும் செய்யமாட்டார்கள். பிறரைத் துன்புறுத்திக் கொண்டிருப்பதே அவர்கள் வாழ்க்கைச்செயலாகும். பிறரைத் துன்புறுத்துவதால் அவர்களுக்கு நலன் ஒன்றும் வந்து அமைந்துவிடுவதில்லை எனினும் அயலாரை அலைக்கழித்துக் கொண்டிருப்பதும் துன்பத்துக்கு ஆளாக்குவதும் அவர்களுக்கென்று அமைந்துள்ள இயல்பு ஆகிறது.

நமது நூல்களில் இரண்டு சொற்கள் கையாளப் பட்டிருக்கின்றன. ஒன்றுக்கு **பிரவிருத்தி** என்று பெயர்; மற்றது **நிவிருத்தி** என்று அழைக்கப்படுகிறது. இந்த இரண்டு சொற்களின் உட்கருத்துக்களை அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. இவை ஒன்றோடொன்று மாறுபடுகின்றன. 'யான், எனது' என்பனவற்றை வளர்த்து வருவதை பிரவிருத்தி என்கின்றோம். ஜீவபோதத்தை மேலோங்கச் செய்துவிடுவது அதன் செயல் ஆகிறது. பிரவிருத்தியின் மூலம் ஜீவபோதத்தினிடத்தே வாழ்வின் செயல்கள் அனைத்தும் செலுத்தப்படுகின்றன. 'நான்' என்னும் அகங்காரத்தை அது பெரியதாக்குகிறது. 'எனது' என்று இயம்பப் பெறும் மமகாரத்தையும் அது வளர்க்கிறது. செல்வத்தை மேலும் மேலும் தனக்கென்று தேடுவது பிர

விருத்தியின் போக்கு. பணம் எவ்வளவு சேர்ந்தாலும் அது போதவில்லை என்கின்ற பாங்கு பிரவிருத்தியின் கண் அமைந்திருக்கிறது. ஆதிக்கத்தைப் பெறுவதற் கான வழிகளையெல்லாம் அது நாடிச் செல்லுகிறது. பேரும் புகழும் தனக்கு வேண்டியவாறு அமைய வேண்டும் என்னும் அவாவை அது ஓயாது உண்டு பண்ணிக்கொண்டிருக்கிறது. அகப்படுவதை யெல்லாம் தனக்குரியது ஆக்கிக்கொள்ளும் இயல்பு அதனிடத் திருக்கிறது. பூமியினிடத்து ஆகர்ஷணசக்தி இருக் கிறது. மேலே வீசி எறிகிற பொருள்களை யெல்லாம் திருப்பித் தன்னிடத்துக் கவர்ந்து இழுத்துக்கொள்ளும் வல்லமை அந்த ஆகர்ஷண சக்திக்கு இருக்கிறது. பிர விருத்தி மார்க்கத்தில் செல்லுகின்றவனிடத்தும் ஒரு விதமான ஆகர்ஷண சக்தி இருக்கிறது. 'நான்' என்னும் ஜீவபோதம் அவனுடைய ஆகர்ஷண சக்திக்கு நடுநிலையாகிறது. உலகினின்று அகப்படுகின்றவைகளை யெல்லாம் தனக்குரியவைகளாக ஆக்கவேண்டுமென்று அவன்முயன்று வருகின்றான். தனக்கென்றே எவன் ஒரு வன் வாழ்ந்து வருகிறானோ, எவன் ஒருவன் முயற்சிகள் அனைத்தையும் தனக்கென்றே எடுத்துக்கொள்கிறானோ அவன் பிரவிருத்தியில் செல்லுகிறவன் ஆகிறான். உலகி லுள்ள மக்களில் பெரும்பான்மையோர் பிரவிருத்தி மார்க்கத்தைப் பின்பற்றுபவர்களேயாம். அவர்களு டைய வாழ்க்கையைச் சிறிது ஆராய்ந்து பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். எங்கெங்கு என்னவெல்லாம் அகப்படக் கூடியவைகளோ அவைகளை யெல்லாம்

தனக்கே உரியவைகள் ஆக்கிக்கொள்ளுதல் பிரவிருத்தியின் போக்கு. இனியவைகள் அனைத்திலும் இனியதாகத் தன்னையே கருதிக் கொள்ளுதல் பிரவிருத்தி மார்க்கத்தின் செயலாகும். இனித் தனக்கென்றே தேடிக் கட்டிவைத்தவைகளையெல்லாம் கட்டவிழ்த்து விட ஒருமனிதன் முயலுகிறபொழுது அவன் நிவிருத்தி மார்க்கத்தில் நுழைபவன் ஆகிறான். எப்பொழுது ஒரு மனிதன் நிவிருத்தி மார்க்கத்தில் பிரவேசிக்கிறானோ அப்பொழுதே அவன் ஒழுக்கத்தைக் கையாளுபவன் ஆகிறான். சமய அனுஷ்டானமும் நிவிருத்தியினின்று வருவதேயாம். தனக்கென்றே தேடிக் கொள்வதெல்லாம் துன்மார்க்கமாகிறது. தனக்கென்றல்லாது பிறர்க்கென்றே நலன்களை எடுத்து வழங்க ஆரம்பிக்கின்றபொழுது சன்மார்க்கம் தலையெடுக்கிறது. நிவிருத்தி மார்க்கத்தின் மூலமாக அல்லாது யாருக்கும் பாரமார்த்திக வாழ்வு உரு எடுப்பதில்லை.

பிரவிருத்தி நிவிருத்தியாகிய இரண்டு மார்க்கங்களும் கர்மத்தை அடிப்படையாகக் கொண்டவைகள். பிரவிருத்தியைப் பாப கர்மமென்றும் நிவிருத்தியைப் புண்ணிய கர்மமென்றும் பகர்வது பொருந்தும். ஆனால் பிரவிருத்தி மார்க்கத்துக்குரிய கர்மங்கள் அனைத்தையும் பாபம் என்று பகர்வது பொருந்தாது. எக்கர்மம் மனிதனைக் கீழ்மைப்படுத்துகிறதோ அது பாபம். பின்பு பிரவிருத்திக்குரிய கர்மங்கள் அனைத்தும் மனிதனைப் பந்தப்படுத்துகின்றன. நன்னெறி அல்லது நல்லொழுக்கம் நிவிருத்தியை அடிப்படையாகக்

கொண்டது. பாரமார்த்திக வாழ்வுக்கும் அதுவே ஆதாரமாகிறது. நிவிருத்தி மார்க்கத்தில் ஒருவன் நன்கு நிலைத்துவிடுவானாகில் அவனுக்கு ஜீவபோதம் அறவே அகன்றுபோய் விடுகிறது. தனது உள்ளம், தனது உடல் என்பனவற்றையெல்லாம் நிவிருத்தியிலே செல்லுகிறவன் பிறர்க்கென்று பரித்தியாகம்பண்ண ஆயத்தமாய் இருக்கிறான். 'யான் எனது' என்னும் செருக்கை அறவே ஒழித்து விட்டிருப்பவன் கர்மயோகத்தில் பரிபூரண நிலையை அடைந்தவன் ஆகின்றான். சத்கர்மம் செய்வதன் முடிந்த விளைவு இதுவேயாம். இப்படிக் கர்மயோகத்தின் மூலம் பரிபூரணநிலை அடைதற்கு ஒரு மனிதனுக்கு சாஸ்திர ஆராய்ச்சி முற்றிலும் அவசியமானதல்ல. நூல் எதையும் வாசிக்காமலேயே யான் எனது என்னும் செருக்கை அறுக்க வல்லவனாக ஒருவன் ஆய்விடலாம். சாஸ்திரங்கள் புகட்டுகின்ற தத்துவதர்சனம் எதையும் அறியாதவனாக அந்தயோகி இருக்கலாம். கடவுளைப் பற்றிய கோட்பாடு எதையும் அவன் இன்னும் அறிந்து கொள்ளாதவனாகவும் இருக்கலாம். தனது ஆயுட்கால முழுதிலும் தெய்வத்திடத்து அவன் பரிந்து பிரார்த்தனை ஒன்றும் பண்ணாதவனாகவும் இருந்திருக்கலாம். அவைகள் எல்லாம் அமையாதவிடத்தும் ஒரே ஒரு பான்மையை மட்டும் அடையப் பெற்றவனாக அக்கர்மயோகி இருந்தால் போதுமானது. பிறர் நலத்துக்காகவென்று யான் எனது என்பனவற்றை ஒரு நொடிப்பொழுதில் துறக்க எவன் வல்லவனாகின்றானோ, தனது உயிரையே பிறர்

நலத்துக்காகவென்று மனமுவந்து வழங்க யார் வல்லவனாய் இருக்கின்றானோ அவன் பரிபூரண நிலையை அடைந்தாய் விட்டது என்றே இயம்பலாம். தன்னலம் என்பதை அறவே துடைத்துவிட்ட அவனுடைய தூய தொண்டினின்று பரிபக்குவம் அனைத்தும் அந்த யோகிக்கு வந்துவிடுகிறது. பக்தன் ஒருவன் கண்ணீரும் கம்பலையுமாக தெய்வத்திடத்து வந்தனை வழிபாடு செய்து எந்த உயர்நிலையை அடைகின்றானோ அந்த உயர்நிலைக்குக் கர்மயோகி ஒருவன் தன்னலமற்ற தொண்டின் மூலம் வந்து விடுகின்றான். ஞானி ஒருவன் மெய்ப்பொருளைப் பற்றிய விசாரம் செய்து எந்த உயர் நிலையை அடைகின்றானோ அந்த உயர் நிலைக்குக் கர்மயோகி ஒருவன் யான் எனது என்னும் செருக்கை அறுப்பதன் மூலம் வந்துவிடுகின்றான். ஆக, இப்பொழுது ஒரு அடிப்படைக் கோட்பாடு வெளியாகிறது. ஞானயோகத்தை அனுஷ்டிக்கின்றவனும், பக்தி மார்க்கத்தில் செல்லுகின்றவனும், கர்மயோகத்தைக் கடைப்பிடிக்கின்றவனும் இறுதியில் ஒரே நிலையை அடைந்து விடுகின்றனர். ஜீவ போதத்தை அகற்றி பரபோதத்தில் நிலைபெற்றிருப்பதே அவர்கள் அனைவரும் அடைந்துள்ள குறி ஆகின்றது.

சமயங்கள் எல்லாம் சிற்சில கருத்துக்களில் ஒன்றோடொன்று வேறுபடுகிற பாங்குடையவைகளாய் இருக்கின்றன. ஒரே அச்சில் வார்த்து வைத்திருப்பது போன்று எல்லாருடைய கொள்கைகளும் ஒரே விதமாக அமையப்பெற்றவைகள் அல்ல. இந்த வேறுபாடு

களுக்கிடையில் மக்களுக்கிடையே ஓர் ஒற்றுமை யைக் காணலாம். பிறர்க்காகவென்று தன்னை யார் ஒருவன் முற்றிலும் தியாகம் செய்கின்றானோ அவனைப் போற்றிப் பாராட்டுகின்ற பெருநிலை சமயவாதிகள் அனைவருக்கும் ஒப்பமுடிந்ததாகிறது. சமயக்கொள்கை களும் கோட்பாடுகளும் ஈண்டுப் பின்னணியில் நின்று விடுகின்றன. சமயக் கொள்கை எதையும் ஏற்றுக் கொள்ளாத மக்களும் உலகில் இருக்கின்றனர். ஆஸ்தி கர்கள், நாஸ்திகர்கள் ஆகிய அனைவரும் ஒரு கருத்தில் ஒன்றுபட்டு விடுகின்றனர். யான் எனது என்பன வற்றை எவன் ஒருவன் அறவே துறந்துவிடுகின்றானோ அவனைப் பெருமகனைப் போற்றிப் பாராட்ட மக்கள் அனைவரும் ஒன்றுகூடி முன்வருகின்றனர். இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். கிறிஸ்தவர் களுள் மதவெறி பிடித்தவர்கள் சிலர் இருக்கின்றனர். ஏசுநாதருக்கு நிகரான பெருமகன் ஒருவனை எங்கும் காண முடியாது என்பது அப்படி வெறி பிடித்தவர் களுடைய கொள்கையாகும். அவர்கள் தங்களுடைய குறுகிய கொள்கையைச் சிறிது நேரத்துக்காவது ஒதுக்கி வைத்துவிட்டு பரந்த மனப்பான்மையைப் பெற்றுவிடுவதற்கான சூழ்நிலை ஒன்றை உண்டுபண்ணி விடலாம். எட்வின் ஆர்னல்ட் என்னும் ஆங்கிலேயக் கவி ஒருவர் புத்தர் பெம்மானுடைய வரலாற்றை ஆங் கிலக் கவிதையில் அமைத்து வைத்திருக்கின்றார். அந் நூலுக்கு 'Light of Asia — ஆசியாக்கண்டத்தின் ஜோதி' என்று பெயர். இப்புத்தகத்தைக் கிறிஸ்தவர்

கள் ஏதோ மேற்போக்காகப் படித்தாலும் போது மானது; தம்மையறியாது மதவெறி பிடித்த கிறிஸ்தவர்களும் புத்தர் பெம்மானுக்கு மரியாதை செலுத்த ஆரம்பித்துவிடுவார்கள். ஏசு கிறிஸ்து புகட்டியது போன்று புத்தர் பெம்மான் கடவுளைப்பற்றி ஒன்றும் புகட்டவில்லை. சுயநலத்தைத் துறக்க வேண்டும் என்று புத்தர் புகட்டினார். யான் எனது என்பனவற்றை அறவே துறந்துவிட்டதற்கு எடுத்துக்காட்டாக புத்தர் பெம்மான் திகழ்கின்றார். அவர் செய்த தியாகத்துக்காக அவரைக் கிறிஸ்தவர்களும் முழுமனதோடு போற்றியே ஆகவேண்டும். மதவெறி பிடித்திருக்கின்றவர்கள் ஒருவரோடு ஒருவர் கொள்கையில் முரண்படுகின்றனர். அத்தகைய முரண்பாடுகளுக்கிடையில் ஒற்றுமை ஒன்று உண்டு என்பதை அவர்கள் மறந்துவிடுகின்றனர். யான் எனது என்பனவற்றை அறவே துறந்து விடுவதுதான் எல்லா மனிதர்களுடைய குறிக்கோள் என்பதை அவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்வதில்லை. இந்த உயர்ந்த லக்ஷியம் எல்லார்க்கும் பொதுவானது. அதையே நாடி எல்லாரும் செல்லுகின்றனர் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் மதவெறியின் வேகம் தானே தணிந்து போய்விடும். பக்தன் ஒருவனை இப்போது சான்றாக எடுத்துக்கொள்வோம். கடவுளைப் பற்றிய எண்ணத்தையே அவன் ஓயாது மனதில் கொண்டிருக்கிறான். அப்படி எண்ணுவதற்கு வசதியான நல்ல சூழ்நிலை ஒன்றை அவன் தனக்காகவென்று அமைத்துக்கொள்

கிறான். அவன் இறுதியாக அடைகின்ற உயர்நிலை யாது என்பதை ஆராய்ந்து பார்ப்போம். "இறைவா, எல்லாம் நின் செயல். உனது திட்டத்துக்கு அன்னியமாக உலகில் ஒன்றும் நிகழ்வதில்லை" என்னும் முடிவுக்கு அந்த பக்தன் வந்துவிடுகிறான். தன்னுடையது என்பது பிறகு அவனிடத்து ஒன்றும் மிச்சமிருப்பதில்லை. தன்னுடையவை என்பனவற்றை யெல்லாம் அவன் கடவுளின் உடைமை யென்று அவரிடம் ஒப்படைத்து விடுகிறான். அவன் அப்படிச் செய்வது ஜீவபோதத்தை முற்றிலும் அகற்றிய நிலையாகிறது. இனி, ஞானி ஒருவன் ஜீவாத்மனை சித் ஆபாசன் எனப் பொருள்படுத்துகிறான். தண்ணீரில் தென்படுகின்ற சூரியனுடைய பிம்பம் வெறும்தோற்றமே ஒழிய உண்மையானதல்ல. ஜீவனாகத் தென்பட்டுக் கொண்டிருப்பதும் பரமாத்மாவினுடைய தோற்றமேயாம். வெறும் தோற்றமாயுள்ள ஜீவாத்மனை ஞானி அறவே புறக்கணித்து விடுகின்றான். இங்ஙனம் அவன் செய்வது ஜீவபோதத்தை அழிக்கின்ற செயலாம். எனவே ஜீவபோதத்தை அகற்றிவிடுதல் என்னும் குறியின்கண் கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்றும் சென்று கொண்டிருக்கின்றன. அக்குறியினிடத்தே அம்மூன்றும் ஒன்றுபட்டு விடுகின்றன. பண்டைக்காலத்துப் பரமாசாரியர்கள் அனைவரும் இந்த ஒரே கோட்பாட்டைத்தான் வெவ்வேறு இடங்களில் புகட்டியிருக்கின்றனர். அவர்கள் அனைவருக்கும் ஒப்ப முடிந்த அடிப்படைக் கருத்து ஒன்று உளது. மெய்ப்பொருள் ஒன்று. அதனை நாம் உலக

மாகக் காண்கின்றபொழுது அது கடவுள் காட்சியை நமக்கு அளிப்பதில்லை. அதை நாம் கடவுளாகக் காண்கின்றபொழுது உலகக்காட்சி மறைந்து போய்விடுகிறது. உலகமாகக் காட்சி கொடுக்கின்ற பொழுது உலகத் தன்மையே அதனிடத்துத் தென்படுகிறது. அதே பொருள் கடவுளாகக் காட்சி கொடுக்கின்ற பொழுது கடவுள் தன்மை அதனிடத்துப் பொலிகிறது. அதை உலகமாகக் காணுதலும், தெய்வமாகக் காணுதலும் ஒன்றுக்கொன்று வேறுபட்டவைகளாம். மனிதனிடத்து சுயநலம் இருக்கும் வரையில் அப்பொருள் உலகமாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது. சுயநலம் அறவே அற்றுப்போனவிடத்து அது கடவுளாகக் காட்சி கொடுக்கிறது. எது சுயநலம், எது சுயநலமற்ற நிலை என்பதை அறிந்து கொள்ளுதல் கொஞ்சம் கடினமானது. ஒருவன் சிம்மாசனத்தின் மீது வீற்றிருக்கலாம். பொன்னால் அமைக்கப்பெற்ற மாளிகையிலும் அவன் வசித்திருக்கலாம். அதற்கிடையில் சுயநலம் சிறிதேனும் இல்லாதவனாக அவன் வீற்றிருப்பது சாத்தியம். அங்ஙனம் சுயநலம் அவனை விட்டு அகன்று போய்விடுமாகில் அவன் கடவுள் சான்னித்தியத்தில் இருப்பவன் ஆகின்றான். அதற்கு மாறாக மற்றொரு மனிதன் ஒரு குடிசையில் வாழ்ந்திருக்கலாம். அவன் அணிந்திருப்பது கந்தைத் துணியாய் இருக்கலாம். பொருள் ஒன்றையும் படையாத துறவிபோன்று அவன் தென்படலாம். அத்தகைய வெளித்தோற்றத்துக்கிடையில் அவனுடைய மனத்தகத்து சுயநலம் குடி

கொண்டிருக்குமாகில் அவன் உலகப்பற்றில் ஊறியிருப் பவனேயாம். உலகக் காட்சி ஒன்றுதான் அவனுக்குத் தென்பட்டுக் கொண்டிருக்கும். சுருங்கச் சொல்லின் ஜீவபோதத்தை அகற்றிய விடத்தில் தெய்வக் காட்சி திகழ்கிறது. ஜீவபோதம் அமைந்திருக்குமிடத்தில் உல கக்காட்சி தென்படுகிறது.

வாழ்க்கைத் தத்துவங்களுள் மிக முக்கியமான கேள்வி ஒன்றை நாம் மீண்டும் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்வோம். ஒவ்வொரு கர்மத்திலும் நலம் கேடு ஆகிய இரண்டும் கலந்தே இருக்கின்றன. ஆதலால் உலகுக்கு நாம் மிகவும் நல்லது என்று கருதி ஏதேனும் ஒரு செயலைச் செய்தால் அதில் கேடும் ஓரளவு அமைந் திருக்கிறது. வேறு சிலர் மிகக்கெட்ட செயலையே புரிய முற்படுகின்றனர். அவர்களுடைய தீய வினை களில் நலனும் ஏதேனும் ஓரிடத்தில் ஒருவிதத்தில் அமைந்தே இருக்கிறது. ஒவ்வொரு செயலிலும் நன் மையும் தீமையும் சேர்ந்திருப்பதை அறிந்துள்ள நாம் பின்பு வினையாற்றுவது எங்ஙனம்? கேடதனைக் களை தற்கு சில சமயத்தவர்கள் தீவிரமான முயற்சிகள் எடுத்துக்கொண்டுள்ளனர். அம்முயற்சியில் அவர் களுக்குத் தோன்றிய விதத்தில் அவர்கள் உச்ச நிலைக் குப் போயிருக்கிறார்கள் என்றே இயம்பலாம். உயிர் வாழ்ந்திருப்பதில் கேடு இருக்கிறது என்பது வெளிப் படை. எவ்வளவுதான் எச்சரிக்கை எடுத்துக்கொண் டாலும் கேட்டை அறவே அகற்றிவிட முடியாது. கேட்டை நீக்குதற்கு ஒரே ஒரு உபாயம்தான் உளது.

ஹிம்சையை விலக்க முயலுகிற ஒரு மனிதன் படிப்படியாகத் தற்கொலை செய்து கொள்ளுதலே உசிதம் என்பது அவர்களின் கொள்கை. துன்பமும் கேடும் நிறைந்துள்ள இவ்வுலகில் மனிதன் எதற்காக வாழ்ந்திருக்க வேண்டும் என்று அவர்கள் கருதுகின்றனர். அவன் உயிர் வாழ்ந்திருக்கும் பரியந்தம் இரக்கத்துக்குரிய சிற்றுயிர்களையும் பிராணிகளையும், மரம் செடி கொடிகளையும் தனது உணவின் பொருட்டுத் துன்புறுத்தியே ஆகவேண்டும். வாழ்ந்திருக்க விரும்புகிற ஒவ்வொரு மனிதனும் மற்ற உயிர்களுக்கு இன்னுதது செய்தே ஆகவேண்டும். உயிர் வாழ்க்கையை ஒடுக்கிவிடுங்கால் தீமை செய்தலும் அத்துடன் தொலைந்து போய்விடுகிறது. உயிர் வாழ்ந்திருப்பதில் நாட்டம் கொள்ளுதற்குப் பதிலாக உயிர் வாழ்க்கையை ஒழித்து விடுதலில் கருத்தைச் செலுத்துக. இத்தகைய கொள்கையை ஜைன மதத்தவர்கள் மிகமிக உயர்ந்ததாகப் பாராட்டி வந்திருக்கின்றனர். இத்தகைய போதனை நியாயமானதாகவும் உண்மைக்கு ஒத்ததாகவும் தோன்றுகிறது. ஆனுல் இக்கொள்கைக்கு நேர்மாருன மற்ெருரு கொள்கையை வேதாந்த சாஸ்திரம் புகட்டுகிறது. வேதாந்த நூல்களில் ஒன்ருகிய பகவத்கீதை புகட்டுகிற கோட்பாடு ஒன்று உளது. மனிதன் புரிந்து வருகின்ற செயல்களை நிறுத்திவிடலாகாது. வினையாற்றுதலின் மூலமாகவே மனிதன் தன்னுடைய வாழ்வை நிறைவாழ்வு ஆக்குகின்ருன். வாழ்வு பயனற்றது என்பதை எடுத்துக் காட்டுதற்காக மனிதன் உடலம் எடுக்க

வில்லை. அதை நிறைவாழ்வு ஆக்குதற்கென்றே அவன் பிறந்திருக்கிறான். எனவே தனக்கு அமைந்துள்ள வினையை அவன் நன்கு ஆற்றவேண்டும். அப்படி வினையாற்றுங்கால் அதனிடத்திருந்து நலம் விளைவது போன்று தீமையும் விளைவது உண்மையே. தீமை கலவாத நன்மை வையக வாழ்வில் கிடையாது. ஆற்றல் படைத்துள்ள வாழ்வு வாழ்ந்து வருவதற்கிடையில் அதினின்று விளையும் தீமையை அகற்றுதற்கு உபாயம் ஒன்றே உளது. கர்மத்தில் வைத்துள்ள பற்றுதலை மனிதன் ஒழித்துவிட வேண்டும். பற்றுதல் எவ்வளவுக்கெவ்வளவு ஒரு மனிதனிடத்து அதிகரிக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவன் கேட்டை வளர்க்கிறான். பற்றுதலை அகற்றுதற்கு ஏற்ப அவன் நலத்தில் நிலை பெறுபவன் ஆகிறான். வாழ்வில் பற்றற்றவனாக இருந்துகொண்டு தன் கடமைகளை ஒருவன் திறம்படச் செய்துகொண்டு வரவேண்டும். உலகிலே மனிதன் வாழ்ந்திருக்கலாம். ஆனால் உலகப்பற்று அவனிடத்து வந்துவிடலாகாது. தண்ணீரில் தோன்றி தண்ணீரிலே நிலைத்திருக்கும் தாமரையானது தண்ணீரைத் தன்மீது ஒட்ட விடுவதில்லை. அதுபோன்று உலகில் தோன்றி உலகில் வாழ்ந்திருக்கும் மனிதன் உலகப்பற்று தன்னிடத்து வாராதிருத்தல் பொருட்டுத் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். மனப்பற்று நீங்கிய மனிதன் உலகில் இருப்பதற்கிடையில் உலகுக்கு அன்னியமானவன் ஆய்விடுகிறான். உலகப்பற்று நீங்கியதின் அறிகுறி ஒன்று உளது. தனக்காகவென்று மனிதன் ஏதே

னும் ஒன்றைச் செய்வானாகில் அவன் பற்றுடையவனா கிறான். தனக்காகவென்று ஒரு மனிதன் எச்செயலை யும் செய்வதில்லை என்றால் அவன் உலகப்பற்றை ஒழித் தவனாகின்றான். சுயநலம் படைத்தவனாய் இருந்து ஒரு மனிதன் தனக்காகவென்று கர்மம் செய்வானாகில் அந்தக் கர்ம பலனாகிய நலம் கேடு ஆகிய இரண்டும் அவனை வந்து சூழ்வது திண்ணம். நலம் மிகுந்துள்ள கர்மத்தை அவன் செய்யுங்கால் நன்மை அவனுக்கு மிகுதியாக வந்தமைகிறது. கேடு மிகுந்துள்ள வினையை அவன் ஆற்றுவானாகில் அதன் விளைவு ஆகிய கேடு அவ னிடத்து அதிகரிக்கிறது. இங்ஙனம் இருவினைப் பய னும் பற்றுதலினின்று வருபவைகளாம். ஆனால் தனக் காகவென்று ஒரு மனிதன் எச்செயலையும் ஆற்றுவ தில்லை; உலகத்தவர்களுடைய நன்மைக்காகவென்றே அவன் அதை ஆற்றி வருவானாகில் அவ்வினைப்பயனாகிய நலம் கேடு ஆகிய இரண்டும் அவனை வந்து சார்வ தில்லை. அங்ஙனம் பற்றற்றுத் தொண்டு புரிகிறவன் மனத்துக்கண் மாசு இலன் ஆகின்றான். செயல்களுள் மிகக்கொடியது கொலை. சுயநலத்துக்காகவென்றே ஒரு மனிதன் மற்றவர்களை மாய்க்கிறான். ஆனால் சுய நலம் அற்றவிடத்து உலகில் நலனே முன்னணியில் வந்து நிற்கும். நம்மிடத்து உள்ள கொலைச் செயலும் அப்பொழுது தீங்கற்றதாய் விடுகிறது. தன்னலமற்ற செயலைக் குறித்து பகவத்கீதை இங்ஙனம் பகர்கிறது:

य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥

ஆத்மாவைக் கொலையாளி யென்றும், கொலை யுண்பானென்றும் எண்ணும் இருவரும் அறியாதார். ஆத்மா கொல்லுவதுமில்லை, கொலையுண்பதுமில்லை.

இக்கோட்பாட்டை உள்ளபடி அறிந்து கொள்ளு கின்றவர் எக்கர்மத்துக்கும் தம்மைக் கர்த்தாவென்று கருதமாட்டார்கள். மனிதன் கர்மத்தைத் துறந்து விடலாகாது; செயல்களுக்குத் தன்னை கர்த்தாவென்று எண்ணுகின்ற எண்ணத்தைத்தான் துறந்து விட வேண்டும். அந்த எண்ணத்தைத் துறந்தவன் உலகில் நன்கு வாழத் தெரிந்து கொண்டவனாகிறான். செயல் களுக்கெல்லாம் இறைவனே கர்த்தா என்று உணர் கின்றவன் தனக்காகவென்று எதையும் தேடுவதில்லை. சுயநலப்பற்று அவனை விட்டு அகன்றுபோய் விடுகிறது. சுயநலத்தை அகற்றியவன் உலக வாழ்க்கையை நீத்து விட்டு மலைக்குகையை நாடி ஓட வேண்டியதில்லை. இவ் வுலகிலேயே அவன் வாழ்ந்திருக்கிறான். இதை இறை வனுடைய திருவிளையாடல் மேடை என்று அவன் கருதுகிறான். இதிலிருந்து அவன் அடைய வேண்டிய அனுபவங்களை யெல்லாம் நன்கு அடையப்பெறுகிறான். ஆனால் இவ்வுலகைத் தனது சுகபோகத்துக்காக இருக்கிறதென்று அவன் ஒருநாளும் கருதுவதில்லை. இத்தகைய பாங்குடன் வாழ்பவனே நல்வாழ்வு வாழக் கற்றுக்கொண்டவன் ஆகிறான்.

சுகபோகங்களை அனுபவிப்பது வாழ்க்கையின் குறிக்கோள் அன்று. தனது ஜீவபோதத்தை மனிதன் முதலில் ஒழித்து விடவேண்டும். தனது ஜீவ வியக்

தியை அழித்தான பிறகு இவ்வுலகின் காட்சி புதிய தோர் பாங்கில் அவனுக்குப் புலப்படும். அதன் பிறகு உலகம் முழுவதையும் அவன் தனக்குச் சொந்தமானதாக உணர முடியும். தன்னையும் உலகுக்கு உரியவனாக அதனிடம் தன் வாழ்வை அவன் ஒப்படைத்து விடுகிறான். பல ஜன்மாந்தரங்களில் மனிதன் கட்டிப் பிடித்துக்கொண்டிருந்த ஜீவ வியக்தியை சம்ஹாரம் செய்து விடுவானாகில் அவனிடத்துத் தெய்வீகம் பின்பு தானே இலங்குகிறது. விதவிதமான அசுரர்களைக் கடவுள் சம்மாரம் செய்கிறார் என்பதன் கோட்பாடு இதுவே. அசுர இயல்பு படைத்த ஜீவபோதத்தின் போக்கே அலாதியானது. அதனிடத்து சுயநலம் யாண்டும் குடியிருக்கிறது. தன்னுடைய சுகபோகத்துக்காகத்தான் இவ்வுலகம் படைக்கப்பட்டிருக்கிறது என்று ஜீவ வியக்தி படைத்தவன் எண்ணுகிறான். இந்த எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டே உலக மக்களில் பெரும்பான்மையோர் வாழ்ந்திருக்கின்றனர். பெற்றோர்களில் பலபேர் தங்களுடைய குழந்தைகளுக்கு ஒரு விபரீதமான பிரார்த்தனை முறையைப் புகட்டிவருவதுண்டு. "இறைவா, இந்த சந்திரனையும், சூரியனையும் நீ எனக்காகவென்று படைத்திருக்கிறாய்" என்னும் பிரார்த்தனையைத் தங்கள் குழந்தைகளுக்கு அவர்கள் புகட்டுகிறார்கள். மடமையில் மூழ்கிக் கிடக்கும் பெற்றோர்களே இத்தகைய பிரார்த்தனையைத் தங்களுடைய குழந்தைகளுக்குப் புகட்டுவார்கள். இந்தக் குழந்தைகளுக்காகவென்று

அனைத்தையும் உண்டுபண்ணுவதைத் தவிர அந்த இறைவனுக்கு மேலான அலுவல் வேறு ஒன்றும் அமையவில்லை என்று இவர்கள் கருதுகிறார்கள் போலும்! இத்தகைய பொருளற்ற போதனையைக் குழந்தைகளுக்கு யாரும் புகட்டலாகாது. இன்னொரு பாங்கில் மடமை படைத்துள்ள மாந்தரும் உலகில் இருக்கின்றனர். உலகிலுள்ள ஜீவராசிகள் அனைத்தும் மனிதனுக்காகவென்று படைக்கப்பட்டவைகள் என்று அவர்கள் புகட்டி வருகிறார்கள். இந்த உயிர் வகைகளுள் மனிதன் வேண்டியவைகளை யெல்லாம் கொன்று தின்னலாம் என்றும் அவர்கள் போதிக்கின்றனர். இந்தப் பிரபஞ்சமே மனிதனுக்காகவென்றுதான் அமைந்துள்ளது என்றும் அவர்கள் கருதி வருகின்றனர். விவேகமின்மைக்கு இத்தகைய கொள்கைகள் தக்க சான்றுகள் ஆகும். புலி ஒன்றுக்குத் தன் போக்கில் எண்ணுதற்கு உரிமை உண்டு. "எனக்காகவென்று மனிதன் கடவுளால் படைக்கப்பட்டிருக்கின்றான். இறைவா, எவ்வளவு போக்கிரித்தனம் வாய்ந்தவர்களாக இம்மானுடர் ஆய்விட்டனர். என்னிடம் வந்து உணவுக்காகவென்று தங்களை ஒப்படைக்க அவர்கள் மறுக்கின்றனர். இறைவா, உமது சட்டத்தை மீறி இந்த நரர்கள் நடந்துகொள்கிறார்கள்." இந்தப் பாங்கில் புலி ஒன்று எண்ணக்கூடும். மனிதனுக்காகவென்று மற்ற உயிர்கள் படைக்கப்பட்டிருக்கின்றன வென்று மனிதன் எண்ணுவானாகில் புலி போன்ற மற்ற உயிர் ஒன்று மனிதன்

தனக்காக வென்று படைக்கப்பட்டிருக்கிறான் என்று எண்ணக்கூடும். அப்படி எண்ணுகிற உரிமை அதற்கு உண்டு. எனவே இவ்வுலகம் நம்முடைய சுகபோகத்துக்காக உண்டுபண்ணப்பட்டிருக்கிறது என்னும் கொள்கை அசுர இயல்பினின்று வரும் கொடிய கொள்கையாகும். இக்கொள்கை ஒன்றே நம்மைக் கீழ்மையில் ஆழ்த்திவிடும். நம்முடைய சுக போகத்துக்காகவென்று இவ்வுலகம் நிலைத்திருப்ப தன்று. நம்போன்ற மாந்தர் கோடிக்கணக்கில் இவ் வுலகினுள் வரவும் இதினின்று வெளியேகவும் செய் கின்றனர். அவர்களுடைய வரவையும் போக்கையும் உலகம் ஒருபொழுதும் பொருள்படுத்துவதில்லை. அவர் களின் போக்கு வரவைக்குறித்து இன்பமடைவது மில்லை, துன்புறுவதுமில்லை. கோடிக்கணக்கானபேர் இவ்வுலகை விட்டுப் போய்விட்டால் புதிய மக்கள் கோடிக்கணக்கானபேர் இவ்வுலகினுள் இடம்பெற முடியும். இவ்வுலகம் நமக்காகவென்று அமைந்திருக் கிறது என உணர்வதுபோன்றே இவ்வுலகத்துக்காக நாம் அமைந்துள்ளோம் என்று உணர்வது உசிதம். உலகம் நமக்குரியது என்று உரிமை பாராட்டுதற்கு மாறாக நாம் உலகுக்குரியவரென்று நம்மை உலகுக்காக ஒப்படைத்துப் பழகுதலே மேலான மன நிலையாகும். அப்படி நம்மை நாம் ஒப்படைப்பதன் மூலமே நாம் மேல்நிலை எய்தமுடியும்.

நன்கு வினையாற்றத் தெரிந்துகொண்டவனே நன்கு வாழத் தெரிந்துகொண்டவன் ஆகின்றான்.

நன்கு வினையாற்ற வல்லவன் யார் என்பது அடுத்த கேள்வி. யாரிடத்திலிருந்து உலகப்பற்று முற்றிலும் அகன்று போய்விடுகிறதோ அவனே நன்கு வினை யாற்ற வல்லவனாகிறான். பற்று நீங்கப் பெற்றவன் உலக வாழ்வு என்னும் குழப்பத்தில் மூழ்கிவிடுவ தில்லை. வாழ்வு என்னும் போராட்டத்தில் அவன் அகப்பட்டுக்கொள்வதில்லை. அதற்கு சாக்ஷியாக இருந் துகொண்டு அவன் தன் கடமையைச் செய்கின்றான். பற்றற்ற நிலையில் இருந்துகொண்டு வினையாற்றும் பாங்கை ஒரு சான்றின்மூலம் விளக்குவது நன்று. ஒரு பணக்காரன் வீட்டில் வேலைக்கு அமரும் வேலைக்காரி போன்று மனிதன் உலகில் வாழ்ந்திருக்க வேண்டும். தன் எஜமானனுடைய வீட்டைக்குறித்து இது எங் களுடைய வீடு என்று அவள் சொந்தம் பாராட்டு கிறாள். எஜமானனுடைய குழந்தையைத் தன் குழந்தை என்றே சொல்லி அவள் உரிமை பாராட்டுகிறாள். ஆனால் ஒருநாள் திடீரென்று அவளை எஜமானன் வேலை யினின்று நீக்கிவிட்டால் அதைக்குறித்து அவள் வருந் துவதில்லை. சொந்தம் பாராட்டிய குழந்தையை வைத்து விட்டுத் தன்னுடைய மூட்டை முடிச்சுக்களை எடுத் துக்கொண்டு அவள் அப்பொழுதே கிளம்பி விடுகின் றாள். மனிதன் ஒருவன் மண்ணுலகில் அங்ஙனம் வாழ்ந்திருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். இம்மண் ணுலகில் அவனுக்கு உரிமை பாராட்டுதற்கு ஒன்று மில்லை. தான் தெய்வத்துக்கே உரியவன் என்பதை அவன் உள்ளூற உணர்ந்திருக்கவேண்டும். வெறும்

பெயரளவில் உலகத்தவருள் சிலரைத் தனது உற்றார் உறவினரென்று அவன் சொல்லிக்கொள்ளலாம். எப்பொழுது வேண்டுமென்றாலும் மரணத்தின் மூலமாக இம்மண்ணுலக வாழ்க்கையை உதறித் தள்ளிவிட்டுத் தன் சொந்த இடத்துக்குப் போக அவன் ஆயத்தமாய் இருக்கவேண்டும். மனப்பற்று அற்றவனுக்கே இப்படி வாழ்ந்திருக்கமுடியும்.

மனதின்கண் உள்ள பெரிய குறைபாடு ஒன்று சில வேளைகளில் மிக மேலான நிலையாகத் தன்னைக் காட்டிக்கொள்கிறது. மனத்தளர்வு மன உறுதி போன்று தோன்றுகிறது. நலம்போன்று வெளிக்குத் தோன்றுகிற கேடுதனை ஓர்ந்து அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. ஒரு மனிதன் யாரோ சிலர் மீது பற்றுவைக்கிறான். அவர்கள் எல்லாம் முற்றிலும் தன்னைச் சார்ந்திருக்கிறார்கள் என்றும், தன்னுடைய உதவி அவர்களுக்குக் கிடைக்காவிட்டால் அவர்கள் தட்டழிந்து போய்விடுவார்கள் என்றும் அவன் நினைக்கிறான். தன்னுடைய முயற்சியால் அவன் தன்னைச் சார்ந்திருக்கும் மற்றவர்களுக்கு நலம் செய்யமுடியும் என்றும் எண்ணிவருகிறான். இப்படி எண்ணுவது மனத்தளர்வின் விளைவாம். இத்தகைய எண்ணமே ஒரு மனிதனிடத்து மேலும்மேலும் பற்றுதலை வளர்த்துக்கொண்டே வருகிறது. இந்தப் பற்றுதலினின்று துன்பங்கள் அனைத்தும் உருவெடுத்து வருகின்றன. தவறுதலான இந்த எண்ணத்தைக் கர்மயோகி தன் மனத்தினின்று துரத்தி ஓட்டவேண்டும். இப் பிரபஞ்

சத்தில் எண்ணிறந்த உயிர்கள் இருக்கின்றன. அத்தனைகோடி உயிர்களுள் ஓர் உயிர் மற்றோர் உயிரின் துணையை நாடி இவ்வையகத்துக்குள் வரவில்லை. எத்தனையோ மக்கள் நம்மைச் சார்ந்திருக்கிறார்கள் என்று நாம் எண்ணிக்கொள்கிறோம். நம்முடைய உதவி அவர்களுக்கு எட்டாவிட்டால் அவர்களுடைய கதி என்ன ஆகும் என்று நாம் கவலைப்படுகின்றோம். அறியாமையினின்று அத்தகைய எண்ணம் நமது உள்ளத்தில் உதிக்கிறது. நாம் வழங்குகிற தானத்தைக்கொண்டு ஏதேனும் ஒரு யாசகன் உயிர் வாழ்ந்திருக்கிறான் என்கிற எண்ணம் நமது உள்ளத்தில் உதிக்கவேண்டியதில்லை. நம்முடைய உதவியை எதிர்பார்த்து ஏதேனும் ஓர் உயிராவது உலகில் காத்திருக்கிறதென்று நாம் இறுமாப்பு எய்தவேண்டியதில்லை. நாம் இல்லாது போய்விட்டால் அல்லது நம்முடைய உதவி இத்தனைகோடி உயிர்களில் ஏதேனும் ஒன்றுக்கு எட்டாவிட்டால் அதை முன்னிட்டு அந்த உயிர் ஆதரவற்றுப்போய்விடும் என்கிற மயக்கம் நமது உள்ளத்தில் உதிக்கலாகாது. அனந்தங்கோடி உயிர்களையெல்லாம் இயற்கைத்தாய் தாங்கிக்கொண்டிருக்கின்றாள். பேருபகாரம் செய்கிறோம் என்று எண்ணிக்கொண்டிருக்கிற நம் போன்ற வள்ளல்கள் கோடிக் கணக்கான பேர் அழிந்துபட்டுப் போய்விட்டாலும் அல்லது தோற்றத்துக்கே வராது இருந்துவிட்டாலும் அதைக்குறித்து உலகில் எவ்வுயிர்க்கும் குறைபாடு வந்துவிடாது. ஏனெனில் உயிர்கள் அனைத்தையும்

ஓம்புதற்கு இயற்கைத்தாய் என்றென்றும் இருந்து வருகிறாள். நம்போன்ற கொடையாளிகளையும் வள்ளல்களையும் எதிர்பார்த்து இவ்வுலகம் உரு எடுக்கவில்லை. நம் போன்றவர்கள் இல்லாமலேயே இயற்கைத்தாய் தன்னுடைய செயலை நிறைவேற்றிவைத்து விடுகிறாள். அப்படியானால் இங்கு நமக்குக் கடமை ஒன்றும் இல்லையா என்னும் கேள்வி எழலாம். ஆம் நமக்குக்கடமை உண்டு. ஆனால் நம்முடையகடமையை எதிர்பார்த்துத்தான் உலகம் நிலைபெற்றிருக்கிறது என்கின்ற இறுமாப்பு மட்டும் நமக்கு வேண்டாம். பிறர்க்குத் தொண்டுபுரியும் வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறதே என்று மற்ற உயிர்களுக்கு நாம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். பிறர்க்குப் பணிவிடை செய்வதன் மூலமாகவும், நமக்கு உரியவைகள் என்பனவற்றையெல்லாம் அவர்களுக்கு எடுத்துப் பணிவுடன் வழங்குவதன் மூலமாகவும் நமக்கு நாம் நல்லபாடம் கற்பித்துக்கொள்கிறோம். "யான் எனது" என்பனவெல்லாம் உண்மையில் கடவுளுடையவைகள் என்னும் உண்மையை நமக்கு நாமே புகட்டிக்கொள்ளுதற்கு மற்ற உயிர்கள் நமக்கு நல்ல சந்தர்ப்பத்தை அளிக்கின்றன. எனவே மற்றவர்கள் நம்மைச் சார்ந்திருக்கின்றனர் என்கின்ற எண்ணத்தை மாற்றி நமது மனநிலையை ஒழுங்குப்படுத்திக்கொள்ளுதற்கு மற்ற உயிர்கள் நமக்கு நல்ல வாய்ப்புக்களை அளித்து வருகின்றன என்று நாம் அவ்வுயிர்களுக்கு கடப்பாடு உடையவர்களாக இருக்கவேண்டும். வாழ்க்கையில்

நாம் கற்றுக்கொள்ளவேண்டிய மிக மகத்தானபாடம் இதுவேயாம். இப்பாடத்தை நாம் முற்றிலும் கற்றுக் கொண்டான பிறகு துன்பம் ஒருநாளும் நம்மை வந்து சாராது. பிறகு சமுதாயத்தில் எந்தச் சூழ்நிலையில் வேண்டுமென்றாலும் நாம் வாழ்ந்திருக்கலாம்; யாருடன் வேண்டுமென்றாலும் நாம் ஒட்டி உறவாடலாம். இவ் வுண்மையை நன்கு அறிந்துகொண்டதன் விளைவாக நமக்கு ஒருநாளும் மதிமயக்கம் வந்துவிடாது.

பற்றற்ற பான்மையை உண்டுபண்ணிக்கொண் டான பிறகு ஒருவன் இல்லறத்தானாக இருக்கலாம். மனைவி மக்களுடன் வாழ்ந்திருப்பதற்கிடையில் அவ னுடைய மனப்பான்மை இவ்வுலக பந்தத்தினின்று விடுபட்டதாயிருக்கும். எண்ணிக்கையில் அடங்காத வேலையாட்களை வைத்துக்கொண்டு ஒருவன் ராஜரீதி யுடன் வாழ்ந்திருக்கலாம். அவனுக்கு அரசாட்சி பண்ணுவதற்கு சாம்ராஜ்யங்கள் சில இருக்கலாம். அத்தகைய ஆடம்பரமான வாழ்க்கைக்கிடையிலும், நிகழ்ச்சிகள் பல நிறைந்த வாழ்க்கைக்கிடையிலும் அவன் சிறந்த கர்மயோகியாக இருக்கலாம். அடிப் படைக் கோட்பாடு ஒன்றிலிருந்து அவன் பிசகியவன் ஆய்விடலாகாது. இவ்வுலகம் மனிதனுடைய சுகபோகத்துக்காக அமைந்ததன்று, மனிதனுடைய ஆதரவை எதிர்பார்த்து இவ்வுலகம் அமைந்ததன்று, உலகம் தன் போக்கில் ஒழுங்காகப் போகவல்லது, இயற்கையின் அமைப்பு மனிதனுடைய உதவியையும் ஆதரவையும் எதிர்பார்த்து அமையவில்லை — இது

தான் அடிப்படைக் கோட்பாடு. இவ்வுண்மையை அறிந்துகொண்டு இதற்கு ஒப்ப வாழ்கின்றவனைக் குடும்பவாழ்வு பந்தப்படுத்திவிடாது. அரசாட்சி போன்ற அரும்பெரும் செயல்களைச் செய்வதற்கிடையில் கர்மயோகி நிலைபிறழாதிருப்பான்.

மானுடா, உன்னுடைய சென்ற வாழ்க்கையைக் கொஞ்சம் அலசி ஆராய்ச்சி செய்துபார். நிகழ்ந்து வருகிற இவ்வாண்டிலேயே உன்னுடைய நெருங்கிய நண்பர்கள் சிலர் மரணத்துக்கு வசப்பட்டவர்களாயிருக்கலாம். அதை முன்னிட்டு உலக நடைமுறை எவ்விதத்திலாவது தடைப்பட்டிருக்கிறதா? மாண்டு போனவர்கள் மறுபடியும் திரும்பிவரவேண்டுமென்று அது காத்துக்கொண்டிருக்கிறதா? மக்கள் சிலருடைய மறைவை முன்னிட்டு இயற்கையின் போக்குக்கு இடைஞ்சல் ஏதேனும் வந்துவிட்டதா? இல்லை, இயற்கையின் நடைமுறைக்கு ஒரு குறையும் வந்துவிடவில்லை. அது தன் இயல்புக்கு ஒப்பப் போய்க்கொண்டே இருக்கிறது. எனவே இவ்வுலகுக்கு நீ செய்து சாதிக்கவேண்டிய செயல்கள் ஏதோ இருக்கின்றன என்ற எண்ணத்தை உன் மனதினின்று அறவே அகற்றிவிடு. உன் உள்ளத்தில் அத்தகைய வீண் எண்ணம் தோன்றுதபடி அதைத் துரத்தி ஓட்டிவிடு. உன்னிடத்திருந்து ஒருவிதமான உதவியும் இவ்வுலகுக்குத் தேவையில்லை. இவ்வுலகுக்கு உதவிசெய்வதற்காக நீ பிறந்திருக்கின்றாய் என்று எண்ணுவாயாகில் அது அடாத முட்டாள்தனம். நீ படைத்

துள்ள வீண்கர்வத்திலிருந்து அத்தகைய எண்ணம் உனக்கு வருகிறது. உண்மையில் நீ சுயநலக்காரன். நீ படைத்துள்ள சுயநலத்துக்கு வெளிவேஷம் போட முயலுகிறாய். உலகுக்கு உதவிபண்ணுவது உன் கடமை என்று உன் சுயநலத்துக்குக் கண்ணியமான வேஷம் ஒன்றை நீ அமைத்துவைத்திருக்கிறாய். பரோபகாரம் செய்வதுபோன்று பாசாங்கு செய்துகொண்டு உன்னுடைய ஆணவத்தை நீ வளர்க்கின்றாய். மனதினின்று இந்த சுயநலத்தை அகற்றிவிடு. மனதுக்குப் புதியதொரு பயிற்சிகொடு. உன்னுடைய நாடி நரம்புகளில் எல்லாம் உண்மைக்கு ஒத்ததாய் உள்ள நேர்மையான எண்ணங்களே நிறைந்திருக்கட்டும். இவ்வுலகம் உன்னுடைய உதவியைச் சார்ந்திருப்பதன்று என்பது தான் உண்மை. நீ மட்டும் அல்ல, உன்போன்ற எந்த மனிதனுடைய உதவியையும் இவ்வுலகம் சார்ந்திருப்பதன்று. இவ்வுண்மையில் நிலைபெற்றிருப்பவனாக நீ வாழக் கற்றுக்கொள்வாயாகில் நீ புரிகின்ற எச்செயலினின்றும் உனக்குத் துன்பம் என்று சொல்லப்படும் எதிர்ச்செயல் உண்டாகாது.

ஒரு மனிதனுக்கு ஏதாவது ஒன்றை எடுத்துக் கொடையாக வழங்குகின்றபொழுது அம்மனிதனிடத்திருந்து கைம்மாறு எதையும் நீ எதிர்பார்க்கவேண்டாம். உனக்கு நன்றியுடையவனாக அம்மனிதன் நடந்துகொள்ளவேண்டும் என்றும் எதிர்பார்க்கவேண்டாம். உன்னிடமிருந்து வேண்டியவாறு உதவிகளைப் பெற்றானபிறகு அம்மனிதன் முற்றிலும் நன்றிகெட்ட

வனாக நடந்துகொள்ளக்கூடும். சரியான மனப்பான்மை உன்னிடத்திருக்குமாகில் அவனுடைய நன்றி கெட்ட செயல் உன்னைத் துன்புறுத்தமாட்டாது. ஏனென்றால் நன்றியையோ, வேறு எதையோ எதிர்பார்த்து நீ அவனுக்கு உதவிபுரியவில்லை. கைம்மாறு எதையும் எதிர்பார்ப்பது போன்ற எண்ணத்தையும் கூட நீ நினைக்கவில்லை. எடுத்து வழங்குவது உன் கடமை என்னும் எண்ணம் கொண்டவனாக நீ அச்செயலைச் செய்தாய். அவன் பெற்ற உபகாரத்துக்கோ பொருளுக்கோ அவன் தகுதியுடையவனாய் இருந்தான். அதைப் பெறுதற்கேற்ற வினைப்பயன் அவனிடத்து இருந்ததால் அவன் அதைப்பெறலானான். எடுத்து வழங்குதல் என்னும் வினையாற்றி உன்னைப் பக்குவப் படுத்துவதற்கு நீ முன்வந்தாய். வழங்குதலின் வாயிலாக உன்னுடைய சுயநலத்தை நீ அகற்றியது நீ பெற்ற பேறு. அவனுடைய தகுதிக்கேற்ப அவன் ஏதேனும் ஒன்றை அடையப்பெற்றது அவனது வினைப் பயன். சுயநலத்தை அகற்றுதற்காக எடுத்து வழங்கிய நீ, ஏதோ ஓர் அரிய பெரிய செயலைச் செய்துவிட்டதாகப் பெருமைகொள்ளுவது எதற்காக? பெருமை கொள்ளுதலே சுயநலம். அது உனக்குவேண்டாம். கூலியாள் ஒருவன் பெட்டியைச் சுமக்கிறான். அப்பெட்டி அவனுக்குரியதன்று. பெட்டியைச் சுமந்ததற்காக வரும்கூலி அவனுடையது. மூட்டை சுமப்பவன் போன்று செல்வம் முதலிய கொடைகளை உலகுக்கு நீ சுமந்து எடுத்துச் செலுத்தினாய். உலகத்தில்

யார் எதற்குத் தகுதியுடையவனாய் இருக்கின்றானோ அவனுக்கு அப்பொருள் ஏதேனும் ஒருவிதத்தில் வந்தமைகிறது. நீ எடுத்துச் செல்லாவிட்டால் வேறுயாரோ ஒருவன் எடுத்துச்செல்வான். செல்வம் உன்னுடையது அல்ல, உலகுக்கு உரியது என்று எண்ணி வழங்கியதின் மூலம் உன்னைப் பக்குவப்படுத்தினாய். மன பரிபக்குவம் அடைவதுதான் இவ்வுலகினின்று நீ பெறுகிற கூலி. இதை நீ மறந்துவிடாதே. மன பரிபக்குவம் அடைதற்கிருக்கிற யோகி தன் செயலைக்குறித்துப் பெருமை பாராட்டுவது எதற்காக ?

உலகம் இறைவனிடத்திருந்து உண்டானது. அதை உள்ளபடி அறிகின்றவர்கள் அது எவ்வளவு மகிமை வாய்ந்தது என்பதை உணர்வார்கள். உலகத்திடத்து இருக்கின்ற செல்வங்களுள் சிலவற்றைத் தனக்கு உரியதாக்கிக் கொண்டதாக எண்ணி மனிதன் இறுமாப்புறுகிறான். தனக்கு உரியது அல்லாததை தனக்கு உரியது ஆக்கிக்கொண்டான பிறகு அதை உலகுக்கு எடுத்துக்கொடையாக வழங்குவதாக மனிதன் எண்ணி மகிழ்வுறுகிறான். தான் உலகுக்கு எடுத்துக்கொடுத்தது மிகப்பெரியது என்று மனிதன் எண்ணிக்கொள்ளலாம். உண்மையில் அவனுடைய கொடையில் பெரியது என்பது ஒன்றுமில்லை. தன்னுடையது என்று தான் பற்றிப் பிடித்துக்கொண்டிருந்ததை உலகுக்கு எடுத்து வழங்குவதன் மூலம் பற்றற்ற நிலையை மனிதன் அடையப்பெறுகிறான். அவனுடைய மனதினின்று பற்று அகன்றுவிடுங்கால் உலகிலுள்ள

நலம், கேடு ஆகிய இரண்டினின்றும் அவன் விடுபட்டவன் ஆகின்றான். யாரிடத்து சுயநலம் குடிகொண்டிருக்கிறதோ அவன் நலம், கேடு ஆகிய இரண்டில் கட்டுப்பட்டவன் ஆகின்றான். நலம், கேடு என்பதைப் பற்றிய வேற்றுமை சுயநலத்தினின்றே தோற்றத்துக்கு வருகிறது. மனிதன் அனுமதிகொடுத்தாலன்றி புறவுலகினின்று அவன்மீது ஆதிக்கம் செலுத்த வருவதற்கு எதற்கும் வல்லமையில்லை. புறவுலகம் கேடுமிக நிறைந்ததாக இருக்கலாம். அதன்கண் உள்ள கேடதனை தனக்குச் சொந்தமாக்கிக்கொள்ள மனிதன் அனுமதிகொடுத்தாலன்றி அது அவனை வந்து என்ன செய்யமுடியும்? புறவுலகில் இன்பம் தரக்கூடியவைகள் பல நிறைந்திருக்கலாம். அவைகளுக்கு ஆட்படுதற்கு மனிதன் ஒருப்பட்டாலன்றி அவைகள் அவனை வந்து என்ன செய்யமுடியும்? புறவுலகின் பவிசு மனிதனுடைய அனுமதியை மீறி அவனிடத்து ஆட்சி செலுத்தமுடியாது. இக்கோட்பாட்டை அடிப்படையாகக்கொண்டே புறவுலகம் தன்மீது திணிக்கிற எதையும் "ஏற்பது இகழ்ச்சி" என்னும் கோட்பாடு வந்துள்ளது. வாழ்க்கையைப் பற்றிய இக்கோட்பாடு மிகக்கடினமானது. இதைக் கற்றுக்கொள்ளுதல் எல்லார்க்கும் சாத்தியமல்ல. எனினும் உலகத்தோடு பழகுதலின் மூலம் நாளடைவில் இப்பாடத்தை மனிதன் கற்றே ஆகவேண்டும். ஆத்மசொரூபமே மனிதனுடைய நிஜசொரூபம். இந்த ஆத்ம சொரூபத்தின்மீது ஆதிக்கம் செலுத்த இயற்கையில் எதற்

கும் இயலாது. ஆத்ம சொரூபியாகிய மனிதன் ஆத்ம சொரூபத்திலேயே நிலைபெற்றிருப்பதைத் தவிர்த்து விட்டுத் தன்னை ஒரு மடையன்போன்று அவன் செய்து கொள்வானாகில், தன்னுடைய சுதந்தரத்தை அவன் விட்டுக்கொடுத்துவிடுவானாகில் அப்போது புறவுலகம் அவன்மீது ஆதிக்கம் செலுத்த வல்லதாய்விடும். பற்றற்ற நிலைக்கு இப்பொழுது புதியதொரு விளக்கம் நமக்குக் கிடைக்கிறது. புறவுலகின்மீது பற்றுவைப்ப தால் அது அளிக்கின்ற பலப்பல இன்ப துன்பங்களை ஏற்று மனிதன் அடிமையாய்விடுகிறான். புறவுலகத் திடத்து வைத்துள்ள பற்றை அறவே நீக்கிவிட்டால் பிறகு அது அவன்மீது எந்தவிதமான ஆதிக்கத்தை யும் செலுத்தாது. "நான் ஆத்ம சொரூபம். எனக்கு அன்னியமாயுள்ள புறவுலகம் என்னைவந்து ஒருநாளும் பாதிக்காது" என்று வாய் வேதாந்தம் பேசுவது எளிது. "நான் புத்தியல்ல, மனது அல்ல, அகங்காரம் அல்ல, உடல் அல்ல, நான் சத்சித் ஆனந்த சொரூபம்" இப்படியெல்லாம் புஸ்தகத்தில் படித்துவிட்டுக் கிளிப் பிள்ளை போன்று ஒருவன் பகர்ந்துகொண்டிருக்கலாம். உண்மையில் சுவானுபூதியில் இப்பெருநிலையை மனி தன் அடைந்துவிட்டானென்று நாம் எப்படித்தெரிந்து கொள்ளமுடியும் என்பது கேள்வி. புறவுலகமானது தனது முழுவல்லமையுடன் மனிதன் மீது வந்து ஆதிக்கம் செலுத்துகின்ற இடத்து அதன் விளைவால் உண்டாகும் இன்ப துன்பங்களை மனிதன் வென்று விட்டான் என்று நாம் எவ்வாறு அறிந்துகொள்ள

முடியும்? மனிதன் பேசுகின்ற பேச்சினின்று நாம் அதை அறிந்துகொள்ளமுடியாது. வாழ்வில் அவன் அடைந்துள்ள நிலையினின்றே நாம் அதை அறிந்து கொள்ளமுடியும். நலனே வந்து வாய்ப்பினும் கேடே வந்து அமைந்திடினும் மனிதனுடைய மனத்தகத்து ஒருவிதமான மாறுதலையும் அது செய்துவிடுவதில்லை. இதற்கு சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். தசரத ராமன் முந்திய இரவு இளவரசுப் பட்டாபிஷேகத் துக்கு ஆயத்தப் படுத்திக்கொண்டிருந்தான். பிந்திய இரவு நாடு கடத்தப்பட்டவனாக மரத்தடியில் தரையில் படுத்துக்கிடந்தான். முந்திய இரவு அளித்த உயர்வும், பிந்திய இரவு அளித்த தாழ்வும் அவனுடைய மனதில் ஒருவிதமான மாறுதலையும் உண்டுபண்ணிவிடவில்லை. இன்ப துன்ப மயமாயுள்ள இவ்வுலக நிகழ்ச்சிகள் அவனுடைய மனதின்மீது எந்தவிதமான ஆதிக்கத்தையும் செலுத்தச் சக்தியற்றதாய்விட்டது. உலகில் பற்று வைக்காதவன் அடைகின்ற நிலை இதுவே. யாண்டும் அவன் ஆத்ம சொரூபத்திலேயே நிலைபெற்றிருக்கின்றான். இங்ஙனம் மனிதன் வாழ்கின்ற வாழ்வைக் கொண்டுதான் அவன் அடைந்துள்ள பரிபாகத்தை நாம் அறிந்துகொள்ளமுடியும்.

இந்தியாவில் தோன்றியுள்ள ரிஷிகளுள் மிகப் பிரசித்திபெற்றவர் வியாசர். வேதாந்த சூத்திரங்கள் என்னும் பெருநூலை இயற்றியவர் அவர். அவர் மஹரிஷியாதலால் தூய்மைக்கு அவரே இருப்பிடம். பகவான் என்றும் அவரை அழைப்பதுண்டு. வியாச

பகவானுடைய தந்தை பராசரர். அவரும் ஒரு ரிஷியே. ஆனால் மனபரிபாகத்தில் அவர் வியாசருக்கு ஒரு படி கீழே இருந்தார் என்று சொல்லலாம். பராசரரின் பிதா சக்தி என்பவர். அவரும் பாரமார்த்திகப் பெரு நிலையை அடைய முயன்றவர். அவர் தம்முடைய மைந்தனாகிய பராசரருக்கு ஒருபடி கீழே இருந்தார் என்று இயம்பவேண்டும். இனி சக்தி என்னும் ரிஷிக்குத் தந்தையாய் இருந்தவர் வசிஷ்டர். அவரும் பாரமார்த்திகப் பெருநிலையை அடைய முயன்றவரே. ஆனால் அவரும் தமது மைந்தனாகிய சக்தி ரிஷிக்கு சற்றுக்கீழே இருந்தார் என்று தான் இயம்பவேண்டும். இத்தகைய குடும்ப பரம்பரையில் ஒருவருக்குப் பின் ஒருவர் படிப்படியாக மேல்நிலைக்குப் போயிருந்தார். அவர்களுள் வியாசபகவான் மிக உயர்ந்த நிலைக்கு வந்திருந்தார் எனினும் முடிவான உச்சநிலையை அடைந்தவர் என்று அவரைப்பற்றி இயம்பமுடியாது. ஆனால் அவருடைய மைந்தனாகிய சுக பிரம்மமோ பிறவியிலேயே பரிபூரண நிலைக்கு வந்திருந்தவர். அவர் பிரம்மஞானி எனினும் ஐதிகத்துக்கு உட்பட்டு வியாச பகவான் தமது மைந்தன் ஆகிய சுகபிரம்மத்துக்கு ஞானசாஸ்திரங்களைப் புகட்டினார். போதிக்கவேண்டியவைகளையெல்லாம் புகட்டியான பிறகு ராஜரிஷி ஆகிய ஜனக மஹாராஜருடைய மாளிகைக்குத் தமது மைந்தனை வியாசபகவான் அனுப்பிவைத்தார். ஜனகர் ஒரு சக்ரவர்த்தி. அவருக்கு ஜனக விதேகன் என்பது பெயர். விதேகம் என்றால் தேகமில்லாதது எனப்

பொருள்படுகிறது. தேகத்தை உடை
இடையில் தேகத்தைப் பற்றிய உணர்ச்சியே அற்றுப் போயுள்ள ஞானிக்கு விதேகன் என்னும் பெயர் வருகிறது. நம் ஒவ்வொருவருக்கும் வெய்யிலில் நடக்கின்றபொழுது நிழல் உண்டாகிறது. ஆனால் அந்த நிழலைப்பற்றி நாம் நினைப்பதில்லை. அதே பாங்கில் ஞானி ஒருவனுக்கு உடல் நிழலைப்போன்றிருக்கிறது. அதைப்பற்றி அவன் நினைப்பதில்லை. ஜனகமஹாராஜன் நாடு ஆளுபவர் எனினும் தமது உடலைப் பற்றிய எண்ணம் சிறிதேனும் இல்லாதவராக அவர் வாழ்ந்திருந்தார். மனிதனுடைய நிஜ சொரூபமாகிய ஆத்ம சொரூபத்திலேயே அவர் யாண்டும் நிலைத்திருந்தார்.

இளைஞனாகிய சுகபிரம்மம் முடிவான ஞானோபதேசத்தைப் பெறுதல் பொருட்டு ஜனகமஹாராஜரிடம் அனுப்பப்பட்டிருந்தார். அந்த இளைஞன் அங்ஙனம் தம்மிடம் வந்துகொண்டிருந்ததை ஜனகர் ஞானக்கண்கொண்டு முற்கூட்டியே அறிந்துகொண்டார். எனவே அதற்கேற்ற சில ஏற்பாடுகளை அந்த இளைஞன் வருவதற்கு முன்பே அவர்செய்துவைத்திருந்தார். இளைஞனும் ராஜமாளிகையின் வாயிலண்டை வந்துசேர்ந்தார். ஆனால் வாயில் காப்பாளர்களோ அவரைக் கண்ணெடுத்துப்பார்க்கவில்லை. அவரோடு உரையாடலும் கிடையாது. வாயிலுக்கு எதிரில் ஒருபுறத்தில் அவருக்கு அமர்ந்திருக்க ஒரு சிறு நாற்காலியைக் கொடுத்துவிட்டார்கள். அதற்குமேல் அவரை

அவர்கள் கவனிக்கவே இல்லை. மூன்று நாள் இரவும் பகலும் அந்த இளைஞன் அவ்விடத்திலேயே கவனிப் பாரின்றி உட்கார்ந்து கொண்டிருந்தார். பேச்சுக்கு ஒரு ஆள் பக்கத்தில் வரவில்லை. அவர் யார் என்று கேள்வி கேட்பதற்கும் ஒருவரும் தென்படவில்லை. அவர் எங்கிருந்து வந்தவர் என்று விசாரிப்பதற்கும் யாரும் முன்வரவில்லை. அப்படிக் கவனிப்பாரற்று வெளியே உட்கார்ந்திருந்தவரோ ஒரு பெரிய மஹரிஷியின் மைந்தன். தந்தையோ தெய்வத்துக்கு ஒப்பாக நாடெங்கும் உள்ள பெருமக்களால் பாராட்டப் பட்டவர். தந்தைக்கேற்ற மைந்தன் அவர். போற்று தலுக்கு மைந்தனும் முற்றிலும் அருகதையுடையவர். அப்படியிருந்தும் பாமரர் கூட்டத்தைச் சேர்ந்தவர் களும் பண்பாடு அற்றவர்களும் ஆகிய அரண்மனை வாயில் காப்பாளர்கள் அவரைச் சிறிதும் கவனியாது விட்டுவிட்டார்கள். நாட்கள் மூன்று இங்ஙனம் கழிந் தன. அனாதைபோன்று ஆதரிப்பாரின்றி அரண்மனை வாயிலிலேயே அந்த ரிஷிபுத்திரன் உட்கார்ந்து கொண் டிருந்தார்.

பிறகு திடீரென்று காட்சி மாறியது. சக்ரவர்த்தி யினுடைய மந்திரிமார்களும், பிரதானிகளும் அரண் மனைக்குள்ளிருந்து பக்திவிசுவாசத்துடன் வெளியே புறப்பட்டு அணிவகுத்து வந்தார்கள். போற்றுதற் குரிய பெருமகன் ஒருவருக்குத் தரவேண்டிய விதவித மான மரியாதைகளையெல்லாம் இப்போது அவர்கள் இளைஞனாகிய சுகபிரம்மத்துக்குச் செலுத்தினார்கள்.

தெய்வத்தை எழுந்தருளப் பண்ணுவது போன்று அவரை அரண்மனைக்குள் விதவிதமான வாத்திய கோஷங்கள் செய்துகொண்டு அழைத்துச்சென்றார்கள். நன்கு அலங்கரித்து வைக்கப்பட்டிருந்த கொலுமண்டபங்களுக்குள் அவ் இளைஞனை அவர்கள் அழைத்துச் சென்று வீற்றிருக்கப் பண்ணினார்கள். பின்பு அவருக்கு நறுமணம் நிறைந்த நன்னீரைக்கொண்டு நீராட்டி வைத்தார்கள். முழுக்கு முடிந்ததும் அதிசயமான ஆடைகளைக்கொண்டு அவர் அலங்கரிக்கப்பட்டார். சுவைப்பதற்கரிய உணவு வகைகள் பிறகு வழங்கப் பட்டன. பெருமிதமான ஆடம்பரங்கள் நிறைந்த சொகுசான வாழ்க்கையில் அவரை ஈடுபடுத்தினார்கள். அங்ஙனம் எட்டு நாட்கள் கழிந்தன. ராஜபோகம் நிறைந்த வாழ்வாக அது இருந்தது. முதலில் அறவே புறக்கணிக்கப்பட்டவர் இப்பொழுது பாராட்டுதலின் உச்சநிலையைப் பார்க்கலானார். ஆயினும் சுகபிரம்மத்தினுடைய முகத்தில் சாந்தமும் அமைதியும், ஆத்ம சாக்ஷாத்காரத்தினின்று வருகின்ற இனிமையும் ததும்பிக்கொண்டிருந்தன. அரண்மனை வாயிலுக்கு வெளியே வைக்கப்பட்டிருந்ததினால் மனக்கிலேசம் ஒன்றும் அவருக்கு உண்டாகவில்லை. இப்பொழுது இந்திர பதவிக்கு ஒப்பான சுகஜீவனத்தை முன்னிட்டு அவருடைய மனது புறப் பொருள்களிடத்துத் திரும்பவில்லை. இன்பம், துன்பம் ஆகிய இரண்டையும் பொருள்படுத்தாத அதீத நிலையில் அவருடைய மனது நிலைத்திருந்தது. ஆதலால்தான் அவருடைய முகவிலாசத்தில் பராமுகத்

தையோ, பாராட்டுதலையோ முன்னிட்டு இம்மியளவும் மாறுதல் உண்டாகவில்லை.

பின்பு சக்ரவர்த்தியினுடைய சன்னிதானத்துக்கு அவர் அழைத்துவரப்பட்டார். சக்ரவர்த்தியோ சிம் மாசனத்தின் மீது வீற்றிருந்தார். அவர் முன்னிலையில் இன்னிசைகள் வாசிக்கப்பட்டன; விதவிதமான நாட்டியங்கள் நிகழ்ந்தன; வேடிக்கை விநோதங்களும் ஆங்காங்கு நிகழ்ந்துகொண்டிருந்தன. தமது முன்னி லைக்கு அந்த இளைஞன் அழைத்துவரப்பட்டதும் அரசன் அந்த ரிஷிபுத்திரன்கையில் கிண்ணம் ஒன்றைக் கொடுத்தார். அதில் விளிம்பு வரையில் பால் நிறைந் திருந்தது. அந்தப் பால்க் கிண்ணத்தைக் கையில் ஏந்திக் கொண்டு ராஜசபையை ஏழு தடவை வலம்வரவேண்டு மென்று வேண்டிக்கொள்ளப்பட்டார். அதற்கிடை யில் அவர் மரியாதையாக நிபந்தனை ஒன்றையும் அந்த இளைஞன்மீது விதித்தார். நிறை கிண்ணத்தினின்று ஒரு சொட்டுப்பாலாவது தரையின்மீது சிந்தலாகாது என்பது அந்த நிபந்தனை. இளைஞனும் அதற்கு உட் பட்டவராய் பாற்கிண்ணத்தைக் கையில் ஏந்திக் கொண்டு அமைதியாக வலம் வந்தார். அவருடைய மனதைப் புறவுலகத்தின்கண் கவர்ந்திழுப்பதற்கான ஏதுக்கள் ஏராளமாய் இருந்தன. சங்கீதம் ஒருபுறம், கட்டழகிகளின் வசீகரமான முகத்தோற்றங்கள் மற் றொருபுறம். ஐம்பொறிகள் வாயிலாகவும் மனதை வெளியே இழுப்பதற்கான அமைப்புகள் ஆங்கிருந்தன. வேந்தனுடைய விருப்பத்திற்கு இயைந்து இளைஞன்

ஏழுதடவை அந்த சபையை வலம்வந்தார். ஆனால் ஒரு சொட்டுப்பாலும் கீழே விழவில்லை! புறவுலகின் கவர்ச்சிகரமான அமைப்புகள் இளைஞனுடையமனதை வெளியில் கொண்டுவர சக்தியற்றவைகளாய்ப்போய் விட்டன. அந்த சுகபிரம்மத்தினுடைய அனுமதியின்றி அவருடைய மனது புறவுலகுக்கு வராது. அத்தகைய சீரிய பாங்கில் தமது மனதை அவர் ஆண்டுவந்தார். பால்க் கிண்ணத்தை அரசருடைய முன்னிலையில் இளைஞன் கொண்டுவந்து வைத்தானபிறகு ஜனக மஹாராஜர் அவருக்கு உபதேசம் ஒன்றைச் செய்யலானார். "உமது தந்தையார் ஆகிய வியாசபகவான் உமக்கு எதைப் புகட்டியிருக்கின்றாரோ, உமது சுவானுபவத்தில் எந்தப் பேருண்மையை நீர் அறிந்திருக்கின்றீரோ அதைத்தான் முடிவானதில்லை என்று நானும் உமக்கு எடுத்து இயம்புகிறேன். நீர் பிரம்மம் என்னும் மெய்ப்பொருளை அறிந்துள்ள நிறைஞானி ஆவீர். உமது ஆச்ரமத்துக்கு நீர் திரும்பிப் போகலாம்."

சுகபிரம்மத்தின் வாழ்க்கையினின்று ஆத்மசாதகர்கள் அவசியம் அறிய வேண்டிய ஓர் உண்மை வெளியாகிறது. சாஸ்திரங்களுக்குப் பிரதிநிதியாய் இருப்பவர் வியாசபகவான். மெய்ஞான குருவினுடைய ஸ்தானத்தில் இருப்பவர் ஜனகர். சுவானுபூதிக்கு எடுத்துக்காட்டாக இலங்குபவர் சுகபிரம்மம். சாஸ்திரம், சுவானுபவம், குருவின் உபதேசம் ஆகிய இம் மூன்றும் ஒன்றை ஒன்று அனுசரித்திருக்கின்றன; இம் மூன்றுக்கு மிடையில் முரண்பாடு இல்லை என்பது வெளியாகிறது.

ஜனக மஹாராஜா ஒரு ராஜரிஷி. சுகபிரம்மமோ பிரம்மரிஷி. ராஜரிஷியை விட பிரம்மரிஷி மேலானவர் என்ற ஐதிகம் சிலர்க்கிடையில் உண்டு. ஆனால் அக்கொள்கைக்கு ஆதரவு இல்லை. பிரம்மஞானத்தை அடைந்தவர்கள் அனைவரும் பிரம்ம சொரூபம் ஆய் விடுகின்றனர். அதன் பிறகு பிரம்மரிஷி யென்றும் ராஜரிஷியென்றும் பாகுபாடு செய்வதெல்லாம் பொருளற்றதாய் விடுகிறது.

சுகபிரம்மத்தின் வாழ்க்கையினின்று மற்றோர் உண்மை வெளியாகிறது. யார் ஒருவன் முற்றிலும் தன் மனதைக்கட்டி ஆளுபவன் ஆகின்றானோ அவன் மீது புறவுலகமானது ஆதிக்கம் எதையும் செலுத்த வல்லது ஆகாது. அவன் அனுமதி கொடுத்தாலன்றி புறவுலகமானது எவ்விதமான உணர்வையும் அந்த ஞானியின் உள்ளத்தில் உண்டுபண்ணாது. தன் மனதைக் கட்டி ஆளுகின்றவனுக்கு அடிமைத்தனம் என்பது மேலும் உண்டாகாது. ஞானியினுடைய மனது முற்றிலும் விடுபட்டது ஆய்விடுகிறது. மனத்தகத்து விடுதலை அடைந்திருப்பவனே இவ்வுலகினுள் நன்கு வாழத்தகுதியுடையவன் ஆகிறான். உலகத்தைப்பற்றி மக்கள் இரண்டு விதமான கொள்கைகள் கொண்டிருப்பதைப் பொதுவாகக் காண்கிறோம். சிலர் உலகைக் கேடு நிறைந்தது என்கின்றனர். உலகில் நிகழ்வதெல்லாம் தீங்கு நிறைந்ததே என்பது அவர்கள் கொள்கை. "இவ்வுலகம் எவ்வளவு பொல்லாங்குடையது, எவ்வளவு தீங்கு நிறைந்தது" என்று அவர்கள் சொல்லு

கின்றனர். அதற்கு நேர்மாறாக மற்றொரு கூட்டத்தார் இருக்கின்றனர். அவர்கள் உலகம் இன்பம் நிறைந்தது என்று பொருள்படுத்துகின்றனர். உலகில் நிகழ்வன யாவும் நலம் படைத்தவைகள் என்பது அவர்கள் கொள்கை. "இவ்வுலகம் எவ்வளவு அழகானது, எவ்வளவு ஆச்சரியமானது" என்று அவர்கள் இயம்புகின்றனர். யார் தங்களுடைய மனதைக்கட்டி ஆளுவதில்லையோ அவர்களுக்கு இவ்வுலகம் தீங்கு மிக நிறைந்தது; அல்லது இவ்வுலகை மிக உயர்த்திப் பேசுமிடத்து இது நலம் கேடு ஆகிய இரண்டும் கலந்துள்ளது. என்றைக்கு நாம் நம்முடைய மனதுக்கு அதிபதிகள் ஆய் விடுகின்றோமோ அன்றைக்கு இதே உலகம் நமக்கு நலம் அனைத்தும் நிரம்பப்பெற்றது ஆய்விடுகிறது. நமது மனது ஒழுங்குப்பட்டுவிடுமிடத்து புறவுலகினின்று நமக்கு நலம் செய்வதாகவோ அல்லது கேடு செய்வதாகவோ அமைவது ஒன்றுமில்லை. உலகிலுள்ள யாவும் தான் தான் பெறவேண்டிய ஸ்தானத்தைப் பெற்றிருப்பதாக நாம் காண்போம். அனைத்தும் ஒழுங்குப்பாட்டுடன் இருப்பதையும் நாம் அறிந்துகொள்வோம். இவ்வுலகம் ஒரு கொடிய நரகம் என்ற கருத்துடன் சிலர் வாழ்க்கையைத் துவக்குகின்றனர். அவர்கள் தன்னடக்கம் பழகுதலில் வெற்றி பெற்றுவிடுவார்களாகில் பிறகு இதே உலகத்தை சொர்க்கமென்று சொல்ல முன்வருவார்கள். நாம் உண்மையான கர்மயோகிகள் ஆக முயலவேண்டும். மனதைக்கட்டியாளுதல் என்னும் பெருநிலையை அடைதல் நமது குறிக்

கோள். இதை லக்ஷியமாக வைத்துக்கொண்டு வாழ்க்கையை எந்தப் படித்தரத்திலிருந்து வேண்டுமென்றாலும் நாம் ஆரம்பிக்கலாம். மனதை வெற்றிகரமாக நாம் அடக்கிவிட்டால் ஜீவபோதம் நம்மை விட்டு அறவே அகன்று போய்விடுகிறது. "யானே பொய்" என்னும் நிலையை நாம் அடைந்தானவுடனே இவ்வுலகின் காட்சி நமக்கு மாறிவிடும். கேடுமிக நிறைந்துள்ளதாகத் தென்படும் இவ்வுலகம் நலம் அனைத்தும் அமையப்பெற்றிருப்பதாகப் புலப்படும். சீர்மைகள் அனைத்தும் அதனிடத்து நிறைந்திருப்பதும் அப்பொழுது நமக்கு விளங்கும். இவ்வுலகத்தின் அமைப்பு முழுதுமே அருள்மிக நிறைந்திருப்பதாக அப்பொழுது நமக்குத் தென்படும். மானுடர் ஒவ்வொருவருடைய முகவிலாசமும் நலன் மிக உடைத்திருப்பது அப்பொழுது வெளியாகும். இத்தகைய பெருநிலையை அடையப் பெறுவதே கர்மயோகத்தின் குறியும் நெறியும் ஆகும். நாள்தோறும் நாம் நடத்திவரும் வாழ்க்கையில் நிறைநிலையை நமக்கு நல்க வல்லதும் இந்தக் கர்மயோகமேயாம்.

நாம் அனுஷ்டிப்பதற்கு யோகங்கள் பல இருக்கின்றன. அவை ஒன்றோடொன்று முரண்படுபவையல்ல. நாம் எந்த யோகத்தை அனுஷ்டித்தாலும் அது நம்மைப் பரிபூரண நிலையின்கண் அழைத்துச் செல்லுகிறது. நிறைநிலை என்னும் குறியின்கண் இவையாவும் நம்மை எடுத்துச் செல்வதால் இந்த யோகசாதனங்கள் ஒன்றை ஒன்று அனுசரித்திருக்கின்றன. இவைகளுள் எந்த சாதன முறையை நாம் எடுத்துக் கொண்டாலும்

அதைத் தீவிரமாக அனுஷ்டிப்பது அவசியமாகிறது. ஓர் ஊருக்குப் போகப் பாதைகள் பல இருக்கின்றன. ஏதேனும் ஒரு பாதையில் ஒழுங்காகப் போகின்றவன் அவ்வூரை அடைந்துவிடுகிறான். சாதனங்களை முறையாக அனுஷ்டித்தால்தான் நாம்முன்னேற்றம் அடைய முடியும். இந்த சாதன முறைகளைப் பற்றி முதலில் கேட்கவேண்டும். கேட்டதைப்பற்றி நன்றாக எண்ணிப் பார்க்கவேண்டும். அதன் பிறகு அதை அனுஷ்டானத்தில் கொண்டு வருதல் அவசியமாகிறது. வேதாந்த பரிபாஷையில் இத்தகைய முயற்சிகள் சிரவணம், மனனம், நிதித்யாசனம் எனப் பெயர் பெற்றுள்ளன. கேட்பது, எண்ணுவது, பழகுவது ஆகிய மூன்று முறைகளும் ஒவ்வொரு யோகத்துக்கும் பொருந்தியவைகளேயாம். வெறும் கேள்வியைக்கொண்டு சிலர் திருப்தியடைந்து விடுகின்றனர். கேட்டதை நன்கு அறிந்துகொள்ளுதல் பொருட்டு அதைப்பற்றி ஆழ்ந்து சிந்திப்பது அவசியமாகிறது. முதல் தடவை கேட்பதாலும் சிந்திப்பதாலும் சாதகன் ஒருவனுக்கு அதன் உட்கருத்து விளங்காது போய்விடலாம். ஆயினும் அக்கோட்பாட்டைப் பற்றித் திரும்பத் திரும்பக் கேட்பதாலும் எண்ணிப் பார்ப்பதாலும் அது தெளிவுபட மனதில் விளங்கும். எடுத்த எடுப்பிலேயே அனைத்தையும் அறிந்து கொள்ளுதல் யாருக்கும் சாத்தியமன்று. இறுதியாக எண்ணிப் பார்க்குமிடத்து யோக சாதனங்கள் அனைத்துக்கும் விளக்கம் மனிதனிடத்திலேயே இருக்கிறது. தான் எதை அனுஷ்டிக்கின்றானோ அதை

மட்டும் ஒருவன் அறிந்துகொள்ள வல்லவனாகிறான். ஒருவன் மற்றொருவனுக்குப் புகட்டுதல் என்பது உண்மையன்று. நம்மில் ஒவ்வொருவனும் தனக்குத் தானே பாடம் புகட்டியாக வேண்டும். புகட்டுபவன் என்று அழைக்கப்படும் ஒருவன் புறவுலகில் இருக்கின்றான். அம்மனிதன் செய்கின்ற செயல் தான் யாது? எண்ணிப் பார்ப்பதற்கும் அறிந்து கொள்ளுதற்கும் அவன் தூண்டுதல் தருகிறான். அவன் தருகிற தூண்டுதலைப் பயன்படுத்திக் கொண்டு உள்ளிருக்கும் அறிவுத் திறமை விழித்தெழுந்திருக்கிறது. அப்படி விழித்தெழுந்ததும் எண்ணிப் பார்த்தல் என்னும் செயலை அது புரிகின்றது. அப்படி எண்ணிப் பார்ப்பதால் புகட்டப்பெறும் விஷயத்தை அது ஓர்ந்து உணர்கிறது. பின்பு அக்கருத்தை அது அறிந்து கொள்கிறது. எனவே அறிந்து கொள்ளுதல் என்னும் செயல் உண்மையில் ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்தினுள்ளே நிகழ்கிறது. அதற்குப் பொருத்தமான தூண்டுதலைக் கிளப்பியது ஒன்றே புறவுலகிலிருக்கும் ஆசிரியன் செய்கின்ற செயல் ஆகிறது. அங்ஙனம் தனக்குள்ளேயே அறிந்து கொண்ட கருத்துக்களை ஆழ்ந்து சங்கல்பிக்கும் வல்லமை மனத்தினுள் வளர்கிறது. கருத்துக்கள் முதலில் உணரப்படுகின்றன. பின்பு அவைகள் ஆழ்ந்து எண்ணப்படுகின்றன. ஆழ்ந்து எண்ணுதல் என்னும் செயலை சங்கல்பித்தல் என்று பகர்கிறோம். எண்ணம் வலுத்தான பிறகு அதைச் செயலில் கொண்டு வருவதற்கான பேராற்றல் உள்ளத்தில் உரு எடுக்கிறது.

எண்ணியதை எண்ணியாங்கு செய்துமுடிக்கும் திறமை அந்த சாதகனுக்கு வந்து அமைகிறது. அவனுடைய நாடி நரம்புகளிலும், தசைகளிலும், உடல் முழுதிலுமே அவன் எண்ணியுள்ள எண்ணம் ஊறி விடுகின்றது. உடல், உள்ளம் ஆகிய அவனுடைய அமைப்பு முழுதிலுமேயே தான் கொண்டுள்ள கருத்து ஆழ்ந்து பதிந்துவிடுகிறது. அக்கருத்தைச் செயலுக்குக் கொண்டு வரக்கூடிய கருவியாக உடல் வேலை செய்கிறது. செய்கின்ற செயல்கள் அனைத்தையும் சுயநலமற்றுச் செய்ய வேண்டும் என்னும் கருத்து யோகியினிடம் வலுத்து விடுகிறது. பின்பு அவன் தனக்காகவென்று எச்செயலையும் செய்வதில்லை. சுயநலப்பற்றை அறவே அகற்றிய கர்மயோகியாக அவன் அமைந்து விடுகின்றான். அங்ஙனம் சுயநலப்பற்று அறவே அகன்றுவிடுங்கால் ஜீவபோதமும் அவனிடத்திருந்து அகன்றுபோய் விடுகிறது.

"யான் எனது" என்னும் சுயநலப்பற்றை அறவே ஒழிப்பது யோகசாதனங்களின் குறிக்கோள் ஆகும். பற்று நீங்குதல் என்னும் இப்பெருநிலையை அடைதற்கு ஒரு மனிதன் எந்த சமயத்தைச் சார்ந்திருக்கவேண்டும் என்பது கேள்வியல்ல. எத்தகைய கொள்கைகளில் அவன் நம்பிக்கை வைத்திருக்கின்றான் என்பதும் முக்கியமல்ல. ஒரு மனிதன் எந்த மதத்தைச் சேர்ந்தவனாக இருக்கவேண்டும் என்னும் கேள்வி எழ ஈண்டு இடமில்லை. தன் விருப்பப்படி அவன் ஹிந்துவாக இருக்கலாம், முஸ்லீம் ஆக

இருக்கலாம், கிறிஸ்தவனாக இருக்கலாம், இன்னும் வேறு எந்த மதத்தை வேண்டுமென்றாலும் சார்ந்திருக் கலாம், மதப்பற்று மனிதனுடைய வாழ்க்கைக்கு மிக முக்கியமானதன்று. அவன் சுயநலம் அற்றவனாக இருக்கின்றானா என்பதுதான் கேள்வி. எவன் ஒருவன் சுயநலத்தை அறவே அகற்றிவிடுகின்றானோ அவனுக்கு ஆத்ம பரிபாகம் அமைந்துவிட்டது என்று உறுதிகூற லாம். பாரமார்த்திக விஷயங்களைப் புகட்டும் சாஸ் திரங்களைப் படிக்காமலேயே ஒருவன் சுயநலப்பற்று அற்றவனாக முடியும். வழிபாட்டுக்காக கோயில்களுக் குப்போகாதும், புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத் திரை போகாமலும் ஒரு மனிதன் சுயநலப்பற்றை ஒழித்துவிட முடியும். சுயநலப்பற்றை ஒழித்தவனே ஆத்ம பரிபாகம் அடைந்தவனாகிறான். அலை தனது நாமத்தையும் ரூபத்தையும் இழந்துவிட்டால் அதன் கதி என்ன ஆகிறது என்பது கேள்வி. அலை என்கிற வியக்தியை இழந்துவிட்டு அதன் தோற்றத்துக்கு ஆதாரமாய் இருந்த கடல் ஆக அது ஒடுங்கிவிடுகிறது. ஜீவன் ஒருவனுடைய நிலையும் அத்தகையதே. சுயநலப் பற்றை அவன் ஒழித்துவிடுவானாகில் ஜீவபோதம் அவனைவிட்டு அறவே அகன்று போய்விடுகிறது. ஜீவ போதம் என்னும் சிறுமை அகன்றுபோன பிறகு பரபோதம் என்னும் பாரமார்த்திகப் பெருநிலை எஞ்சி நிற்கிறது.

கர்மயோகம் போன்றே ராஜயோகம், பக்தி யோகம், ஞானயோகம் ஆகிய வேறு யோகசாதனங்கள்

இருக்கின்றனவென்று நாம் ஏற்கனவே இயம்பியுள்ளோம். இத்தகைய வித யோகசாதனங்களுள் மனிதன் தனக்கு ஏற்றாது ஏதேனும் ஒன்றை எடுத்துக்கொண்டால் போதுமானது. தான் கடைப்பிடிக்கும் யோக சாதனத்தை ஒருவன் முறையாகச் செய்வானாகில் அவன் முற்றிலும் பரிபக்குவம் அடைந்துவிடுகின்றான். மனிதனைப் பக்குவப்படுத்துவதற்கு எல்லா யோகங்களையும் பழக்கத்தில் கொண்டுவரவேண்டும் என்பது அவசியமல்ல. ஏதேனும் ஒன்றை ஒழுங்காக அனுஷ்டித்தாலே போதுமானது. யோக சாதனங்கள் என்று இயம்பப்பெறும் இந்த நெறிகள் அனைத்துக்கும் பொதுவாய் அமைந்துள்ள குறி ஒன்றேயாம். ஜீவபோதத்தினின்று விடுதலை பெற்று மோக்ஷமடைவது குறி ஆகும்.

**साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।**
**एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥**

சாங்கியமும் யோகமும் வெவ்வேறென்று பாலர் பகர்வர்; பண்டிதர் அங்ஙனம் பேசார். இவற்றுள் ஒன்றை உறுதியாய் அனுஷ்டிப்பவன் மற்றதின் பலனையும் பெறுகிறான். (கீதை 5: 4) கர்மயோகத்தை முறையாக அனுஷ்டிக்கின்றவனும் ஞானயோகத்தை அனுஷ்டிக்கின்றவனும் ஒரே நிலையை அடைகின்றனர். எனவே தனக்குகந்த ஏதேனும் ஒரு யோகத்தை ஆத்ம சாதகன் தீவிரமாகக் கையாண்டு ஜீவபோதத்தை அகற்றிவிட்டு பரபோதத்தில் நிலைபெற்றிருப்பதே வாழ்க்கையின் குறிக்கோள். இப்பெருநிலை முக்தி என்று அழைக்கப்படுகிறது.

# 7. முக்தி

கர்மயோகத்தில் கர்மம் என்னும் சொல்லுக்கு நாம் ஏற்கனவே விளக்கம் கொடுத்திருக்கிறோம். நாம் புரிகின்ற செயல்களுக்குக் கர்மம் என்றுபெயர். வினை என்று இயம்புகின்றபொழுதும் கர்மத்தையே நாம் குறிப்பிடுகிறோம். இனி, கர்மம் என்னும் சொல்லுக்கு மற்றொரு விளக்கம் கொடுப்பது அவசியமாகிறது. மனத்திடத்து கர்மம் கொண்டுள்ள தொடர்வை நாம் கணக்கில் எடுத்துக் கொள்வது அவசியமாகிறது. நாம் புரிகின்ற ஒவ்வொரு செயலும் மனதின்மீது ஆதிக்கம் செலுத்துகிறது. அதனால் கர்மம் என்னும் சொல்லுக்குக் காரணம் என்பது ஒரு விளக்கமாகிறது. காரணம் உள்ள இடத்தில் காரியமும் உண்டு. நாம் செய்கிற ஒவ்வொரு செயலும், நம்மிடத்து நிகழ்கிற ஒவ்வொரு நிகழ்ச்சியும், நாம் எண்ணுகிற ஒவ்வொரு எண்ணமும் ஏதேனும் ஒரு விதத்தில் காரியப்படுகிறது. காரணமின்றிக் காரியமில்லை. ஆதலால் காரியத்துக்கு முகாமையாக இருக்கிற காரணத்தையே கர்மம் என்று சொல்லுகிறோம். கருமநியதி என்னும் கோட்பாட்டைப்பற்றி நாம் பேசுகிறோம். வினையும் வினையினுடைய பயனும் என அது பொருள்படுகிறது. காரண காரியம் என்னும் நியதி விலக்கமுடியாத பாங்கில் அமைந்துள்ளது. இதற்குக் கர்மம் என்கிற பெயர் அமைந்திருக்கிறது. ஏதேனும் ஓர் இடத்தில் காரணம் ஒன்று இருக்குமாகில் அது காரியத்தை உண்டுபண்ணியே ஆகவேண்டும். காரணத்தினின்று காரியத்தைப் பிரித்துவிடமுடியாது.

காரண காரிய நியதியைத் தடுக்கவோ, மாற்றவோ நமக்கு இயலாது. அகிலாண்டங்களிலும் இந்த காரண காரிய நியதி ஆதிக்கம் செலுத்தி வருகிறது என்று நமது தத்துவ தர்சனங்கள் இயம்புகின்றன. பொருள் ஒன்றை நாம் காண்கிறோம், மற்றொன்றைத் தொட்டு உணர்கிறோம், இன்னும் ஒன்றைச் செயலுக்குப் பயன் படுத்துகிறோம். இப்படி நம்மிடத்தில் ஏதேனும் ஒரு பாங்கில் ஏதேனும் ஒரு கர்மம் நிகழுமாகில் அதில் இரண்டு பகுதிகள் அமைந்திருப்பதை அறியலாம். அதற்கு முன்பு நிகழ்ந்த ஏதோ ஒரு வினையின் விளை வாக அது அமைவது ஒருபுறம்; இனிமேல் நிகழப் போம் ஒரு செயலுக்கு மற்றொரு புறம் அது காரணமாய் இருக்கிறது. சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். செடி ஒன்று வளர்கிறது. முன்பு விதைத்த வித்தின் விளைவு அது. அந்த அளவில் அது காரியமாகிறது. இனிவரும் வித்துக்கு அதே செடி மூகாமையாகிறது. அந்த அளவில் அது காரணம். இங்ஙனம் செடியும் வித்தும் ஆதியந்தமில்லாது காரண காரியமாக மாறி மாறி அமைந்துகொண்டே போகின் றன. காரணம் இருக்குமிடத்துக் காரியமும் உண்டு. இதுவே இயற்கையின் நியதி. இந்த நியதியை இயற் கையின் சட்டம் என்றும் 'விதி' என்றும் பகர்கிறோம். நியதி அல்லது விதியை இனி விளக்குவது அவசிய மாகிறது. காரண காரியமாக அமைந்துள்ள செயல்கள் முறைபிறழாது திரும்பத் திரும்ப நிகழ்வனவாகின்றன. சூரியன் தோன்றினால் இருள் போய்விடுகிறது. இந்த

நிகழ்ச்சியை ஒரு தடவை பார்க்கிறோம், இரண்டு தடவை பார்க்கிறோம், பல தடவைகள் பார்க்கிறோம். எப்பொழுதெல்லாம் சூரியன் தோன்றுகிறதோ அப்பொழுது இருள் இல்லாது போய்விடுகிறது என்னும் நியதியை நாம் அறிந்துகொள்கிறோம். இந்த நியதியினின்று இயற்கையின் நடைமுறை வழுவிப்போய்விடுவதில்லை. விதிவழுவாது வந்தமையும் இயற்கையின் நடைமுறைக்கு நியாய சாஸ்திரம் வியாப்தி என்னும் பெயர் கொடுத்திருக்கிறது. சட்டம் என்றும், நியதி என்றும், விதி என்றும் இயம்புமிடத்து காரண காரியத்தின் முறை பிறழாத தொடர்வை நாம் கருத்தில் வாங்கிக்கொள்கிறோம். இரவில் துணியால் கண்ணைக் கட்டிக்கொண்டு நாம் படுத்துறங்கப் போகிறோம் என்று வைத்துக்கொள்வோம். நெடுநேரத்துக்குப் பிறகு தூக்கத்தினின்று எழுந்திருக்கிறோம். துணியால் கண்கள் கட்டப் பெற்றிருப்பதால் ஒன்றையும் பார்க்க நமக்கு இயலுவதில்லை. ஆயினும் சூரியன் உதித்து நெடுநேரம் ஆகிறது என்று நாம் கேள்விப்பட்டால் இனி நம்மைச் சுற்றிலும் இருள் இல்லை என்று யூகிக்கிறோம். காரண காரியமாகிய செயல்களை இணைபிரியாதவைகளாகப் பல தடவைகளில் நாம் கண்டிருக்கின்றோம். ஆதலால் அவைகளைக் குறித்து மனதில் ஒரு முடிவு செய்திருக்கிறோம். அதை அடிப்படையாகக் கொண்டு இப்பொழுது இருள் நீங்கிவிட்டது என்கிற முடிவுக்கு வருகிறோம். மனது என்னும் தடாகத்தில் எண்ணம் என்கிற அலை ஒன்று உண்டாகிறது. அந்த

அலையைத் தொடர்ந்து வேறு பல அலைகள் தோன்ற ஆரம்பித்துவிடுகின்றன. சூரியன் உதயமாகியிருக்கிறது என்கிற எண்ணம் ஓர் அலையாகிறது. அந்த அலையைத் தொடர்ந்து இருள் அகன்றுவிட்டது என்கிற மற்றொரு அலை தோன்றுகிறது. மக்கள் உறக்கத்தினின்று விழித்துக்கொண்டார்கள் என்கிற மற்றொரு அலை அதைத் தொடர்ந்து வருகிறது. இங்ஙனம் ஓர் அலையைத் தொடர்ந்து வேறு பல அலைகள் உதிப்பது இயல்பு. ஓர் எண்ணத்தைத் தொடர்ந்து அதனோடு இணக்கப் பெற்றுள்ள வேறுபல எண்ணங்கள் உள்ளத்தில் உதிப்பதுதான் மன அமைப்பைப்பற்றிய நியதி. எண்ணங்கள் என்னும் மனதில்உள்ள அலைகள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருப்பது மன அமைப்பைப்பற்றிய கோட்பாடு ஆகும். இத்தகைய அற்புதமான அமைப்பின் ஒரு பகுதியாக காரண காரியம் என்கிற நியதியும் அந்த மனதில் இடம் பெற்றிருக்கிறது. மனதோ எங்கும் வியாபகமானது. அங்ஙனம் விரிவடைந்துள்ள விராட் மனதில் எண்ணங்கள் ஒன்றோடொன்று தொடர்வு கொண்டிருப்பதை மாற்றிவிட எவர்க்கும் இயலாது. இணக்கம் கொண்டுள்ள எண்ணங்கள் எங்கும் வியாபகமாய் இருப்பதை வியாப்தி என்று சாஸ்திரங்கள் சாட்டுகின்றன.

அண்டத்தில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஒரு பகுதியைப் புறவுலகம் என்கிறோம். மற்றொரு பகுதியை அகவுலகம் என்கிறோம். பஞ்சேந்திரியங்கள் மூலமாக வெளியில் நுகரப்படுபவை யாவும் புறவுல

குக்கு உரியவைகள். மனதினுல் தன் உள்ளேயே கருதப்படுபவைகள் யாவும் அகவுலகத்துக்கு உரியவை கள் ஆகின்றன. நியதி என்றும் விதி என்றும் இயற் கையின் சட்டம் என்றும் சொல்லப்படுகிற முறை பிறழாத கோட்பாடு புறவுலகுக்கும் பொருந்துகிறது, அகவுலகுக்கும் பொருந்துகிறது. புறவுலகை ஆளுகிற நியதி வேறு, அகவுலகை ஆளுகிற நியதி வேறு என்று நாம் எண்ணலாகாது. ஏதேனும் ஒரு செயல் நிகழ்ந் தால் அதைத் தொடர்ந்துவருகிற செயலானது முறை பிறழாது வெளியுலகிலும் நடைபெறுகிறது, அகவுல கிலும் நடைபெறுகிறது. காரண காரியம் என்னும் நியதி வெளியுலகம், உள் உலகம் ஆகிய இரண்டுக்கும் பொதுவானதே. இனி அதினின்று மற்ருேர் கோட் பாட்டை நாம் அறிந்துகொள்வது அவசியமாகிறது. நியதி அல்லது இயற்கையைப்பற்றிய சட்டம் உண்மை யில் வெளியுலகில் இல்லை. ஆகர்ஷணம் அல்லது ஈர்ப்புச் சக்திக்கு இயற்கை உட்பட்டு இருக்கிறது. பூமியினின்று மேலே வீசி எறிகிற கல் திரும்பவும் பூமியில் வந்து விழுகிறது. ஈர்ப்புச் சக்தியின் விளைவு இது. இந்த ஈர்ப்புச்சக்தி பூமியில் இருக்கிறது. ஆனுல் இந்த ஈர்ப்புச் சக்தியைப் பற்றிய நியதியோ பூமியில் இல்லை நம்முடைய மனதில் இருக்கிறது. இயற்கையின் நடைமுறையைப் பற்றிய எந்த நியதியும் புறவுலகில் எவ்விடத்திலாவது அமைந்திருப்பதன்று. இனி நியதி அல்லது இயற்கையின் சட்டதிட்டத்துக்கு நாம் விளக்கம் தந்துவிடலாம். தொடர்ந்து முறையாக

நிகழ்கின்ற பல நிகழ்ச்சிகளை நாம் மனதில் என்ன பாங்கில் ஓர்மைப்படுத்துகின்றோமோ அந்த ஓர்மைப் பாட்டுக்குத்தான் நியதி என்று பெயர். எனவே நியதி யைப்பற்றிய கோட்பாடு மனதில் இருக்கிறது. சில சம்பவங்கள் உண்டாகின்றன. அவை ஒன்றன்பின் ஒன்றாக வந்துகொண்டிருக்கின்றன; அல்லது அவை யாவும் தொடர்ந்து நிகழ்கின்றன. அவைகளுக்கிடை யிலுள்ள ஒழுங்குப்பாட்டைப்பற்றி மனதில் தெளிவு ஒன்று உண்டாகிறது; திடமான கொள்கை ஒன்று உண்டாகிறது. என்ன பாங்கில் காரண காரியமாக இந்நிகழ்ச்சிகள் இயற்கையில் அமைகின்றனவென்று நம் அறிவைக்கொண்டு நாம் கிரகிக்கின்றோமோ அந்த நிகழ்ச்சிகளின் ஒழுங்குப்பாட்டைப்பற்றி மனதில் நாம் ஒரு முடிவு கட்டுகின்றோம். இப்படி மனதில் கொண் டுள்ள கொள்கையைத்தான் நியதி என்றும் விதி என் றும் சட்டதிட்டம் என்றும் நாம் இயம்பிவருகிறோம்.

இனி, ஆராய்ச்சிக்குரிய மற்றொரு கேள்வி எழு கிறது. இயற்கையின் நியதி அல்லது சட்டம் ஒன்று அகிலாண்டத்துக்கும் பொதுவானது என்பதன் கருத்து யாது? யாண்டும் நிலைத்துள்ள மெய்ப் பொருள் ஒன்று உளது. அம் மெய்ப்பொருளின் ஒரு சிறுபகுதி தேச கால நிமித்த சொரூபமாகத் தன்னை விளக்கிக்கொண்டிருக்கிறது. இப்படி தேசம் காலம் நிமித்தம் மயமாக அது தன்னை விளக்குவதால் ஐம் பொறிகளுக்கும் அறிவுக்கும் அது புலனாகிறது. அகண்டாகாரமாயுள்ள மெய்ப்பொருளின் ஒரு சிறுபகு

தியே இப்படித்தன்னை தேசகால நிமித்தமாக விளக்கிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது உண்மை ஒன்று வெளியாகிறது. தேசகால வர்த்தமானத்தினுள் கட்டுப் பட்டிருக்கிற ஜகத்தில்தான் நியதி அல்லது இயற்கைச் சட்டம் ஆதிக்கம் செலுத்தமுடியும். தேச கால நிமித் தத்தைக் கடந்துள்ள பாரமார்த்திக நிலையில் நியதி என்பதற்கும் இயற்கையின் சட்டம் என்பதற்கும் இடமில்லாது போய்விடுகிறது. மேலும் அண்டம் என்பதைப்பற்றி நாம் பேசும்பொழுதெல்லாம் எது நம்முடைய மனதுக்கு இலக்கு ஆகின்றதோ அந்த ஒரு சிறுபகுதியைத்தான் நாம் குறிப்பிடுகிறோம்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு

என்பது கோட்பாடு. ஐம்பொறிகளின் துணையைக் கொண்டும் அவைகளின் துணை இல்லாதும் மனது இவ்வுலகைக் கிரகிக்கிறது. இப்படி மனதுக்கும் பஞ் சேந்திரியங்களுக்கும் எட்டுவதை உலகம் என்கிறோம். கட்புலனுகிற இந்த உலகம் நியதிக்கு உட்பட்டிருக் கிறது. ஆனல் மெய்ப் பொருளோ இவ்வுலகின்கண் அடங்கியதன்று. இவ்வுலகைக் கடந்துள்ள மெய்ப் பொருள் நியதி அல்லது சட்டம் எதற்கும் உட்படுவ தில்லை. ஏனென்றால் காரண காரியமாக அமையும் நிமித்தத்துக்கு ஆங்கு இடமில்லை. நம்முடைய மனது உலகின் எப்பகுதிகளை யெல்லாம் கிரகிக்கிறதோ ஆங்கெல்லாம் நியதிக்கு இடமுண்டு. மனதையும் இந்திரியங்களையும் கடந்தநிலை மெய்ப்பொருளுக்கு

உண்டு. ஆங்கு காரண காரியமாக வருகிற நிமித்தம் இடம்பெறுவதில்லை. எனவே நிமித்தம் என்னும் கோட்பாடு அந்த அதீத நிலையைப் பந்தப்படுத்துவதில்லை. மனதின் செயலுக்கும் ஆங்கு இடமில்லை. சீர்தூக்கிப் பார்ப்பதற்குப் பொருள்கள் பல ஆங்கு இல்லை. எங்குப் பொருள்கள் பல இருக்கின்றனவோ, எங்குக் கருத்துக்கள் பல இருக்கின்றனவோ அங்கு நிமித்தம் என்னும் செயலுக்கு இடமிருக்கிறது. பொருள்களை ஒன்று இரண்டு என்று பாகுபடுத்த முடியாத அதீத நிலையில் எதை எதனோடு சீர்தூக்கி நிமித்தம் என்னும் கோட்பாட்டை நிலைநிறுத்துவது? வரம்பு கடந்த மெய்ப்பொருள் நாமம் ரூபம் என்கிற வரம்பினைத் தனக்கு அமைத்துக்கொள்கிறது. நாமம் ரூபம் என்கின்ற வரம்போடு கூடிய ஜகத்திடத்து நிமித்தம் என்கின்ற நியதிக்கு இடமுண்டு. அந்த நியதிக்கு உட்பட்டதாக இயற்கையும் இயங்கிவருகிறது. நாமரூபத்துக்கு உட்பட்டவைகள் எல்லாம் நியதிக்கும் உட்பட்டவைகளாகின்றன. ஏனென்றால் நியதி என்று சொல்லப்படுவதும் இயற்கையின் சட்டம் என்று சொல்லப்படுவதும் காரணகாரிய சொரூபமாக இருக்கின்ற நிமித்தத்தில் அடங்கியிருக்கின்றன. இச்சா சுதந்தரம் (free will) என்பதைப்பற்றி நாம் பேசுகிறோம். ஆனால் நியதிக்குள்ளே கட்டுண்டு கிடக்கின்ற ஜீவன்களுக்கிடையில் இச்சாசுதந்தரம் என்பது ஒன்றுமில்லை. இச்சா சுதந்தரம் என்கின்ற சொல்லே முரண்பாட்டைக் கொண்டிருக்கிறது. இச்சை என்பது ஒரு

சொல். சுதந்தரம் என்பது மற்ருெரு சொல். இவ் விரண்டினுள் இச்சை நம்முடைய அறிவுக்கு உட்பட் டது. எதையெல்லாம் மனதைக்கொண்டு நாம் அறி கின்ருேமோ அது இந்த அண்டத்தினுள் அடங்கியதா கிறது. இந்த அண்டத்தினுள் அடங்கியிருப்பவைகள் அனைத்தும் தேசம் காலம் நிமித்தம் என்னும் நியதி களில் கட்டுப்பட்டு விடுகின்றன. எதையெல்லாம் மனதைக்கொண்டு நாம் உணருகின்ருேமோ அல்லது உணரக்கூடியதாக எது இருக்கின்றதோ அது
துக்கு உட்பட்டே இருந்தாகவேண்டும்.
துக்கு உட்பட்டிருக்கும் ஒன்று நியதி அல்லது இயற் கைச் சட்டத்துக்கு உட்பட்டதாகிறது. இந்தச் சட் டத்தின்கண் அது பிணைக்கப்பட்டிருக்கிறது. பிணைக் கப்பட்டிருக்கும் ஒன்றை சுதந்தரம் உடையது என்ருே விடுதலை அடைந்தது என்ருே சொல்லலாகாது. இச்சை உள்ள இடத்தில் சுதந்தரத்துக்கு இடமில்லை; சுதந் தரம் உள்ள இடத்தில் இச்சை இல்லை. எனவே இச்சா சுதந்தரம் என்கிற சொல் முரண்பாடானது.

இச்சைக்கு உட்பட்டிருக்கிறது எதுவோ அது மற்ற கர்த்தாக்களால் இயக்கப்படுகிறது. இயக்கப் படுவதால் அது கர்மம் செய்கிறது. செய்கின்ற கர்மத் தில் காரண காரியம் என்கின்ற இரண்டு பகுதிகள் ஓயாது வந்துகொண்டே இருக்கின்றன. செய்யப்படுகிற கர்மம் ஒன்று ஒரு நிலையில் காரியமாகிறது; மற்ருெரு நிலையில் அது காரணம் ஆகிறது. இச்சையாக வடி வெடுத்தது எது என்பது அடுத்த கேள்வி. ஜீவாத்மன்

ஒருவன் இச்சை சொரூபமாக இருக்கிறான். இச்சை சொரூபமாகத் தன்னை மாற்றியமைத்திருக்கிறான் என்று சொல்லவேண்டும். அவனுடைய யதார்த்தநிலை இச்சைக்கு அப்பாற்பட்டது. தேசம் காலம் நிமித்தம் என்கின்ற வடிவத்துக்குள்ளே புகுந்துகொண்டு இச்சைகளை அவன் உண்டுபண்ணிக்கொண்டான். அப்படி அவனிடத்திருந்து உதிக்கின்ற எண்ணங்கள் எல்லாம் இச்சை மயமாய் இருக்கின்றன. தேசம் காலம் நிமித்தத்தை அவன் திரும்பவும் கடந்துவிட்டால் முக்தி அல்லது சுதந்தரநிலை அவனுடையதாகிறது. எனவே முக்தி என்பது தேசம் காலம் நிமித்தம் என்னும் படிவத்துக்கு அப்பாற்பட்டதாம். முக்தி, மோக்ஷம், விடுதலை, வீடுபேறு ஆகிய இச்சொற்கள் எல்லாம் ஒரே பொருளைத்தான் குறிக்கின்றன. முக்தி நிலையினின்று பந்தப்பட்ட நிலைக்கு வந்திருக்கின்ற பொழுது அவனை ஜீவாத்மன் என்கிறோம். தேசம் காலம் நிமித்தம் என்னும் பந்தத்தில் அவன் கட்டுண்டு கிடக்கிறான். தேசம் காலம் நிமித்தம் என்பனவற்றை முப்பாழ் என்று இயம்புவதும் உண்டு. இந்த முப்பாழ் களுக்கு அப்பாற்பட்டதாக ஆத்மன் போய்விடுகின்ற பொழுது அவனுக்குத் திரும்பவும் முக்திவந்துவிடுகிறது.

எதனிடத்திருந்து இந்த அண்டம் தோன்றிவந் திருக்கிறது? எதிலே இந்த அண்டம் நிலைபெற்றிருக் கிறது? மீண்டும் எதனிடத்து இந்த அண்டம் திரும் பிப்போகிறது?— இத்தகைய கேள்வி எழுப்பப்பட்டி ருக்கிறது. இந்தக் கேள்விக்கு விடையும் வந்துள்ளது.

முக்தியினின்று இவ் அண்டம் வந்திருக்கிறது. பந்தத்தின்கண் இது நிலைத்திருக்கிறது. திரும்பவும் இது முக்தியினிடத்துப் போய்விடுகிறது. பந்தபாசம் இருக்கும் வரையில்தான் இப் பிரபஞ்சம் தோன்றிக்கொண்டிருக்கிறது என்பது இதினின்று வெளியாகிறது. இனி மனிதனைப்பற்றிக் கேள்வி ஒன்று எழுகிறது. அகண்ட வஸ்துவே

இப்படிப் பகர்வதன் மூலம் அகண்ட வஸ்து முழுதும் மனித சொரூபத்தில் அடங்கிவிட்டது என்பதல்ல. அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் இருக்கிறது என்பது கோட்பாடு. அதை இன்னொரு பாங்கில் பகர்வோம். உள்ளங்கையில் கொஞ்சம் நீர் எடுக்கிறோம். கடல் எங்கும் நீர் நிறைந்திருக்கிறது. உள்ளங்கையில் இருக்கிற இந்த நீர்தான் கடலெங்கும் நிறைந்திருக்கிறது என்று சொல்லுகிறோம். வண்ணத்தில் கடல் மிகப்பெரியது. உள்ளங்கை நீர் வண்ணத்தில் மிகச் சிறியது எனினும் தன்மையில் கடல்நீரும் கையிலுள்ள நீரும் ஒன்றேயாம். அண்டம் முழுதும் எப்பொருளினின்று உண்டாயிருக்கிறதோ அப்பொருளே மானுடனாகவும் ஆயிருக்கிறது. மானுட சொரூபத்தை உள்ளபடி அறிந்துகொண்டால் அண்டம் முழுதினுடைய சொரூபத்தை நாம் அறிந்துகொண்டவர் ஆகிறோம். மானுட அமைப்பில் உடல் இருக்கிறது. அகிலாண்டமும் ஒரு பேருடலாகத் தென்பட்டுக்கொண்டிருக்கிறது. மனிதனுடைய உடல் அமைப்பை அறிந்துகொண்டால் அண்டம் முழுதுக்கும் உடலாய் அமைந்

திருப்பதை நாம் அறிந்துகொண்டவர் ஆகிறோம். மனிதனுக்கு மனது என்பது ஒன்று இருக்கிறது. அதே பாங்கில் அகிலாண்டநாயகனுடைய மனது இருக்கிறது. மனிதனிடத்துள்ள மனதைப்பற்றிலும் அறிந்துகொண்டால் அகிலாண்டநாயகனுடைய மனதை அறிந்து கொண்டதற்குச் சமானமாகிறது. இக் கோட்பாட்டை அடிப்படையாகக்கொண்டுதான் அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் இருக்கிறது என்று பகரப்பட்டிருக்கிறது. மனிதன் தோற்றத்துக்கு வந்திருப்பது போன்று இந்த அகிலாண்டம் தோற்றத்துக்கு வந்திருக்கிறது. தோற்றத்துக்கு வருதல் என்பதை இனி நாம் விளக்கவேண்டும். ஐம்பொறிகளுக்கும் மனதுக்கும் புலப்படுவதை தோற்றத்துக்கு வந்துள்ளது என்று சொல்லுகிறோம். ஐம்பொறிகளுக்கும் மனதுக்கும் எட்டாததை பரம்பொருள் என்கிறோம். தோற்றத்துக்கு வந்துள்ள பிரம்மாண்டத்தோடு சீர்தூக்கினால் மனிதன் ஓர் அணுவிலும் சிறியதாகிய பரம அணு ஆய்விடுகிறான். தோற்றத்துக்கு அப்பாலுள்ள பரம்பொருளோடு சீர்தூக்கினால் தோற்றத்துக்கு வந்துள்ள பிரம்மாண்டமே பரம அணுவினுள் பரம அணு ஆய்விடுகிறது. மனிதனுடைய அமைப்பைப்பற்றிய உண்மையும் அகிலாண்டத்தின் அமைப்பைப்பற்றிய உண்மையும் இதுவேயாம்.—தோற்றத்துக்கு வந்துள்ளது மிகமிக அற்பமானது; தோற்றத்துக்கு அப்பாலிருக்கும் பரம்பொருளின் அகண்டமகிமையை யாரே அறியவல்லவர்!

நம்முடைய வாழ்க்கையைப்பற்றிய சட்டதிட்டங்களை நாம் அறிகிறோம். அண்டங்கள் யாவும் இயங்கி வருவதைப்பற்றிய நியதிகளையும் சட்டதிட்டங்களையும் பற்றி நாம் அறிகிறோம். எங்ஙனம் பந்தபாசங்களில் நாம் கட்டுண்டு கிடக்கிறோம் என்பதைப்பற்றியும் அறிகிறோம். நமக்கு இன்பங்கள் பல இப்பிரபஞ்ச வாழ்க்கையில் இருப்பதைப்பற்றித் தெரிந்துகொள்கிறோம். துன்பங்கள் பல இங்கு நமக்கு உண்டாவதைப்பற்றியும் அறிகிறோம். விதவிதமான பாங்குகளில் விதவிதமான மகிழ்ச்சிகள் நமக்கு உண்டாகின்றன. மேலும் நமக்கு வந்து வாய்க்கவேண்டிய பெருநிலைகளைப்பற்றி ஆசை கொண்டவர்களாகவும் ஏக்கம் பிடித்தவர்களாகவும் நாம் இருந்துவருகிறோம். நமது நலத்தைக் குறித்து எத்தனை யெத்தனை எண்ணங்களையோ எண்ணிவருகிறோம். அப்படி நாம் கொள்ளுகிற எண்ணங்களும் ஆசைகளும் எல்லையில் அடங்காதவைகளாக இருந்துவருகின்றன. இத்தனை விதமான எண்ணங்களும் உணர்வுகளும் எங்கே இடம் பெற்றிருக்கின்றன என்பதை இனி எண்ணிப் பார்க்க வேண்டும். பரம்பொருளோடு சீர்தூக்குகின்ற இடத்து அகிலாண்டங்களும் பரம அணுவிலும் புல்லியது ஆய் விடுகிறது. அந்த பிரமாண்டத்தினுள் இந்த மனிதன் இருக்குமிடம் தெரியாது மிகமிக நுண்ணியதாக மறைந்துகிடக்கின்றான். இத்தகைய அல்பனாகிய இவன் தன்னுடைய எண்ணங்களுக்கும், ஆசைகளுக்கும் தான் பெற்றுள்ள அறிவுக்கும் அளப்பரிய மதிப்பைத்

தருகின்றனே, இவனுடைய மதிப்பீனம்தான் என்னே! ஜன சமூகம் தோன்றிய நாள் முதற்கொண்டு இது வரையில் மனிதன் எத்தனை யெத்தனையோ விதங்களில் முன்னேற்றம் அடைந்திருப்பதாக அவன் மதிப்புப்போடுகிறான். சிற்சில வேளைகளில் மனிதன் அடைந்து வருகின்ற முன்னேற்றத்தினின்று வழி தவறி அவன் விலகிப்போயிருக்கிறான் என்றும் மனிதன் முடிவுகட்டுகின்றான். வழி பிசகாது அவன் நேரே சென்றிருந்திருப்பானுகில் இன்னும் எவ்வளவோ தூரம் அவன் முன்னேற்றம் அடைந்திருக்கக்கூடும் என்றும் யூகிக்கப்படுகிறது. இத்தனைவிதமான மனக்கோட்டைகளும் இந்த மிகமிக நுண்ணிய அறிவு நிலையில் பொருளற்றவைகளாய்விடுகின்றன என்பதை மனிதன் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. இந்த அண்டம் அளவையில் அடங்காத அகண்ட வஸ்து என்று மனிதன் மதிப்புப் போடுகின்றான். தான் போட்டுள்ள மதிப்பு சிறுபிள்ளைத்தனமானது என்பது அவனுக்கு விளங்குவதில்லை. பரம்பொருளின் முன்னிலையில் ஒரு சிறுதூசிக்கும் கடைப்பட்ட இந்த பிரம்மாண்டமானது அழிந்துபட்டுப் போனுல் பரம்பொருளுக்கு அது எவ்விதத்திலும் நஷ்டமாகாது. அத்தகைய அல்பதூசியை வியப்புக்குரிய எத்தகைய பிரம்மாண்டம் என்று இவன் மதிப்புப் போடுகிறான். அந்த பிரம்மாண்டத்தினுள் அல்ப தூசியிலும் கடைப்பட்ட தன்னைக் குறித்தே மனிதன் எத்தகைய பெருமதிப்புப் போடுகிறான் என்பதை எண்ணிப் பார்க்குமிடத்து இது நகைப்புக்குரிய

விஷயமாகிறது. இப்பிரம்மாண்டம் பெருமை மிக வாய்க்கப்பெற்றது என்றும் மானுட அமைப்பு மிக அற்புதமானது என்றும் தனது சிந்தையினுள் மனிதன் கற்பித்துக்கொண்டான். இதெல்லாம் அவன் தனக்குத்தானே தனது மனதில் செய்துகொண்ட சிருஷ்டியாகிறது. இப்படி அவன் அமைத்துக்கொண்ட சிருஷ்டியில் மேலும் அவன் எதை நாடுகிறான் என்பதை ஆராய்ந்துபார்ப்போம். தான் சொர்க்கபதவி அடைய வேண்டுமென்று அவன் பேர் ஆவல் கொள்கின்றான். அதைக்குறித்துப் பிரார்த்தனைகள் பண்ணுகின்றான். இவன்நாடுகிறசொர்க்கம்தான் என்னஎன்பதைச்சிறிது ஆராய்ந்து பார்ப்போம். கட்புலனாகின்ற இந்த மண்ணுலக வாழ்வு மனிதனுக்கு அமைந்திருக்கிறது. இதில் பலவிதமான சுகங்களை அவன் அனுபவிக்கின்றான். துன்பங்களும் பல இதனுள் நிறைந்திருக்கின்றன. இதனுள் இருக்கின்றதுன்பங்கள் தனக்கு வந்து வாய்க்கலாகாது என்றும் இங்குள்ள இன்பங்களே இன்னும்பன்மடங்கு அதிகமாகத் தனக்கு வந்து அமைய வேண்டுமென்றும் அவன் விரும்புகின்றான். மனிதன் தனக்குத் தானே சிருஷ்டித்துக்கொண்ட சொர்க்கம் இதுவேயாம்.

நம் அறிவுக்கு எட்டுகின்ற வாழ்வானது காலதேசவர்த்தமானம் என்னும் எல்லைகளுள் அடங்கியதாகிறது. பெரும்பாலும் இதைக்கொண்டே நாம் திருப்தியடைந்தவர்களாய் இருந்து வருகிறோம். அது மட்டுமல்ல, காலதேசவர்த்தமானத்துக்கு அப்பாற்பட்ட பாரமார்த்திக வாழ்வு ஒன்று உண்டு என்பதை நாம்

எண்ணிப் பார்ப்பதில்லை. அத்தகைய வாழ்வு ஒன்று உண்டு என்று நமக்கு யாராவது எடுத்து இயம்பினால் அதை ஏற்றுக்கொள்ளவும் நாம் ஆயத்தமாய் இல்லை. இப்பொழுது நமக்கு அமைந்துள்ள சிறு வாழ்வையே பெருவாழ்வாக எண்ணி இன்புறுகிறோம். நமக்கு அகப்பட்டிருக்கும் இந்தச் சிறு வாழ்விலேயே ஆசை வைத்து இதில் நாம் நின்று விடுவோமாகில் நம்முடைய சிறுபிள்ளைத் தனத்தையும் அறியாமையையும் வெளிப் படுத்துகிறோம். இந்தச் சிறு வாழ்விலேயே எல்லாம் அடங்கியிருக்கிறது என்னும் எண்ணம் உண்மைக்கு ஒவ்வாதது. வாழ்வு அனைத்தையும் இச்சிறிய எல்லைக் குள் அடக்குவது ஆகாத காரியம். இப்பொழுது இவ் வுலகில் மனிதன் ஒருவனுக்கு எத்தகைய வாழ்க்கை அமைந்திருக்கிறதோ அது ஒன்றே திரும்பத் திரும்பத் தனக்கு வந்து அமைய வேண்டுமென்று அவன் அவா வுறுகின்றான். இதை மற்றொரு பாங்கில் மொழியு மிடத்து தனக்கு வசதியானதும் சொகுசு தரக்கூடியது மான சமயம் ஒன்றை மனிதன் வேண்டுகிறான் என்பது வெளியாகிறது. தனக்கு அமைந்துள்ள இந்தச் சிறிய நிலையைக் கொண்டே மனிதன் திருப்தியடைந்திருப்பா னாகில் அவன் க்ஷீணதசை அடைந்துவிட்டான் என் பதை அது விளக்குகிறது. இதைவிட மேலானது ஒன்றைக் கிரகிப்பதற்கே அவன் சக்தியற்றவன் ஆய் விட்டான். அவன் இவ்வையக வாழ்வு என்னும் சூழ் நிலைக்கு முற்றிலும் ஒத்தவன் ஆய்விட்டான். இதை விட மேலான வாழ்வு எதற்குமே அவன் உதவமாட்

டான். தன்னுடைய அகண்டாகாரப் பெருவாழ்வை அவன் அறவே மறந்துவிட்டான். இம்மண்ணுலக வாழ்வு ஏதோ சில இன்பங்களைத் தருகிறது. அதைத் தொடர்ந்து சில துன்பங்களும் உண்டாகின்றன. சிற் சில வேளைகளில் விதவிதமான பொருமைகளுக்கு அடிமைப்பட்டவனுக்வும் அவன் ஆய்விடுகின்றான். அவனுடைய மனநிலை வேளைக்கு ஒரு வடிவு எடுக்கிறது. இத் தகைய சிறு வாழ்வு தனக்குப் போதுமென்று இதிலேயே கட்டுண்டவனாக அவன் இருந்து வருகிறான். காலதேசவர்த்தமானத்தில் கட்டுண்டு கிடக்கின்ற இச் சிறு நிலையையும் சிறு வாழ்க்கையையும் பெருவாழ்வாக அவன் பாராட்டி வருகிறான். இத்தகைய மடமை அவனுடைய மனத்தைவிட்டு அகன்றுபோக அவன் விரும்புவதில்லை. சிறு வாழ்வில் வைத்துள்ள வேட்கையை விடாது அவன் கட்டிப்பிடித்துக் கொண்டிருக்கிறான். வாழ்க்கையில் வைத்துள்ள வேட்கைக்கு த்ருஷ்ணு என்னும் சொல் வடமொழியில் வந்து அமைந்துள்ளது. அதே வேட்கையை தன்கா என்றும் த்ருஸ்சா என்றும் புத்தமதம் பகர்கிறது. கோடிக் கணக்கான இன்பங்கள் இந்த வையக வாழ்க்கையில் வந்து அமைந்திருக்கலாம், கோடிக் கணக்கான உயிர்வகைகளும் இங்கேநிலைத்திருக்கலாம், இயற்கையின்நியதிகளும் எண்ணிறந்த பாங்கில் ஈண்டுவந்து அமைந்திருக்கலாம், முன்னேற்றத்துக்கு ஏதுவான வாய்ப்புகளும் இங்கே வேண்டியவாறு இருக்கலாம், காரண காரியமாக அமைந்துள்ள இயற்கையின் நடைமுறைகளையும்

ஈண்டு நாம் காணலாம், நம் அறிவுக்கு எட்டுகின்ற பாங்கில் இக்கோட்பாடுகள் எல்லாம் அமைந்திருப்பது போன்று நம் அறிவுக்கு எட்டாத பாங்கிலும் இவைகள் அமைந்திருக்கக்கூடும்; நம் அறிவுக்கு எட்டுகின்ற பகுதி எட்டாத பகுதி ஆகிய அனைத்தையும் தொகுத்தெடுத்துப் பார்க்குமிடத்தும் அகண்ட சச்சிதானந்தத்தின் ஒரு மிகச் சிறு பகுதிதான் இவையாவுமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. இப்பிரபஞ்ச வாழ்க்கை என்னும் வரம்புக்குள்ளே கட்டுண்டு இருக்கின்ற நாம் இந்த வரம்புக்கு அப்பால் செல்லுங்கால் அது முக்தி அல்லது விடுதலை எனப்படுகிறது. இதனுள் கட்டுண்டு இருக்கும் பரியந்தம் முக்தியில்லை. பிரபஞ்சத்துக்கு இயற்கை என்பது மற்றொரு பெயர். ஓயாது இயங்குவதனால் இதற்கு இயற்கை என்ற பெயர் வந்தது. இயக்கம் அசைவைக் காட்டுகிறது. எதனிடத்து அசைவு இருக்கிறதோ அது அமைதி என்னும் நடுநிலையை அடைந்தது அன்று. நடுநிலை எய்துதல் இப்பிரபஞ்சத்தினிடத்து இல்லை. நடுநிலையை அடைதலும் முக்தி அடைதலும் ஒன்றேயாம். நடுநிலை அடைகின்றவர்களுக்குச் சொல்லிலும் சிந்தையிலும் அடங்காத சாந்தி உண்டாகிறது. சொர்க்கத்துக்குப் போவதைப் பற்றிச் சமயவாதிகள் கருதுகின்றனர்; அதற்காக வென்று முயற்சிகள் எடுத்துக் கொள்ளுகின்றனர். சொர்க்கத்தில் அந்த நடுவுநிலை உண்டாவதில்லை. அது மட்டுமல்ல, நம்முடைய மனதும் அதனுடைய செயலாகிய எண்ணமும் நிலவுகின்ற எந்த இடத்திலும்

அமைதி உண்டாகாது. ஐம்பொறிகளுக்கு எட்டுகிற எந்த இடத்திலும் அமைதி உண்டாகாது. நம் மனதால் கற்பித்துக் கொள்ளுகின்ற எவ்வுலகிலும் நமக்கு அமைதி ஏற்படாது. வெவ்வேறு உலகங்களைப் பற்றிய பேச்சு நமக்கிடையில் எழுகிறது. எந்த உலகுக்குச் சென்றாலும் நாம் முக்தியைப் பெறமுடியாது. ஏனென்றால் வெவ்வேறு உலகங்கள் என்று இயம்பப்படுபவைகள் இந்தப் பிரபஞ்சத்துக்குள்ளே அடங்கியவைகள். பிரபஞ்சம் என்பதே தேசம் காலம் வர்த்தமானம் என்னும் எல்லையினுள் கட்டுண்டிருப்பதாம். நாம் வசித்து வரும் இந்த மண்ணுலகைவிடச் சிறந்த உலகங்கள் பிரபஞ்சத்தில் அமைந்திருக்கலாம். அவைகள் இவ்வையகத்தைவிட நுண்ணியவைகளாக இருக்கலாம். இங்கே நாம் அனுபவிக்கின்ற இன்பங்களையெல்லாம் விடப் பன்மடங்கு ஆழ்ந்த இன்பங்களை அவ்வுலகங்களில் அனுபவிப்பதற்கான வசதிகள் ஆங்கே வாய்த்திருக்கலாம். எனினும் அத்தகைய விண்ணுலகங்களும் பிரபஞ்சத்துக்குள் அடங்கியவைகளாம். பிரபஞ்சத்தினுள் அடங்கியிருக்கும் உலகங்கள் யாவும் இயற்கையின் நியதி என்னும் பந்தத்துக்கு உட்பட்டிருக்கின்றன. தேசம் காலம் நியமம் என்பனவற்றைக் கடந்த நிலைக்குப் போகுமிடத்தே உண்மையான பாரமார்த்திகப் பெருநிலை நமக்கு அமைகிறது. இப்பிரபஞ்சத்தின் நடைமுறைக்கு ஆங்கு இடமில்லை. இங்கு நாம் அனுபவித்துவரும் இந்தச் சிற்றின்பங்களெல்லாம் இவ்வுலகோடு நின்று விடுகின்றன. தவிர்க்க முடியாது நாம்

துய்க்கும் துன்பங்களும் இப்பிரபஞ்சத்தோடு நின்று விடுகின்றன. நமது சிற்றறிவைக்கொண்டு நாம் பெற்றுள்ள இப்பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானமும் இங்கு நின்றுவிடுகிறது. பாரமார்த்திகப் பெருநிலையோ இப்பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது என்று நாம் யூகிக்க வேண்டியிருக்கிறது.

இவ்வுலக வாழ்க்கையின்மீது நாம் வைத்துள்ள வேட்கையை அறவே விட்டொழித்தாகவேண்டும். நிலையற்ற இந்நிலவுலக வாழ்க்கையில் நாம் வைத்துள்ள பற்றுதல் நீங்கவேண்டும். தேசம் காலம் வர்த்தமானம் என்னும் நிபந்தனையினுள் கட்டுண்டிருக்கும் வாழ்வை நாம் விட்டொழிக்கவேண்டும். அப்படிச் செய்தாலன்றி இதற்கு அப்பாலுள்ள அகண்டாகாரப் பெருநிலையை அணுவளவும் நம்மால் அறிந்துகொள்ள முடியாது. அந்த அகண்டாகாரப் பெருநிலையே முக்தி என்று இயம்பப்பெறுகிறது. மனிதன் அடைய விரும்புகின்ற நிலைகள் அனைத்திலும் மகோன்னதமானது முக்தி. அந்த முக்தியை அடைதற்கு ஒரே ஒரு உபாயம்தான் உளது. இப்பிரபஞ்சத்தைச் சார்ந்துள்ள அற்பவாழ்வை நாம் விட்டொழிக்கவேண்டும். புலன்களுக்குப் பெரியதாகத் தென்படுகிற இந்தப் பிரபஞ்சத்தையே நாம் நீத்துவிடுதல் வேண்டும். இம்மை மறுமை என்று சொல்லப்படுகின்ற வெவ்வேறு பதவி வாழ்க்கைகளையெல்லாம் துறந்துவிடுதல் வேண்டும். உடல்மீது நாம் வைத்துள்ள பற்றுதலும் போய்விடவேண்டும். ஜன்மாந்திரங்களில் நம்மைத் தொடர்ந்து வருகிற மனது

அல்லது அந்தக்கரணத்தையும் துறந்துவிட வேண்டும். எதெல்லாம் வரம்புக்குட்பட்டதோ அதையெல்லாம் நீக்கிவிடவேண்டும். காரண காரியத்தில் அடங்கியிருப் பவைகளை யெல்லாம் ஒதுக்கிவிட வேண்டும். இப்பிர பஞ்சத்தோடும், பஞ்சேந்திரியங்களோடும், மனதோடும் சார்ந்துள்ள அனைத்தையும் எப்பொழுது நாம் விட் டொழிக்கின்றோமோ அப்பொழுதே முக்தி நமக்குக் கிட்டுவதாகிறது. பந்தத்தினின்று விடுதலை அடைந்து முக்தி என்னும் அகண்டாகாரப் பெருநிலையின்கண் போதல் நமது குறிக்கோள். அதை முன்னிட்டு இயற்கை அமைத்து வைத்திருக்கும் நியதியையும் நிமித்தத்தையும் தாண்டிப்போவது அவசியமாகிறது.

மீனுக்கு நீர்வாழ்க்கையில் பற்று இருப்பது போன்று நமக்கு இப்பிரபஞ்ச வாழ்க்கையில் பற்று ஏற்பட்டு விட்டது. இது நமக்கு முற்றிலும் பொருத்த மானதாகத் தோன்றுகிறது. இதைவிட்டு விலகிக் கொள்ளுதற்கு நமக்கு விருப்பம் வருவதில்லை. இப்பிர பஞ்ச வாழ்க்கையில் வைத்துள்ள பற்றுதலை ஒழிப்பது தான் எல்லாவற்றிலும் மிகக் கடினமானது. அரிதிலும் அரிதாக யாரோ சிலர்தான் உலகப்பற்றை ஒழிக்க வல்லவர் ஆகின்றனர். உலகப்பற்றை ஒழிப்பதற்கு உபாயங்கள் இரண்டு இருக்கின்றன. அந்த இரண்டு முறைகளும் சரியானவைகள் என்று நம் சாஸ்திரங்கள் ஆமோதிக்கின்றன. ஒன்றை நிவிருத்தி என்றோ 'நேதி, நேதி' மார்க்கம் என்றோ மொழியலாம். நேதி என்னும் சொல்லுக்கு இது அல்ல என்பது பொருள். ந இதி

என்னும் இரண்டு சம்ஸ்கிருதச் சொற்கள் சேர்ந்து நேதி என்னும் கூட்டுச் சொல் ஆகிறது. இதி என்றால் இது என்று பொருள். ந இதி என்றால் இது அல்ல என்பதாகிறது. மற்றொரு மார்க்கத்துக்கு 'இதி' மார்க்கம் என்று பெயர். இது அல்ல என்னும் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டுள்ள சாதனம் எதிர்மறையானது. 'இதி' என்னும் கோட்பாட்டை அடிப்படையாகக்கொண்டுள்ள சாதனம் உடன்பாட்டு முறையாகிறது. இவ்விரண்டினுள் இது அல்ல என்னும் எதிர்மறைக் கோட்பாடு மிகக் கஷ்டமானது. மனபரிபாகம் நன்கு அடையப் பெற்றிருப்பவர்க்கே இந்த எதிர்மறை சாதனம் சாத்தியமாகிறது. மிகவும் பண்பட்டுள்ள நுண்ணறிவும், எதற்கும் தளராத உறுதியான உள்ளமும் அந்த சாதகனுக்குத் தேவையானவைகள் ஆகின்றன. எண்ணியதை எண்ணியாங்கு எய்தும் திண்ணியர்க்கே இந்த சாதனம் உகந்ததாகிறது. இவ்வுலக வாழ்க்கையினின்று விலகியிருந்து கொண்டு "இது ஒன்றிலும் நான் சம்பந்தப்படமாட்டேன்" என்று உறுதியாகத் தீர்மானிக்கவும், அந்த தீர்மானத்துக்கு ஏற்ப இப்பிரபஞ்ச வாழ்க்கையில் எவ்விதத்திலும் ஒட்டாதிருக்கவும் வல்லவனே இந்த சாதனத்துக்குத் தகுதியுடையவன் ஆகின்றான். அத்தகைய பரிபாகம் படைத்துள்ள சாதகனது உறுதியான தீர்மானத்துக்கு ஒப்ப அவனுடைய உள்ளமும் உடலும் ஒடுங்கி நடந்துகொள்கின்றன. பரிபாகம் அடையப் பெறாதவனோ மனம் போன போக்கில் போகின்றான்.

உடல் கூறு எதையெல்லாம் வேண்டுமென்கிறதோ அதற்கு அவன் இசைந்து நடக்கிறுன். ஆனுல் தீவிர மான சாதகனுடைய தீர்மானத்துக்கு உள்ளமும் உடலும் உட்பட்டிருக்கிறபொழுது சாதனத்தில் அவன் வெற்றியடைகிறுன். இத்தகைய தீவிர உணர்வு கொண்ட சாதகனைக் காண்பது அரிதிலும் அரிது.

சாதகர்களுள் பெரும்பான்மையோர் 'இதி இதி' என்று இயம்பப்பெறுகிற உடன்பாட்டு முறையைக் கையாள முன்வருகின்றனர். இவ்வுலகில் அமைந் திருப்பவைகளை யெல்லாம் தங்களுடைய சாதனத்துக் காகவென்று பயன்படுத்துதலே அவர்களின் போக்கு ஆகிறது. உலகில் என்னென்ன பந்தபாசங்கள் அமைந் திருக்கின்றனவோ அந்த பந்த பாசங்களையே ஆத்ம சாதனத்துக்கு அவர்கள் பயன்படுத்திக்கொள்கின் றனர். பந்த பாசத்தின் துணைகொண்டே பந்தபாசங் களை அகற்றுவது அவர்களுடைய போக்கு ஆகிறது. எனவே இந்த உடன்பாட்டு முறையைக் கையாளு தலும் ஒருவித ஆத்மசாதனமாகிறது. இறுதியில் பற்றற்ற நிலையில் இந்த சாதனமுறை சாதகனைக் கொண்டு சேர்க்கிறது. ஆனுல் இதன் மூலம் மனபரி பாகம் மிக மெதுவாக உண்டாகிறது. சிறிதுசிறிதாக உலகப்பற்று நீங்குகிறது. இவ்வுலக விஷயங்கள் நிலைத் திருப்பவைகள் அல்ல என்பதை அறிந்தான பிறகும் அவைகளைப் பயன்படுத்துதல் இந்த சாதனத்தின் போக்கு ஆகிறது. தாற்காலிகமாக அவைகள் அளிக் கின்ற இன்பங்களில் ஈடுபட்டிருப்பதும் இந்த சாதனத்

தின் போக்கு ஆகிறது. அவைகளை அனுபவிப்பதன் மூலம் ஆத்ம சாதகனுக்கு அவைகள் நிலைபேறு உடையவைகள் அல்ல என்னும் அனுபவம் வருகிறது. உலகப் பொருள்களின் தன்மை நாளடைவில் உள்ளபடி விளங்குகிறது. அவைகள்மீது மனது வைத்திருக்கிற பற்றுதல் நாளடைவில் மாறிவிடுகிறது. பற்றற்ற நிலை இம்மார்க்கத்தின் வாயிலாகவும் இறுதியில் வந்தமைகிறது. ஏற்கனவே இயம்பப்பெற்றுள்ள நேதி மார்க்கமோ விசாரித்துப்பார்ப்பதை அடிப்படையாகக் கொண்டது. அதனால் உண்டாகின்ற விவேகத்தைக் கொண்டு பற்றை ஒழித்துவிடுவது அந்த நேதி மார்க்கத்தின் போக்கு ஆகிறது. ஆனால் இவ்வுலகப் பொருள்களைப் பயன்படுத்துகின்ற உடன்பாட்டு முறையாகிய 'இதி' மார்க்கத்திலோ உலகப்பொருள்களையெல்லாம் பயன்படுத்திப் பார்ப்பது என்னும் கர்மயோக சாதனத்துக்கு இடமிருக்கிறது. விவேகத்தோடு கூடி கர்மம் செய்கின்றவனுக்கு நித்திய அநித்திய பொருள்களைப் பற்றிய அனுபவம் படிப்படியாக வருகிறது. மேலே இயம்பியுள்ள எதிர்மறை மார்க்கத்துக்கு ஞானயோகம் என்பது மற்றொரு பெயர். நேர் ஞான சாதனத்தில் இறங்குகின்றவன் உடல் உணர்வை ஒதுக்கி வைத்து விடுகின்றான். ஆதலால் உடலைக்கொண்டு பணியாற்றுதல் இல்லாது போய்விடுகிறது. உடன்பாட்டு முறையாகிய இதி மார்க்கமோ கர்மயோகத்தை அடிப்படையாகக்கொண்டது. கர்மயோகத்தை அனுஷ்டிக்கின்ற ஆத்ம சாதகன் கர்மத்தை நிறுத்திவிடுவதில்லை. அதை

*நிறுத்த வேண்டிய அவசியமும் அவனுக்கு உண்டாவதில்லை.*

*உடல் எடுத்திருக்கும் எல்லோரும் உழைத்தே ஆகவேண்டும். அண்டமெங்குமுள்ள உயிர்கள் அனைத்துக்கும் இக்கோட்பாடு பொதுவானது. யாரோ ஒரு சிலர்தான் அரிதாக இவ்விதிக்கு விலக்கு ஆகின்றனர்.*

**यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥**

ஆனால் ஆத்மாவில் இன்புற்று, ஆத்மாவில் திருப்தியடைந்து, ஆத்மாவில் மகிழ்ந்திருப்பவனுக்கு வினையாற்றும் கடமையில்லை. *(கீதை 3–17)*

*ஆத்மத்திருப்தர்கள் நீங்கலாக ஏனையவர்கள் எல்லோரும் ஏதேனும் ஒருவிதத்தில் வினையாற்றியே ஆக வேண்டும். ஆற்றிலே நீர் பெருக்கெடுத்து ஓடிவருகிறது. பள்ளமான ஓர் இடத்தில் வீழ்ந்து அது சுழல்கிறது. சிறிது நேரத்திற்குப் பிறகு அச்சுழலினின்று அது விலகி சுயேச்சையாகப் புரண்டோடுகிறது. அப்படி ஓடுகின்ற அந்நீர்ப்பெருக்கைத் தடுக்க யாருக்கும் இயலாது. மானுட வாழ்க்கையும் ஒரு விதத்தில் அத்தகையது. சுற்றிச் சுழல்கிற நிலை ஒன்று மானுட வாழ்க்கைக்கும் இருக்கிறது. தேசம் காலம் நிமித்தம் என்று இயம்பப்பெறும் இப்பிரபஞ்ச வாழ்க்கைதான் மனித வாழ்க்கைக்கு அமைந்துள்ள பள்ளமாகிறது. கொஞ்ச காலத்துக்கு இதில் பிறப்பு இறப்பு என்னும் சுழல்கள் நிகழ்ந்து வருகின்றன. அத்தகைய நிகழ்ச்சி*

நடைபெற்றுக்கொண்டிருக்கின்றபொழுது மானுடன் ஒருவன் 'என் தந்தை என்றும் என் உடன் பிறந்தவன் என்றும் என்னுடைய பேர் புகழ் என்றும்' பிரலாபிக்கிறான். பந்த பாசம் என்னும் இந்தப் படுகுழியினின்று மீண்டும் அவன் விலகிக்கொள்கின்றான். அப்பொழுது தனது யதார்த்த நிலையாகிய முக்தி அவனுக்குக் கிட்டிவிடுகிறது. இங்ஙனம் இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் முக்தியை நாடி இயங்கிவருகின்றன. நாம் அனைவரும் முக்தியையே நாடிப் போய்க்கொண்டிருக்கிறோம். நம்மில் சிலர்க்கு இவ்வுண்மை விளங்குகிறது. இன்னும் சிலர்க்கு இது விளங்குவதில்லை. இதை நாம் உணர்ந்திருந்தாலும் சரி, உணராதிருந்தாலும் சரி, முக்தியை நாடி நாம் போய்க்கொண்டிருப்பதுதான் உண்மை. இவ்வுலகவாழ்வு என்னும் கனவினின்று விழித்துக்கொள்ளுதலே முக்தி அடைதற்கு உற்ற உபாயமாகிறது. உலகத்தில் மனிதன் அடைந்து வருகின்ற அனுபவங்கள் எல்லாம் இந்த மயக்கத்தினின்று அவனைத் தட்டி எழுப்புதற்பொருட்டேயாம்.

கர்மயோகம் என்றால் என்ன? எங்ஙனம் வினையாற்றினால் வினை நம்மைப் பந்தப்படுத்துதற்குப் பதிலாக நம்மைப் பிரபஞ்ச வாழ்க்கையினின்று விடுவிக்கும் என்னும் அறிவை நாம் பெற்றுவிடுகின்றபொழுது கர்மயோகம் நமக்குத் துவங்குகிறது. அண்டங்கள் அனைத்தும் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அவைகளிடத்துக் கர்மம் நிகழ்ந்துவருகிறது. எதற்காக இத்தகைய ஓயாத உழைப்பு என்னும் கேள்வி பிறக்கக்

கூடும். அதற்கேற்ற விடையும் உண்டு. முக்தி அடைதற்கென்றே இவை யாவும் முயன்றுவருகின்றன. அணுமுதல் அண்டம் பரியந்தம் உள்ள அனைத்தும் ஒரே ஒரு குறியை நோக்கி வினையாற்றிவருகின்றன. விடுதலையைப் பெற்றுவிடுவதுதான் இவையாவினுடைய குறிக்கோள் ஆகிறது. மனதுக்கு விடுதலை கிடைக்கவேண்டும், உடலுக்கு விடுதலை கிடைக்கவேண்டும், ஜீவாத்மனுக்கு விடுதலை கிடைக்கவேண்டும். ஜடப்பொருள், சேதனப்பொருள் ஆகியயாவும் முக்தியையே நாடி முயன்று வருகின்றன. எதெல்லாம் பந்தபாசத்தை உண்டுபண்ணுகிறதோ அதனிடத்திருந்து விலகியோட இவையாவும் முயன்றுவருகின்றன. சந்திரன், சூரியன், பூமி இன்னும் இவை போன்ற பல கோளங்கள் இயற்கையில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இவை யாவும் ஏன் அசைந்து வருகின்றன என்று ஆராய்ந்து பார்த்தால் பந்தத்தினின்று விடுதலையடையவே இவையாவும் முயன்று வருகின்றன என்பது விளங்கும். இயற்கையின் நடைமுறையில் இரண்டுவித சக்திகள் வேலைசெய்து வருகின்றன. விடுதலையினின்று விலகியோட ஒரு சக்தி ஒரு விதத்தில் வேலைசெய்கிறது. விடுதலையின்கண் சென்று ஓய்வுபெற மற்றொரு சக்தி வேலை செய்துவருகிறது. நாம் வசித்துவரும் அண்டத்தைப் பற்றிய உண்மை இதுவேயாம். கர்மயோகக் கோட்பாடுகளை நாம் அறிந்துகொள்ளாது இருக்கும் வரையில் இப்பிரபஞ்சத்தால் அலைக்கழிக்கப்படுகிற நிலையில் நாம் இருப்

போம். அதனால் நாம் பொறுப்புணர்பவர்கள் ஆகின்றோம். நெடுங்காலம் காத்திருந்தும், வெவ்வேறு விஷயங்களில் அடிபட்டும், நாம் உண்மையை அறிபவர் ஆகின்றோம். ஆனால் கர்மயோகத்தைக் கற்றுக்கொண்ட பிறகு நாம் எப்படி வினையாற்ற வேண்டுமென்பதை அறிபவர் ஆகின்றோம். வேலைத் திட்டத்தை நமக்கு நாம் எப்படி அமைத்துக் கொள்ள வேண்டுமென்பதையும் தெரிந்து கொள்கிறோம். உண்மையை அறிந்து கொள்ளுதற்கு முன்பு முறைதவறிய முயற்சியில் ஏராளமான சக்தியை நாம் வீண்விரயம் செய்துவிடுகிறோம். மற்றுக் கர்மயோகமோ வினையாற்றுவதைப் பற்றிய சாஸ்திரமாகிறது. योगः कर्मसु कौशलम् யோக: கர்மஸு கௌசலம். இவ்வுலகில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகள் அனைத்தைப்பற்றிய கோட்பாடுகளையும் அவைகளை எங்ஙனம் நம்முடைய நலத்துக்காகவென்று பயன்படுத்துதல் என்பதையும் கர்மயோகத்தினின்று தெளிவுபட நாம் தெரிந்து கொள்கிறோம். வினையாற்றுதலினின்று நாம் விலகிக்கொள்ள முடியாது. உடல் வாழ்க்கை இருக்கும் வரையில் ஏதேனும் ஒரு விதத்தில் கர்மம் நடைபெற்றுக் கொண்டே வருகிறது. அப்படிக் கர்மம் நம் மூலம் நிகழ்தற்கிடையில் அதனுடைய முழுப்பலன் நமக்குக் கிட்டுவது ஆகவேண்டும்.

மற்றுமோர் உண்மையைக் கர்மயோகம் நமக்கு விளக்குகிறது. இவ்வுலக வாழ்க்கை ஏதோ சொற்ப காலத்துக்கு அமைந்திருக்கிறது என்பதையும் இது நிலையற்றது என்பதையும் நாம் ஒத்துக் கொண்டே

ஆகவேண்டும் என்று கர்மயோகம் புகட்டுகிறது. வழிப் போக்கன் ஒருவன் வழியிலே வெவ்வேறு ஊர்களிலே தங்கியிருந்து மேலும் பயணம் போவது போன்றது இவ்வுலக வாழ்க்கை. இதனுள் வழிப்போக்கர்களாக நாம் வந்திருக்கின்றோம். நாம் போய்ச் சேரவேண்டிய இடம் வேறு ஒன்று இருக்கிறது. தாற்காலிகமாக இங்கே தங்கியிருப்பதற்கிடையில் இதை நன்கு பயன் படுத்திக்கொள்ளுதல் நமது நோக்கமாக இருக்கவேண் டும். முக்தியை நாடுகின்ற நமக்கு இப்பிரபஞ்ச வாழ்க் கையில் அது ஒருக்காலும் கிட்டாது. முக்தியை வேண்டுகின்றவர்கள் பிரபஞ்ச வாழ்க்கைக்கு அப்பால் போய்விடுவது அவசியமாகிறது. இவ்வுலக வாழ்வு நம்மை பந்தங்களிலே கட்டிப்பிடித்து வைத்திருக்கிறது. நினைத்த மாத்திரத்தில் இந்த பந்தங்களினின்று நம்மை நாம் விடுவித்துக்கொள்ள முடியாது எனினும் சிறிது சிறிதாகவும் உறுதியாகவும் நாம் உழைத்து இதினின்று விடுதலை பெற்றே ஆகவேண்டும். நினைத்த மாத்திரத் தில் ஒரு நொடிப்பொழுதில் முக்தியைப் பெற்றுவிடக் கூடிய பரிபாகம் அடைந்தவர்களும் ஏதோ சிற்சில வேளைகளில் இம் மண்ணுலகில் தென்படுகிறார்கள். ஆனால் அவர்களின் உயர்நிலை அலாதியானது. சாதா ரணமாயுள்ள ஆத்ம சாதகர்களுக்கும் அவர்களுக்கும் வெகுதூரம். பாம்பு ஒன்று தன் மேல் சட்டையைக் கழற்றி எறிந்துவிட்டு அதற்கு அன்னியமாக இருந்து கொண்டு அந்த சட்டையைப் பார்ப்பது போன்று இவ்வுலக நடைமுறையினின்று ஒரு நொடிப்பொழு

தில் விலகிக்கொண்டு இதில் நிகழ்படிவைகளை வேடிக்கை பார்க்கும் நிலையில் யாரோ சிலர் இருக்கின்றனர். அவர்கள் முற்றிலும் பரிபூரணம் அடைந்துள்ள பெருமக்கள் ஆகின்றனர். தீவிர பரிபாகம் அடைந்துள்ள இச் சிறுபான்மையோர் சாதாரணமாயுள்ள ஆத்ம சாதகர்களுக்கு முன்மாதிரியாகமாட்டார்கள். ஏனென்றால் உலகமக்கள் எல்லோரும் இவர்களைப்போன்று தீவிரமாக மேல்நிலைக்குப் போகமுடியாது. சாதாரண நிலையிலுள்ள ஆத்மசாதகர்கள் இவ்வுலகில் தங்களுக்கு அமைந்துள்ள கடமைகளை முறையாகச் செய்து முடிப்பதன் மூலம் படிப்படியாகத் தங்களைப் பக்குவப் படுத்திக்கொள்ளவேண்டும். அதற்கேற்ற வழிகளைக் கர்மயோகம் விளக்கிக் காட்டுகிறது. கர்மத்தை என்ன பாங்கில் செய்தால் புதிய பந்தபாசம் எதையும் உண்டுபண்ணாமல் பழைய பந்தபாசங்களைச் சிறிது சிறிதாக அகற்றிவிடலாம் என்பதை இந்த யோக சாஸ்திரம் சாதகர்களுக்குக் காட்டித்தருகிறது.

கர்மயோகம் புகட்டுவது யாது என்பதை இனி ஆராய்ந்து பார்ப்போம்.

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**
**मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥**

வினையாற்றக் கடமைப்பட்டுள்ளாய், வினைப்பயனில் ஒருபொழுதும் உரிமை பாராட்டாதே. வினைப்பயன் விளைவிப்பவன் ஆய்விடாதே. வெறுமனே இருப்பதில் விருப்புக்கொள்ளாதே. *(கீதை 2–47)*

இடையறாது வினையாற்றிக் கொண்டிரு. உனக்கென்று அமைந்துள்ள உன் கடமைகளை நீ அகற்றிவிடாதே. ஆனால் அக் கர்மங்களில் பற்றுவைக்கவேண்டாம். பற்றை அறவே ஒழித்தவனாக இருந்துகொண்டு வினையாற்றுவாயாக என்று கர்மயோகம் புகட்டுகிறது. இவ்வுலகில் எதனோடும் உன்னை ஐக்கியப்படுத்திக்கொள்ள வேண்டாம். இவ்வுலகில் எதையும் உனக்குச்சொந்தம் என்று அதில் அபிமானம் வைக்கவேண்டாம். எல்லா பந்தங்களினின்றும் விடுபட்டுள்ள நிலையில் உன்னுடைய மனதை வைத்துக்கொள். விதவிதமான காட்சிகளை உலகம் உனக்கு அளிக்கிறது. அக்காட்சிகளுள் சிந்தனைக்குரிய பகுதிகள் இருக்கின்றன. எண்ணிறந்த துன்பங்களை உண்டுபண்ணும் நிகழ்ச்சிகளைக் காண்கின்றாய். விதவிதமான இன்னல்களையும், துயரங்களையும் உண்டுபண்ணி விடுகின்ற நிகழ்ச்சிகளும் இவ்வுலகில் உண்டு. இவையாவும் இவ்வுலக நடைமுறைக்கு முற்றிலும் இன்றியமையாதவைகள் என்பதை ஓர்ந்து உணர்ந்து கொள். இவ்வுலகிலே வறுமை ஒருபுறம் துக்கத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறது. செல்வம் மற்றொரு புறம் சுகத்தை வழங்கிக் கொண்டிருக்கிறது. இவ்வுலகிலே இன்புற்றிருக்கிற மனிதன் ஒருவன் அவ்வின்பம் தனக்கு சாசுவதமானது என்று எண்ணி ஏமாற்றமடைகிறான். இவ்வுலகம் நல்குகின்ற இன்பம் நிலையற்றது என்பதை உறுதியாக மனதில் வைத்துக் கொள். பாரமார்த்திகப் பேரியல்பு ஒன்றே நமக்குச் சொந்தமானது. அத்தகைய பாரமார்த்திகப் பேரியல்

புக்கும் இவ்வுலகம் வழங்குகின்ற இன்பதுன்பங்களுக்கும் தொடர்வு இல்லை என்பதை உறுதியாக அறிந்துகொள். இவ்வுலகம் அளிக்கின்ற இன்பதுன்பங்களுக்கு அப்பாற்பட்டது நமது ஆத்ம சொரூபம். பஞ்சேந்திரியங்கள் மூலமாக நாம் நுகரும் பொருள்களுக்கும் நமது ஆத்ம சொரூபத்துக்கும் ஒருவிதமான தொடர்வும் இல்லை. நம்முடைய மனோ கற்பனைக்கும் அப்பாற்பட்டது நமது ஆத்ம சொரூபம். நமது நிஜசொரூபம் இவ்வுலகத்துக்கு அப்பாற்பட்டது. எனினும் இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள நாம் இடையறாது வினையாற்றிக்கொண்டே இருக்கவேண்டும். வினையாற்றுவது தொல்லையானது என்று பலர் எண்ணுகின்றனர். மனிதனுக்குத் தொல்லையையும் துன்பத்தையும் உண்டுபண்ணுவது கர்மம் அல்ல. பற்றுதல் ஒன்றே மனிதனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணுகிறது. நாம் ஆற்றுகின்ற வினையினிடத்து நாம் பற்று வைக்கின்ற பொழுதே துன்பம் தோன்றி விடுகிறது. நாம் உலக மக்களுக்கு ஏதேனும் ஓர் உபகாரத்தைச் செய்கின்றோம். அதைக் குறித்து உலக மக்கள் நமக்குச் சிறிதேனும் நன்றி காட்டுவதில்லை. பற்றுதல் வைத்து உபகாரம் செய்த மனிதன் இவ்வுலகம் நன்றி கெட்டது என்று வருந்துகிறான். நம்மில் எம்மனிதன் பற்றற்ற நிலையில் இருந்து கொண்டு உலகுக்கு உபகாரம் செய்கின்றானோ அவன் நன்றி கெட்ட உலகத்தைக் குறித்து வருந்துவதில்லை. பற்றுதல் ஒன்றே துன்பத்தை உண்டுபண்ணுகிறது என்பதையும், பற்றற்று ஆற்றுகின்ற

வினை ஒருநாளும் துன்பத்தை உண்டுபண்ணுகிறதில்லை என்பதையும் நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். நாம் எக்கருமத்தைச் செய்தாலும் அக்கருமத்தில் கட்டுப்பட்டவர்களாக இருக்கலாகாது. நாம் ஆற்றுகின்ற கர்மத்தில் கட்டுப்படாதிருக்கின்ற பொழுது நமக்குத் துக்கமில்லை.

அழகான படம் ஒன்று இருக்கிறது. அது வேறு யாரோ ஒருவனுக்குச் சொந்தம். அவ் அழகிய படம் தீயிலிட்டுக் கொளுத்தப்படுகிறது. இந்நிகழ்ச்சியைப் பார்த்துக்கொண்டிருக்கிற மனிதன் ஒருவன் துயரப் படுவதில்லை. ஆனால் மற்றொரு படமோ வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மனிதனுக்கே சொந்தமானது. அந்தப்படம் தீயிலிட்டுக் கொளுத்தப்படுகிறது. அப் பொழுது அவன் அடைகின்ற வேதனை எவ்வளவு என் பது சொல்லாமலே விளங்கும். ஏன் அவன் அவ்வளவு வேதனைப்பட வேண்டும்? தீயிலிட்டுக் கொளுத்தப் பட்ட இரண்டு படங்களும் அழகானவைகளே. இரண் டும் ஒரே அச்சில் ஆயத்தப்படுத்தப்பட்டவைகள். ஒரு படம் தீயில் வெந்தபொழுது துயரம் இல்லை. மற்றொரு படம் வெந்தபொழுது துயரம் வந்துவிட்டது. துயரத் துக்குக் காரணம் யாது என்பது இப்பொழுது விளங் கும். படத்துக்குச் சொந்தக்காரன் தான் அல்ல என்ற எண்ணம் இருக்கிறபொழுது துயரம் இல்லை. படத் துக்குத் தானே சொந்தக்காரன் என்கிற உணர்வும் அபிமானமும் வருகின்றபொழுது துயரமும் வந்துவிடு கிறது. 'யான், எனது' என்னும் செருக்கினின்றே

துயரம் யாவும் உரு எடுக்கிறது. ஒரு பொருளுக்கு நான் சொந்தக்காரன் என்கிற எண்ணத்தினின்று சுயநலம் உண்டாகிறது. இந்த சுயநலம் பிறகு துன்பத்தை வளர்த்து விடுகிறது. சுயநலத்தை வளர்க்கிற செயல் ஒன்றை நாம் புரிகிறோம். சுயநலத்தை உறுதிப் படுத்துகிற எண்ணம் ஒன்றை நாம் எண்ணுகிறோம். அத்தகைய செயலும் எண்ணமும் ஒரு பொருளினிடத்துப் பற்றுதலை வளர்க்கின்றன. பற்றுதலின் மூலம் அப்பொருளுக்கு நாம் உடனே அடிமைப்பட்டவர்கள் ஆய்விடுகிறோம். அதினின்று துக்கம் வருகிறது.

நமது உள்ளத்துக்கு சித்தம் என்பது மற்றொரு பெயர். சித்தத்தை ஒரு தடாகத்தோடு யோக சாஸ்திரம் ஒப்பிடுகிறது. தடாகத்தில் அலைகள் உண்டாவது போன்று சித்தத்திலும் அலைகள் உண்டாகிக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு எண்ணமும் ஒவ்வொரு அலை ஆகிறது. 'யான், எனது' என்னும் அலை உண்டாகின்ற பொழுதெல்லாம் அது அக்கணத்திலேயே மனிதனை பந்தபாசத்தில் ஆழ்த்துகிறது. அத்தகைய அலை மனிதனை அடிமையாக்கி விடுகிறது. 'யான், எனது' என்பதைப்பற்றி எண்ணுகின்ற அளவுக்கும் பேசுகின்ற அளவுக்கும் மனிதன் அடிமையாய் விடுகின்றான். அவன் படுகிற துயரத்துக்கெல்லாம் 'யான், எனது' என்னும் அலையே காரணமாகிறது. இந்தத் துக்கத்தினின்று விடுபடுவதற்கான வழியைக் கர்மயோகம் காட்டித் தருகிறது. உலகிலுள்ள அழகு வாய்ந்த படங்களை யெல்லாம் வேண்டியவாறு பார்த்து

ரசிக்கக் கற்றுக்கொள் என்று கர்மயோகம் சொல்லு கிறது. ஆனால் எப்படத்தையும் உன்னுடையது என்று அபிமானிக்கவேண்டாம். உனக்குச் சொந்தம் என்று எதையும் ஏற்றுக்கொள்ள வேண்டாம். 'எனது' என்று ஒருபொழுதும் சொல்லாதே. ஒரு பொருள் எனக்குச் சொந்தம் என்று மனிதன் சொல்லுகின்ற பொழுதே அவனுக்குத் துன்பம் வந்துவிடுகிறது. என் குழந்தை என்று மனதில் நினைக்க வேண்டாம். கடவுளின் குழந்தை என்னும் கருத்துக் கொண்டவனாக அதைப் பாதுகாத்து வைத்திரு. அதை உன்னுடைய குழந்தை என்று சொல்லாதே. கடவுளின் குழந்தையை என்றைக்கு நீ உன்னுடைய குழந்தை என்று சொல்லு கிறாயோ அன்றைக்கே உனக்குத் துன்பமும் வந்துவிடும். 'என்னுடைய வீடு' என்று இயம்பாதே. 'என்னு டைய உடல்' என்று சொல்லாதே. மனிதனுக்குக் கஷ்டங்கள் பல உண்டாவதற்குக் காரணம் இக்கோட் பாட்டில் இருக்கிறது. என்னுடைய உடல் என்று மனிதன் சொல்லுகிறான். உண்மையில் உடல் யாருக் கும் சொந்தமல்ல. இயற்கையினுடைய நடைமுறைக்கு ஒப்ப, இயற்கையினுடைய நியதிக்கு ஒப்ப உயிர்கள் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கின்றன. போக்கும் வரவும் யாக்கைக்கு உண்டு. ஆனால் ஆத்ம சொரூபமோ இதில் தட்டுப்படாது முக்தி நிலையில் இருக்கிறது. உடலினுடைய வரவுக்கும் போக்குக்கும் ஆத்மா சாக்ஷியாக இருக்கிறது. அழகான படம் ஒன்று முக்தி நிலையில் இல்லை. இயற்கையினுடைய நடை

முறையில் அது கட்டுப்பட்டு இருக்கிறது. தென்படு கிற சுவர் ஒன்று முக்தி நிலையில் இல்லை. அது இயற்கையில் கட்டுண்டு கிடக்கிறது. இந்த உடலினுடைய நிலையும் அத்தகையதே. இயற்கையின் நியதியில் அது கட்டுண்டு கிடக்கிறது. இயற்கையின் ஒரு சிறு பகுதியாய் இருக்கின்ற இந்த உடலினிடத்து மனிதன் ஏன் பெரும்பற்றுதல் வைக்கவேண்டும்? படம் ஒன்றை ஒருவன் வரைகிறான். வரைந்தான பிறகு யாரோ ஒருவனுக்கு அவன் அதைக் கொடுத்துவிடுகிறான். உன் வினைப்பயனைக்கொண்டு உடல் என்பதை தோற்றத்துக்குக் கொண்டுவந்திருக்கிறாய். அதை உன்னுடையது என்று சொந்தம் பாராட்டுகிறபொழுது சுயநலத்தை நீ வளர்க்கிறாய். உலகத்தோடு தொடர்பு வைப்பதற்கென்று அமைந்துள்ள கருவியாக அதைக் கருது. 'உடலை நான் உடைத்திருக்கவேண்டும்' என்ற சுயநலத்தை வளர்க்காதே. 'எனக்குச் சொந்தமாயுள்ள இவ்வுடலை நான் பாதுகாக்கவேண்டும்' என்கிற எண்ணத்தை உருவாக்குகின்றபொழுதே துயரமும் தோன்றி விடுகிறது.

ஆகக் கர்மயோகம் புகட்டுகின்ற உபாயம் ஒன்று இருக்கிறது. சுயநலம் என்கிற உணர்வு உள்ளத்தில் உரு எடுப்பதற்கு இடந்தராதே. அத்தகைய உணர்வு வடிவெடுக்காத வண்ணம் என்றைக்கு உன் உள்ளத்தை நீ பாதுகாத்துக் கொள்கின்றாயோ அன்றைக்குத்தான் நீ உண்மையாகத் தன்னடக்கம் பழகியவன் ஆகின்றாய். மனதில் எண்ணம் என்கிற அலை தோன்

றுவது இயல்பு. சுயநலத்துக்கு ஏதுவான அலை வரா திருக்கும்படி தடுத்துவிடு. இந்த எண்ணத்தைத் தடுத்தான பிறகு உலக வாழ்க்கையில் நீ பிரவேசிக்க லாம். உலகில் வேண்டுமென்கிற பணிவிடைகளையெல் லாம் நீ புரியலாம். மற்றவர்களோடு நீ வேண்டிய வாறு ஒட்டி உறவாடலாம். உலகிலே எந்தப்பகுதிக்கு வேண்டுமென்றாலும் நீ போகலாம். 'யான், எனது' என்னும் செருக்கு உன் உள்ளத்தில் உதிக்காதிருக்கு மாகில் உலகிலுள்ள எத்தகைய தீங்கும் உன்னைக் கெடுத்துவிடாது. உலகில் என்ன பாங்கில் நீ வசித் திருக்கவேண்டுமென்பதை நன்கு உணர்ந்துகொள். நீரிலே தாமரையிலை இருப்பதை நீ பார்த்திருக்கிறாய். நீர் இல்லாது போய்விட்டால் தாமரையிலையும் பட்டுப் போய்விடும். தாமரையிலையின் வாழ்வு நிலைபெற்றிருப் பதற்கு நீர் முற்றிலும் அவசியம். ஆனால் ஒரு துளி நீரும் தாமரையிலையில் வந்து ஒட்டுதற்கு அது இடங் தருவதில்லை. உன்னுடைய வாழ்வைப் பண்படுத்துவ தற்கு அங்ஙனம் உலகம் உனக்கு உதவுகிறது. ஆனால் உலகப்பற்று ஒரு சிறிதளவும் உன் உள்ளத்தில் தோன்றாதிருக்கும்படி பார்த்துக்கொள். உலகப்பற்று சிறிதேனும் இல்லாத நிலைக்கு வைராக்கியம் என்று பெயர். பலபேர் வைராக்கியம் என்கிற சொல்லை உறுதியாகப்பிடித்தல் என்று பொருள்படுத்துகிறார்கள். ராகம் அல்லது பற்று என்பது அற்ற நிலைக்குத்தான் வைராக்கியம் என்று பெயர். உலகப்பொருள் எதனி டத்தும் மனிதனுக்குப் பற்று இல்லாது போய்விடு

மாகில் அவன் தீவிரமான வைராக்கியத்தைப் படைத்திருப்பவன் ஆகின்றான்.

நான்கு விதமான யோக சாதனங்கள் இருக்கின்றன. கர்மயோகம், ராஜயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்பன அந்த நான்கின் பெயர்கள். இவைகளுள் எந்த யோக சாதனத்தை வேண்டுமானாலும் சாதகன் ஒருவன் அனுஷ்டிக்கலாம். எதை அவன் அனுஷ்டித்தாலும் பற்றற்ற மனப்பான்மை அவனுக்கு முற்றிலும் அவசியமாகிறது. உலகப் பொருள்கள்மீது வைத்துள்ள பற்றுதலை அறவே அகற்றிவிடுவது யோக சாதனத்துக்கு முற்றிலும் இன்றியமையாததாம். பற்றற்ற நிலை யாது என்பதை ஈண்டு அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. ஒரு மனிதன் வீடு எதிலும் வாசம் பண்ணுதவனாய் இருக்கலாம்; நல்ல ஆடைகளையும் அவன் அணிந்து கொள்வதில்லை; நல்ல உணவை அவன் புசிப்பதும் கிடையாது. அவன் வெட்டவெளியிலேயே வசித்திருக்கிறான், அல்லது வனாந்தரங்களுக்கு அவன் போய்விடுகிறான். இத்தகைய செயல்களுக்கிடையில் அவன் பற்றுமிக வைத்திருப்பவன் ஆவது சாத்தியம். அவனிடம் ஒரே ஒரு உடைமை உண்டு. அவன் எடுத்துள்ள தேகம் அவனுடைய உடைமை ஆகிறது. இந்த உடலினிடத்துத் தனது கருத்து முழுவதையும் அவன் செலுத்தக்கூடும். உயிர் வாழ்க்கையை நடாத்திவருகின்ற அவன் தன்னுடைய தேகத்துக்காகவென்று படாதபாடு படுபவன் ஆகக்கூடும். அப்படித் தன் உடலைப் பேணுதற்

காகப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்குங்கால் அவன் பற்றுடையவன் ஆகிறான். தேகம் என்பது மனிதன் படைத்துள்ள ஸ்தூல சரீரம். மனது என்பது அவன் படைத்துள்ள சூக்ஷ்ம சரீரம். ஸ்தூல சரீரத்தை ஒரு மனிதன் எப்படி வைத்திருக்கிறான், அதை எந்த சூழ் நிலையில் அமைத்திருக்கிறான், அதைக் கொண்டு எத்தகைய செயல்களைச் செய்கின்றான் என்பனவை களையெல்லாம் முகாமையாக வைத்துக்கொண்டு ஒரு மனிதனிடத்துப் பற்று இருக்கிறதா அல்லது அது அகன்று போய்விட்டதா என்று நாம் நிர்ணயிக்க முடியாது. சூக்ஷ்ம சரீரமாகிய மனதின்கண் நாம் எத்தகைய பான்மையை வளர்த்து வருகிறோம் என் பதை முகாமையாக வைத்துக்கொண்டே பற்றற்ற நிலையை நாம் அறிந்துகொள்ள முடியும். 'நான்' என் கின்ற அகங்காரமும், 'என்னுடையது' என்கின்ற மமகாரமும் மனதைக் கவர்ந்திழுக்கின்றன. 'யான், எனது' என்னும் இயல்புகளே பற்றுதலை உண்டு பண்ண வல்லவைகள். ஸ்தூல சரீரத்தையோ சூக்ஷ்ம சரீரத்தையோ தன்னுடைய நிஜசொரூபம் என்று கருதாது இருப்பவன் பற்றை ஒழித்தவன் ஆகிறான். உடலைத் தான் என்று உணராத நிலையே பற்றற்ற நிலை யாம். பஞ்சேந்திரியங்கள் மூலமாக நுகரப்படும் பொருள்கள் உலகில் இருக்கின்றன. அப்பொருள்களைத் தனக்குச் சொந்தமானவைகள் என்று கருதாத நிலை மமகாரமற்ற நிலையாகும். அப்பொருள்களிடத்துச் சொந்தம் பாராட்டாத நிலையே பற்றற்ற நிலையாம்.

நாம் எங்கே வசித்திருக்கிறோம் என்பது முக்கியமான தல்ல; நாம் எத்தகைய காரியத்தைச் செய்கிறோம் என்பது முக்கியமானதல்ல; நாம் எத்தகைய மனப்பான்மை படைத்திருக்கிறோம் என்பதே மிக முக்கியமானது. ஒருமனிதன் சிம்மாசனத்தின்மீது வீற்றிருந்து நாடாளுதல் என்னும் காரியத்தைச் செய்து வரலாம். அவன் வசித்திருக்கிற இடத்தை முன்னிட்டோ செய்கின்ற தொழிலை முன்னிட்டோ அவனைப் பற்றுடையவன் என்று பகரலாகாது. எத்தகைய சூழ்நிலையிலும் அவன் அறவே பற்றற்றவனாய் இருப்பது சாத்தியம். இனி அவனுடைய நிலைக்கு நேர்மாறாக மற்றொரு மனிதன் கந்தைத் துணியைக் கட்டிக்கொண்டிருக்கலாம்; எங்கேயோ தெருவில் வசித்திருக்கலாம்; அதற்கிடையில் தேகாபிமானமும் விஷயசுகத்தில் நாட்டமும் அவனுக்கு இருக்குமாகில் அவன் பற்றுமிக வைத்திருப்பவனேயாகின்றான். யோகசாதனத்தில் ஈடுபட விரும்புகின்றவன் அறவே பற்றற்றவனாக வேண்டும். பற்றை ஒழித்தான பிறகு தனக்குத் தற்செயலாய் அமையும் கடமையை ஓயாது நன்கு ஆற்றிக்கொண்டிருக்க வேண்டும். கர்மயோகம் புகட்டுகின்ற கோட்பாடு இதுவேயாம். எல்லாவிதமான பற்றுதல்களையும் பந்த பாசங்களையும் அகற்றுதற்கான வழியை இந்த யோகம் காட்டித்தருகிறது. பற்றுதலை அகற்றுதல் மிகவும் கடினமானதே. எனினும் அதைச் செய்தே ஆகவேண்டும். பற்றை நீக்கினால் யோகம் கைகூடும்.

பற்றுதலை அகற்றுதற்கு இரண்டுவிதமான உபாயங்கள் இருக்கின்றன. ஒரு சிலர்க்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது. புறத்திலிருந்து தங்களுக்கு வரும் ஆதரவிலோ உதவியிலோ அவர்கள் நம்பிக்கை வைக்காதவர்களாக இருக்கிறார்கள். அத்தகையவர்களும் கையாளுதற்கான உபாயம் ஒன்றிருக்கிறது. தங்களுடைய மனப்பான்மைக்கு ஏற்றவிதத்திலேயே அவர்கள் கர்மயோகத்தை அனுஷ்டிக்கலாம். தங்களுடைய தீர்மானத்துக்கு ஒப்ப, தங்களுடைய மனவலிமையை அனுசரித்து, தங்களுடைய விவேகத்தையும்கையாண்டு அன்னவர்கள் வினையாற்றி வரலாம். "நான் செயல்கள் பல புரிந்தாகவேண்டும். ஆனால் அச்செயல்களுக்கு நான் அடிமை ஆவதில்லை" என்னும் பாங்கை அவர்கள் வளர்த்து வரலாம். பற்றை ஒழிப்பதற்கு இது ஓர் உபாயமாகிறது. இனிக் கடவுள் நம்பிக்கை வைத்திருக்கிறவர்கள் கையாளுகிற உபாயம் மற்றொன்று இருக்கிறது. அவர்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருப்பதால் அவர்கள் கொள்ளும் உபாயம் மிகச் சுலபமானதாகிறது. தாங்கள் வழிபடும் தெய்வத்துக்குத் தாங்கள் புரியும் கர்ம பலன்களை யெல்லாம் ஒப்படைத்து விடுகின்றனர். தாங்கள் போற்றும் தெய்வத்தின் பெருமைக்காக வென்றே அவர்கள் பணிவிடை செய்கின்றனர். தாங்கள் புரியும் வினையின் விளைவு தங்களுக்கு உரியதாகவேண்டுமென்று அவர்கள் நினைப்பதில்லை. அவர்கள் காண்பவைகளை யெல்லாம் கடவுளுக்குரியவைகள் என்று கருதுகிறார்கள். அவர்கள் மனதில்

கொள்ளும் எண்ணங்களையும் உணர்வுகளையும் கடவு ளுக்கென்றே கொடுத்துவிடுகின்றனர். அவர்கள் காதால் கேட்கும் விஷயங்களை யெல்லாம் இறைவ னுக்கு உரியவைகள் என்று வகைப்படுத்துகின்றனர். அவர்கள் செய்கின்ற செயல்களை யெல்லாம் ஈசுவர ஆராதனை யென்று எண்ணுகின்றனர். எனவே அவர் களுடைய கர்மங்கள் அனைத்தும் கடவுளுக்குரியவை கள் ஆய்விடுகின்றன.

கர்மயோகிகள் செய்கின்ற செயல்கள் எல்லாம் எப்பொழுதும் சத்கர்மங்களாகவே இருக்கின்றன தீவினையாற்றுதல் யோகிகளுடைய இயல்பில் இல்லை நல்வினையையும் யோகிகள் சர்வேசுவரனுடைய ஆரா தனையாகச் செய்வதால் அவர்கள் புகழை நாடுவது கிடையாது. ஆற்றிய வினைக்குக் கைம்மாறாகக் கடவு ளிடத்திருந்தாவது உலகத்தவர்களிடத்திருந்தாவது அவர்கள் எதையும் எதிர்பார்ப்பதில்லை. பெருமைகள் எல்லாம் இறைவனைச்சார்ந்தவைகள் என்றும், செயல் கள் எல்லாம் இறைவனுக்கு உரியவைகள் என்றும் யோகிகள் கருதுகிறார்கள். வினைப்பயனைத் தங்களுக் குரியதென்று சொந்தம் பாராட்டுதல் உலகத்தவர் இயல்பு. வினைப்பயன்களை யெல்லாம் இறைவனுக் குரியவைகள் என்று அவனிடம் ஒப்படைப்பது யோகி யர்கள் இயல்பு. பந்தபாசம் என்னும் சுழலிலே அகப்பட்டுக்கொள்ளுதல் உலகத்தவர் இயல்பு. அச் சுழலினின்று விலகி எட்ட நின்றுகொண்டு தங்களைத் தெய்வத்தின் தொண்டர்களாகக் கருதுவது யோகியர்

களுடைய இயல்பு. தங்களுக்குத் தலைவனாய் இருக்கும் தெய்வத்தின் ஆணைக்கு உட்பட்டு நடப்பது நல்ல சாதனம் என்று யோகிகள் நினைக்கின்றனர். ஒவ்வொரு கணப்பொழுதிலும் தாங்கள் ஆற்றுதற்கிருக்கும் பணிவிடையைத் தெய்வம் தங்களுக்குத் தெரிவிக்கின்றார் என்று யோகிகள் உணர்கின்றனர். கடவுள் ஆட்டுவித்த பிரகாரம் தாங்கள் ஆடுவதாகவும் தங்களைக்கருவிகளாக வைத்துக்கொண்டு தெய்வம்புரிகின்ற செயல்களுக்கு உடந்தையாய் இருப்பது தங்களுடைய வாய்ப்பு என்றும் யோகிகள் நினைக்கின்றனர். எனவே கர்மயோகியாக விரும்புகிறவன் செய்யக்கிடக்கும் சாதனம் இப்பொழுது வெளியாகிறது. கடவுளின் பெருமைக்காகவென்றே கர்மயோகி கடவுளை வழுத்துகிறான். கடவுளினால் ஏவப்பட்டே கர்மயோகி புறவுலகிலுள்ள பொருள்களைப் புலப்படுத்துகிறான். கடவுளினால் ஏவப்பட்டே கர்மயோகி தன்கடமையைச் செய்கிறான். எல்லாம் அவன் உடைமை என்றும் எல்லாம் அவன் செயல் என்றும் சர்வேசுவரனிடம் 'யான் எனது' என்பனவற்றை ஒப்படைத்து விடுவதால் யோகி ஒருவன் யாண்டும் அமைதியே வடிவெடுத்தவன் ஆகிறான்.

தன் வாழ்க்கையினிடத்தும் தான்புரிகின்ற கர்மங்களிடத்தும் மனிதன் உரிமை பாராட்டுவதால் அவன் பலவிதமான துன்பங்களுக்கு ஆளாகிறான். யோகி ஒருவனே தனது உடல், பொருள், ஆவி அனைத்தையும் சர்வேசுவரனுக்கு நைவேத்தியமாகப் படைத்துவிடு

கிருன். அதன் விளைவாக அக்கணமே அவனுக்கு சாந்தி உண்டாகிறது. பரமசாந்திக்கு அவன் இருப்பிட மாகிருன். வேள்வித்தீ ஒன்று மூட்டி அதில் நெய் போன்ற வஸ்துவை ஆகுதியாக மாந்தர் படைக்கின் றனர். உண்மையான ஆகுதி அல்லது படைப்பு ஆக அமைவது நெய்போன்ற வஸ்து அல்ல; பரம்பொருள் என்னும் வேள்வித் தீயினுள் மனிதன் ஒருவன் தனது ஜீவ வியக்தியை ஆகுதியாகக் கொடுத்துவிடுவானுகில் அது ஒப்பற்ற வேள்வியாகிறது. அல்லும் பகலும் இடையருது யோகி ஒருவன் தனது ஜீவிதத்தைப் பரமாத்மாவினிடம் ஆகுதியாகக் கொடுத்துவருங்கால் அத்தகைய யோகி பெருவேள்வி வேட்பவன் ஆகின் முன். "இவ்வுலகத்தில் நான் செல்வத்தை நாடித் திரிகிறேன். தேடும் செல்வங்களுள் இறைவா, நீ ஒருவனே நிலைத்த செல்வமாகின்ருய். உன்னிடம் நான் என்னை ஒப்படைத்து விடுகிறேன். அன்புக்குரிய ஒரு வரை இவ்வுலகில் நான் தேடிப்பார்த்துள்ளேன். அன் புக்குரியவன் இறைவா, நீ ஒருவனே என்பதை நான் கண்டுகொண்டேன். என்னை நான் உன்னிடம் ஒப்ப டைத்து விடுகின்றேன்" — யோகி ஒருவன் இக் கருத்தை அல்லும் பகலும் நினைந்துகொண்டே இருக்க வேண்டும். மேலும் அவன் தனக்குத்தானே ஞாபகப் படுத்திக்கொள்ளவேண்டிய விஷயம் ஒன்றிருக்கிறது: "எனக்காக ஒன்றும் வேண்டாம். எனக்கு வந்து வாய்க்கும் பொருள் ஒன்று நல்லதாக இருக்கலாம், கெட்டதாக இருக்கலாம்; அல்லது நலம் கேடு அற்ற

தாக இருக்கலாம். அதனிடத்து எனக்கு நாட்டமில்லை. யாவையும் இறைவா, உனக்கே உவந்து அளித்துவிடு கிறேன்." 'யான், எனது' என்று நாம் பற்றிப்பிடித் திருக்கும் ஜீவவியக்தி நமக்கு நாம் உண்டுபண்ணிக் கொண்ட வெறும் கற்பனையேயாம். அல்லும் பகலும் இந்த ஜீவவியக்தியை நாம் நீத்துப் பழக வேண்டும். "யானே பொய், என் நெஞ்சும் பொய், என் அன்பும் பொய்" என்னும் உணர்வு ஆழ்ந்து நம் உள்ளத்தில் பதிந்துவிடவேண்டும். நம்முடைய ரத்தத்திலேயே அது ஊறிவிடவேண்டும். நமது நாடி நரம்புகளில் அந்த உணர்வு ஓயாது அடித் துக்கொண்டிருக்கவேண்டும். நமது மூளையில் அந்த உணர்வைத்தவிர வேறு எந்த உணர்வும் இருக்கலா காது. நமது உடலெங்கும் இந்த எண்ணமே வியாபக மாய்விடவேண்டும். நொடிப்பொழுதிலும் இந்த எண் ணத்தைத்தவிர வேறு எந்த எண்ணமும் நம்மிடத்துக் குடிகொள்ளலாகாது. நமது ஜீவவியக்தியை நீத்து விடுதல்தான் நாம் செய்யும் செயல்களுள் செயற்கரிய செயலாகிறது. இந்த எண்ணத்தில் நாம் நிலைபெற் றுன பிறகு ஒரு கோரமயமான போர்க்களத்துக்குள்ளே புகவேண்டி ஏற்படலாம். பீரங்கிக்குண்டுகள் அங்கே வெடித்துக்கொண்டிருக்கலாம். கடும் போரின் ஓசை மண்ணுலகிலும் விண்ணுலகிலும் எதிரொலி செய்து கொண்டிருக்கலாம். அத்தகைய சூழ்நிலையிலும் நாம் ஒன்றிலும் பந்தப்படாதவர்கள்; அத்தகைய கோரச் செயல் நமது ஆத்மசொரூபத்தை வந்து எட்டுவதில்லை;

நாம் பரம சாந்தசொரூபம்; முக்தி அல்லது விடுதலை யில் நாம் நிலைபெற்றவர் என்ற தெளிவு அத்தகைய சூழ்நிலையிலும் நம்மிடத்துக் குடிகொண்டிருக்கும்.

உலகில் நாம் செய்யக்கிடக்கும் கடமை ஒன்று இருக்கிறதென்று எண்ணுகிறோம். கடமையைப்பற்றி நாம் எண்ணுவதெல்லாம் கீழ்த்தரமான வாழ்க்கை யைப் பற்றியது என்று கர்மயோகம் புகட்டுகிறது. வாழ்க்கையில் பல படித்தரங்கள் இருக்கின்றன. கீழ்ப் படிகளில் இருக்கின்றவர்களுக்கு கடமைகள் சில வந்து அமைகின்றன. அப்படி அமைந்துள்ள கடமைகளை நாம் செய்தே ஆகவேண்டும். அவைகளினின்று தப் பித்துக்கொள்ள நமக்கு இயலாது. நமக்கு அமைந் துள்ள கடமை யாது என்பதை நாம் உணர்கிறோம். கடமையைப் பற்றிய உணர்ச்சியினின்றே பெரும் துன் பம் நமக்கு உண்டாகிறது. நோய் உண்டாகி நம் உடலை வாட்டுவது போன்று கடமையைப் பற்றிய உணர்வு நம் உள்ளத்தை வாட்டிக் கொண்டிருக்கிறது. செயல் புரியும்படி நம்மை முன்னுக்கு இழுத்துச் செல்லுவது கடமையைப்பற்றிய உணர்வு ஆகும். இந்த உணர்வு நம்மை ஆழ்ந்து பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. நமது வாழ்வு முழுதையும் துக்கம் நிறைந்ததாகச் செய் வதும் இவ்வுணர்வே. மானுட வாழ்வின் அழிவுக்குக் காரணமாய் இருப்பது கடமையைப் பற்றிய உணர்வு ஆகும். கோடை காலத்து நண்பகல் வெய்யில் உடலை உருக்குவதுபோன்று மானுட வர்க்கத்தின் உள்ளத்தை கடமையைப் பற்றிய உணர்வு உருக்கிக் கொண்டிருக்

கிறது. கடமைக்கு அடிமைப்பட்டிருக்கின்றவர்களை சற்றுக் கவனித்துப் பாருங்கள். இறைவணக்கம் பண்ணுதற்கே கடமை என்னும் நோய் அவர்களுக்கு அவகாசம் கொடுப்பதில்லை! இறைவணக்கம் உள்ளத்தைத் தூயதாக்குகிறது. நீராடுவதால் உடல் தூயதாகிறது. நீராடி உடலைத் தூயதாக்கிக் கொள்ளுதற்கும் கடமையில் கட்டுண்டு கிடக்கின்றவர்களுக்கு நேரமில்லையாம்! கடமை என்னும் சுமை யாண்டும் அவர்கள் தோள்மீது உட்கார்ந்து கொண்டிருக்கிறது. ஓடியோடி அவர்கள் வேலை செய்கின்றனர். ஏன் அவர்கள் அப்படி அவதிப்படுகிறார்கள்? கடமை அவர்களை வேலையில் உந்தித் தள்ளிக் கொண்டிருக்கிறது. நாள் முழுதும் ஓயாது உழைத்தான பிறகு களைப்படைந்தவர்களாய் அவர்கள் வீட்டுக்குத் திரும்பி வருகின்றனர். அடுத்த நாள் அவர்கள் செய்யக்கிடக்கும் வேலையைப் பற்றி எண்ணுகின்றனர். இறக்கி வைக்க முடியாத சுமையாகக் கடமை அவர்கள்மீது உட்கார்ந்து கொண்டிருக்கிறது. அடிமையினுடைய வாழ்வைத்தான் அவனியில் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். வாடகை வண்டி இழுக்கும் குதிரை யாண்டும் சேணம் மாட்டப் பெற்றதாய் இருக்கிறது. சேணம் பூட்டியிருக்கிறபடியே வீதியில் வண்டியை இழுத்துக்கொண்டு ஓடுகையில் அது கீழே விழுந்து சாகிறது. அந்தக் குதிரையின் பரிதாபகரமான நிலையில்தான் மக்களில் பெரும்பான்மையோர் இருக்கின்றனர். கடமை என்பதைப் பற்றி மக்கள் அறிந்திருப்பதும் இவ்வளவுதான்.

ஆனால் ஆத்மீகப் பெரு வாழ்வுக்குத் தங்களை ஆயத்தப்படுத்துகின்றவர்கள் மனிதனுடைய உண்மையான கடமை எது என்று அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது. உலகப் பற்றுகள் அனைத்திடத்திருந்தும் விடுபட்டிருப்பதே உண்மையான கடமையாகும். அடிமை போன்று வேலை செய்வது கடமையாகாது. சுதந்தரத்தில் உறுதி பெற்றவனாய் இருந்து கொண்டு தான் எடுத்துக்கொண்ட கர்மத்தை மனிதன் நன்கு இயற்றவேண்டும். அப்படித் தான் இயற்றுகின்ற கர்மத்தைக் கடவுளுக்கு அவன் ஒப்படைத்து விடவேண்டும். நம் கடமைகள் என்பவைகள் எல்லாம் உண்மையில் கடவுளுக்கு உரியவைகள் ஆகின்றன. கடவுளின் கிருத்தியங்கள் நம் பொருட்டுக் காத்துக் கொண்டிருப்பதில்லை. ஏதேனும் ஒருவிதத்தில் அவைகள் முறையாக நடந்தேறிவிடுகின்றன. ஆனால் கடவுளின் கிருத்தியங்களில் ஒரு பகுதி நம்மைக் கருவியாக வைத்துக் கொண்டு நடந்தேறி வருவதை முன்னிட்டு நாம் கடவுளுக்குக் கடப்பாடு உடையவர்கள் ஆகின்றோம். நம்மைக் கருவியாக வைத்துக் கொண்டு அவருடைய கிருத்தியங்கள் நடைபெறுவதால் நாம் பாக்கியவான்கள் ஆகின்றோம். இறைவனுடைய காலச் சக்கரம் ஓயாது சுழன்று கொண்டு போகிறது. அதில் நமக்கு அமைந்துள்ள காலம் ஒன்றிருக்கிறது. அந்தக் காலத்துக்குப் பொருந்திய கடமையை நாம் செய்கிறோம். அப்படி நாம் ஆற்றும் வினையை முறையாகச் செய்கின்றோமா அல்லது முறைதவறிச் செய்துவிட்

டோமா என்பதை யாரே அறியவல்லவர்? நமக்கு ஏற்பட்ட கடமையை நன்கு நிறைவேற்றி விட்டோம் என்று வைத்துக்கொள்வோம். அந்த வினைப்பயனை நமக்கு உரியதென்று நாம் ஏற்றுக் கொள்ளலாகாது. அறிந்தோ அறியாமலோ நமக்கு ஏற்பட்ட கடமையை நாம் முறைதவறிச் செய்து விட்டோம் என்று வைத்துக்கொள்வோம். அதைக்குறித்து நாம் கவலைப்பட வேண்டியதில்லை. "என்னைக் கருவியாக வைத்துக் கொண்டு இறைவா, நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானோ இதற்கு நாயகமே?" என்னும் கோட்பாட்டில் நாம் உறுதி பெற்றவர்களாக இருக்கவேண்டும். இறைவனுக்குத் தொண்டு புரிவதற்கிடையில் அத்தகைய மனப்பான்மையில் நாம் நிலைபெற்று இருப்போமாகில் நம்மிடத்து சாந்தி நிலைபெற்றிருக்கும். நாம் முக்தியில் உறுதிபெற்றவர் ஆவோம். அதற்கிடையில் நம்மைக் கருவியாக வைத்துக்கொண்டு இறைவனுடைய கிருத்தியமும் நடைபெற்றுக் கொண்டிருக்கும். முக்திநிலை என்பது இதுவேயாம். இத்தகைய முக்தி நிலையை அரிதிலும் அரிதாக யாரோ சிலர் தான் அடைகின்றனர். இதற்கு மாறாக அடிமைத் தனத்தை கடமை என்று வியாக்கியானம் பண்ணுவது மிக எளிது. ஓர் உடல் மற்றோர் உடல்மீது கடைத்தரமான பற்று வைக்கிறது. இது ஒருவிதமான நோய். இந்தப் பற்றுதலைக் கடமை என்று பெருமை பாராட்டும் இயல்பு அடிமைக்கு வந்துவிடுகிறது.

உலகத்தினுள் பிரவேசித்து பணத்துக்காக மக்கள் பெரும் போராட்டம் செய்கின்றனர். பணத்துக்காக வென்று போராடாவிடின் அதற்கு நிகரான வேறு ஏதாவது பொருளுக்காக அவர்கள் போராடுகிறார்கள். இப்போராட்டம் பற்றுதலிலிருந்து உண்டானதாம். ஏன் அவர்கள் இப்படி அல்லல்படுகிறார்கள் என்று கேட்டுப்பாருங்கள். "பொருள் தேடுவது கடமை" என்று அவர்கள் பதில் சொல்லுவார்கள். பணத்துக் காகவும் பொருளுக்காகவும் அவர்கள் படைத்துள்ள அல்பமான பேராசை கடமை என்னும் பெயர் பெற்றி ருக்கிறது. அற்ப ஆசை என்னும் புண்ணின்மீது அவர் கள் பூக்களைப்போட்டு மூடிவைக்க முயலுகின்றனர்.

உலகத்தவர்கள் எதைக் கடமை என்கிறார்கள் என்பதை நாம் ஓர்ந்து அறிந்துகொள்ளுதல் அவசிய மாகிறது. உடல்பற்று உடையவர்களாக அன்னவர்கள் வாழ்ந்து வருகின்றனர். எத்தகைய செயலில் உடல் கூறு மக்களைத் தூண்டுகிறதோ அச்செயலுக்குக் கடமை யென்கிற பெயரை அவர்கள் இட்டிருக்கின் றனர். உடலின்மீது அவர்கள் வைத்துள்ள வாஞ்சைக் கும் கடமை என்னும் பெயர் வந்துள்ளது. உடல் பற்றானது மாந்தருடைய உள்ளத்தில் ஆழ்ந்து நிலை பெற்றுவிடுங்கால் அது கடமையெனக் கருதப்படு கிறது. ஒரு சான்றின் மூலம் இக்கொள்கையை ஆராய்ந்து பார்ப்போம். மணம் புரிந்துகொள்ளுதல் என்னும் சடங்கு சில நாட்டவர்களுக்கிடையில் வழக் கத்தில் வந்து அமையவில்லை. அத்தகைய நாடுகளில்

கணவன் மனைவிக்குச் செய்யவேண்டிய கடமை என்பதும், மனைவி கணவனுக்குச் செய்யவேண்டிய கடமை என்பதும் வழக்கத்தில் வந்து அமையவில்லை. வாழ்க்கைத்துணைக்கு ஆற்றவேண்டிய கடமை என்பதைப் பற்றி அந்நாட்டவர்கள் ஒன்றும் அறியாதவர்களாக இருக்கிறார்கள். பிறகு வேறு சில சமுதாயங்களில் விவாகம் பண்ணிக்கொள்ளுதல் என்னும் வாழ்க்கை முறை வந்து அமைந்திருக்கிறது. கணவன் மனைவி என்னும் மனப்பான்மை படைத்தவர்களாக அவர்கள் வாழ்ந்து வருவதால் அவர்களுக்கிடையில் பற்றுதல் வலுத்துவிடுகிறது. பல தலைமுறைகளாக கணவன் மனைவி என்கின்ற எண்ணத்தில் ஊறி வளர்ந்து வருகின்றவர்களுக்கு பரஸ்பரம் பற்று வைப்பது சர்வ சாதாரணமாய் விடுகிறது. அங்ஙனம் பற்று வலுத்து விடுங்கால் மணந்துகொண்டவர்களின் கடமை என்னும் கோட்பாடும் அன்னவர்களுக்கிடையில் மனதில் ஆழ்ந்து படிந்துவிடுகிறது. இங்ஙனம் உலக மக்களுக்கிடையில் அமைந்திருக்கும் கடமையைப் பற்றிய கோட்பாட்டை ஒரு தீராத நோய் என்று சொல்லலாம். தீராத நோய்க்கும் தாற்காலிகமாகத் தோன்றுகிற நோய்க்குமிடையில் ஒரு வித்தியாசம் உண்டு. ஏதோ சில வேளைகளில் மனிதனை வந்து எது துன்புறுத்துகிறதோ அதை நோய் என்று அழைக்கிறோம். எது சர்வ காலமும் மனிதனை விட்டு விலகாது அவனை பற்றிப் பிடித்துக்கொள்கிறதோ அதை அவனுடைய இயல்பு என்று சொல்லுகிறோம். கடமை என்னும் மனநிலை

மனிதனைவிட்டு விலகாது அவனைப் பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. எனவே கடமையைச் செய்வது மனிதனுடைய இயல்பு என்று உலகத்தவர் எண்ணி வருகின்றனர். உண்மையில் அது ஒருவிதமான நோயே யாம். பற்றுதல் என்னும் பணிநிலை மனிதனை ஆழ்ந்து பற்றிப் பிடித்துக்கொள்ளுமிடத்து அதற்குக் கடமை என்கின்ற கண்ணியமான பெயரைக்கொடுத்து மக்கள் அதைப் புகழ்ந்து பாராட்டுகின்றனர். பற்றுதலைப் பெருக்குகின்ற செயலை மனிதன் என்ன பாங்கில் கண்ணியப்படுத்தி வருகிறான் என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். மணம் புரிந்துகொள்ளுதல் என்கின்ற பந்தபாசத்துக்கு ஏதுவான செயலைக் கல்யாணகாரியம் என்று மாந்தர் மெச்சிப் பேசுகின்றனர். பந்தபாசத்தை வளர்க்கின்ற செயலுக்கு மாலை மாற்றுதல் என்கின்ற மேன்மை அளிக்கப்பட்டிருக்கிறது. மேளதாளத்துடன் அதை உலகத்தவர்க்கு அறிமுகப்படுத்துகின்றனர். மந்த்ரங்கள் ஓதி அப்பந்த பாசத்தைப் புண்ணியச் செயல் என்று புகழ்கின்றனர்! பற்றுதல் என்னும் பந்தம் இங்ஙனம் பரிபாலிக்கப்படுகிறது. பற்றுதலின் ஊறியுள்ள வாழ்க்கையை ஏதேனும் ஒருவிதத்தில் நடத்தியாகவேண்டும். அதன்பொருட்டு உலகத்திலுள்ள மாந்தர் அனைவரும் பெரும் போராட்டங்களில் ஈடுபடுகின்றனர். பேருக்கம் படைத்தவர்களாக மக்கள் இருந்துகொண்டு ஒருவரை ஒருவர் வஞ்சித்து செல்வம் சேகரிக்கின்றனர். ஏன் அவர்கள் அப்படிச் செய்கிறார்கள் என்று கேட்டால் தங்க

ளுடைய கடமைகளை நிறைவேற்றுவதாக அவர்கள் விடைவிடுக்கின்றனர். மாந்தர் தமக்கென்று படைத்துக்கொண்டுள்ள பெரும் போராட்டத்துக்குக் கடமை என்னும் மதிப்புக்குரிய பெயர் வந்து அமைந்திருக்கிறது.

கடமை என்னும் கொள்கையில் மாந்தர் ஊறிக்கிடக்கின்ற மனப்பான்மையை நாம் ஒருவிதத்தில் பாராட்டலாம். ஓரளவு அதில் நலன் அமைந்திருக்கிறது. மிருகத்தன்மை தலையெடுக்காத வண்ணம் அதை அடக்கி வைக்கின்ற அளவுக்கு கடமை என்பது பாராட்டுதற்கு உரியதாகிறது. விலங்குகளுக்கு அண்டை வீட்டுக்காரர்கள் போன்ற கீழ்த்தரமான மக்கள் உலகில் இருக்கின்றனர். வாழ்க்கையின் மேலாம் லக்ஷியங்களைக் கிரகிக்க அத்தகையவர்களுக்கு சிறிதும் இயலுவதில்லை. அத்தகைய சிற்றியல்பு படைத்த மாந்தர்க்கு கடமை என்னும் கோட்பாடு ஓரளவு நலம் புரிகிறது. ஆனால் கர்மயோகிகள் ஆக முயலுகின்றவர்களுக்கு இந்தக் கோட்பாடுகள் சிறிதேனும் உதவா. இத்தகைய புல்லிய எண்ணங்களையெல்லாம் அவர்கள் அறவே புறக்கணித்துவிடவேண்டும். எந்தவிதமான கடமையிலும் யோகியர்கள் கட்டுப்பட்டவர்கள் அல்லர்.

ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையும் உலகுக்குப் பயன்படக் கூடியதேயாம். ஒரு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு மேலான வாழ்க்கை வாழுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் உலகுக்கு நன்கு பயன்

படக்கூடியவன். யோகி ஒருவனுடைய வாழ்வு உலகுக்கு நன்கு பயன்படுகிறது என்பதில் ஐயமில்லை. தன்னுடைய வாழ்க்கையை யோகி ஒருவன் உலகுக்கு உகந்த நன்கொடையாக வழங்கிவிடவேண்டும். தன்னிடத்துள்ள சிறப்புக்களையெல்லாம் அவன் கரவாது உலகுக்குக்கொடுத்துவிடுவது உசிதம். ஆயினும் கடமை என்னும் பந்தத்திலே அந்த யோகி கட்டுப்பட்டவன் அல்லன். உலகுக்குத் தான் ஏதோ செய்யவேண்டிய கடமை இருக்கிறது என்ற எண்ணமே அவனுடைய உள்ளத்தில் நுழைந்துவிடலாகாது. தன் கடமையைச் செய்யும்படி அவனை வற்புறுத்துதற்கு உலகில் ஒன்றும் இல்லை. பந்தபாசங்கள் அனைத்தையும் ஒழித்துவிட்டவனைக் கடமையில் ஏவக்கூடியது யாது? கட்டாயப்படுத்தப் பட்டவருக்கோ, வற்புறுத்தப் பட்டவருக்கோ யோகி ஒருவன் ஏதேனும் ஒருபணியை ஆற்றிவருவானாகில் படிப்படியாக அது பந்தத்தை உண்டுபண்ணிவிடும். உலகில் யாருக்கும் யோகி கடமைப்பட்டவன் அல்லன். அவன் தன்னுடைய உடல் பொருள் ஆவி அனைத்தையும் கடவுளுக்கென்றே ஒப்படைத்தவன். இவ்வுலகிலே யோகி ஒருவனுடைய நிலைமைதான் மிக அற்புதமானது. கடமை என்கின்ற உலை கொழுந்து விட்டு எரிந்துகொண்டிருக்கிறது. யாவரையும் பொசுக்கிவிடக்கூடிய வெப்பம் அவ்வுலையின்கண் இருந்து வருகிறது. உலக மக்கள் அனைவரும் அவ்வெப்பத்திலே வெந்து சாம்பலாய்க் கொண்டிருக்கின்றனர். யோகி ஒருவன் மட்டும் அவ்வெந்தழலில் வெந்துபோகாது

அதற்கு முற்றிலும் புறம்பானவனாய் இருந்துவருகிறான். எதிலும் கட்டுப்படாத நிலையடைந்து முக்தி என்னும் அமிர்தத்தைப் பானம்பண்ணி இன்புற்றிருப்பவன் யோகி ஒருவனேயாம். சர்வேசுவரனுடைய திருவுளத்துக்கு உடந்தையானவனாக யோகி ஒருவன் தனக்குத் தற்செயலாய் அமைந்துள்ள பணிவிடையை ஆற்றி வருகின்றான். அப்படி அவன் ஆற்றுகின்ற வினையின் விளைவாக சம்மானம் எதையும் அவன் எதிர்பார்ப்பவன் அல்லன். செய்யவேண்டிய கடமையைச் செய்யாது தவிர்த்திருந்ததற்காகவோ அல்லது ஆற்றுதற்கு அவசியமில்லாத செயலில் ஈடுபட்டிருந்ததற்காகவோ அவனுக்கு இடுக்கண் ஒன்றும் வந்துவிடுவதில்லை. அவனுக்குத் தண்டனை விதிப்பதற்கும் யாருக்கும் இயலாது. எவன் ஒருவன் வெகுமதியை எதிர்பார்க்கின்றானோ அவனுக்கு அதன் எதிர்ச்செயல் ஆகிய தண்டனையும் கிட்டுவது திண்ணம். தண்டனையையும் திட்டுதலையும் அறவே விலக்கிவிட விரும்புகின்ற ஒருவன் வெகுமதியையும் தூரத்தில் ஒதுக்கி வைத்துவிடவேண்டும். துக்கத்தினின்று முற்றிலும் விலகிக்கொள்ள விரும்புகின்ற ஒருவன் சுகத்தைப்பற்றிய எண்ணத்தினின்றும் முற்றிலும் விலகிக்கொள்ள வேண்டும். ஏனென்றால் பாராட்டுதலும் நிராகரித்தலும் இணைபிரியாதவைகள்; இன்பமும் துன்பமும் இணைபிரியாதவைகள்; இரவு பகல் ஆகிய இரண்டும் இணைபிரியாதிருப்பதுபோன்று இவைகளும் இணைபிரியாதிருக்கின்றன. இன்பமாகக் காட்சிகொடுக்கும்

ஒன்றனுக்குத் துன்பமாகக் காட்சிகொடுக்கும் மற்றொரு பக்கம் அதனிடத்து அமைந்திருக்கிறது. வாழ்க்கையாகக் காட்சிகொடுக்கும் நிலையானது மற்றொரு புறத்தில் மரணமாகக் காட்சிகொடுக்கிறது. இணைபிரியாத இத்தகைய இருமைகளுள் ஒரு பக்கத்தைத் தவிர்த்து மற்றொரு பக்கத்தை ஏற்றுக்கொள்ளுதல் என்பது இயலாத காரியம். மரணமிலாப் பெருநிலையை அடைய விரும்புகின்றவன் உயிர்வாழ்ந்திருத்தல் என்னும் மயக்கத்தினின்றும் விலகிக்கொள்ளுதல் அவசியமாகிறது. வாழ்வும் சாவும் உண்மையில் ஒன்றே. ஒருவிதக் காட்சியில் வாழ்வாகத் தென்படுவது மற்றொருவிதக் காட்சியில் மரணமாகத் தென்படுகிறது. வாழ்வு என்னும் காட்சியில் மையல்கொண்டிருப்பவன் மரணம் என்னும் காட்சிக்கும் உட்பட்டே ஆகவேண்டும். துன்பம் கலவாத இன்பத்தைப்பற்றிய பேச்சைப் பலர் பேசுகின்றனர். மரணம் வந்து தீண்டாத வாழ்வைப்பற்றியும் பலர் பேசுகின்றனர். அத்தகைய பேச்சுக்களும் போதனைகளும் இன்னும் விவேகத்தை அடையப்பெறாதிருக்கும் பள்ளிக்கூடத்துக் குழந்தைகளுக்கு மிகப் பொருத்தமானவைகளே. ஆனால் உண்மையை ஓர்ந்து பார்க்கின்ற விவேகி ஒருவனுக்கு உட்பொருள் உள்ளபடி விளங்குகிறது. மரணத்தைத் தவிர்த்துள்ள வாழ்வும் துன்பத்தைத் தவிர்த்துள்ள இன்பமும் இப்பிரபஞ்ச அமைப்பில் பொருளற்றவைகள் என்பது மெய்ஞ்ஞானிக்கு விளங்குகிறது. எனவே அப்பேரறிஞன் பிறப்பு இறப்பு ஆகிய இரண்டையும்,

இன்ப துன்பமாகிய இரண்டையும் ஒருங்கே புறக்க ணித்து விடுகின்றான். ஜனன மரணத்துக்கு அப்பாற் பட்ட நிலையில், இன்ப துன்பத்துக்கு அப்பாற்பட்ட நிலையில் அன்னவன் உறுதிபெற்று இருக்கிறான்.

தான் புரிகின்ற செயலை அரும்பணி என்று போற்றி தனக்கு யாராவது சன்மானம் ஏதாவது வழங்கவேண்டு மென்று அவன் எதிர்பார்ப்பதில்லை. நல்வினை ஏதே னும் ஒன்றை ஆற்றியானவுடனே அதற்கு ஆமோ திப்பும் பாராட்டுதலும் வந்து அமையவேண்டுமென்று உலகத்தவர் எதிர்பார்க்கின்றனர். ஏதேனும் ஒரு நல்ல இயக்கத்துக்கு செல்வத்தை எடுத்து வழங்கி யானவுடனே அதைக்குறித்து சமாசாரப் பத்திரிகை களில் பெருமிதமான பாராட்டுதல்கள் பிரசுரிக்கப்பட வேண்டுமென்று உலகத்தவர் எதிர்பார்க்கின்றனர். அவர்கள் எதிர்பார்க்கின்ற பாராட்டுதல்கள் வந்து அமைந்துவிட்டால் தாங்கள் மகிழ்வுற்று இருக்கக் கூடுமென்று அன்னவர்கள் மனக்கோட்டை கட்டுகின் றனர். ஆனால் அத்தகைய ஆசைகள் அவர்களுடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கும்வரையில் இன்பத்தை நாடுகின்ற அவர்கள் துன்பத்தினின்று தப்பித்துக் கொள்ள முடியாது. இவ்வுலகின் நடைமுறையைப் பற்றி அறிவுடையோர் எண்ணிப் பார்க்கவேண்டும். மகோன்னதமான நிலையடைந்த மேலோர்களை இவ் வுலகம் ஈன்றெடுத்திருக்கிறது. அத்தகைய மேன் மக்கள் உலகில் தங்களை விளம்பரப்படுத்திக்கொள் ளாது அமைதியாக வாழ்ந்திருந்து பின் அமைதியாக

இவ்வுலகினின்று வெளியேறி யிருக்கின்றனர். உலகப் பிரசித்தி பெற்றுள்ள புத்தரைப்பற்றியும் ஏசுநாதரைப்பற்றியும் நாம் வேண்டியவாறு கேள்விப்படுகிறோம். ஆனால் இத்தகைய பெருமக்களே இரண்டாந்தரமான பெருமக்கள் என்பது நமக்குத்தெரியாது. மனபரிபாகத்தில் இவர்களை விட மிக மேலான நிலையை அடைந்தவர்கள் இம்மண்ணுலகில் இருந்திருக்கிறார்கள். மஹாவீரர்கள் என்று அத்தகையவர்களைக் குறிப்பிடலாம். சாந்தமே வடிவெடுத்தவர்களாக அப்பெருமக்கள் வாழ்ந்திருக்கின்றனர். வானத்தில் பறக்கும் பறவை வானவெளியில் எந்த விதமான அடையாளத்தையும் விட்டுச் செல்வதில்லை. அதே பாங்கில் இப்பெருமக்களும் உலகில் எந்த விதமான அடையாளத்தையும் விட்டுவைக்காது மறைந்து போயிருக்கின்றனர். ஆனால் வெளிக்குத் தெரியாத பெருங்கொடையொன்றை அவர்கள் விட்டுவைத்துப் போயிருக்கின்றனர். அவர்கள் எண்ணிய மேலாம் எண்ணங்கள் ஒருநாளும் அழிந்துபட்டுப்போவதில்லை. இவ்வுலகமெல்லாம் ஒடுங்குகின்ற விடத்தும் அவர்களுடைய மேலாம் எண்ணங்கள் அழிந்துபட்டுப் போகா திருக்கின்றன. விதையானது மண்ணில் மரமாகத் தோன்றிவருவதுபோன்று பெருமக்களுடைய மேலான எண்ணங்கள் தகுதிவாய்ந்த மற்ற நன்மக்கள் உள்ளத்தில் உரு எடுத்து உலகுக்கு நன்கு பயன்படுகின்றன. விதைக்குள்ளிருக்கும் உயிர்த் தத்துவம் நமக்கு விளங்குவதில்லை. ஆனால் அது மரமாகப்பரிண

மித்து வருகின்றபொழுது அதன் தோற்றம் நமக்குப் புலனாகிறது. உலகுக்கு அறிமுகமாகாது அமைதியுற்றிருந்த ஆன்றோர்கள் உள்ளத்தில் எழுந்த உயர்ந்த எண்ணங்கள் நம் போன்ற பொதுமக்களுக்கு விளங்குவதில்லை. பரமாசாரியர்களாக உலகமக்களுக்கிடையிலே உலவுகின்ற சிலர் உள்ளத்தில் புகுந்த அம்மேலாம் எண்ணங்கள் அரும்பெரும் செயல்களாகப் பரிணமிக்கின்றபொழுது அவைகள் நம் அறிவுக்கு எட்டுகின்றன. விளம்பரத்தின் மூலம் நமக்கு அறிமுகமாயிருக்கின்ற பரமாசாரியர்கள் எல்லோரும் இரண்டாந்தரமானவர்களே என்பதுதான் உண்மை. அவர்களைவிட மிக்காராக இருந்து வந்தவர்கள் உலகில் பொதுமக்களுக்கு அறிமுகம் ஆகாமலேயே அமைதியாக இருந்துவிட்டுப் போயிருக்கின்றனர். நிறைஞானமே வடிவெடுத்தவர்கள் அவர்கள். அவர்கள் பெற்ற நிறைஞானத்தை உலகத்தவர்க்கு ஆஸ்தியாக அவர்கள் விட்டுச் சென்றிருக்கின்றனர். அந்த ஞானம் தாங்கள் தேடியது என்று அவர்கள் சொந்தம் பாராட்டியதும் கிடையாது. தங்களுடைய பெயரை அடிப்படையாக வைத்துக்கொண்டு எந்த விதமான சம்பிரதாயங்களையோ சமயங்களையோ அவர்கள் நிலைநாட்டியதும் கிடையாது. அத்தகைய எண்ணத்தினின்று அவர்கள் முற்றிலும் பின்வாங்கிவிடுகின்றனர். தூய சத்வ குணமே வடிவெடுத்தவர்கள் அவர்கள். அவர்களுடைய சித்தம் என்னும் பரந்த கடலில் எந்தவிதமான அலையும் உண்டாவதில்லை. ஆனால் அமைதியானபாங்கில்

அரிய நிகழ்ச்சி ஒன்று அவர்களுடைய மனதில் நிகழ்கிறது. கடலிலுள்ள பனிக்கட்டி சிறிது சிறிதாக உருகி நீர்மயம் ஆய்விடுவதில் ஆடம்பரம் ஒன்றுமில்லை. அங்ஙனம் இந்த சான்றோர்கள் உள்ளத்தில் அமைதியாக அன்பு பெருகிக்கொண்டிருக்கிறது. அந்த அன்பு உலகனைத்தையும் அவர்கள் வசமாக்கிவிடுகிறது. அத்தகைய மனிதர் ஒருவரை தாம் நேரில் பார்த்திருப்பதாக சுவாமி விவேகானந்தர் பகர்கின்றார். பாவ் ஆஹாரி பாபா என்னும் பெரியார் ஒருவர் காசிப்பூர் என்னும் ஊருக்கு அருகில் ஒரு குகையில் வசித்திருந்தார். அவர் ஓர் அற்புதமான மானுடர். தம்முடைய ஜீவபோதத்தை அவர் அறவே புறக்கணித்துவிட்டவர். அவரிடத்து மானுட வியக்தி அறவே நசித்துப்போய் விட்டது எனலாம். ஜீவபோதம் அல்லது மானுட வியக்தி நசித்துப்போன பிறகு எஞ்சியிருப்பது யாது என்னும் கேள்வி எழலாம். அனைத்தையும் ஐக்கியப்படுத்துகிற தெய்வீகம் ஒன்றே அத்தகையவர்களிடத்து எஞ்சியிருக்கிறது. பாவ் ஆஹாரி பாபாபோன்ற பரமயோகி ஒருவருடைய கை ஒன்றை விலங்கு ஒன்று கடித்தால் மற்ற கையையும் அதற்குக் கொடுத்துவிட ஆயத்தமாய் இருப்பார். சர்வேசுவரனுடைய அருளால் எந்த உயிர்க்கு எது தேவையோ அதை அவ்வுயிர் எடுத்துக்கொள்ளட்டும் என்னும் சீரிய மனநிலையில் நிலைத்திருப்பவர் அவர். தாம் எடுத்திருந்த உடலைத் தம்முடையது என்று கருதுகின்ற எண்ணத்தை அவர் அறவே கடந்துவிட்டவர். அந்த சரீரத்

துக்கு எது நிகழ்ந்தாலும் அது இறைவனுடைய திரு வுளப்பாங்கு என அவர் பொருள்படுத்தினர். உலகத் தவர்களுக்கு அவர் தம்மைக் காண்பித்துக்கொள்ள வில்லை. எனினும் அவர் அன்புக்கு இருப்பிடம். மெய்ப் பொருள் எது என்பதற்கு அவருடைய சொரூபமே விளக்கமாகும். இனிமை யாண்டும் அவரிடத்திருந்து வியாபகமாய்க் கொண்டிருந்தது. முற்றிலும் சத்வ குணமே வடிவெடுத்தவர்களுடைய பாங்கு இத் தகையது.

சிறிது ரஜோகுணத்தோடு கூடியுள்ள சான்றோர் களுடைய வரலாறுகளை இனி எடுத்துக்கொள்வோம். விதவிதமான அலுவல்களில் ஈடுபடுவது அவர்களின் இயல்பு. எங்கெல்லாம் கீழ்மையும் கேடும் தென்படு கின்றனவோ அவைகளை எதிர்த்துப் போராடுவது அவர் களுடைய போக்கு ஆகும். சாந்தசொரூபிகளாய் இருக்கும் சான்றோர்கள் சீரிய எண்ணமே வடிவெடுத்து அமைதியுற்றிருந்தார்கள் எனின் அவர்களுக்கு அடுத்த படியிலிருக்கும் இந்த ரஜோகுணம் வாய்ந்துள்ள ஆசாரியர்கள் அந்த சீரிய எண்ணங்களை உலகுக்கு எடுத்துப் புகட்டுவதைத் தங்களுடைய கடமையாக வைத்துக்கொண்டுள்ளார்கள். மகோன்னதமான மேலாம் எண்ணங்களையும் கோட்பாடுகளையும் அமைதி யாகச் சேகரிப்பது சாத்விக சுபாவம் படைத்துள்ள சான்றோர்களுடைய செயலாகும். அந்த மேலாம் கருத் துக்களை வெவ்வேறு இடங்களுக்குச் சென்று புகட்டு வதும் அவைகளை நடைமுறையில் கொண்டுவருவதும்

அடுத்தபடியிலுள்ளவர்களுடைய செயலாகும். புத்தர், ஏசுநாதர், சங்கரர், திருஞானசம்பந்தர் போன்றவர்கள் இக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களாகின்றனர். தம்மைப் பற்றி கௌதமபுத்தரே பகர்ந்துள்ள கோட்பாடு ஒன்று உண்டு. போதிசத்வம் அடைந்துள்ள புத்த பெருமான்களுடைய சந்ததியில் தாம் இருபத்தைந்தாவது ஸ்தானம் வகிப்பதாக அவர் பகர்ந்திருக்கின்றார். அவருக்கு முன்பு இருந்த இருபத்து நான்கு பேர்களைப்பற்றி உலகுக்கு ஒன்றும் தெரியாது. அந்த இருபத்து நான்கு பேர்களும் எந்த சீரிய எண்ணங்களை அஸ்திவாரமாக வைத்துக்கொண்டு தங்களைப் பண்படுத்தினார்களோ அந்த சீரிய எண்ணங்களை உலகுக்கு எடுத்து வழங்குவது இருபத்தைந்தாவது புத்தருடைய செயலாயிற்று. அதீதநிலை என்னும் பாரமார்த்திகத்தின் உச்சநிலையில் இருக்கும் சான்றோர்கள் சாந்தமே வடிவெடுத்தவர்கள். அன்னவர் மௌனத்தில் நிலைத்திருக்கின்றனர். உலகுக்கும் அவர்கள் அறிமுகம் ஆகாது இருந்துவிடுகின்றனர். எண்ணத்தின் வலிவு மிக மிக உயர்ந்தது என்பதை அவர்களே அறிகின்றனர். சுவாநுபவத்தில் அவர்கள் கண்டுள்ள மெய்க்காட்சியைப்பற்றி அவர்களுக்குச் சந்தேகம் சிறிதேனும் கிடையாது. குகை ஒன்றனுள்ளே சென்று உயர்ந்த எண்ணங்கள் சிலவற்றை அவர்கள் ஆழ்ந்து எண்ணிவிட்டால் அவர்களுக்கு அது போதுமானது. அவர்கள் செய்யவேண்டிய கிருத்தியங்கள் எல்லாம் அந்த நான்கு ஐந்து எண்ணங்களில் அடங்கிவிடு

கின்றன. பிறகு அப் பெருமக்கள் தங்கள் உடலங்களைக் குகைக்குள்ளேயே உகுத்துவிட்டாலும் அதனால் உலகுக்கு ஒருவிதமான நஷ்டமும் உண்டாகாது. அவர்கள் எண்ணிய பஞ்சசீலம் என்னும் இந்த உயர்ந்த ஐந்து எண்ணங்கள் என்றென்றும் உலகில் நிலைத்திருந்து மக்களை நல்வழியில் தூண்டுவனவாகும். எது மிக சூக்ஷ்மமானதோ அதற்கு எங்கும் வியாபிக்கிற சக்தி உண்டு. எண்ணத்தைவிட சூக்ஷ்மமானது பிரபஞ்சத்தில் எதுவும் இல்லை. எண்ணங்களுள் தூய எண்ணத்துக்கு அளப்பரிய சக்தி உண்டு. மலைகள் எண்ணங்களுக்குத் தடைகள் ஆகமாட்டா. மலைக் குகைக்குள்ளே எண்ணுகிற எண்ணங்கள் ஆங்கு அடைபட்டு நின்றுவிடா. கடல்களைக் கடந்து அப்பால் செல்லுதற்கு எண்ணங்களுக்கு இயலும். உலகில் எங்கும் வியாபகமாயிருக்கிற சக்தி எண்ணங்களுக்கு உண்டு. மாந்தருடைய உள்ளத்தினுள் புக அவைகளுக்கு இயலும். மாந்தருடைய மூளைகளைக் கருவிகளாக வைத்துக்கொண்டு அவ்வெண்ணங்கள் செயல்களாகப் பரிணமிக்கவல்லவைகள். அவ்வெண்ணங்களை உருவாக்கத்தக்க ஆடவர்களையும் மகளிர்களையும் ஆயத்தப்படுத்த அவைகளுக்கு இயலும். ஜன சமூகத்தின் வாழ்க்கையில் அவ்வெண்ணங்களை அனுஷ்டானத்தில் கொண்டுவருவதற்கேற்ற மாந்தர்களை உருவாக்குதற்கும் அவ்வெண்ணங்களுக்கு இயலும்.

சாத்விகமே வடிவெடுத்துள்ள மாந்தர் சர்வேசுவரனுடைய சான்னித்தியத்துக்குப் பக்கத்தில் வந்தவர்

கள் ஆகின்றனர். அங்குப் பெரியாக்கங்களுக்கும் போராட்டங்களுக்கும் இடமில்லை. அரும்பாடுபட்டு ஏதேனும் ஒன்றைச் சாதிக்கவேண்டும் என்கின்ற நியதியும் ஆங்கில்லை. இறைவனுடைய சாந்நித்தியத்துக்கு வந்திருக்கிறவர்களுக்கு பிறர்க்குப் போதிக்கவேண்டும் என்கிற எண்ணம் மனத்தைவிட்டு அகன்றுபோய்விடுகிறது. பிறர்க்கு நலம் செய்யவேண்டும் என்கிற எண்ணமும் ஆங்கு உண்டாவதில்லை. சர்வேசுவரனுடைய சன்னிதியின் மகிமையை உணரா நிற்கின்ற மாந்தர்களே மண்ணுலகில் இத்தகைய அலுவல்களையெல்லாம் செய்துகொண்டிருக்கவேண்டுமென்ற திட்டங்களை வகுக்கின்றனர். அரும்பெரும் செயல்களைச் செய்கின்றவர்கள் இவ்வுலகில் இருக்கின்றனர். அவர்கள் புரிகின்ற நல்வினைகளும் பாராட்டுதலுக்கு உரியவைகளாம். எனினும் எவ்வளவு காலத்துக்கு அவர்கள் விதவிதமான சத்கர்மங்களில் ஈடுபட்டிருக்கிறார்களோ அவ்வளவு காலத்துக்கு அவர்களிடம் இன்னும் சிறிது அக்ஞானம் எஞ்சியிருக்கிறது என்பதை நாம் மறந்துவிடலாகாது. மேலோர்களுடைய மன அமைப்பில் சிறிதளவாவது அக்ஞானம் என்னும் அழுக்கு எஞ்சியிருந்தால்தான் அவர்கள் வினையாற்றக் கூடியவர்களாகின்றார்கள். யந்திரம் ஒன்றை இயக்குதற்கு விசை வேண்டியிருக்கிறது. அக்கோட்பாடு மக்களுக்கும் பொருந்துகிறது. ஏதேனும் ஒரு கொள்கை என்கின்ற விசை ஓயாது மாந்தருடைய உள்ளத்தில் குடிகொண்டிருப்பது அவசியமாகிறது. அக்கொள்கையினிடத்துப்

பற்றுதல் சிறிதளவாவது இருக்கவேண்டும். அப்பொழுதுதான் மக்களுக்கு வினையாற்ற இயலுகிறது. கொள்கை ஒன்றன்கண் வைக்கின்ற பற்றுதல் மாந்தருக்கு உரியதே எனினும் அத்தகைய பற்றுதலும் மனதில் இலேசாக மிஞ்சியிருக்கிற அக்ஞானத்தின் விளைவாம். இறைவனுடைய சான்னித்தியத்தை முற்றிலும் உணருகிற மனபரிபாகம் வந்து விடுங்கால் அக்ஞானம் அறவே அகன்றுவிடுகிறது. இறைவன் ஒருவனே செயல்களனைத்துக்கும் கர்த்தா என்கின்ற மெய்ஞானமும் அப்பொழுது வந்துவிடுகிறது. அவனன்றி ஓரணுவும் அசைவதில்லை என்னும் பேருண்மை அப்பொழுது சுவானுபவத்தில் உணரப்படுகிறது. அதை உணருகின்ற ஞானி தன் செயல் என்று எதையும் சொந்தம் பாராட்டுவதில்லை. மிக அற்பமான உயிர்களையும் இறைவனே பாதுகாத்துவருகின்றார். அவ்வுயிர்களைப் பக்குவப்படுத்துகின்ற செயலையும் அவர் புரிகின்றார். அவருடைய ஆணையினாலன்றி ஓர் அணுவும் அசைவதில்லை. இதை அறிந்துகொண்டுள்ள மனிதன் தன் சொந்தச்செயல் என்று எதனிடத்து உரிமை பாராட்டக் கூடியவனாகின்றான்? இறைவனுடைய அரும்பெரும் செயல்களையெல்லாம் கருத்தில் வாங்கிக்கொண்டு பயபக்தியுடன் அவனுக்கு வந்தனை வழிபாடு செய்வதே நம் கடமையாகும். "இறைவா, உனது திருவுளப்பாங்கின்படி யாவும் நிகழ்ந்து வருகின்றன"— இங்ஙனம் இயம்புவதைத் தவிர நம் செயல் என்று உரிமை பாராட்டுதற்கு நமக்கு

*அதிகாரம் இல்லை. இறைவனைப்பற்றிய இத்தகைய மெய்ஞானம் அடையப் பெற்றுள்ள மாந்தர் வினையாற்றுவதில்லை. ஏனென்றால் தங்களுடைய செயல் என்கிற பற்றுதல் எல்லாம் அவர்களைவிட்டுப் பறந்தோடிவிடுகிறது.*

*மானுட சரீரம் தாங்கியிருந்தும் கர்மத்தில் சிறிதேனும் சம்பந்தப்படாதவர்கள் யாரோ சிலர் உண்டு.*

**यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥**

ஆனால் ஆத்மாவில் இன்புற்று, ஆத்மாவில் திருப்தியடைந்து, ஆத்மாவில் மகிழ்ந்திருப்பவனுக்கு வினையாற்றும் கடமையில்லை. *(கீதை 3-17)*

*உடல் எடுத்திருப்பவர்களுள் மிக உயர்ந்த நிலையை அடைந்தவர்கள் ஆகின்றனர் இக்கூட்டத்தார். அவர்களுடைய நிலை அலாதியானது. ஆத்ம பரிபாகத்துக்கு முயன்றுவருகிற ஏனைய சாதகர்கள் எல்லோரும் கர்மம் செய்தே ஆகவேண்டும். அப்படிக் கர்மம் செய்துகொண்டிருப்பதற்கிடையில் அண்டத்திலுள்ள ஓர் அற்ப உயிருக்கும்கூட தான் ஏதோ உபகாரம் செய்துவிட முடியுமென்று ஆத்மசாதகன் கனவிலும் கருதலாகாது. ஓர் உயிர் மற்றோர் உயிரை உய்விப்பது என்பது ஈசுவர சிருஷ்டியில் கிடையாது. தன்னால் உலகம் ஏதோ நன்மை அடைந்ததென்று ஆத்ம சாதகன் ஒருவன் எண்ணுவானாகில் தன் மனதில் அக்ஞானத்தையே அவன் வளர்ப்பவன் ஆகிறான். தேகப்பயிற்சி பண்ணுகின்றவன் உடலுறுதி பெறுகின்றான். அதே பாங்கில்*

பிறர்க்காகவென்று உழைக்கின்றவன் தன்னையே ஒழுங்குப்படுத்திக் கொள்கின்றான். தன்னைத் திருத்தியமைத்தல் என்னும் உதவியைத் தன்னிடமிருந்து தானே பெற்றுக் கொண்டவனாகிறான். பிறர் பொருட்டு உழைப்பதன் வாயிலாக எவ்வளவுக்கெவ்வளவு ஒரு மனிதன் தன்னையே மறந்து விடுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் தனக்குத்தானே உதவி புரிபவன் ஆகின்றான். பிறர் சேவையில் தன்னை முற்றிலும் மறந்துவிடக் கற்றுக்கொள்கின்றவன் நல்ல கர்மயோகி ஆகிறான். இத்தகைய மன நிலை கர்மயோகத்துக்கு முற்றிலும் அவசியமாகிறது. பிறர்க்காகவென்று உழைப்பது ஆத்மசாதகன் ஒருவனுக்குக் கிடைத்துள்ள பெரும் பேறு அல்லது பாக்கியம் என்று கருதி வருவானாகில் எதனிடத்தும் அவனுக்குப் பற்றுதல் உண்டாகாது. மக்களுடைய மனப்பான்மையைப்பற்றிய அதிசயம் ஒன்று உண்டு. கோடானுகோடி மக்கள் மண்ணுலகில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் எல்லோருமே தங்களைப் பெருமிதப்படுத்திக் கொள்கிற மனப்பான்மை உடைத்திருக்கின்றனர். தங்களுடைய ஆதரவு இல்லாது போய்விட்டால் உலகுக்கு ஏதோ பெரிய நஷ்டம் வந்துவிடுமென்று இவர்கள் எல்லோரும் எண்ணி வருகின்றனர். இப்படித் தங்களைப் பெருமைப்படுத்தி எண்ணி வருகின்றவர்கள் காலக்கிரமத்தில் சாகின்றனர். அவர்கள் செத்துப்போய் சில தினங்களுள் உலகம் அவர்களை அடியோடு மறந்துவிடுகிறது. அவர்கள் மறைந்துபோய் விட்டதால் உலகுக்கு ஒரு

குறையும் வந்துவிடவில்லை. ஆனால் அண்டம் முழுதுக்கும் அடிப்படையாயுள்ள பேருயிரே கடவுள் என்று அழைக்கப்படுகின்றார். "அவருடைய ஆணையினாலன்றி எவ்வுயிரும் ஒரு நொடிப்பொழுதும் வாழ்ந்திருக்கவோ, சுவாசிக்கவோ முடியாது." அவர் சர்வ சக்திமான். அவருடைய ஆணையினின்றே சக்தி உரு எடுக்கிறது; காற்று அடிக்கிறது; சூரியன் பிரகாசிக்கிறான்; நிலவுலகம் நிலைத்திருக்கிறது மரணமும் அவருடைய ஆணைக்கு அடிபணிந்தே தன் செயலைச்செய்கிறது.

भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः ।
भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः ॥

(கடோபநிஷத் 6-3)

அனைத்துமாய் இருப்பவர் பரமாத்மா. அனைத்தினுள்ளும் இருப்பவர் அவர். அவரைப் பாராட்டுவதே நாம் செய்யக்கிடக்கும் கடமையாம். வினைப்பயன் ஒன்றும் உண்மையில் நமக்குரியதன்று. ஓயாது நல்வினையாற்றிக் கொண்டிருப்பதே நம் கடமையாகும். அதற்குக் கைம்மாறு எதையும் எதிர்பார்ப்பது நம் கடமையாகாது. கைம்மாறு கருதாது கடமையைச் செய்வதாலேயே முற்றிலும் பற்றற்ற நிலை நமக்கு வாய்க்கிறது. மனதில் அமைந்துள்ள தளைகள் அனைத்தும் அறுபட்டுப்போய் விடுகின்றன. பூரணமுக்தி நமக்கு உரியதாய் விடுகிறது. இங்ஙனம் முக்தி அடைவது கர்மயோகத்தின் குறிக்கோள் ஆகிறது.

# 8. கர்மயோகத்தின் குறிக்கோள்

மதங்கள் அனைத்துக்கும் அடிப்படையாய் அமைந் துள்ள தத்துவங்களின் தொகுதிக்கு வேதாந்தம் என் னும் பெயர் வந்துள்ளது. மேலான கோட்பாடு ஒன்று இந்த வேதாந்தத்தின்கண் அடங்கியிருக்கிறது. மக்கள் அடைகின்ற முடிவான நிலை பரிபூரணம் என்பதும், அதை அடைவதற்கான மார்க்கங்கள் பல இருக்கின் றன என்பதும், அந்த மார்க்கங்கள் எல்லாம் பரி பூரணம் என்னும் ஒரே குறிக்கோளின்கண் ஜீவர்களை எடுத்துச் செல்லுகின்றன என்பதும் அக்கோட்பாடு ஆகும். விதவிதமான மார்க்கங்களைப் பொதுவாக நான்கு தலைப்பின்கண் அடக்கிவைக்கலாம். கர்ம யோகம், ராஜயோகம், பக்தியோகம், ஞானயோகம் என அந்நான்குக்கும் பெயர்கள் அமைந்திருக்கின்றன. ஆனால் அந்த நான்கு யோகங்களும் ஒன்றோடொன்று சம்பந்தப்படாத அலாதியான மார்க்கங்கள் என்று நாம் கருதலாகாது. ஒன்று மற்றொன்றோடு தொடர்வு டையதாகவே அமைந்திருக்கிறது. கர்மயோகத்தைச் சிறப்பாகக் கடைப்பிடிக்கும் ஆத்ம சாதகன் ஒருவனி டத்து ஏனைய இயல்புகள் ஆகிய பக்தி, ஞானம் முதலி யவைகள் இடம்பெறுகிறதில்லையென்று எண்ணலா காது. பக்தியோகத்தை அனுஷ்டிக்கின்ற ஆத்மசா தகன் ஒருவனிடத்து பக்தியைத்தவிர ஏனைய இயல் புகள் அமைகிறதில்லை என்றும் பொருள்படுத்தலா காது. அதே பாங்கில் ஞானயோகத்தைப் பழகுகின்ற

சாதகன் ஒருவனிடம் ஞானம் ஒன்றுதான் அமைந்திருக்கிறது, பக்திக்கும் கர்மத்துக்கும் ஆங்கு இடமில்லை என்று முடிவு கட்டலாகாது. ஒவ்வொரு சாதகனிடத்தும் ஏதேனும் ஓர் இயல்பு சிறப்புற்று மிளிர்கிறது. வினையாற்றுதலை முதன்மையாகக் கொண்டுள்ள சாதகன் ஒருவன் இருக்கலாம். மனதை அடக்கிப் பக்குவப்படுத்துதலில் கருத்து மிகச் செலுத்துகின்ற மற்றொரு சாதகன் இருக்கலாம். அன்பை வளர்ப்பதிலேயே இன்னொரு சாதகன் ஊக்கம் கொண்டிருக்கலாம். ஞானவிசாரத்தில் சிரத்தை மிக உடையவனும் ஒருவன் இருக்கலாம். ஆத்ம சாதகன் ஒருவனிடத்து இந்த நான்குவிதமான இயல்புகளுள் எந்த இயல்பு மற்ற மூன்றைக்காட்டிலும் முதன்மை பெற்று நிற்கிறதோ அதற்கு ஏற்ப அவன் அனுஷ்டிக்கும் யோகத்திற்குப் பெயர் வாய்ந்து அமைந்திருக்கிறது. தீவிரமாக வினையாற்றுபவனைக் கர்மயோகி என்கிறோம். மனதைப் பண்படுத்துபவனை ராஜயோகி என்கிறோம். அன்பை வளர்ப்பவனை பக்தியோகி என்கிறோம். தத்துவ விசாரம் செய்கின்றவனை ஞானயோகி என்கிறோம். சாதனத்தில் மேல்நிலைக்குப் போய்விடுங்கால் இந்த நான்குவித யோகங்களும் ஒன்றுபட்டுவிடுகின்றன. நானுவிதமான சமயங்கள் இருக்கின்றன. நானுவிதமான ஆத்மசாதனங்கள் இருக்கின்றன. அவையாவும் ஒரே குறிக்கோளின்கண் ஆத்மசாதகனைக் கொண்டு சேர்க்கின்றன.

ஜீவாத்மன் அடைகின்ற குறிக்கோள் யாது என்பதை ஏற்கனவே ஆராய்ந்தாய்விட்டது. அக்குறியை முக்தி என்றும் வீடுபேறு என்றும் அழைக்கிறோம். இயற்கையில் மிக மிக நுண்ணியது ஓர் அணு. மிக மேலான நிலைக்கு வந்துள்ள உயிர் மனிதன். ஓர் அணுவில் ஆரம்பித்து மனிதன் ஈறாக இயற்கையின் கண் உள்ள அனைத்தும் விதவிதமான பாங்குகளில் போராடிக் கொண்டிருக்கின்றன. எங்குத் திரும்பி எப்பொருளை ஆராய்ந்து பார்த்தாலும் அதனிடத்து ஓய்வில்லாத போராட்டம் ஒன்றைக் காணலாம். விடுதலை அடைதல்பொருட்டே அண்டத்திலுள்ள அனைத்தும் இயங்கிவருகின்றன. அணு ஒன்று விடுதலை அடைவதற்காக முயன்று வருகிறது. உயிரற்ற ஜடப்பொருள் என்று சொல்லப்படுகின்ற சிறிய வஸ்து ஒன்று விடுதலை அடைதற்காக இயங்கி வருகிறது. பூவுலகில் இருக்கிற உயிர்களுள் அரிதிலும் அரிதாகிய மானுடனும் எல்லாக் கட்டுப்பாடுகளினின்றும், குறைபாடுகளினின்றும் விடுதலை அடைதற்கே முயன்று வருகிறான். விடுதலை அடைதற்காக நிகழ்ந்து வருகிற போராட்டத்தையே அண்டத்தின் நடைமுறை என்று இயம்புகிறோம். இயற்கையில் கூட்டுப்பொருள்கள் பல உண்டாயிருப்பதைக் காண்கிறோம். மூலப் பொருள்கள் சில சேர்ந்து கூட்டுப்பொருள்கள் ஆகின்றன. பின்பு கூட்டுப் பொருள்களினின்று மூலப்பொருள்கள் பிரிந்து ஓட முயலுகின்றன. ஆனால் அவைகளைப் பிரிந்து ஓட வொட்டாது அவைகளுடன் கூடியுள்ள ஏனைய

பொருள்கள் கட்டிப்பிடித்துக் கொண்டிருக்கின்றன. இக்கோட்பாட்டை இரண்டொரு சான்றுகளின் மூலம் விளக்குவது அவசியமாகிறது. நாம் பருகுகின்ற நீர் ஒரு கூட்டுப்பொருள். ஜலவாயுவும் பிராணவாயுவும் சேர்ந்து நீர் ஆகிறது. இது திரும்பவும் ஜலவாயுவாக வும் பிராணவாயுவாகவும் பிரிந்தோடும் பாங்குடையது. ஆனால் இயற்கையின் அமைப்பு அதை ஜலம் என்னும் கூட்டுப்பொருளாகப் பிடித்து வைத்திருக்கிறது. உயிர் வாழ்வை இனி ஆராய்ந்து பார்ப்போம். உயிர் என்பது ஒரு மூலப்பொருள். உடல் என்பது ஐம்பூதங்கள் என் னும் மூலப்பொருள்களின் தொகை. உயிரும் உடலும் சேர்ந்து வாழ்வு ஆகிறது. உடலினின்று உயிர் பிரிந் தோடும் தன்மையுடையது. பின்பு வாழ்க்கையில் வைத்துள்ள வாஞ்சையே உயிரையும் உடலையும் நெடிது இணைத்து வைத்திருக்கிறது. இயற்கையி லுள்ள வேறு பொருள்களையும் ஆராய்ந்து பார்ப் போம். நாம் வசிக்கும் பூமி சூரியனிடத்திருந்து சிதறி வந்தது. அது மேலும் சிதறி ஓடப் பார்க்கிறது. இந் தப் பூமியினின்று சிதறி ஓடிய சிறிய பகுதி சந்திரன் என்பது. அது பூமியினின்று மேலும் சிதறி ஓடும் பாங் குடையது. ஆனால் ஆகர்ஷணம் என்னும் இயற்கைச் சக்தி பூமியையும் சந்திரனையும் நிலைகுலையாது இருக்கும் படி இழுத்துப் பிடித்துக்கொண்டிருக்கிறது. இயற்கை யிலுள்ள அனைத்தும் பிரளயம் என்னும் கட்டவிழ்ந்த நிலையை நாடிச் செல்ல முயலுகின்றன. கட்டவிழ்ந்த நிலை அவைகளுக்கு விடுதலையைத் தந்துவிடுகிறது. கட்

டில் அடங்கிக் கிடக்கும் பாங்கு எப்பொருளிடத்தும் இல்லை. கட்டில் அடங்கிக் கிடக்க எவ்வுயிரும் விரும்பு வதில்லை. தளைகள் அனைத்திடத்திருந்தும் விடுதலை யடைதற்கு யாவும் முயன்று வருகின்றன. விடுதலை அல்லது முக்தியை நாடும் இயல்பு ஜடப்பொருள், சேதனப் பொருள் ஆகிய அனைத்திடத்தும் இருக்கிறது. ஆத்ம சாதனம் புரிகிற சான்றோன் ஒருவன் கடவுளைக் குறித்துப் பிரார்த்தனை பண்ணுகின்றான். பந்தங்களி னின்று விடுதலையடைதற்கே அம்மனிதன் முயலு கிறான். அம்மனிதன் நாடுவது முக்தி என்று நாம் மொழிகிறோம். திருடன் ஒருவன் பிறர் பொருளைக் களவாடுகிறான். வறுமை என்னும் தளையினின்று விடுதலை அடைதற்கே அவனும் முயலுகிறான். எனவே ஒரு குறைபாட்டினின்று முக்தியடைதற்கே திருட னும் முயற்சி எடுத்துக் கொள்கிறான். ஆத்மசாதக னும் முக்தியை நாடியவன் ஆகிறான்; திருடனும் முக்தியை நாடியவன் ஆகிறான். திருடன் கையாளு கிற முறை தவறுதலானது. அதனால் புதிய கேடுகள் பல அவனுக்கு வந்துவிடும். அக்காரணத்தை முன் னிட்டே அவன் எடுத்துக் கொண்டது பாபச் செயல் எனப் பொருள்படுத்துகிறோம். மற்று ஆத்ம சாதகன் எடுத்துக் கொண்ட முயற்சியில் கேடு ஒன்றுமில்லை. அவன் நாடுகின்ற முக்தி அவனுக்குப் படிப்படியாக வந்தமைகிறது. எனவே அவனுடைய முயற்சி மகிமை நிறைந்த புண்ணியச் செயல் ஆகிறது. பாபத்தைச் செய்கின்றவனுக்கும் புண்ணியத்தைச் செய்கின்றவ

னுக்கும் உள்ளத்தில் உதிக்கிற உணர்வு ஒரே பாங்குடையது. இன்னல்களினின்று முக்தியடைதற்கு இருதரத்தாரும் முயலுகின்றனர். தனக்கு ஏற்பட்டுள்ள பந்தபாசத்தின் கொடுமைகளைப்பற்றிய உணர்வு ஆத்மசாதகனுடைய உள்ளத்தில் உதிக்கிறது. பந்தபாசம் அவனைத் துன்புறுத்துகிறது. அதினின்று தன்னை விடுவித்துக்கொள்ள அவன் முயலுகிறான். விடுதலைக்காக அவன் கடவுளை வழுத்துகிறான். திருடனுடைய உள்ளத்திலும் ஓர் உணர்வு உதித்து அவனைத் துன்புறுத்துகிறது. தான் விரும்பிய பொருள்கள் தனக்கு அகப்படவில்லையென்று அவன் வருந்துகிறான். விரும்பிய பொருள்கள் தனக்குக் கிடைத்து விட்டால் குறைவற்றநிலை தனக்கு வந்து அமைந்துவிடுமென்று அவன் நினைக்கிறான். தன் குறைபாடுகளை நீக்கிக்கொள்ள அவன் முயற்சியெடுத்துக் கொள்கிறான். குறைகளினின்று விடுதலையடைவது அவனுடைய குறிக்கோள். குறைகளை நீக்குதற்கு அவன் திருடுகிறான். சான்றோன் நாடியதும் முக்தி. திருடன் நாடியதும் முக்தி. பின்பு அவரவர்க்கு அமைந்துள்ள விவேகத்தின்படி அவர்கள் கையாண்ட முறைகள் வெவ்வேறு வகைப்பட்டவைகள் ஆய்விட்டன. இயற்கையிலுள்ள அனைத்தும் முக்தியையே குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றன. உயிர் வாழ்வனவும் குறைபாடுகளிலின்று முக்தியடைய முயலுகின்றன; உயிரற்ற ஜடப்பொருள்களும் பந்தத்திலின்று விடுதலையடைய முயலுகின்றன. இங்ஙனம் அறிந்தோ அறியாமலோ, நேரான வழியிலோ

அல்லது தவறுதலான வழியிலோ பிரபஞ்சத்திலுள்ள யாவும் முக்தி என்னும் ஓரே குறிக்கோளை நாடி முயன்று கொண்டிருக்கின்றன. சான்றோனாகிய ஆத்ம சாதகன் நாடுகின்ற முக்தி திருடன் ஒருவன் நாடுகின்ற முக்தியினின்று முற்றிலும் வேறுபட்டது. சான்றோன் நாடுகின்ற முக்தி மேலும் மேலும் அவனுக்கு பேரானந்தத்தை விளைவிக்கிறது. சொல்லில் அடங்காத சாந்தமும் இனிமையும் அவனுக்கு உண்டாகின்றன. ஆனால் குறைபாடுகளினின்று முக்தியடைவதற்குத் திருடன் எம்முறையைக் கையாண்டானோ அம்முறை அவன் மீது ஏற்கனவே அவனுக்கிருந்த தளைகளுக்கு மேல் புதிய பந்தபாசங்களைச் சுமத்தி விடுகிறது.

உலகில் சமயங்கள் பல இருக்கின்றன. அவைகளையெல்லாம் முறையாக ஆராய்ந்து பார்த்தால் ஓரே கோட்பாட்டைத்தான் அவையாவும் விளக்கிவருகின்றன என்பது வெளியாகும். தளைகளினின்று விடுதலை அடைய அதாவது முக்தியைப்பெற மாந்தர் எடுத்துக் கொள்ளும் முயற்சியை விளக்குதற்கென்றே மதங்கள் எல்லாம் தோன்றியுள்ளன. மனிதன் நன்னெறி கடைப்பிடிக்கவேண்டும் என்று புகட்டப்பட்டிருக்கிறது. சுயநலத்தை அறவே அகற்றிவிடவேண்டுமென்று நன்னெறி புகட்டுகிறது. சுயநலம் என்றால் என்ன ? மனிதன் எடுத்துள்ள சரீரத்தை தனது நிஜ சொரூபம் என்று கருதுவானாகில் அது சுயநலம். தான் உடல்சொரூபத்துக்கு அப்பாற்பட்டவன் என்பதை நிலைநாட்டும் செயல்கள் சுயநலத்தைக் கடந்தசெயல்

கள் ஆகின்றன. மனிதன் நல்வினை ஆற்றிவருவதை நாம் பார்க்கிறோம். பிறர்க்குச் செய்யும் உபகாரங்களையே நாம் நல்வினை என்கிறோம். பிறர்க்கு நலன் செய்வதன் மூலம் மனிதன் எதை நிலைநாட்டுகிறான் என்று எண்ணிப் பார்க்கவேண்டும். பிறர் பொருட்டு உழைப்பதன் மூலம் 'யான் எனது என்னும் செருக்கை' அவன் ஒழிக்க முயலுகிறான். யான், எனது என்னும் செருக்கே மனிதனைப் பந்தத்துள் கட்டிப் பிடிக்கிறது. அந்தத் தளையினின்று விடுதலையடைவது வாழ்வின் குறிக்கோள் ஆகிறது.

சுயநலத்தை அகற்றுதல் என்னும் செயலுக்கு ஒரு வரையறை கிடையாது. சுயநலத்தை ஒழிக்கின்ற செயல்கள் எல்லாம் செயற்கரிய செயல்கள் என்று மதிக்கப்படுகின்றன. சன்மார்க்கங்களும், நீதிநெறிகளும், அறத்தாறுகளும் உலகில் வேண்டியவாறு அமைந்திருக்கின்றன. அவையாவும் ஒரே குறிக்கோளையே புகட்டிவருகின்றன. சுயநலத்தை முற்றிலும் ஒழித்துவிடுவதே வாழ்க்கையின் லக்ஷியம் என்று அவைகள் விளக்குகின்றன. சுயநலத்தின் அறிகுறி சிறிதேனும் இல்லாது அதை ஒரு மனிதன் அறவே அகற்றிவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். அம்மனிதன் அடையும் நிலை யாது? அவன் இன்னபெயருள்ள இம்மனிதன் என்னும் ஜீவவியக்தி அவனிடமிருந்து அகன்றுபோய் விடுகிறது. அகண்டாகாரப் பெருநிலையில் அவன் வியாபகமானவன் ஆய்விடுகிறான். சிற்றலை ஒன்று கடலில் விரிந்துகொண்டே போனால்

அது கடல் மயம் ஆய்விடுகிறது. பரநலத்தில் கருத்து வைத்து வினையாற்றுகின்றவனுக்கு சுயநலம் என்னும் சிறுமை போய்விடுகிறது. சுயநலம் படைத்திருக்கிறவனுக்கு ஜீவபோதம் என்னும் சிறிய வியக்தி இருக்கிறது. சுயநலத்தை முற்றிலும் ஒழித்தவனுக்கு அந்த சிறிய வியக்தியாகிய ஜீவபோதம் ஒருங்கே அழிந்துபட்டுப் போகிறது. அகண்டாகாரப் பரம்பொருளில் அவன் ஒன்றுபட்டு விடுகிறான். சமயங்கள் வெவ்வேறு சொற்களில் தங்கள் குறிக்கோள்களை விளக்கிவருகின்றன. நீதி நெறிகளும் வாழ்க்கையின் குறி இன்னது என்பதை விதவிதமான வார்த்தைகளைக்கொண்டு விளக்குகின்றன. தத்துவபோதங்கள் தமக்கேற்ற தனிச்சொற்களைக்கொண்டு வாழ்க்கையின் குறிக்கோளை விளக்கிக் காட்டுகின்றன. இத்தனைவிதமான விளக்கங்களுக்கு அடிப்படையாய் இருப்பது ஒரே கோட்பாடு என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும். மனிதனுடைய ஜீவவியக்தி என்னும் சிறுமையைக் களைந்துவிட்டு அவன் அகண்டாகார சொரூபம் ஆக வேண்டும் என்கிற ஒரு கோட்பாட்டைத்தான் மதங்களும் சமயங்களும் வெவ்வேறு பாங்குகளில் விளக்கி வருகின்றன.

பரம்பொருள் நித்தியவஸ்துவாய் இருப்பது போன்று ஜீவவியக்தியும் நித்தியமானது என்னும் கொள்கை சிலருக்கிடையில் உண்டு. ஜகத், ஜீவன், பரமாத்மா ஆகிய இம்மூன்றும் நித்திய வஸ்துக்களே என்பது இம்மதவாதிகளின் கோட்பாடு ஆகும். ஜீவாத்மன்

தனது ஜீவவியக்தியைமுக்தி நிலையிலும் இழந்துவிடுவ தில்லை என்பது இம்மதவாதிகளுடைய கொள்கை. ஜீவன் தனதுஜீவவியக்தியை அகண்டாகாரப்பரிபூரண நிலையில் இழந்துவிடுகின்றான் என்பதைக் கேட்கும் பொழுதே இத்தகைய மதவாதி திகைத்துப்போய்விடு கிறான். ஜீவவியக்தியை இழந்துவிட அவன் ஆயத்த மாய் இல்லை. அது அழிந்துபட்டுப்போவதில்லை என்று நிரூபிக்க அவன் முன்வருகிறான். தன் கொள்கைக்கு ஏற்ற சாஸ்திரப் பிரமாணங்களையும் அவன் எடுத்துக் காட்டுகிறான். தன் கொள்கைக்கேற்ற யுக்திகளையும் அவன் கையாளுகிறான். இத்தகைய மதவாதியை நாம் துவைத மதவாதி என்கிறோம். இந்த துவைத மதவாதியின் உண்மையான மனநிலை யாது என்பதை நாம் மேலும் ஆராய்ந்து பார்ப்போம். மனிதன் சன் மார்க்கத்தைக் கடைப்பிடிக்கவேண்டுமென்று துவைத மதவாதியும் புகட்டுகிறான். அதைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று அவன் புகட்ட ஆரம்பிக்கின்ற பொழுதே மனிதன் தன் சுயநலத்தை நீத்துவிட வேண்டுமென்று அவன் போதிக்கிறான். சுயநலத்தை ஒழித்துவிடுமளவு ஒரு மனிதன் ஜீவபோதத்தையும் ஒழித்துவிடுகிறான் என்பதை அந்த மதவாதி மறந்து விடுகிறான். சுயநலத்தியாகத்துக்கு ஓர் எல்லை உண்டா என்று அம்மதவாதியைக்கேட்டால் அதற்கு எல்லை யில்லை என்றும் அவன் ஒத்துக்கொள்கிறான். சுயநலத் தைத் துறந்தவர் பலபேர் பலபடித்தரங்களுக்கு மேல் நோக்கிப் போயிருக்கின்றனர். சுயநலத்தியாகத்தின்

மிக மேலான நிலையையும் துவைதமதவாதி ஆதரவுடன் பாராட்டுகிறுன். துவைதமதத்தை அனுஷ்டிக்கின்ற ஒரு ஆத்மசாதகனே சுயநலத் தியாகத்தில் மகோன்னத நிலைக்குப்போய் இருக்கிறுன் என்று வைத்துக்கொள்வோம். மற்ெருரு ஆத்மசாதகன் விசிஷ்டாத்வைத முறையைக் கையாண்டு அல்லது சுத்த அத்வைதமுறையைக் கையாண்டு சுயநலத் தியாகத்தில் உச்சநிலைக்கு வந்திருக்கிறுன் என்றும் வைத்துக்கொள்வோம். கொள்கையில் ஒருவன் துவைதியாக இருந்தாலும் சரி, விசிஷ்டாத்வைதியாக இருந்தாலும் சரி, அத்வைதியாக இருந்தாலும் சரி சுயநலத்தியாகத்தை மட்டும் அவன் முறையாகச் செய்துவந்தால் அவன் அடையும் பரிபக்குவம் மிக மேலானதாகிறது. பரிபக்குவம் அடைந்த நிலையில் சுயநலம் ஒன்றும் அவனுக்கு மிச்சமிருப்பதில்லை. சுயநலம் அற்றவிடத்து ஜீவபோதமும் அகன்றுவிடுகிறது. பரபோதம் ஒன்றே மிச்சமிருக்கிறது. அந்தப் பரிபூரணநிலை மூவித மதவாதிகளுக்கும் பொதுவானதாகிறது. பரபோதத்தில் ஜீவபோதத்தைக் கரைத்துவிடுவதே முடிவான குறிக்கோள் ஆகிறது. அப் பரிபூரணநிலையில் சமயங்கள் எல்லாம் சமரசமடைந்து விடுகின்றன. ஆனுல் சாதனத்தின் ஆரம்பதசையில் இருக்கின்ற துவைத மதவாதிக்கு ஜீவபோதத்தைக் கலைத்துவிடுவதுதான் முடிவான குறிக்கோள் என்பதை யுக்திபூர்வமாக ஏற்றுக்கொள்ளும் துணிச்சல் வருவதில்லை. அவன் அதை ஏற்றுக்கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் பரிபூரண நிலை

யில் தனது ஜீவபோதத்தை இழந்து பரபோதத்தை அடைந்தே ஆகவேண்டும். அக் குறிக்கோளினின்று அவன் தப்பித்துக்கொள்ள முடியாது. கடலினுள் சென்ற நதி தனது தனி வியக்தியை இழந்துவிட்டு கடலாய் விடுவதுபோன்று ஜீவனும் தனதுசுயநலத்தை அறவே துறந்து விடும்பொழுது பரத்தில் அவன் ஒன்ருய் விடுகிருன். அந்த முடிவான நிலையை அடைவதற்குக் கர்மயோகமும் ஒரு மார்க்கமாக இருக்கிறது. நிஷ்காமிய கர்மத்தின்மூலம் ஜீவவியக்தி தேய்வடைகிறது. சுயநலப்பற்று அழியுமளவு ஜீவபோதமும் அகன்றுவிடுகிறது. சுயநலப்பற்று அறவே அழிந்து பட்டுப்போனவிடத்து ஜீவபோதமும் முற்றிலும் கரைந்துபோய்விடுகிறது. கடலுக்குள் சென்ற உப்பு பொம்மை தனது வடிவத்தைப் படிப்படியாக இழந்து விடுவதுபோன்று தீவிரமான நிஷ்காமிய கர்மம்செய்யும் கர்மயோகி தனது ஜீவபோதத்தைக் கலைத்துவிடுகிருன். சுயநலத்தோடு செய்கின்ற ஒவ்வொரு செயலும் ஆத்ம பரிபாகத்துக்குத் தடையாகிறது; ஜீவபோதத்தைக் கட்டிப்பிடித்து வைத்திருக்கிறது. சுயநலமற்றுச் செய்கின்ற ஒவ்வொரு செயலும் ஜீவபோதத்தை நீக்குகிறது; பரபோதத்தைப் பெறுதல் என்னும் குறியின்கண் ஆத்மசாதகனை அது எடுத்துச்செல்கிறது. சமயங்கள் அனைத்தினுடைய லக்ஷியத்தை ஒரு கோட்பாட்டில் விளக்கிவிடலாம். மனிதன் தனக்குத்தானே உண்டுபண்ணியிருக்கிற குறுகிய ஜீவநிலையை ஒதுக்கிவிட்டுப் பரத்தில் தன்னை ஐக்கியப்படுத்திவிடுவதே

வாழ்க்கையின் குறிக்கோளாம். இனி இக்கோட்பாட்டை அடிப்படையாகவைத்துக்கொண்டுசிறுநெறி, பெருநெறி ஆகிய இரண்டையும் விளக்கிவிடலாம். சுயநலத்தை வளர்ப்பது எதுவோ அது சிறுநெறி. சுயநலப்பற்றை அகற்றுவது எதுவோ அது பெருநெறி.

இந்தச் சிறந்த லக்ஷியத்துக்கு ஒப்ப கர்மயோகி ஒருவன் சாதனங்கள் புரிந்தாகவேண்டும். ஆனால் இக்கோட்பாட்டை நடைமுறைக்குக் கொண்டுவர முயலுகிறவிடத்து அதற்கு இடையூறுகள் பல உலக வாழ்க்கையில் உண்டாவதை ஆத்மசாதகன் காண்பான். சூழ்நிலை என்பது இடத்துக்கு ஒருவிதமானதாக மாறி அமைகிறது. ஒரு சூழ்நிலையில் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரக்கூடிய ஒரு கோட்பாடு மற்றொரு சூழ்நிலையில் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவர இயலாததாய் விடுகிறது. மனிதன் புரிகின்ற ஒருசெயல் ஏதேனும் ஒரு சூழ்நிலையில் சுயநலப்பற்று அற்றதாகத் தென்படலாம். அதேசெயல் மற்றொரு சூழ்நிலையில் சுயநலப் பற்றாக வடிவெடுத்து விடலாம். இதற்கு நல்ல சான்று ஒன்று ராமாயணத்தில் கிடைக்கிறது. காட்டில் வசித்த இராமனிடத்தில் சீதை இருப்பது பொருந்தாது என்றும், தன் போன்ற பேரரசன் ஒருவனிடம் சீதை இருப்பதுதான் பொருத்தம் என்றும் இராவணன் மனப்பூர்வமாக நம்பினான். அதற்கேற்ற நடவடிக்கையும் அவன் எடுத்துக்கொண்டான். ஆனால் சீதை ராமனுக்கே உரியவள்; அவளைத் தன்னிடமிருந்து அபகரித்துச் சென்றவனைக் கொல்வது என்று ராமன்

பிரகடனம் செய்தான். ராவணனோடு போர்புரிந்தான். யுத்தத்தில் அவனைக்கொன்றான். சீதையைத் தனக் குரியவள் ஆக்கிக்கொண்டான். பின்பு அயோத்தி வாசம் என்னும் மற்றொரு சூழ்நிலை ஏற்பட்டது. சீதை ராமனோடு இருப்பது பொருந்தாது என்னும் கொள்கை சிலர்க்கிடையில் ஆங்கு உருவெடுத்தது. இராம னும் அக் கொள்கைக்கு உடன்பட்டவன் போன்று சீதையை வனத்துக்கு அனுப்பிவிட்டான். சீதை தனக்கே உரியவள் என்று ஒரு சூழ்நிலையில் செயல் புரிந்த ராமன் அவள் தனக்கு உரியவள் அல்லள் என்று மற்றொரு சூழ்நிலையில் செயல்புரிந்தான். முரண்படு கின்ற இரண்டு செயல்களும் அறத்தாறு அல்லது தர்ம மார்க்கம் ஆகின்றன. கால தேச வர்த்தமானத்துக்கு ஏற்ப அறநெறியின் அனுஷ்டானம் மாறி மாறி அமை கிறது. ஆதலால் கர்ம அனுஷ்டானங்கள் இன்னின்ன பாங்கில் இருக்கவேண்டுமென்று விரிவாக வரையறுத் துச்சொல்ல முடியாது. கர்ம அனுஷ்டானங்களுக்கு அடிப்படையாக இருக்கின்ற தத்துவத்தை விளக்குவது நம் கடமையாகும். அதை எந்த சந்தர்ப்பத்தில் என்ன பாங்கில் கையாளவேண்டும் என்பதை ஆத்மசாதகன் தனக்குத்தானே யூகித்து அறிந்துகொள்ளவேண்டும். காலத்தை அனுசரித்து கர்மானுஷ்டானம் மாறிவிடுவ துண்டு. ஓர் இடத்துக்குப் பொருந்துகின்ற அனுஷ் டானம் மற்றோர் இடத்துக்குப் பொருந்தாமல் போய் விடுவதும் உண்டு. சந்தர்ப்பத்துக்கு ஏற்ற பிரகாரம் கர்மானுஷ்டானத்தை மாற்றி அமைப்பதும் அவசிய

மாகிறது. ஒரு நாட்டில் ஒருவித செயல் சன்மார்க்க மென அங்கீகரிக்கப்படுகிறது. அதே செயல் மற்றொரு நாட்டில் துன்மார்க்கமென நிராகரிக்கப்படுகிறது. சந்தர்ப்ப பேதமே அதற்குக் காரணமாகிறது. இதற்கும் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். கற்புடைய மாது ஒருத்தி தன் கணவன் ஒருவனைத் தவிர வேறு யாரிடத்திலும் காதல் வைக்கலாகாது என்பது நம் நாட்டில் ஏற்பட்டுள்ள சன்மார்க்கமாகும். சில புறநாடு களில் அப்போதைக்கப்போது மாறி யமையும் கணவர் களிடம் அன்பு வைப்பது மாது ஒருத்திக்கு ஏற்பட் டுள்ள மேலான நெறி என்று கருதப்பட்டு வருகிறது. திபேத்து போன்ற நாட்டில் ஏககாலத்தில் மாது ஒருத்தி கணவன்மார்கள் பலருக்கு அன்புடன் உட் பட்டிருப்பது சன்மார்க்கமெனக் கருதப்படுகிறது. இங்ஙனம் சந்தர்ப்ப பேதமே வெவ்வேறு நாடுகளில் சன்மார்க்கத்தைக் குறித்து வெவ்வேறு விதமான கொள்கைகள் உண்டாயிருப்பதற்குக் காரணமாகிறது. இவை யாவும் உலக வழக்கு. மாறுபடுகின்ற இத்தனை விதமான கோட்பாடுகளுக்கிடையில் ஆத்மசாதகன் என்ன பாங்கில் நடந்துகொள்ள வேண்டும் என்பதைக் கர்மயோகம் விளக்கிக் காட்டுகிறது.

மனிதனுக்கு முக்தியை நல்குவதே இயற்கையின் பெருந்திட்டமாகும். முக்தியை அடைவதே மனித னுடைய வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். சுயநலப் பற்று அறவே அற்றுப்போன விடத்தே முக்தி அல்லது விடுதலை வந்து அமைகிறது. நாம் எண்ணுகிற

ஒவ்வொரு எண்ணமும் பேசுகிற ஒவ்வொரு பேச்சும் செய்கிற ஒவ்வொரு செயலும் சுயநலமற்றதாய் இருக்குமாகில் குறியின்கண் நம்மை அது எடுத்துச் செல்கிறது. அத்தகைய செயல் சன்மார்க்கமெனக் கருதப்படுகிறது. அதாவது முக்திக்கு ஏதுவாய் இருக்கின்ற சிந்தையும் சொல்லும் செயலும் சன்மார்க்கங்கள் ஆகின்றன. மதங்கள் அனைத்துக்கும் ஒப்ப முடிந்த விளக்கம் இதுவே. உலகில் நீதி நெறிகள் பலதரப்பட்டவைகளாக இருப்பினும் அவையாவுக்கும் ஒப்ப முடிந்த கோட்பாடு இதுவேயாம். சமயங்களில் சில, தெய்வத்திடமிருந்தே சன்மார்க்க போதங்கள் தங்களுக்கு ஆதேசமாக வந்து அமைந்தவைகள் என்று கூறுகின்றன. கடவுளுடைய கட்டளைகள் என்று சன்மார்க்கங்களைப்பற்றி அம்மதங்கள் போதிக்கின்றன. ஒரு மனிதன் ஏன் இச்செயலைச் செய்யவேண்டும், அச்செயலைச்செய்யலாகாது என்று அம்மதவாதிகளிடம் கேட்டால் அதற்குப் பொருத்தமான விடையை அவர்கள் பகர்வார்கள். "கடவுளின் கட்டளை அத்தகையது" என்பது அவர்களிடமிருந்து வரும் விடையாகும். அப்படி அவர்களுக்குக் கடவுளிடமிருந்தே வந்திருக்கும் கட்டளைகளையும் துருவி ஆராய்ந்துபார்த்தால் இப்பழைய உண்மைதான் ஆங்கு அடங்கியிருக்கிறது என்பது நமக்குப்புலனாகும். சுயநலப்பற்று வைக்காதே, சுயநலப்பற்றை ஒழித்துவிடுவதே நன்னெறி என்னும் கோட்பாட்டை அதில் காணலாம். எந்தசமயத்தினுள் புகுந்து எந்த கோட்பாட்டை ஆராய்ந்து பார்த்தாலும்

நமக்குக்கிடைக்கின்ற விடை ஒன்றேயாம். யான் எனது என்னும்செருக்கை மானுடா, அறவே அகற்றிவிடு என்னும் கோட்பாடுதான் எல்லா சமயங்களினுள்ளும் செறிந்திருக்கிறது. சுயநலம் வேண்டாம் என்னும் கோட்பாட்டையே இத்தனைவித மதங்களும் வெவ்வேறு பாங்குகளிலே புகட்டிவருகின்றன. இம்மதங்கள் புகட்டுகின்ற நல்லொழுக்கங்களை முற்றிலும் பாராட்டுகின்ற நன்மக்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் நல்லொழுக்கங்களைப் பாராட்டுகிறார்கள் எனினும் தங்களுடைய அல்ப ஜீவ வியக்தியை விட்டொழித்துவிட அவர்கள் அஞ்சுகின்றனர். தங்கள் ஜீவ போதத்தை அறவே அகற்றிவிடுவதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்பதைக் கேட்டமாத்திரத்தில் அவர்கள் திகில் அடைந்து விடுகின்றனர். தங்கள் ஜீவ வியக்தியின்மீது பேரபிமானம் கொண்டவர்களாய் அதை விரைந்து கட்டிப்பிடித்து வைத்திருக்கிறவர்களிடம் நாம் கேள்வி ஒன்று கேட்கவேண்டும். யான் எனது என்பதை முற்றத்துறந்த மேன்மகன் ஒருவன் இருக்கிறான். தன்னைப்பற்றி அவன் ஓர் எண்ணமும் எண்ணுவதில்லை. தனக்காகவென்று ஒரு செயலையும் அவன் செய்வதில்லை. தனக்காகவென்று ஒரு வார்த்தையும் அவன் பேசுவதில்லை. உயிர் வாழ்ந்திருப்பதற்கிடையில் யான் எனது என்கின்ற எண்ணங்கள் எல்லாம் அவனை விட்டு முற்றிலும் அகன்றுபோய் விட்டன. பின்பு அவனிடத்து யான் என்னும் ஜீவ வியக்தி இருக்கிறதென்று யார்தான் காட்டமுடியும்?

ஜீவ வியக்தியை இழந்துவிட மறுக்கின்றவர்கள் அம் மனிதனிடத்து ஜீவவியக்தி மிச்சமிருக்கிறதென்று காட்டமுடியுமா? தன்னைக்குறித்து எண்ணவும் பேசவும் செயல்புரியவும் எத்தனிக்கிறவர்களுக்குத் தானே ஜீவவியக்தி இருக்கிறது. தன்னை அறவே மறந்தபின் மற்றவர்களைப்பற்றிய உணர்வே அந்த மேலோனுடைய உள்ளத்தில் இருக்கிறது. அண்டத்தி லுள்ள அனைத்தையும் பற்றிய உணர்வே அந்த மேலோ னுடைய உள்ளத்தில் இருக்கிறது. அகண்டாகாரப் பேருணர்வைத் தவிர வேறு எந்த உணர்வும் அம் மேலோனிடத்து இல்லை. பிறகு அவனிடத்து ஜீவ வியக்தி இருக்கிறது என்று யார்தான் காட்டித்தர முடியும்? தங்களுடைய சொந்த ஜீவவியக்தியைப் பாங்குடன் பற்றிப்பிடித்துக் கொண்டிருக்கிறவர்களும் யான் எனது என்னும் செருக்கை அறவே அறுத்து விட்டவனிடத்து ஜீவவியக்தி ஒன்றும் மிச்சமில்லை என்பதை ஒத்துக்கொள்வார்கள். ஜீவபோதம் அவனை விட்டு அடியோடு போய்விட்டது. அகண்டாகாரப் பேருணர்வுதான் மிச்சமிருக்கிறது. குறியை அடைந் துள்ள மனிதன் அவனேயாம்.

கர்மயோக சாஸ்திரம் என்பது இதுவேயாம். அது புகட்டுகிற ஒழுக்கம் ஒன்று உளது. அதுவும் ஒருசமய நூலேயாம். முக்தி அடைவதற்கான வழியைக் கர்ம யோக சாஸ்திரம் புகட்டுகிறது. சுயநலப்பற்றை ஒழித்துவிடுவதும் சத் கர்மங்களை ஓயாது ஆற்றுதலும் அது புகட்டுகிற ஆத்ம சாதனங்கள் ஆகும். கர்மயோகி

ஒருவன் சமயக் கோட்பாடு எதையும் நம்பாதவனாக இருப்பானாகில் அதனால் அவனுக்குக் குறைபாடு ஒன்றும் வந்துவிடாது. பொதுப்பட ஆத்ம சாதகர்கள் கடவுள் நம்பிக்கை உடையவர்களாக இருக்கிறார்கள். ஆனால் கர்மயோகி ஒருவனுக்குக் கடவுள் நம்பிக்கை இல்லாதுபோய்விட்டாலும் அதனால் அவனுக்கு இடையூறு ஒன்றும் கிடையாது. தன்னுடைய ஆத்மசொரூபத்தைப்பற்றி அவன் விசாரம் செய்யாதவனாகவும் இருந்துவிடலாம். அதனால் அவனுக்குக் குறைவு ஒன்றுமில்லை. தத்துவ விசாரம் எதையும் செய்யாதவனாகவும் அவன் இருந்துவிடலாம். அதை முன்னிட்டும் அவனுக்குக் குறைபாடு ஒன்றும் வந்துவிடாது. அவனுக்கு வாழ்க்கையில் ஒரே ஒரு குறிக்கோள் இருக்கிறது. யான் எனது என்னும் செருக்கை அழித்துவிடுவது ஒன்றே அவன் கொண்டுள்ள குறிக்கோள் ஆகும். அதற்காக வென்று அவன் முயற்சி எடுத்துக்கொள்கிறான். தனது வாழ்க்கையில் ஒவ்வொரு கணப்பொழுதிலும் இக் குறிக்கோளை அவன் சுவானுபவத்தில் உணருகிறான். ஏனென்றால் தான் ஆற்றும் வினையின் மூலமாகவே தனது லக்ஷியத்தை அவன் அடைபவன் ஆகிறான். சமயக்கோட்பாடுகளும் தத்துவ விசாரங்களும் அவனுடைய சாதனத்துக்குத் துணையாகவந்து அமைவதில்லை. ஞானி ஒருவன் நித்திய அநித்திய வஸ்து விசாரம்செய்கிறான்; பக்தன் ஒருவன் தான் போற்றும் பொருளிடத்து அன்பைச் செலுத்துகிறான்; கர்மயோகியோ ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் தான் ஆற்றும் வினை

யின் மூலமாக யான் எனது என்னும் பந்தத்தை ஒழித்துவிடுகிறான்.

அடுத்த கேள்வி ஒன்று இப்பொழுது எழுகிறது. கர்மம் என்பது யாது? உலகத்துக்கு நன்மை செய்வது என்பதின் கருத்து என்ன? உண்மையாகவே நாம் உலகுக்கு நன்மை செய்ய முடியுமா? இயற்கையின் நடைமுறையைப் பரந்த பாங்கில் பார்க்குமிடத்து நாம் உலகுக்கு நன்மை செய்யமுடியாது. ஒரு குறுகிய அளவில் இயற்கையின் நடைமுறையின் ஒரு சிறு பகுதியைக் கணக்கில் எடுத்துக்கொள்ளுங்கால் நாம் உலகுக்கு நன்மை செய்ய முடியும். ஆயினும் இவ்வுலகுக்கு சாசுவதமாக என்றென்றும் நிலைத்திருக்கிற நலன் எதையும் யாராலும் செய்துவிட முடியாது. உலகுக்கு நிரந்தரமான நலன் செய்து விடுவது உண்மையெனில், இவ்வுலகம் இப்பொழுது இருக்கிற பாங்கில் தீமைகள் நிறைந்ததாக இருக்கமுடியாது. பசியால் வருந்திக் கொண்டிருக்கிற ஒரு மனிதனுக்குக் கொஞ்ச நேரத்துக்குப் பசிப்பிணியை நீக்கிவைத்து நாம் அவனைத் திருப்திப்படுத்தலாம். ஆனால் சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் திரும்பவும் பசிப்பிணிக்கு ஆளாவான். ஒரு மனிதன் விரும்புகிற ஓர் இன்பத்தை நாம் அவனுக்கு நல்கலாம். ஆனால் அவ் இன்பம் அவனிடத்து நிலைத்து நிற்க முடியாது. ஏதோ சிறிது நேரத்துக்கு மட்டும் அவன் இன்புற்றிருக்கிறான். இன்பத்தை நாடுதல் என்பது திரும்பத் திரும்பத் தோன்றிக் கொண்டிருக்கும் ஒருவித நோய் ஆகும். வேண்டாம்

என்று நாம் விலக்க முயலுகின்ற துன்பம் மற்றொருவித நோய். அதுவும் திரும்பத் திரும்பத் தோன்றிக் கொண்டே இருக்கிறது. இன்பத்தை நிரந்தரமாகப் பெற்றுவிடுதல் என்பதும், துன்பத்தை நிரந்தரமாகத் தவிர்த்துவிடுதல் என்பதும் எவராலும் சாதிக்க முடியாதவைகளாகின்றன. இந்த நோய்க்கு நிலைத்த பரிகாரம் கிடையாது. அழிந்துபட்டுப் போகாததும் சாசுவதமாய் இருப்பதுமாகிய சுகத்தை உலகுக்குக் கொடுத்துவிட முடியுமா? இக்கேள்விக்குத் தகுந்த விடையை நாம் கண்டுபிடித்தாக வேண்டும். கடல் ஒன்றில் ஓரிடத்தில் ஓர் அலையை எழுப்பினால் மற்றோர் இடத்தில் அதற்கேற்றவாறு பள்ளத்தை உண்டு பண்ணியாகவேண்டும். இன்ப துன்பத்தைப் பற்றிய கோட்பாடும் இதுவேயாம். மனிதனுக்குத் தேவைகள் பல இருக்கின்றன. மனிதனைப் பிடித்துள்ள பேராசை களும் பல இருக்கின்றன. மனிதனுடைய தேவைகளை யும் பேராசைகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்க்குமிடத்து உலக அமைப்பைப் பற்றிய உண்மை ஒன்று நமக்கு விளங்கும். நலன் விளைவிக்கக்கூடிய பொருள்கள் உலகில் ஏராளமாய் இருக்கின்றன. ஆயினும் அவைகளின் எண்ணிக்கையை நாம் அதிகப் படுத்திவிட முடியாது. நலனும் பொலனும் ஒன்றோ டொன்று இணைக்கப் பெற்றிருக்கின்றன. மனித னுடைய பேராசையைப் பூர்த்தி பண்ணிவைத்தல் பொருட்டு கேட்டைக் குறைத்து நலனை மிகைப் படுத்துதல் என்னும் செயலை நாம் ஒருநாளும் செய்து

விடமுடியாது. ஓர் இடத்தில் நலனை அதிகப்படுத்திக் கொண்டு போனால் அதற்கு ஈடாக மற்றோர் இடத்தில் கேட்டை விளைவித்தே ஆகவேண்டும். இவ்விதிக்கு விலக்கு கிடையாது. நாம் இப்பொழுது அறிந்திருக்கும் மானுட வர்க்கத்தின் சரித்திரத்தை ஆராய்ந்து பார்ப்போம். எந்தக் காலத்தில் வாழ்ந்திருந்தவர்களுடைய வரலாறுகளை ஆராய்ந்து பார்த்தாலும் சரி, எந்த நாட்டில் வசித்திருந்தவர்களுடைய வரலாறுகளை ஆராய்ந்து பார்த்தாலும் சரி, ஒரே விதமான அமைப்பைத்தான் யாண்டும் நாம் காண்கிறோம். துன்பம் விளைவிக்கக்கூடியவைகள் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் தென்பட்டுக் கொண்டிருக்கின்றன. இன்பம் விளைவிக்கக்கூடியவைகளும் அதே பாங்கில் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் தென்பட்டுக் கொண்டிருக்கின்றன. இன்ப துன்பங்கள் எனப்படுபவை எக்காலத்திலும் ஒரே பாங்கில் அமைந்திருக்கின்றன. அந்தஸ்தில் வேற்றுமை என்பதும் பதவியில் வேற்றுமை என்பதும் உடைமையில் வேற்றுமை என்பதும் யாண்டும் இருந்து வந்திருக்கின்றன. யாரோ சிலர் செல்வம் படைத்தவர்களாக இருக்கின்றனர்; வேறு சிலர் வறுமையில் வருந்துகின்றனர். சிலர் உயரிய பதவியில் இருக்கின்றனர்; இன்னும் சிலர் கீழ்மையில் இருக்கின்றனர் ஒரு சாரார் உடல் திட்பம் படைத்து ஆரோக்கியமுடையவராய் இருக்கின்றனர்; வேறு சிலர் நோய்க்கு உட்பட்டு மெலிந்து போனவர்களாய் இருக்கின்றனர். இத்தகைய காட்சிகளை நாம் யாண்டும்

வேதனையை அகற்றிவிட வேறு எவர்க்கும் இயலாது. ஏதேனும் ஒரு நிலையில் துன்பம் நிலைத்திருந்துகொண்டு மனிதனை வாட்டிக்கொண்டே வருகிறது. உலோபி களுக்காக அமைக்கப்பெற்றுள்ள நரகம் ஒன்று உண்டு. அந்த உலோபிகள் நரகத்தில் ஒன்றுகூடுகின்றனர். அவர்களிடம் பெரிய பொன்கட்டி ஒன்று கொடுக்கப் படுகிறது. அவர்கள் அதை உருட்டிக்கொண்டு ஒரு மலை உச்சிக்குப் போகவேண்டும். உச்சியை அடைந் ததும் பொன் அவர்களுக்குச் சொந்தமாய்விடுகிறது. அதுதான் அந்த நரகத்தில் ஏற்பட்டுள்ள நிபந்தனை. உலோபிகள் ஒன்றுகூடி பொன்கட்டியை மலையின்மீது திண்டாடி உருட்டித் தள்ளுகின்றனர். பாதிதூரம் போனதும் அது கை நழுவிக் கீழே உருண்டுவந்து விடுகிறது. திரும்பவும் அந்த உலோபிகள் அதே முயற்சியைச் செய்கின்றனர். உலக நடைமுறையை ஆராய்ந்து பார்த்தால் இத்தகைய நரகம் இந்த மண் ணுலகிலேயே இருப்பது நமக்குப் புலனாகும். பணத்தில் பேராசை பிடித்தவர்கள் பலர் படாத பாடுபட்டு பொருள்மிகச் சம்பாதிக்கின்றனர். சேரச் சேரச் செம் பொன் ஆசை அவர்கள் மனதைவிட்டுப் போவதில்லை. பொருள் சேருமளவு பொருளாசையும் மிகப்பெரிய தாய் விடுகிறது. மலையில் பாதிதூரம் போயிருப்பது போன்று அவர்கள் விரும்பிய செல்வத்தில் செம்பாதி கைக்கு வந்ததும் அது கைநழுவிப் போய்விடுகிறது. உலோபியர்கள் அனைவரும் அடைகின்ற தௌர்பாக் கியம் இதுவே. அந்த அளவில் அவர்கள் நரக

வேதனையை மண்ணுலகிலேயே அனுபவித்து வருகிறார்கள். இனி இந்த மண்ணுலக வாழ்க்கையை விண்ணுலக வாழ்க்கையாக மாற்றி யமைப்பதைப் பற்றிப் பலபேர் பேசிவருகின்றனர். துன்பம் கலவாத இன்பத்தை ஈண்டு நிலைநாட்டுதல் அவர்களின் குறிக்கோள் ஆகிறது. இத்தகைய பேச்சுக்கள் எல்லாம் கேட்பதற்கு மிகப் பிரீதிகரமாய் இருக்கின்றன. பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்குரிய கட்டுக்கதை என்றே இத்தகைய பேச்சுக்களைப்பற்றிப் பகரவேண்டும். ஏனென்றால் அவைகள் எல்லாம் வெறும் பேச்சாகவே முடிந்துவிடுகின்றன. மாந்தர் விரும்பும் விண்ணுலக வாழ்வு செயலில் வடிவெடுத்து வருவதை நாம் ஒரு பொழுதும் காணமுடியாது. அப்படி இருந்தும், உலகிலுள்ள வெவ்வேறு தேசத்தவர்கள் இன்பம் நிறைந்த பொற்காலம் ஒன்றை அமைக்கவேண்டும் என்றே கனவுகண்டு வருகின்றனர். அதில் மற்றொரு விசித்திரம். அப்படி அதிவிரைவில் அமையப்போகின்ற இன்பம் நிறைந்த வாழ்க்கைமுறையில் சிறந்த பகுதிகள் அலாதியாகத் தங்களுக்கே உரியதாக வந்து அமையுமென்று அவர்கள் மனக்கோட்டை கட்டுகின்றனர். சொர்க்க வாழ்க்கையிலும் தங்களுக்கு அலாதியாகச் சலுகை கிடைக்கவேண்டுமென்று ஒவ்வொரு நாட்டாரும் நாடி வருகின்றனர். சுயநலப்பற்று வைக்கலாகாது என்னும் கோட்பாட்டைப் புகட்டிவருகின்ற இத்தகைய மாந்தர்களுடைய மனப்பான்மைதான் என்னே !

இவ்வுலகிலுள்ள இன்பதுன்பங்கள் ஒன்றுக்கொன்று சமமாய் இருக்கின்றன. ஆதலால் இவ்வுலகிலுள்ள இன்பத்துக்குமேல் புதிய இன்பம் எதையும் நாம் இதனுள் புகுத்த முடியாது. அதே பாங்கில் இவ்வுலகிலுள்ள துன்பத்துக்குமேல் புதிய துன்பம் எதையும் நாம் இதனுள் புகுத்த முடியாது. உலகம் முழுதும் சக்திசொரூபம். இந்த சக்தியில் ஒரு பகுதி இன்பமாகத் தன்னை விளக்குகிறது. மற்றொரு பகுதி துன்பமாகத் தன்னை விளக்குகிறது. சக்தியிலுள்ள இன்பம் என்னும் பகுதிக்கு ஈடாகத் துன்பம் என்னும் பகுதி அமைந்திருக்கிறது. இன்பத்துக்கு நிகராகத் துன்பம் இருக்கிறது. எனவே இன்ப துன்பம் ஆகிய இரண்டின் அளவை என்றைக்கும் ஒரே விதமானது. அவ்விரண்டினுள் ஒன்று அதிகரிக்கின்றபொழுது மற்றதும் அதிகரித்துவிடும். ஆகையினால்தான் புதிய இன்பத்தையோ, துன்பத்தையோ அதனுள் புகுத்திவிட முடியாது. ஆனால் நாம் ஒன்று செய்யமுடியும். சமூகத்தில் ஒரு பக்கம் இருக்கின்ற துன்பத்தை மற்றொருபக்கத்துக்கு நாம் தள்ளிவிடமுடியும். துன்பம் இடம் மாறிப்போய்விடுமே ஒழிய அது அழிந்துபட்டுப் போகாது. இன்பத்துக்கு ஏற்ற அளவு துன்பமும், துன்பத்துக்கு ஏற்ற அளவு இன்பமும் இவ்வுலகில் இருந்தே தீரும். ஏனென்றால் இயற்கையின் இயல்பு அத்தகையது. கடல் நீர் ஆற்றில் ஏறவும் வடியவும் செய்கிறது. நீர் மட்டம் கடலில் உயருகின்றபொழுது நதியில் பொங்கி எதிர்த்தோடுகிறது. அது கடலில்

தணிகின்றபொழுது நதியிலும் அது வடிகிறது. இது இயற்கையின் இயல்பு. இதேவிதத்தில் உலக இன்பம் பொங்கி எழுந்தால் அது துன்பமாக வடிந்தே ஆக வேண்டும். உலக இன்பத்தைத் தவிர்த்துள்ள துன்ப மில்லை; துன்பத்தைத் தவிர்த்துள்ள இன்பமும் இல்லை. வாழ்வு இருந்தால் சாவும் இருந்தே ஆகவேண்டும். இறப்பு இல்லாத பிறப்பு கிடையாது. பிறப்பு இல்லாத இறப்பும் இல்லை. மனிதன் பிறக்கவேண்டும், ஆனால் சாகலாகாது என்று பலர் விரும்புகின்றனர். இத்தகைய விருப்பம் மடமையினின்று உதிப்பதாகும். ஏனென்றால் வாழ்வு என்னும் ஒரு பகுதியில் மரணம் என்னும் மற்றொரு பகுதியும் அமைந்திருக்கிறது. பகலும் இரவும் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதுபோன்று ஜீவிதமும் மரணமும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. அதே பாங்கில் இன்பமும் துன்பமும் ஒன்றை ஒன்று சார்ந் திருக்கின்றன. பசித்திருத்தல் என்னும் துன்பத்தை அனுபவிக்கின்றவனுக்கே புசித்தல் என்னும் இன்பத் தைப்பெறமுடியும். தீபம் ஓயாது எரிந்து கொண்டி ருக்கிறது. க்ஷணந்தோறும் எண்ணெய்க்கு உண்டா கின்ற மரணமே தீபத்தின் ஒளிப் பிழம்புக்கு அமையும் உயிர் ஆகிறது. விளக்கு எரிதல் என்னும் உயிரில் எண்ணெய் அழிதல் என்னும் மரணம் எப்படி அமைந் திருக்கிறது என்பதை அறிந்துகொள்ளுதல் அவசிய மாகிறது. வாழ்ந்திருக்க விரும்புகிற ஒருவன் நொடிப் பொழுதுதோறும் அதன்பொருட்டுத் தன் உயிரைக் கொடுத்துக்கொண்டே இருக்கின்றான். உயிரைக்

கொடுத்துப் பாடுபடுகின்ருன் என்று சொல்லுகிரேம். பிழைத்திருப்பதற்குப் பாடுபடுவது அவசியம். படுகிற பாட்டில் உயிர் ஓயாது பலியாய்க் கொண்டிருக்கிறது. இக் கோட்பாட்டை அறிகின்றவர்களே வாழ்க்கைத் தத்துவத்தை உள்ளபடி அறிகின்றவர்களாகிருர்கள். க்ஷணந்தோறும் சாவதின் மூலம் நாம் பிழைத்திருக் கிரேம். வாழ்வும் சாவும் ஜீவனுடைய இரண்டு விதமான விளக்கங்கள் ஆகின்றன. ஒருவிதக் காட்சியில் அது வாழ்வாகத் தென்படுகிறது. மற்ருெருவிதக் காட்சியில் அது மாய்வாகத் தென்படுகிறது. அலை ஒன்று கடலில் ஓரிடத்தில் தோன்றுகிறபொழுது அதற்குப் பக்கத்தில் பள்ளம் ஒன்று உண்டாகவேண் டும். பள்ளம் மேடு ஆகிய இரண்டையும் தொகுத்தே அலை என்று இயம்புகிரேம். இரவு பகல் என்பன சூரியன் தோற்றத்தில் இருப்பதும் மறைந்திருப்பதும் கூடி அமைகின்றன. இரவைத் தவிர்த்துப் பகல் இல்லை, பகலைத் தவிர்த்து இரவு இல்லை. சூரியன் தென்படாத பொழுது அதை இரவு என்கிரேம். அலையின் கீழ்ப் பகுதியைப் பார்த்துப் பள்ளம் என்கிரேம். மனிதன் தோற்றத்தில் இல்லாத பகுதியைப் பார்த்து மரணம் என்கிரேம். சூரியன் தோற்றத்தில் உள்ள பகுதியைப் பார்த்துப் பகல் என்கிரேம். நீரின் உயரமான பகுதி யைப்பார்த்து அலை என்கிரேம். மனிதன் உருவெடுத் திருக்கிற நிலையைப்பார்த்து வாழ்வு என்கிரேம். எனவே வாழ்வும்சாவும் இணைபிரியாதவைகள்; ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. உலக வாழ்க்கையில் பள்ளம்

விழுகிற பகுதியைப் பார்த்துத்துன்பம் அதிகரிக்கிறதே என்று மக்கள் வருந்துகின்றனர். உலக வாழ்க்கையில் மேடு ஆகின்ற பகுதியைப் பார்த்து அது இன்பம் நிறைந்ததென்று மாந்தர் மகிழ்வுறுகின்றனர். இன்பமும் துன்பமும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. மாணக்கன் ஒருவனுக்கு பள்ளிக்கூடத்துக்குப் போகும் பருவம் இருக்கிறது. அவனுடைய தேவைகள் மிகக் குறைந்தவைகள். அவைகளையெல்லாம் அவனுக்கு அளிப்பதற்குப் பெற்றோர்கள் இருக்கின்றனர். எனவே வாழ்வு இன்பம் நிறைந்ததாக அவனுக்குத் தென்படுகிறது. பிறகு அவன் வளர்ந்து பெரியவன் ஆகிறான்; முதுமையும் அடைந்து விடுகிறான். விதவிதமான அனுபவங்களை அவன் தன் வாழ்க்கையில் பெற்றவனாகின்றான். சிறிது அமைதியுற்றவனாக அவன் மாறிவிடுகின்றான். வாழ்க்கையைப்பற்றி இளமையில் அவன் கொண்டிருந்த மனோவேகம் பெரிதும் தணிந்து விடுகிறது. உலகில் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்துள்ள பழைய சமுதாயங்கள் இருக்கின்றன. சிறிது காலத்துக்கு முன்புதான் உருவெடுத்த புதிய சமுதாயங்கள் இருக்கின்றன. பழைய சமுதாயங்களோ எத்தனையோ மாறுபாடுகளையும் அழிவு காலங்களையும் பார்த்திருக்கின்றன. வாழ்வு என்னும் முயற்சியில் பழைய சமுதாயங்கள் பேருக்கம் காட்டுவதில்லை. நேற்றுப் பிறந்த புதிய சமுதாயங்களோ இதைச் சாதித்தாகவேண்டும், அதைச் சாதித்தாகவேண்டும் என்று ஊக்கம் நிறைந்தவைகளாக உயரிய மனக்கோட்டைகள் கட்டுகின்றன.

வாழ்க்கையைப் பற்றிய பழமொழி ஒன்று நம் நாட்டில் வழங்கி வருகிறது. ஓராயிரம் ஆண்டுகளில் பட்டணம் ஒன்று வடிவெடுக்கிறது. மற்றும் ஆயிரம் ஆண்டில் அது வனமாக மாறிவிடுகிறது. இனிக் காடு நாடாவதும் நாடு காடு ஆவதும் இயற்கையில் யாண்டும் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. காடு நாடாகிற காட்சியைக் காண்கிறவர்கள் உற்சாகம் நிறைந்தவர்களாய் இருக்கின்றனர். பின்பு நாடு காடாகின்ற காட்சியைக் காண்கின்றவர்கள் உற்சாகம் தணிந்தவர்கள் ஆய்விடுகின்றனர். இப்போக்கில் இத் தொல்லுலக வாழ்வு போய்க்கொண்டிருக்கிறது.

மக்களுக்கிடையில் சமத்வம் இருக்கவேண்டும் என்னும் கொள்கை ஒன்று உண்டு. இக் கொள்கையைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். சொர்க்கவாழ்வு (millennium) இந்த மண்ணுலகிலேயே வந்து அமையும் என்னும் கொள்கை பலர்க்கிடையில் இருந்திருக்கிறது. அவர்கள் உலக நன்மைக்காக உழைத்துப்பாடுபடுவதற்கு இக்கொள்கை பெரிய தூண்டுகோலாக இருந்திருக்கிறது. பல சமயங்களுக்கிடையில் பூலோகத்தில் சொர்க்க வாழ்வு என்பதே ஓர் அடிப்படைக் கோட்பாடாக இருந்துவருகிறது. இதை மக்களுக்கெடுத்துப் புகட்டுதலும் அவர்கள் செய்யும் சமயத் தொண்டு ஆகிறது. பரலோகத்தில் இருக்கும் பரம புருஷன் பூலோகத்துக்கு எழுந்தருளி வந்து இதை ஆளப்போகிறார் என்பது அவர்களுடைய கொள்கை. அப்படி அவர் ஆட்சிபுரிகையில் மக்களுக்கிடையில்

வேற்றுமை ஒன்றும் உண்டாகாதாம். வாழ்க்கை முறையில் எவ்விதமான வேற்றுமையும் அப்பொழுது ஏற்படாது என்பது அம்மதவாதிகளின் கொள்கை. இத்தகைய கொள்கையைப் போதித்துவருகிறவர்கள் வெறும் மதவெறி பிடித்தவர்களாகின்றனர். மதவெறி பிடித்தவர்களோ மக்களுக்கிடையில் உண்மையாக நல்லெண்ணம் மிகக் கொண்டவர்களேயாம். இக்கோட்பாட்டை அடிப்படையாக வைத்துக்கொண்டே கிறிஸ்து மதம் மக்களுக்கிடையிலே புகட்டப்பட்டது. இத்தகைய மதவெறிபிடித்தவர்கள் பூலோகத்தில் சொர்க்கவாழ்வு வந்து அமைந்துவிட்டால் அது எத்தகைய பெரும் பேறு ஆக இருக்கும் என்று விளக்கிக் காட்டி அதன்மீது மக்களுக்கிடையில் மையல் ஊட்டினார்கள். அப்படி அவர்கள் புகட்ட ஆரம்பித்த காலத்தில் கிரேக்க நாட்டிலும் ரோமாபுரியின் ஆட்சியிலும் அடிமைகள் பலபேர் இருந்தனர். அந்த அடிமைகள் தங்களுக்கு நல்வாழ்வு வந்து அமையப்போகிறது என்று கருதி கிறிஸ்துவ மதத்தினிடத்துப் பற்று வைத்து அதை நாடிச்சென்றனர். பரலோகத்திலிருக்கும் பிதாவே மண்ணுலகில் வந்து ஆட்சிபுரியும் பொற்காலம் ஒன்று வரும்பொழுது யாரும் அடிமைகள் ஆக மாட்டார்கள், சுதந்தரவாழ்வு ஏற்பட்டுவிடும், உண்பதற்கும் பருகுதற்கும் ஏராளமாகப் பொருள்கள் அமைந்திருக்கும். அத்தகைய நம்பிக்கை கொண்டவர்களாக அந்த அடிமைகள் கிறிஸ்துமதக்கொடியின் கீழ் பெருவாரியாகக் கூடினார்கள். பூலோக சொர்க்கம்

என்னும் கோட்பாட்டை முதலிலே புகட்டியவர்கள் உண்மையாகவே அக்ஞானத்தில் உழன்ற மதவெறியினராய் இருந்தனர். எனினும் அவர்கள் நல்லெண்ணமே வடிவெடுத்தவர்களாகவும் இருந்தனர். இக்காலத்தில் இந்த பூலோக சொர்க்கத்தைப் பற்றிய அவா புதியதோர் வடிவம் எடுத்திருக்கிறது. மக்களுக்கிடையில் சமத்துவத்தைப் பற்றி அது புகட்டிவருகிறது. சுதந்தரம், சமத்துவம், சகோதரபாவனை (Liberty, Equality, and Fraternity) இதுவே இக்காலத்திய நன்மக்களுடைய சம்பிரதாயமாகிறது. ஆனால் இந்த சம்பிரதாயத்திலும் ஒருவிதமான வெறி அடங்கியிருக்கிறது. உண்மையை அடிப்படையாகக் கொள்ளாத பெருக்கம் எதுவோ அதைத்தான் வெறி என்றும் மதவெறி என்றும் நாம் மொழிகிறோம். இம் மண்ணுலக வாழ்க்கையில் உண்மையான சமத்துவம் ஒருபொழுதும் இருந்ததில்லை; இனி ஒருபொழுதும் இருக்கப்போவதுமில்லை. இவ்வுலக வாழ்க்கையிலே நாம் எல்லோரும் சமத்துவம் அடைவது என்பது எங்ஙனம் சாத்தியமாகும்? ஆக்கமுடியாத இந்த சமத்துவத்தை ஆக்கிவிடவேண்டுமென்று முயலுகின்ற இடத்து அது மரணத்தினிடத்து நம்மை எடுத்துச் செல்லும். வெறிபிடித்தவர்கள் விரும்புகின்ற சமத்துவம் மரணத்தில்தான் அடங்கியிருக்கிறது. எக்காரணத்தை முன்னிட்டு இவ்வுலகம் இப்பொழுது பெற்றிருக்கிற நிலைக்கு வந்துள்ளது? நடுநிலை அல்லது சமத்துவத்தை அது இழந்துவிட்டது. நடுநிலை புரண்

டிருப்பதைத்தான் இவ்வையக வாழ்வு என்கிறேம். பிரளயம் என்னும் நிலை ஒன்று உண்டு. அந்நிலை சிருஷ்டி அல்லது தோற்றம் உண்டாவதற்கு முன்பு இருந்தது. பிரளயத்தில் சமத்துவம் அல்லது நடுவுநிலை முற்றிலும் அமையப்பெற்றிருக்கிறது. ஆங்கு வேற்றுமைக்குச் சிறிதேனும் இடமில்லை. பின்பு ஜகத்திலுள்ள சிருஷ்டி சக்திகள் எல்லாம் எங்ஙனம் தோன்றலாயின ? ஆக்கத்துக்கு ஏதுவான வேகங்கள் பல வையக வாழ்வில் இயங்கி வருவதை நாம் காண்கிறேம். போராட்டத்தின் காட்சி யாண்டும் தென்படுகிறது. ஒருவரோடு ஒருவர் போட்டி போடுதலை இங்குக் காண்கிறேம். ஓர் இயக்கம் மற்ருேர் இயக்கத்தோடு முரண்படுவதையும் பார்க்கிறேம். அணுக்கள் அனைத்தும் சமத்துவத்தை அல்லது நடுநிலையைப் பெற்றுவிட்டன என்று வைத்துக்கொள்வோம். அதன் பிறகு சிருஷ்டிக்கிரமம் என்பது இருக்குமா ? அது ஒருநாளும் சாத்தியமல்ல என்பதை தத்துவ விளக்கம் செய்கின்ற நூல்கள் இயம்புகின்றன. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். அமைதியுற்றிருக்கின்ற நீர்நிலை ஒன்றனிடத்துக் கழியால் கலக்கி அசைவை உண்டுபண்ணுவோம். சலனமடைந்த நீரில் ஒவ்வொரு சிறு துளியும் திரும்பவும் அமைதிநிலையை எய்த இயங்குகிறது. ஒன்று மற்றென்ருேடு மோதி நடுநிலையைப் பெற்றுவிடப் பார்க்கிறது. இந்த ஜகத் என்று சொல்லப்படுகின்ற பேர் இயக்கத்திலும் இதே செயல்தான் நிகழ்ந்து வருகிறது. அண்டமெங்குமுள்ள பண்டங்கள் அனைத்தும் இயங்கி

வருவதன் மூலம் நடுநிலையைப் பெற்றுவிடப் பார்க்கின்றன. அவைகளின் இயக்கங்கள் அனைத்தும் பூரண சமத்துவத்தைப் பெற்றுவிடுதல் பொருட்டேயாம். அப்படி சமத்வத்தைப் பெறுமிடத்து அவைகளுக்குப் பிரளயம் வந்துவிடுகிறது. அது ஒரே ஒடுங்கிய நிலை ஆகிறது. ஆங்குத் தோற்றத்தில் ஒன்றுமில்லை. திரும்பவும் ஒரு அசைவு அதனிடத்து உண்டாகிறது. அப்பொழுது ஒரு பொருள் மற்றொன்றோடு கூடவும், ஒரு விசை மற்றொரு விசையுடன் போராடவும் செய்கின்றன. இத்தகைய போராட்டத்துக்குத்தான் சிருஷ்டி என்று பெயர். சமத்துவம் கலைந்த நிலையைத்தான் சிருஷ்டி என்று சொல்லுகிறோம். எங்கு உயர்வு தாழ்வு இருக்கிறதோ அங்கு மாறியமைதல் என்னும் செயல் நிகழ்கிறது. சமத்துவத்தைக் கலைத்துவிட ஒருவித சக்தி இயற்கையில் இயங்குகிறது. சமத்துவத்தை உண்டுபண்ணுவதற்கு மற்றொருவித சக்தி இயற்கையில் இயங்குகிறது. இவ்விரண்டு விதமான சக்திகளும் முற்றிலும் வேண்டப்படுபவைகளாய் இருக்கின்றன.

பூரண சமத்துவம் அமையுங்கால் எல்லாப்படித் தரங்களிலும் ஒன்றோடொன்று போராடிக்கொண்டிருக்கின்ற சக்திகள் முற்றிலும் மையநிலையை அடைந்துவிடும். அதற்குத்தான் சமத்துவம் என்று பெயர். ஆனால் அது இவ்வையகத்தில் ஒருநாளும் அமையாது. அத்தகைய நிலையை அடைதற்கு முன்பு வாழ்வுக்கு முற்றிலும் தகுதியற்றதாக இவ்வையகம் ஆய்விடும்.

ஜீவகோடிகளுள் அப்பொழுது ஒன்றுங்கூட இதில் வாழ்ந்திருக்கமாட்டாது. எனவே பூலோக சொர்க்கத்தைப்பற்றிய எண்ணம் காரியாம்சத்தில் வந்து அமையாது. எல்லார்க்கும் ஒரே பாங்காக சமத்துவம் என்பதும் ஆகாத காரியம். அத்தகைய கற்பனை நிலையை செயலில் கொண்டுவர நாம் முயலுமிடத்து அழிவு காலத்துக்கு நம்மை அது எடுத்துச் சென்றுவிடும். மனிதனோடு மனிதன் வேறுபடுகிறான். இந்த வேறுபாட்டை உண்டுபண்ணுவது யாது? அவனுடைய அறிவுத் திறமையிலுள்ள வேற்றுமையே அதற்குக் காரணம். ஒரே பாங்கான அறிவுத்திறன் படைத்தவர்களாக மக்கள் எல்லோரும் பிறக்கிறார்கள் என்று யாரும் சொல்லத் துணியமாட்டார்கள். ஒரே விதமான மனப்பான்மை படைத்தவர்களாக நாம் எல்லோரும் பிறக்கிறோம் என்று சொல்லுகிற மனிதனைப் பைத்தியக்காரன் என்றே உலகம் பொருள்படுத்தும். வெவ்வேறு தரப்பட்ட ஆற்றல்களுடன் நாம் இவ்வுலகினுள் வருகிறோம். ஆற்றலில் மேலோங்கியிருப்பவர்களாகவோ அல்லது இன்னும் கீழ்த்தரத்தில் இருப்பவர்களாகவோ நாம் பிறப்பெடுக்கிறோம். பிறப்பதற்கு முன்பு கர்ப்பவாசம் செய்து கொண்டிருக்கிறபொழுதே உயர்ந்த அல்லது தாழ்த்தப்பட்டநிலை நமக்கு அமைந்துவிடுகிறது. அத்தகைய வேற்றுமையினின்று விலகிக் கொள்ள நமக்கு ஒருபொழுதும் இயலாது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். அமெரிக்காவில் இருந்த பூர்வீக ஜனங்கள் தொன்றுதொட்டு பல்லாயிரம் ஆண்

டுகள் அங்கே வாழ்ந்திருந்தனர். பிறகு ஐரோப்பியர்கள் ஒரு சிறு கூட்டத்தார் அந்நாட்டினுள் போய்ச் சேர்ந்தனர். அந்த தேசத்தினுடைய தோற்றத்தையே எவ்வளவு தூரம் மாறுபட்டதாக வெள்ளையர்கள் அமைத்துவிட்டார்கள்! வியப்புக்குரிய புதிய உலகமாக அது மாறியிருக்கிறது என்னே! பூர்வீக ஜனங்கள் ஏன் இத்தகைய முன்னேற்றங்களை அமைக்கவில்லை? பெரிய பெரிய பட்டணங்களை அவர்கள் ஏன் நிர்மாணிக்கவில்லை? ஆற்றலில் ஒருவர்க்கொருவர் நிகராக இருக்கிறுர் என்றுல் இந்த முன்னேற்றத்தைப் பூர்வீகமக்களும் செய்துவைத்திருக்க வேண்டுமல்லவா? ஐரோப்பியர்கள் அமெரிக்காவுக்குள்ளே நுழைந்த பொழுது புதிய அறிவும் ஆற்றலும் அந்நாட்டுக்குள் புகுவனவாயின. அவர்கள் அந்தக்கரணத்தில் படைத்திருந்த சம்ஸ்காரங்கள் முற்றிலும் வேறுபட்டவைகள். தங்கள் மனதிலிருந்த இயல்புகளையெல்லாம் புறவுலகிலே செயலில் கொண்டுவர அவர்கள் முயன்றனர். அவர்கள் மனதிலிருந்த எண்ணங்கள்தான் அமெரிக்காவைப் புதிய உலகமாக மாற்றிவிட்டன. மக்களுக்கிடையில் அறிவிலும் ஆற்றலிலும் வேற்றுமை இருக்கிறது என்பதற்கு இதுவே தக்கதொரு சான்று ஆகும். அப்படியல்லாது ஒரே படித்தரத்தில்தான் உயிர்கள் அனைத்தும் இருக்கின்றனவென்றுல் அது மரணத்துக்கு ஒப்பாகும். பிறகு உண்மையென்னவெனில் இத்தொல்லுலகம் இருக்கும் வரையில் இதனுள்ளே வேற்றுமையும் இருந்தே தீரும். அப்படி வேற்றுமை யிருப்பது

முற்றிலும் அவசியம். அதற்கு மாறாக பூலோகசொர்க்கம் என்பதும் பூரண சமத்துவம் என்பதும் பிரளயம் உண்டாகின்றபொழுதுதான் வந்தமையும். சமநிலை என்பது பிரளயத்தில் அடங்கியிருக்கிறது. சிருஷ்டி நடைபெற்றுக்கொண்டிருக்கின்றபொழுது வேற்றுமை இருந்தே ஆகவேண்டும். ஆயினும் மக்கள் அனைவருக்கும் உயர்ந்த இன்பத்தையும் வசதியையும்செய்து வைக்கவேண்டும் என்கின்ற எண்ணம் மிக மேலானதே. நல்வினையில் மனிதனைத் தூண்டுதற்கு அந்த எண்ணம் பெரிதும் பயன்படுகிறது. சிருஷ்டித்தொழில் நடைபெறுவதற்கு ஏற்றத்தாழ்வு முற்றிலும் அவசியமாயிருப்பதுபோன்று அந்த ஏற்றத் தாழ்வைக் கூடிய வரையில் குறைப்பதற்கான முயற்சியும் முற்றிலும் அவசியமானது. குறைபாடுகளினின்று விடுதலை அடைவதற்கு எல்லா உயிர்களும் முயன்றுவருகின்றன. விடுதலைகளில் எல்லாம் பெரிய விடுதலை ஆகிய வீடுபேறு அடைதற்கு சில உயிர்கள் முயன்றுவருகின்றன. தெய்வத்திடத்திருந்து தோன்றிவந்துள்ள அவ்வுயிர்கள் தெய்வத்திடத்திற்கே திரும்பிப்போக முயன்றுவருகின்றன. இத்தகைய முயற்சி பிரபஞ்சத்தில் இல்லாது போய்விட்டால் சிருஷ்டித்தொழிலும் அப்பொழுதே நின்றுவிடும். வேற்றுமைகளை யெல்லாம் மீளுதற்காக மனிதன் எடுத்துக்கொள்கின்ற முயற்சியே அவனை மேலோன் ஆக்குவதற்கு உதவுகிறது. இயற்கையின் நடைமுறையிலுள்ள ஒரு சக்தி பந்தபாசத்தைப் பலப்படுத்துகிறது; மற்றொரு சக்தி பந்தபாசங்களை

உடைத்துவிட்டு விடுதலே அல்லது முக்தி அடைவதற்குத் தூண்டுகோலாகிறது. இந்த இரண்டுவித சக்திகளும் இயங்கினுல்தான் உலக நடைமுறையும் ஒழுங்காகப் போய்க்கொண்டிருக்கும்.

இவ்வுலகத்தின் நடைமுறையானது சக்கரத்தினுள் சக்கரம் பொருத்தி வைக்கப்பட்டிருப்பது போன்று சுழன்று வருகிறது. இதனுடைய யந்திர அமைப்பே மிக பயங்கரமானது எனலாம். அதனுள் நாம் கை வைத்தவுடனே அதன் இயக்கத்தில் நாம் அகப்பட்டுக்கொள்கிருேம். பிறகு அதை விட்டுத் தப்பித்துக்கொள்வது சாத்தியமன்று. பிறவிப் பெருங்கடலினுள் நாம் உழன்று வரும்படி நம்மை அது பிடித்துக்கொள்கிறது. நம்மில் ஒவ்வொருவரும் அரிய கனவு ஒன்று கண்டு வருகிருேம். நமக்கு அமைந்துள்ள ஏதோ ஒரு கடமையைச் செய்து முடித்தானதும் நாம் ஓய்வு பெற்று இருக்க முடியும் என்று எதிர்பார்க்கிருேம். அதுவே நாம் கண்டு வரும் கனவு ஆகும். ஆனல் நாம் எதிர்பார்க்கிற ஓய்வு மட்டும் ஒருநாளும் நமக்கு வந்து அமையப் போவதில்லே. ஏதேனும் ஒரு கடமையைச் செய்து முடிப்பதற்கு முன்பே மற்ருெரு கடமை முன் வந்து நிற்கிறது. நமக்கு அமைந்துள்ள அலுவல்களேச் செய்து முடித்தாக வேண்டும் என்னும் உணர்வு ஓய்வில்லாத செயலில் நம்மை இழுத்துச் செல்லுகிறது. உலக நடைமுறை என்பது வல்லமை மிக வாய்க்கப் பெற்றுள்ள ஒரு சிக்கலான யந்திரம் ஆகிறது. இதனுள் அகப்பட்டுக் கொண்டிருக்கும் நாம் தப்பித்துக்கொள்

வதற்கு இரண்டே உபாயங்கள் உள. ஒன்று இந்த யந்திரத்திலுல் இழுத்து இயக்கப்படுவதற்கிடையில் இதைப் பொருள்படுத்தாது விட்டுவிடுவதாகும். வாழ்வில் தற்செயலாய் நிகழ்கின்ற நிகழ்ச்சிகள் அனைத்தையும் சாக்ஷியாய் நின்றுகொண்டு வேடிக்கை பார்ப்பது முதல் முறையாம். இம்முறையில் ஆசைகள் அனைத்தையும் நாம் அறவே விட்டுவிட வேண்டும். நம் உடல் மூலம் நிகழ்கின்ற எச்செயலிலும் சம்பந்தப்படாதவர்களாக சாக்ஷியாய் இருந்துகொண்டு அவையாவையும் வேடிக்கை பார்ப்பதாம். பல ஆண்டுகளுக்கு முன்பு சென்னை நகரில் சித்த புருஷர் ஒருவர் இருந்தார். அவருடைய கெண்டைக்காலில் தீராத புண் ஒன்று தோன்றிவிட்டது. அதில் புழுக்களும் உண்டாயின. ஆனால் அந்த சித்த புருஷர் அந்த உடலைத் தம்முடையதென்று இமைப்பொழுதுக்கும் சொந்தம் பாராட்டவில்லை. அவர் செய்த செயல் ஒன்றை வழிப்போக்கர் சிலர் கவனித்தனர். உலக நடைமுறைகள் அனைத்துக்கும் சாக்ஷி பூதமாய் ஒரு மரத்தடியில் அவர் அமர்ந்திருந்தார். அப்பொழுது அவருடைய கெண்டைக்கால் புண்ணில் கொச கொச வென்று ஊறிக்கொண்டிருந்த புழுக்களில் இரண்டு மூன்று தரையில் விழுந்து தவித்தன. "இங்கு ஏன் நீங்கள் இன்னல் படுகின்றீர்கள்? நீங்கள் இருக்கவேண்டிய இடத்துக்குப்போய்விடுங்கள்" என்று சொல்லிக்கொண்டு அந்த மஹா புருஷர் ஒரு சருகில் அப்புழுக்களை எடுத்துத் தமது கெண்டைக்கால் புண்ணில் திருப்பி வைத்தார். உலக நடைமுறைகள்

அனைத்துக்கும் சாக்ஷியாய் இருப்பது என்பதற்கு அவருடைய செயலே நல்ல சான்று ஆயிற்று. அவ்விதத்தில் நமக்கு நிகழ்கின்ற எல்லாச் செயல்களுக்கும் நாம் சாக்ஷியாய் இருக்கவேண்டுமென்று இயம்புவது மிக எளிது. ஆனால் இக்கோட்பாட்டை நடைமுறையில் கொண்டுவருவது ஆகாத காரியம் என்றே சொல்லிவிடலாம். கோடிக்கணக்கான மக்களுக்கிடையில் அத்தகைய சாக்ஷிபூதமாய் இருக்கும் மனிதன் ஒருவனைக் காண முடியுமா என்பது சந்தேகம். எனவே முதல் உபாயமாகிய சாக்ஷியாய் இருத்தல் என்னும் கோட்பாடு பொதுவாக உலக மக்களுக்கு நடைமுறையில் கொண்டு வருவதற்கு எட்டாததாகிறது. இனி இரண்டாவது உபாயம் ஒன்று இருக்கிறது. உலக வாழ்வு என்னும் யந்திரத்தின் இயக்கத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிற நாம் அந்த இயக்கத்தில் முழுமனதோடு கலந்துகொள்ளுதலாம். அப்போதைக்கப்போது நமக்கு அமைகின்ற அலுவல்களையெல்லாம் ஊக்கத்துடன் நாம் ஆற்றி வரவேண்டும். அப்படி ஆற்றுதற்கிடையில் வினையாற்றும் விதத்தையும் நாம் அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. நமக்கு அமைந்துள்ள வினைகளை என்ன பாங்கில் நாம் நிறைவேற்ற வேண்டும் என்பதையே கர்மயோகம் காட்டித் தருகிறது. உலக நடைமுறை என்னும் யந்திரத்திலுள்ள சக்கரங்களினின்று நீ விலகி ஓடாதே. அந்தப்பெரிய யந்திரத்தினுள் நீ எங்கே என்ன பாங்கில் வைக்கப்பட்டிருக்கிறாயோ ஆங்கு அதேபாங்கில் இருந்துகொண்டு உனக்கு ஏற்பட்

டுள்ள வேலைகளை முறையாகச் செய்து வருவாயாக. தனக்கு அமைந்துள்ள அலுவல்களை முறையாகச் செய்கின்றவன் தனது செயல்களுக்கிடையிலே ஓய்வு எடுத்துக் கொண்டிருப்பவன் ஆகிறான். செயல்களைச் செய்வதற்கிடையில் தன் மனதை அவன் நடுநிலையில் வைத்துப் பழகுகின்றான். அப்படி மனதை நடுநிலையில் வைத்திருப்பதால் தான் ஆற்றுகிற வினைகளினின்று விலகிக்கொள்வதும் அவனுக்குச் சாத்தியமாகிறது. தனக்கு அமைந்துள்ள கடமைகளை நன்கு ஆற்றுதலே அக்கடமைகளினின்று விலகிக் கொள்வதற்கு உற்ற உபாயமாகும். இம்முறையே நம்மவர்களுள் பெரும் பான்மையோருக்கு உகந்த ஆத்ம சாதனமாகிறது.

கர்மம் என்றால் என்ன என்பதை நாம் இப் பொழுது அறிந்துள்ளோம். இயற்கையினுடைய நடைமுறைக்கு அது ஆதாரமாய் இருக்கிறது. துவக்க மும் முடிவும் இல்லாது கர்மம் யாண்டும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. கடவுள் நம்பிக்கை வைத்திருப்ப வர்களுக்கு இக் கோட்பாடுகள் நன்கு விளங்குகின்றன. பின்பு கர்மம் செய்வதன் மூலம் தாங்கள் கடவுளுக்குத் துணைபுரிந்து வருவதாக ஒரு சிலர் நம்புகின்றனர். அப்படி எண்ணுவது அறியாமையின் விளைவு ஆகும். மக்களாகிய நம்முடைய உதவியைப் பெற்றாகவேண் டும் என்னும் சக்தியற்ற நிலையில் தெய்வம் இல்லை. உண்மையில் அவர் சர்வ சக்திமான். பிரபஞ்சத்தின் செயல்கள் அனைத்தும் அவருடைய ஆணையால் நிகழ் வனவாகின்றன. மக்களுடைய உதவியை எதிர்பார்த்

துக்கொண்டு இவ்வுலக நடைமுறை காத்திருக்கிற தில்லை. எப்பொழுதும் தன் போக்கில் அது இயங்கிக் கொண்டே இருக்கும். சர்வேசுவரனுடைய சக்தியின் விளையாட்டு ஆகிய இவ்வுலகின் நடைமுறையை நாம் பயன்படுத்திக் கொள்கிறோம். அதை நாம் முறையாகப் பயன்படுத்தினால் நாம் மனபரிபாகம் அடைகிறோம். பண்பட்ட மனதின்கண் சுயநலம் சிறிதேனும் எஞ்சி யிருப்பதில்லை. முக்தியடைவது நமது குறிக்கோள். சுயநலம் முற்றிலும் நீங்கியிருக்கின்ற விடத்து நாம் முக்திக்குத் தகுதியுடையவர் ஆகிறோம். கர்மத்தை முறையாகச் செய்வதன்மூலம் நாம் முக்தியடைகிறோம் என்று கர்மயோகம் புகட்டுகிறது. உலகத்தை இன் புற்றிருக்கச் செய்வது தங்களுடைய குறிக்கோள் என்று மதவெறி பிடித்துள்ளவர்கள் பலர் கருதுகின் றனர். அப்படி உலகத்தை இன்புற்றிருக்கச் செய்வது உயர்ந்த நோக்கமாகிறது. அந்த நோக்கம் அவர்களைச் செயல் புரியும்படித் தூண்டுகிறது. ஆனால் மதவெறி பிடித்திருப்பதில் கேடு ஒன்று அமைந்துள்ளது. மத வெறி பிடித்தவர்கள் உலகுக்கு எவ்வளவு நன்மை செய்கின்றார்களோ அவ்வளவு தீமையையும் அவர்கள் செய்துவிடுகின்றனர். உலகத்தை இன்புற்றிருக்கச் செய்யவேண்டும் என்பதுபோன்ற நோக்கம் மனித னுக்கு ஏன் இருக்கவேண்டும் என்று கர்மயோகி கேட் கின்றான். உலகம் இன்பம் அடைவது மனிதனிட மிருந்து பெறுகிற உதவியைக்கொண்டு அல்ல. அத்தகைய நோக்கத்தால் தூண்டப்பெற்று மனிதன்

கர்மம் செய்யலாகாது. நிராசையில் நிலைபெற்றிருந்து கர்மம் புரிவதன் மூலம் மனிதன் பந்தங்கள் அனைத்திலிருந்தும் தன்னை விடுவித்துக்கொள்கிறான். பந்தங்களிலிருந்து விடுபட்டு முக்தியடைவது ஒன்றே வாழ்க்கையின் உண்மையான குறிக்கோள் ஆகும். எனவே உலகத்தவர் கொள்கின்ற லெளகிக நோக்கங்கள் அனைத்தையும் கர்மயோகி ஒருவன் புறக்கணித்துவிட வேண்டும். இவ்வுலக வாழ்க்கைக்குரிய நோக்கங்களையெல்லாம் அவன் கடந்தவன் ஆகவேண்டும்.

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**
**मा कर्मफलहेतुर्भूः मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥**

வினையாற்றுவதற்கு உனக்கு உரிமை யுண்டு. ஆனால் வினைப்பயனில் நீ ஒருநாளும் உரிமை பாராட்டாதே. *(கீதை 2 – 47)*

இங்ஙனம் நிஷ்காமிய கர்மம் எது என்பதை அறிந்து கொள்ளவும் அதை அனுஷ்டானத்தில் கொண்டு வரவும் மனிதனுக்கு இயலும் என்று கர்மயோகி பகர்கின்றான். நிஷ்காமிய கர்மத்தில் நமக்குப் பயிற்சி கொடுப்பதே வாழ்க்கையின் குறிக்கோள் ஆகிறது. சுவாசிப்பது போன்ற செயல்கள் மனிதனுடைய வாழ்க்கையில் இன்றியமையாத பகுதிகள் ஆய்விடுகின்றன. ஓயாது நல்வினையாற்றிக் கொண்டிருப்பதும் அவனுடைய வாழ்க்கையில் அங்ஙனம் ஒரு பகுதி ஆய்விடவேண்டும். நல்வினையாற்றுவதே அவனுடைய இயல்பு ஆய்விடுமாகில் பிறகு வேறு எந்த நோக்கமும் அவனுக்குத் தேவையில்லை. வேறு ஏதாவது நோக்

கத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு செடி ஒன்று அழகிய புஷ்பங்களைத் தன்னிடத்திருந்து தோற்றுவிப்பதில்லை. அழகிய புஷ்பங்களை உண்டு பண்ணுவதும் அவைகளிடத்திருந்து நறுமணத்தை யாண்டும் பரப்புவதும் செடிகளின் நல்லியல்பு ஆகும். அதே பாங்கில் கர்மயோகி ஒருவன் நல்வினைகளையே ஓயாது ஆற்றுகின்றான். நல்வினை ஆற்றுவதே அவனுடைய இயல்பு ஆய்விடுகிறது. சொர்க்கத்தை அடைவதற்காக நல்வினை ஆற்றவேண்டுமென்று பலர் கருதுகின்றனர். அப்படிக் கருதுவதுங்கூட ஒரு கீழ்த்தரமான நோக்கமாய் விடுகிறது. நல்வினை ஆற்றுவதன் மூலம் தனக்கு சொர்க்கப் பிராப்தி வாய்க்கிறது என்று விரும்புகிற மனிதன் கர்மத்தில் தன்னைத் தளைத்துக் கொள்கிறான். சொர்க்கத்தைப் பெறுவதில் வைத்துள்ள ஆசையையும் மனிதன் அறவே அகற்றிவிட வேண்டுமென்று கர்மயோகி பகர்கின்றான். "வானேயும் பெறில் வேண்டேன்" என்பதே நல்லியல்பு படைத்துள்ள கர்மயோகியின் மனப்பான்மையாகிறது. கர்மம் புரிகின்ற கர்மயோகியினிடத்து சுயநலப்பற்று சிறிதளவாயினும் இருக்குமாகில் அதன் மூலம் அவன் புதிய பந்தபாசங்களையும் தளைகளையும் தன்மீது போட்டுக் கொள்கின்றான். இம்மியளவு ஆசை இருந்தாலும் ஒரு மனிதன் முக்திக்குத் தகுதியுடையவன் ஆகான்.

எனவே கர்மயோகத்தின் குறிக்கோள் யாது என்பது இப்பொழுது தெளிவாகிறது. கர்ம பலன்கள் அனைத்தையும் கர்மயோகி அறவே துறந்துவிடுகிறான்.

கர்மத்திலோ கர்ம பலன்களிலோ அவனுக்குச் சிறிதே னும் பற்றுதல் கிடையாது. அடிப்படை உண்மை ஒன்றை கர்மயோகி யாண்டும் கருத்தில் வைத்துக் கொள்கிறான். தான் வேறு, இவ்வுலகம் வேறு. இவ்வுல குக்காகவென்று தான் வாழ்ந்திருப்பவன் அல்லன். பிறகு தனக்காகவென்று இவ்வுலகம் அமைந்திருப்பதும் அன்று. தான் வேறு, தான் எடுத்துள்ள உடல் வேறு என்பதையும் அந்த யோகி நன்கு அறிந்திருக்கிறான். தான் வினையாற்றுதற்கிடையில் எந்த வினையிலும் தான் கட்டுப்பட்டவன் அல்லன் என்பதையும் அவன் நன்கு உணர்ந்திருக்கிறான். அரும்பெரும் வினைகள் ஆற் றுபவனாக அவன் தென்படுகிறான். உண்மையில் அப்படி வினைகளை ஆற்றிக்கொண்டிருப்பதற்கிடையில் அவை யாவையும் கடந்த நிலையில் இருப்பது அவனுடைய நிஜசொரூபமாகிறது. பரமாத்ம சொரூபந்தான் மனித னுடைய நிஜசொரூபம். கர்மங்கள் அனைத்தையும் கடந்துள்ள ஓய்வுநிலை அது. சாந்தத்துக்கு இருப்பிடம் ஆத்ம சொரூபம். ஆத்ம சொரூபத்தில் இருக்கின்ற மனிதனுக்கு பந்தபாசம் எப்படி உண்டாகக்கூடும்? எதனிடத்து அவன் கட்டுப்பட்டவன் ஆகிறான்? பற்றை அறவே நீக்கியவர்களாக நாம் இருக்கவேண் டும் என்னும் கோட்பாடு மிக நல்லது. அந்தப் பற்றற்ற நிலையைப் பெறுதற்கான உபாயம் யாது? பழவினைகள் பல ஒன்றுகூடி நம்மைப் பந்தத்தில் கட்டிப்பிடித்து வைத்திருக்கின்றன. சுயநலம் சிறிதேனும் இல்லாத வர்களாக நாம் செய்யும் ஒவ்வொரு நல்வினையும்

பழைய பந்தபாசங்களினின்று ஒவ்வொரு தளையை நீக்கிவிடுகிறது. புதிய பந்தத்தை உண்டுபண்ணுதற்குப் பதிலாக பழைய பந்தத்தை அது அகற்றுகிறது. கைம்மாறு ஒன்றையும் கருதாது உலகத்தவர்களிடத்து நாம் அனுப்புகின்ற ஒவ்வொரு நல்லெண்ணமும் பழைய பந்தத்தின் ஒரு கட்டை அவிழ்த்து விடுகிறது. பழைய பந்தம் அகன்றுபோகுமளவு நாம் தூய்மை படைத்தவர்கள் ஆகிறோம். பரநலத்தொண்டில் சுயநலத்தை நாம் அறவே மறந்துவிட்டால் நாம் தூய்மையே வடிவெடுத்தவர்கள் ஆய்விடுகிறோம். தன் நலத்தைத் துறக்கிற அளவு தூய்மை நம்மிடத்து ஓங்குகிறது. இறுதியாகத் தூய்மையின் உச்சநிலைக்கு நாம் வந்துவிடுகிறோம். யாருடைய உள்ளத்தில் சுயநலம் குடிகொண்டிருக்கிறதோ அவர்கள் இச் சீரிய கோட்பாட்டை அறிந்துகொள்ளமாட்டார்கள். இது ஒரு விபரீதமான கொள்கையாக அவர்களுக்குத் தோன்றும். இதை வெறும் வாய் வேதாந்தம் என்றும் அவர்கள் பகர்வார்கள். சுயநலம் கருதாது வினையாற்று என்று பகவத் கீதை போதிக்கிறது. இந்த போதனையை ஆமோதிக்காதவர்கள் உலகில் இருக்கின்றனர். உலக வாழ்க்கைக்குரிய நோக்கங்கள் இல்லாவிட்டால் மனிதன் ஒரு செயலையும் செய்யமுடியாதென்று அவர்கள் கருதுகின்றனர். சுயநலமற்ற சேவையை அவர்கள் எங்கும் கண்டதில்லை. எனவே அவர்கள் அத்தகைய முடிவுக்கு வந்திருக்கின்றனர். ஆனால் உலகில் சான்றோர்கள் யாரோ சிலர் இருக்கின்றனர். அவர்களுக்கு மண்ணுலகிலோ

விண்ணுலகிலோ பெறவேண்டியது ஒன்றுமில்லை. எவ்வுலகிலும் எப்பயனையும் கருதாது நல்வினை ஆற்றுவதே அவர்களின் இயல்பு. அத்தகையவர்களே தூய்மையின் உச்ச நிலைக்குப் போகின்றனர். பரமாத்ம சொரூபத்தில் நிலைத்திருப்பவர்களும் அவர்களேயாம்.

கர்மயோகத்தை முற்றிலும் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவந்திருந்த கர்மயோகி ஒருவரைப்பற்றி முடிவில் மொழிவது பொருந்தும். கர்மயோகத்தின் தத்துவங்களையெல்லாம் தமது வாழ்க்கையின் மூலம் விளக்கியவர் அவர். அவர்தான் கௌதம புத்தர். கர்மயோகத்தின் கோட்பாடுகளை ஏகதேசம் அனுஷ்டித்தவர்கள் பலபேர் இருந்திருக்கின்றனர். அக்கோட்பாடுகளையெல்லாம் முட்ட முடிய அனுஷ்டித்தவர் புத்தர் பெம்மான் ஒருவரே. உலகம் ஈன்றெடுத்த பெருமக்களுள் புத்தர் ஒருவர் நீங்கலாக, ஏனையவர்கள் சுயநலப்பற்றற்ற கர்மம் புரிவதற்குப் புறவுலகில் உள்ள முகாமைகள் சிலவற்றைத் தூண்டுகோலாக எடுத்துக்கொண்டனர். மற்ற மதாசாரியர்களை இரண்டு பாங்குடையவர்களாகப் பிரித்துவிடலாம். ஒரு கூட்டத்தார் தாங்கள் கடவுளின் அவதாரங்கள் என்றும் உலக நன்மைக்காக இங்கு வந்திருக்கிறார்கள் என்றும் தங்களைப்பற்றித் தெரிவித்துக்கொண்டனர். மற்றொரு கூட்டத்தார் கடவுளின் தூதர்களாகத் தாங்கள் இவ்வுலகுக்குள் வந்திருப்பதாக விளம்பரம் செய்துகொண்டனர். உலகத்தவர் நல்வினையாற்ற வேண்டுமென்று அந்த இரு கூட்டத்தார்களும் ஏராளமாக எடுத்து

உரைத்திருக்கின்றனர். ஏன் சத் கர்மங்களை மக்கள் ஆற்றவேண்டும் என்ற கேள்வி எழுந்தால் இறைவனுடைய ஆணை அத்தகையது என்று அவர்கள் இயம்பினர். தாங்கள் புரிகின்ற நல்வினைகளுக்குச் சம்மானமாக உயரிய நிலை மக்களுக்குத் தெய்வத்திடமிருந்து வரும் என்றும் அவர்கள் மையமூட்டினர். அவர்கள் பிரயோகித்த மொழிகள் மிக உயர்ந்தவைகளாக இருந்திருக்கலாம். நல்ல இலக்கியத்தில் புதைந்து கிடக்கும் அவர்களுடைய பேச்சுக்களையெல்லாம் வடிகட்டியெடுத்தால் அதினின்று கிடைக்கும் கருத்து இது ஒன்றேயாம். நாம் ஆற்றுகின்ற நல்வினைக்கு ஏற்ப கடவுளிடத்திருந்து கருணையும் சீரிய நிலையும் நமக்கு வந்து அமையும் என்னும் கோட்பாட்டையே விதவிதமான பாங்குகளில் ஏனைய மதாசாரியர்கள் அனைவரும் மொழிந்திருக்கின்றனர். புத்தர் பெம்மான் ஒருவரே இந்த நடைமுறைக்கு விலக்கு ஆகின்றார். அவர் ஐயம் திரிபு அற ஓர் உயர்ந்த கோட்பாட்டை எடுத்து விளக்கி யுள்ளார். "கடவுளைப்பற்றி உலக மக்களாகிய நீங்கள் விதவிதமான கோட்பாடுகளை உடையவர்களாக இருக்கிறீர்கள். அவைகளையெல்லாம் பற்றி அறிந்துகொள்ளவோ, அல்லது அக்கொள்கைகளிடத்து கருத்தைச் செலுத்தவோ எனக்கு அவகாசமில்லை. மேலும் ஜீவர்களைப்பற்றி மிகநுணுக்கமான கோட்பாடுகளையெல்லாம் எடுத்து சம்வாதம் செய்வதால் ஆவதென்ன? இத்தகைய முடிவில்லாத ஆராய்ச்சிகளையெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டு யான்

டும் நலம் செய்துகொண்டிருங்கள். நலனே வடிவெடுத்தவர்களாக நீங்கள் ஆய்விடுங்கள். இத்தகைய நல்வாழ்வு வாழ்ந்தால் எல்லாக் குறைகளினின்றும் நீங்கள் முக்தியடைவீர்கள். உண்மை நிலை எதுவோ அதை நீங்கள் அடைந்தே ஆகவேண்டும்.'' புத்தர் பெம்மானுடைய வாழ்க்கையை ஆராய்ந்து பார்த்தால் சிறப்பு ஒன்று நமக்குப் புலப்படுகிறது. தாம் ஏதேனும் ஒரு விதத்தில் மேன்மையடைந்தாகவேண்டும் என்கின்ற சுயநல நோக்கம் சிறிதேனும் அவருடைய உள்ளத்தில் இடம் பெறவில்லை. கடவுளுடைய அனுக்கிரகத்தைப் பெறவேண்டும், பிறவிப் பெருங்கடலைத் தாண்டவேண்டும், முக்தியைப் பெறவேண்டும் — இவை போன்ற சீரிய லக்ஷியங்களும் ஒரு விதத்தில் நல்ல கதி அடைந்தாக வேண்டும் என்கின்ற எண்ணத்தின் விதவிதமான தோற்றங்களாம். அத்தகைய எண்ணம் சிறிதளவிலும் புத்தர் பெம்மானுடைய உள்ளத்தில் இடம்பெறவில்லை. தாம் நல்லகதி அடைய வேண்டுமென்று அவர் கனவிலும் கருதக் கிடையாது. அப்படியிருந்தும் அவர் தீவிரமாக வினையாற்றியதற்கு நிகராக உலகில் வேறு எந்தப்பெருமகன் வினையாற்றியிருக்கிறார்? உலகில் பெருமக்கள் பலர் தோன்றியிருப்பதற்குச் சரித்திரம் சான்று ஆகிறது. சரித்திரங்களையெல்லாம் அலசி ஆராய்ந்து பார்ப்போம். புத்தர் பெம்மான் அடைந்துள்ள பெருநிலைக்கு நிகராக வேறு யார் போயிருக்கின்றனர்? உலகம் முழுதிலும் உள்ள மானுடவர்க்கம் முழுதையும் ஆராய்ந்து பார்ப்போம்.

பண்பிலே, மனபரிபாகத்திலே புத்தருக்கு நிகராக உள்ள மற்றொருவரைக் காணமுடியாது. சிறந்த தத்துவஞானத்தையும் அவர் உலகுக்கு நல்கியிருக்கின்றார். உலக மக்களிடத்து அவர் ஒப்பற்ற அனுதாபத்தையும் காட்டியிருக்கிறார். அவர் ஒரு பெரிய தத்துவஞானி. ஒப்பு உயர்வற்ற தத்துவங்களை அவர் உலகுக்குப் புகட்டியிருக்கிறார். அதற்கிடையில் உயிர்களுள் மிகக் கடை நிலையில் இருக்கும் சிற்றுயிர்களிடத்தும் அவர் மிக ஆழ்ந்த அனுதாபத்தைக் காட்டியிருக்கிறார். செயற்கரிய பெரிய செயல்களை உலகிலே செய்துகொண்டிருப்பதற்கிடையில் தமக்கு ஒரு தனி ஸ்தானத்தை அவர் ஒருநாளும் ஸ்வீகரிக்கக் கிடையாது. தம்மைக் கடவுளுடைய அவதாரம் என்றோ, கடவுளின் புதல்வன் என்றோ, கடவுளின் தூதன் என்றோ அல்லது உலகை உய்விப்பதற்கென்று பெரிய பொறுப்பை எடுத்துக் கொண்டவர் என்றோ எந்தவிதமான உயர்ந்த ஸ்தானத்தையும் அவர் தேடிக்கொள்ளவில்லை. பிறர் பணிவிடையில் தான் தனது என்பனவற்றையெல்லாம் அறவே துறந்தவர் அவர். கர்மயோகத்தின் உச்ச நிலையை அவரிடத்து நாம் காண்கிறோம். அவர் ஆற்றிய அரும்பெரும் வினைக்கு அடிப்படையாக சுயநல நோக்கம் சிறிதேனும் இல்லை. தமக்கென்று அவர் எந்தவிதமான பதவியையோ, கீர்த்தியையோ, அந்தஸ்தையோ தேடிக்கொள்ளவில்லை. எனினும் உலகம் ஈன்றெடுத்திருக்கின்ற பெருமக்களுள் அவரே மிக உயர்ந்தவர் என்பதை இம்மானுட வர்க்கத்தின்

சரித்திரம் நிரூபிக்கிறது. உலகில் தோன்றியுள்ள பெரு மக்களுள் சிலர் அன்பில் தலைசிறந்தவர்கள் ஆகின்றனர். இன்னும் சிலர் அறிவுமிகப் படைத்தவர்கள் ஆகின்றனர். புத்தர் பெம்மானிடத்தோ அன்பு அறிவு ஆகிய இரண்டு பண்புகளும் உச்சநிலைக்குப் போய்விடுகின்றன. அன்பின் முடிவையும், அறிவின் முடிவையும் ஒன்று சேர்த்து அடையப்பெற்றவர் அவர் ஒருவரே. அடுத்தபடியாக ஆற்றலைப்பற்றிய கேள்வியும் வருகிறது. தவநெறியில் நன்கு நிலை நிற்கின்றவர்களுக்கு ஆத்மசக்தி ஓங்குகிறது. ஆத்ம சக்தியிலும் தலைசிறந்தவராக அவர் திகழ்கின்றார். மனிதன் அடையக்கூடிய பரிபாகங்களை யெல்லாம் அன்பு, அறிவு, ஆற்றல் என்கின்ற மூன்று பகுதிகளுள் அடக்கிவிடலாம். இந்த மூன்றுவிதப் பண்புகளின் முடிந்த நிலை புத்தர்பால் திகழ்வதாயிற்று.

சீர்திருத்தக்காரர்கள் பலபேர் உலகில் தோன்றியிருக்கின்றனர். இக்காலத்திலும் தோன்றி வந்துகொண்டிருக்கின்றனர். எதிர்காலத்திலும் அவர்கள் வருவார்கள். உலகிலுள்ள சமுதாயங்களில் பெரிய மாறுதல்களைக் கொண்டுவருவதற்காக அவர்கள் எல்லாரும் பாடுபட்டிருக்கின்றனர். பயன்படாத பழையன கழிதல், பயன்படுகின்ற புதியன புகுதல் அவர்கள் அனைவரும் செய்துள்ள சீர்திருத்தங்களின் முடிவான கோட்பாடு ஆகும். உலகிலுள்ள சமயங்களையே நல்லபாங்கில் அவர்கள் திருத்தியமைத்திருக்கிறார்கள். சமூகங்களின் வாழ்க்கை முறைகளையும்

அவர்கள் செப்பனிட்டிருக்கிறார்கள். இத்தனைவிதமான சீர்திருத்தக்காரர்களுள் தலைசிறந்தவராகத் திகழ்கின்றவர் புத்தர் பெம்மான். அவருக்கு ஒப்பானவரை அல்லது மிக்கானவரை இனி உலகம் காணுமா என்பது கேள்வி. துணிந்து அவர் செய்த பிரகடனம் என்றைக்கும் உலகத்தவர்களுடைய ஆராய்ச்சிக்கு உரியதாக இருந்து வருகிறது. அவருடைய பெரிய போதனையை யார் வேண்டுமானாலும் அலசி ஆராய்ச்சி செய்து பார்க்கலாம். யுக்தியைக் கொண்டோ, அனுபவத்தைக் கொண்டோ அசைக்கமுடியாத கோட்பாடு ஒன்றை உலகிலுள்ள மாந்தர் அனைவர்க்கும் அவர் வழங்கியிருக்கிறார். அவர் பகர்ந்ததாவது: "பழைய ஏடுகளையும் நூல்களையும் கொண்டுவந்து காட்டி இவைகளில் இங்ஙனம் இயம்பப்பட்டிருக்கின்றனவென்று போதிப்பதால் மாந்தர்காள், நீங்கள் அப்பழைய நூல்களில் அமைந்துள்ள கோட்பாடுகளையெல்லாம் நம்பவேண்டுமென்பது அவசியமல்ல. அவரவர் சமுதாயத்துக்கு அல்லது நாட்டுக்கு உரிய கொள்கை இன்னதென்று மாந்தர் புகட்ட வருவார்கள். உங்கள் தேசீயக் கொள்கைகள் என்பதை முன்னிட்டும் அவைகள்மீது நீங்கள் நம்பிக்கை வைக்கவேண்டாம். குழந்தைப் பருவத்திலிருந்தே சில கொள்கைகளை நீங்கள் நம்பும்படி முதியோர்கள் புகட்டி வந்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் புகட்டியதை முன்னிட்டும் விவேகத்தைப் பெற்றான பிறகு அவர்களுடைய கொள்கைகளை நீங்கள் நம்பவேண்டாம். ஆனால் 'எப்பொருள் யார் யார்

வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண் பது அறிவு' என்னும் தத்துவத்தை உறுதியாகப் பிடித்துக்கொள்ளுங்கள். புகட்டப்படுகிற கோட் பாட்டை நன்ருக அலசி ஆராய்ச்சி செய்து பாருங்கள். கோட்பாடு ஏதேனும் ஒன்றை வாழ்க்கையில் அனுஷ் டிப்பதன் வாயிலாக அனுஷ்டிக்கின்ற மனிதனுக்கும் உலகிலுள்ள மக்கள் அனைவருக்கும் நிலைத்த நன்மை உண்டாகும் என்று அறிந்துகொண்டால் பிறகு அக் கோட்பாட்டை உறுதியாகக் கடைப்பிடியுங்கள். அக் கோட்பாட்டுக்கு ஏற்ப உறுதியான வாழ்க்கை வாழுங் கள். நீங்கள் வாழ்ந்து வருகின்ற நல்வாழ்வையே மற்ற வர்களும் வாழ்ந்து வரும்படி அவர்களுக்குத் தொண்டு புரியுங்கள்.'' புத்தர் பெம்மான் புகட்டிய சீரிய கோட் பாடுகளின் சுருக்கம் இதுவேயாம். சொர்க்கப் பிராப்தி யைப்பற்றிச் சொல்லி அவர் ஆசையூட்டவில்லை. நரக தண்டனையைப்பற்றிப்புகட்டி அவர் அச்சமூட்டவில்லை யாண்டும் நலம் தருகிற வாழ்வு எது என்பதைத்தான் அவர்காட்டிக் கொடுத்தார். கைம்மாறு எதையும் எதிர்பாராது தன் கடமையை முழுமனதோடு நிறை வேற்றுகின்றவனே நன்கு வினையாற்றுபவன் ஆகிருன். பணத்துக்காகவென்று பணிவிடை செய்கின்றவன் நன்கு வினையாற்ற முடியாது. புகழுக்காக வென்று பாடுபடுகின்றவன் நன்கு வினையாற்ற முடியாது. ஏதேனும் ஒன்றை மனிதன் இம்மையிலோ அல்லது மறுமையிலோ பெற்ருகவேண்டும் என்கிற எண்ணம் கொண்டு உழைக்கிறவன் நன்கு வினையாற்றமுடியாது.

கைம்மாறு எதையும் கனவிலும் கருதாது அன்பினு லேயே தூண்டப்பெற்று யார் ஒருவன் நல்வினையாற்று கின்ருனே அவன் புத்தர் பெம்மானுக்கு ஒப்பானவன் ஆய்விடுவான். "அன்பின் வழியது உயிர்நிலை." அன்பி ஞல் தூண்டப்பெற்று அரும்பணி ஆற்றுகின்றவன் அந்த வினையின் விளைவாகத் தனக்கு என்ன கிடைக்கும் என்று ஒரு பொழுதும் எண்ணிப்பார்ப்பதில்லை. பிறர் நலத்தின் பொருட்டுத் தொண்டுபுரிதலிலேயே அவன் திருப்தியடைந்திருக்கிருன். அதுவே அவன் அடையும் ஆத்மதிருப்தியாகும். அந்தப் பாங்கில் வினையாற்று கின்றவனுக்கு ஆத்மசக்தி ஓங்குகிறது. உலகத்தையே திருத்தியமைத்துவிடக்கூடிய ஆற்றலும் அருளும் அவன்மூலம் பொலிவனவாகின்றன. கர்மவீரன் என்று அத்தகைய மனிதனையே போற்றிப் பாராட்டவேண் டும். உலகத்தவரும் அத்தகைய மனிதனையே முன் மாதிரியாக எடுத்துக்கொண்டு அவன் செல்லுகின்ற செந்நெறியிலேயே தாங்களும் செல்ல முயலவேண்டும். அத்தகைய பெருமகனே கர்மயோகத்தின் சீரிய குறிக் கோளுக்குப் பிரதிநிதியாக இலங்குகிருன்.



# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்



| | | |
|---|---|---|
| | | ரூ. ந.பை. |
| ஸ்ரீமத் பகவத்கீதை (தேவநாகரியில் மூலம் - பதவுரை - பொழிப்புரை - விளக்கமான விரிவுரையுடன்) பிரசார விலை | ரூ | 3–75 |
| ஞானயோக விளக்கம் (காலிகோ பைண்டு) | ... | 6—0 |
| ஷை (சாதா பைண்டு) | ... | 5—0 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 2—0 |
| எதிர்கால இந்தியா | ... | 1–50 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 1–50 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | ... | 1–25 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 1–12 |
| உலகுக்கு உயிர்கொடுத்த உத்தமன் | ... | 1—0 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 1—0 |
| Introducing the Gita | ... | 1—0 |
| அறம்வளர்த்த நம்பி | ... | 0–95 |
| கயிலைமலை யாத்திரை (மாணவர் பதிப்பு) | ... | 0–95 |
| உலகை உய்வித்த உத்தமன் | ... | 0–95 |
| சுவாமி விவேகானந்தர் | ... | 0–90 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 0–90 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... | 0–75 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 0–50 |
| தாயுமானவர் இயற்றிய பரசிவ வணக்கம் | ... | 0–50 |
| பாதுகாபட்டாபிஷேகம் (நாடகம்) | ... | 0–50 |
| ஸ்ரீமத் பகவத்கீதை முன்னுரை | ... | 0–40 |
| ஆத்ம சக்தி | ... | 0–40 |
| இராவண தத்துவம் | ... | 0–40 |

| | | |
|---|---|---|
| கவிச்சக்கரவர்த்தி கம்பன் | ரூ. | 0–35 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 0–35 |
| மனிதனது நிஜ சொரூபம் | ... | 0–25 |
| சக்தி தத்துவம் | ... | 0–25 |
| ஆலய வழிபாடு | ... | 0–25 |
| ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... | 0–20 |
| சூரிய நாராயணன் | ... | 0–20 |
| சிவதத்துவம் | ... | 0–20 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் | ... | 0–20 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0–15 |
| கணபதி | ... | 0–15 |
| முருகக்கடவுள் | ... | 0–15 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0–15 |
| திருக்குறளில் கடவுள் வாழ்த்து | ... | 0–15 |
| அருள் விருந்து 1 முதல் 5 (ஒவ்வொன்றும்) | ... | 0–15 |
| அன்னை சாரதாதேவியார் வரலாறு | ... | 0–15 |

முன் பணம் அனுப்புவோருக்கு தபால் செலவின்றி புத்தகங்கள் அனுப்பப்படும். நான்கு ரூபாய்க்குக் குறைந்த ஆர்டர்களுக்கு புக்போஸ்டில்தான் புத்தகங்கள் அனுப்பப்படும்.

**தபோவனப் பிரசுராலயம்**

*திருப்பராய்த்துறை போஸ்ட், திருச்சி ஜில்லா*

---

# தர்ம சக்கரம்

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத் திங்கள் வெளியீடு**

**ஆசிரியர் சுவாமி சித்பவானந்தர்**

ஒவ்வொரு இல்லத்தையும் புனிதப்படுத்தும் தமிழ் மாதசஞ்சிகை

**1952 ஜனவரிமுதல் வெளிவந்துகொண்டுள்ளது**

**விவரங்களுக்கு எழுதித் தெரிந்துகொள்க**